

# மனிதத்தின் மாண்புகள்

## விளக்கமும் விரிவுரையும்

பாகம் - 1

மூலம் : சத்ய விரத சாஸ்திரி

மொழிபெயர்ப்பு : ராஜலட்சுமி சீனிவாசன்

# மனிதத்தின் மாண்புகள்

## விளக்கமும் விரிவுரையும்

பாகம் 1


மூலம்

சத்ய விரத சாஸ்திரி

மொழிபெயர்ப்பு

திருமதி. ராஜலட்சுமி சீனிவாசன்





பாரதிய வித்யா மந்திர்

கொல்கத்தா - 700087

# மனிதத்தின் மாண்புகள்

## விளக்கமும் விரிவுரையும்

பாகம் 1

**மூலம்**

**சத்ய விரத சாஸ்திரி**

**மொழிபெயர்ப்பு**

**திருமதி. ராஜலட்சுமி சீனிவாசன்**



பாரதிய வித்யா மந்திர்

கொல்கத்தா - 700087

*Published by*

**Bharatiya Vidya Mandir**
12/1, Nellie Sengupta Sarani,
Kolkata-700087.

*In collaboration with*

Simplex Infrastructures Ltd.,
Simplex House,
27, Shakespeare Sarani, Kolkata-700017.
Mobile : (0) 9830559364



*Translated by*

**Tmt. Rajalakshmi Srinivasan**

First Edition : 2015
ISBN : 978-81-89302-56-6
Pages : 320
Price : Rs.450/-

*Design & Printed by :*

N.Premkumar, Brilliant Graphics, Chennai - 600087.

*Marketed by :*

**Mathi Nilayam,**
2/3, 4th Street, Gopalapuram,
Chennai - 600086.
Phone : 044-28111506, 9444058086

மனிதனின் மாண்புகள், சிந்தனையாளர்களின் மதியில் தொன்றுதொட்டு நிறைந்திருக்கின்றன. அவர்கள் சமுதாயத்தை நன்னெறியில் அழைத்துச் செல்வதற்கும், விலங்குகளொப்ப பழங்குடிகளைப்போல் இல்லாமல் நாகரிகம் படைத்தவர்களாக இருப்பதற்கும் மிக்க முயற்சிகளை மேற்கொண்டனர். தலைமுறை தலைமுறையாய் சிந்தனையாளர்களும் தங்களது கருத்துக்களை வெளியிட அவையாவும் மனித உள்ளங்களை நன்கு கடைந்தெடுத்து ஒரு உருவெடுக்க லாயிற்று. அவைகளை சொற்களால் வெளியிடுவது மதியில் சன்னல்களைப்போல் வெளிச்சம் கொடுக்கிறது. அதனூடே பழம்பெரும் சிந்தனையாளர்களின் சிந்தனைகளை ஆராய்ந்து பல விரிவான நூல்களை இயற்றினர். இந்நூல்களே மாண்புகளின் விளக்கமாகவும் விரிவுரையாகவும் அமைந்தன.

இந்நூற்றுக்கணக்கான நூல்களில்தான் மாண்புகளை தேட வேண்டும். அப்பணியைத்தான் இந்நூல் செய்கிறது. அத்துடன் நின்றுவிடாமல் மனித மாண்பு களை விரிவாக ஆய்வுசெய்து பல இந்திய பழம்பெரும் நூல்களிலிருந்தும் உலகின் உள்ள மாபெரும் மேதை களின் வாழ்க்கை வரலாற்றிலிருந்தும் எடுத்துக்காட்டு களை அளித்துள்ளனர்.

இது முதற்பாகமாகும். மனித மாண்புகளை வாழ்க்கை யின் எல்லா கோணங்களிலும் ஆராய்ந்து அளிப்பதென்பது ஒரு நூலில் அளித்தல் இயலாததாகும்.

# பொருளடக்கம்

## பொருளடக்கம்



# மொழிபெயர்ப்பாளர் உரை

- திருமதி ராஜலட்சுமி சீனிவாசன்

மனிதனின் உயர்ந்த பண்புகளே, விழுமியங்களே படைப்பின் எல்லா ஜீவராசிகளினின்றும் அவனை உயர்ந்தவனாக இருக்கச் செய்கிறது. அவனது பகுத்தறியும் திறனே அவனை ஒரு உன்னத நிலைக்கு உயர்த்தியது. ஆனால் அப்பண்புகளை தேர்ந்தெடுத்து ஆராய்ந்தறிவ தென்பது எளிதல்ல. ஏனெனில் அவை காலத்திற்கும் இடத்திற்கும், மனிதனின் இயற்குணத்திற்கும் ஏற்றவாறு மாறிமாறி அமைவதாகும். கடவுளின் படைப்பில் மிகவும் திறன் படைத்தவன் மனிதனே ஆகிறான். அவனது ஆழ்ந்த மதியும், உடல் வலிமையும், விடாமுயற்சியும், எடுத்த பணியை வெற்றியுடன் நிறைவேற்றும் திடமும் அவனை இயற்கையையும் வெல்லும் சக்தியை அளிக்கின்றன. ஆனாலும் பரோபகாரம், சீலம், நன்னடத்தை போன்ற நற்பண்புகள் இல்லையெனில் அவன் மன அமைதியுடனும் மகிழ்ச்சியுடனும் வாழ்வது கேள்விக்குறியாகிறது.

இந் நற்பண்புகள் மதியிலும், மனத்திலும் உடலிலுமென எல்லாம் இணைந்து செயல்படுமேயாகில் பூமியில் சுவர்க்கத்தின் சுகத்தை அடைகிறான். நம் இழிஊழினால் காலம் செல்லச்செல்ல இப்பண்புகள் சிறிதுசிறிதாக தேய்வடைந்து இன்று பண்பு என்றால் என்ன என்ற கேள்வியெழும்படியான நிலைமை ஏற்பட்டுவிட்டது. இன்றைய காலத்தில் நற்பண்புகளை நாம் அனுசரிக்க வேண்டுமானால் அவைகளை நம் பழம்பெரும் சிந்தனையாளர்கள் தங்களது படைப்புகளின் மூலம் நமக்கு விட்டுச்சென்ற நூல்களை படித்து தெரிந்துகொள்ள வேண்டிய நிலைமை அமைந்துவிட்டது. அவைகளை படித்து தெரிந்துகொண்டு வாழ்க்கையில் கடைப்பிடிப்பதென்பது சாத்தியமானதன்று. இச்சந்தர்ப்பத்தில் சத்ய

விரத சாஸ்திரி அவர்களின் *Human Values - Definitions & Interpretations* என்னும் இந்நூல் என்னை மிகவும் கவர்ந்தது.

இதில் நூலாசிரியர் மனித வாழ்க்கைக்கு இன்றியமையாததான பண்புகளை தேர்ந்தெடுத்ததோடல்லாமல் அவைகளுக்கு அவர் கொடுத்துள்ள அர்த்தங்களும் விளக்கங்களும் மிக பொருத்தமாகவும் படிப்பவர் மனதில்ஆழ பதியும் வண்ணமும் வரையப்பட்டுள்ளன. மேலும் நாட்டிலுள்ள கடந்த காலத்தில் வளமையுடன் வாழ்ந்தோர்களின் குறிப்புகளையும், இன்று வாழ்ந்துகொண்டிருக்கும் பலரது பண்புகளையும் மேற்கோள்களாக எடுத்துக் கையாண்டதுடன், பரந்த உலகின் கண் உள்ளோரின் சிறப்பு பண்புகளையும் இதில் இணைத்திருப்பது மிகவும் போற்றத்தக்கதாகும்.

விளையாட்டு வீராங்கனை, படிப்பில் மேதைகள் என அண்மையில் வாழ்ந்தோர்களின் குறிப்புகள் சிறப்பாக அமைவதுடன் இக்கால இளைஞர்களை நற்பணிகளை மேற்கொள்ள தூண்டுகோலாகவும் அமையும் என திண்ணமாக எண்ணுகிறேன்.

இப்படி பல கோணங்களிலும் உயர்ந்ததொரு நூலை தமிழில் மொழிபெயர்க்க எனக்குக் கிடைத்தொரு வாய்ப்பை எண்ணி பெருமிதமடைகிறேன். பேராசிரியர் சத்திய விரத சாஸ்திரி அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றிகளை தெரிவித்துக்கொள்கிறேன். இந்நூலை மொழியாக்கம் செய்வதற்கு உறுதுணையாயிருந்த என் கணவர் சீனிவாசன் அவர்களுக்கு என் உளம்கனிந்த நன்றிகள் பல. இவையாவற்றிற்கும் சிகரம் போல் அமைவது இதை பாரதிய வித்யா மந்திர் வெளியிடுவதாகும். அன்னாருக்கு எனது நன்றிகளை தெரிவித்துக்கொள்கிறேன். இது போன்றதொரு நூல் தற்காலத்தில் கிடைப்பதென்பது அரிதாகும்.

அதை செயல்படுத்தி சிறப்பாக தமிழ் மொழியில் மூலஆசிரியரின் கருத்துக்களை வெளிக்கொணர்வதென்பது ஒரு சவாலாக எனக்கு அமைந்தது. முடிந்தவரையில் ஆசிரியரின் கருத்துக்களை அப்படியே உணர்ச்சியுடன் வெளிக்கொண்டுவர முயன்ற இந்நூலை உலகில் உள்ள தமிழ் மொழி அறிந்த எல்லோரும் படித்து பயன்பெற வேண்டுமென்பதே இம்மொழிபெயர்ப்பின் நோக்கமும் பயனுமாகும்.

இனி வாசக பெருமக்களே இதற்கு பிரமாணம். நன்றி.



# முன்னுரை

- சத்ய விரத சாஸ்திரி

பண்டைகாலம் முதற்கொண்டே மனித மாண்புகள் அறிஞர்களின் மதியை ஆக்கிரமித்துள்ளன. அவர்களோ சமுதாயத்தை நல்ல நேர்வழியிலும் தடைகளின்றி மென்மையாக அழைத்துச்செல்லவும் அதில் கலாசார பண்பாடுகளை ஏற்றி மனிதனை விலங்குகளின் வாழ்க்கையிலிருந்து வேறுபடுத்த மிகவும் முயன்றனர். தலைமுறையாய் வந்த சிந்தனையாளர்கள் இதற்கான வழிமுறைகளை வகுத்துக்கொடுத்துள்ளனர். இதன் விளைவாக தொடர்ச்சியாக மனித மனத்தைக் குடைந்த பண்புகள், சொற்களாக வெளிவந்து மனதில் சன்னல்களை அமைத்துக்கொடுத்தன. அச்சொற்களும் அவர்களது சிந்தனைகளும் ஒரு சிறப்புவாய்ந்த பயனுள்ள ஆராய்ச்சியாக அமைந்துள்ளது. இவைகளை ஆராய்வதே இச்சிறு நூலின் குறிக்கோளாகும்.

மனித மாண்புகள் இருவகைப்படும். ஒன்று எல்லா மத இன தேசத்தவர்களும் பண்பட்ட வாழ்க்கை நடத்திட பொதுவாக அமைந்ததான - பிறருக்கு நன்மை செய்தல், பிறர் செல்வம் கண்டு பொறாமை கொள்ளாதிருத்தல், பிறருக்கு தீங்கிழைக்காதிருத்தல், உடன் உற்றோர்க்கு சேவைசெய்தல், அவர்களை நெருங்கிய ரத்தப்பாசம் கொண்ட உறவினர் போல் நடத்தல், அவரவர்களுக்கு உரியதான உரிமையானவைகளை கவர்ந்திடாமல், கொள்ளையிடாமலிருத்தல், அவர்கள் துன்புற்றபொழுது அன்புடனும் ஆதரவுடனும் அவர்களுடன் இணைந்திருந்து உதவி செய்தல் ஆகியவையாகும். மற்றையதோ சிலர் பிரத்தியேகமாக பின்பற்றிவரும் கலாசாரங்களாகும்.

பெற்றோர், ஆசான், விருந்தினர்களை மதித்து மரியாதையளித்தல், உடல் உள்ளத்தூய்மை, பிரம்மசரியத்தை கடைப்பிடித்தல், புலனடக்கம், புலனின்பத்தில் அளவின்றி கட்டுப்பாடின்றி நுகருவதை தவிர்த்தல், பிறரிடம் தன்னை சேவகர்கள் போலவும் அடிமை போலவும் நடந்துக் கொள்ளாமை, திருமண உறவில் திடமான நம்பிக்கை குறிப்பாக மனைவியிடம் நம்பிக்கை, குடும்பத்தில் உரிய உறவும் .ட்டுக்குடும்பத்தினரிடம் நடந்துகொள்ளும் முறை, பெரியவர்களிடம் தங்களை அர்ப்பணித்துக்கொள்ளும் வகையில் மரியாதையுடன் நடந்து கொள்ளுதலாகும்.

சமஸ்கிருத மொழி இந்தியாவிலேயே பிறந்து வளர்ந்ததால் அதில் பொதுவாக உலகத்திற்கும் இந்தியர்களுக்கும் தேவையான மாண்புகளின் சொற்கள் காணக்கிடைக்கின்றன. ஆசானுக்கு மரியாதை அளித்தல் என்பது இந்தியாவிற்கே உரித்தானது. அவரை எல்லாவிதத்திலும் உயர்ந்தவரெனக் கருதுவது, அவரை முக்கடவுளுக்கும் இணையாகக் கூறுவது 'குருர்ப்ரஹ்மா குருர்விஷ்ணு: குருர்தேவோ மகேஸ்வர: குரு: ஸாக்ஷாத்பரம் ப்ரும்ம' என்று அவர் அரும்பெருங்கடவுளாவார்.

மேலும் பெற்றோரை வலம் வருதல் ஏழு கண்டங்களும் அடங்கிய உலகையே வலம் வருதலுக்கொப்பானதாகும் 'பிரதக்ஷிணீக்ருதா தேன ஸப்தத்வீபா வஸுந்தரா' என்ற மேலான கருத்தும் இந்தியாவிற்கே உரித்தானதாகும். மேலும். இப்பிரபஞ்சமே ஒரு சிறுகோளமானதாகவும், 'யத்ர விஸ்வம் பவதி ஏகநீடம்' (இது ஒரு குடும்பம் ஒத்தது), 'வஸுதேவ குடும்பகம்' என்ற கருத்தும் இந்தியர்களுடையதேயாகும்.

சமஸ்கிருத மொழியில் மனித பண்புகளுக்கு சொற்களஞ்சியமே இருந்திடினும், மற்றைய எல்லா பண்புகளையும் தன்னுள் அடக்கியதான இரண்டு சொற்கள் குறிப்பிடத்தக்கவைகளாகும். அவை தருமமும் சீலமுமாகும். அச்சொற்களை பிரித்துப்பார்க்கவும், விளக்கவும், விரிவான உரை தந்திடவும் பலகாலமாக முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

தருமத்திற்கு சில இடங்களில் பத்து குணங்களும், சில இடங்களில் ஐந்து குணங்களும், மற்றும் சில இடங்களில் ஒரு குணமே அது ஜீவராசிகள் உயிர்வாழ்வதற்கான 'ஜகத: ப்ரதிஷ்டா' உலகைக் காப்பதே எனவும் கூறப்பட்டுள்ளது. பரந்து எங்கும் வியாபித்திருக்கும்

புராணங்களின் முக்கிய செய்தி 'அஷ்டாதஸ புராணேஷு வியாஸஸ்ய வசனத்வயம்' பிறருக்கு தீங்கிழைக்காமல் நன்மை பயப்பதென்பதும் 'பரோபகார: புண்யாய பாபாய பரபீடனம்' என்பதாகும்.

தர்மத்தை நன்கு பரிபாலித்தோமானால் அது மனிதவாழ்க்கைக்கே இன்றியமையாத சீலத்தை தோற்றுவித்து செழிப்புடன் வளரச்செய்கிறது. இவை இரண்டுமே மனிதனின் மாண்புகளாகும் எனக்கூறுவது பொருந்தும்.

பெரும்பாலும் பண்புகள் குறித்த சொற்களை அவைகளின் முழுமையான பொருளை உணராமலும் அறியாமலும் உபயோகப்படுத்துகின்றனர். அச்சொல்லின் பொதுப்படையான பொருளை ஏற்றே பயன்படுத்துகின்றனர். இதுவே பெரும்பாலும் நெருங்கிய பொருள் தொடர்புடைய 'தயா, க்ருபா, கருண, அனுகம்பா, அனுக்ரோஸ, அனுகிரஹ' போன்ற சொற்களுக்கு மிகவும் பொருந்துவதாகும்.

இப்பொருள்களிலுள்ள வேற்றுமையை இன்னது என்று எடுத்துகூறுவது அரிதாகும். அவைகளை மீண்டும் மீண்டும் தொடர்ந்து ஆராய்ந்து அறிந்துகொள்வதினாலேயே வேறுபாட்டை எடுத்துக்கூற இயலும். இதற்கு முதற்படியாக சமஸ்கிருத நூல்களில் அச்சொற்களின் இலக்கணத்தை தேர்ந்தெடுக்க வேண்டும். அடுத்து அவைகளை பயன்படுத்திய பழைய சிந்தனையாளர்களின் மன உணர்வுகளையும் புரிந்துகொள்ள வேண்டும். இவ்விதம் ஆயிரக்கணக்கான பக்கங்கள் கொண்ட நூற்றுக்கணக்கான நூல்களுள்ளன. அவைகளை முழுவதுமாக அறிந்துகொள்ள இயலாத இடங்களில் உரைகளையும் அகராதிகளையும் துணைகொள்ள வேண்டியுள்ளது. அவ்வாறும் அறிந்துகொள்ள இயலாத இடங்களை ஏனோதானோ என பயன்படுத்தியுள்ளதை அறிந்து கொள்ளாமல் பொருள் கூறுவது முறையல்ல. அதனால் இப்புத்தகத்தில் கையாளப்பட்டுள்ள இலக்கண சுலோகங்கள் பண்டைய சிந்தனை, மனதின் கருத்துக்களால் கூறப்பட்ட பொருளை நன்கு உணர்வதற்கான முழுமுயற்சியும் எடுத்துக்கொண்டே மேற்கோள்களாக கொடுக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக நாம் பெரும்பாலும் இன்றும் பயன்படுத்தும் சொல்லான 'தான' என்னும் சொல்லை எடுத்துக்கொள்வோமே.

இதன் முழுப்பொருள் என்ன என்று கேட்டால் தானம் கொடுத்தல், வழங்குதல், வள்ளலாற்றல் என்பர். இதுதான் நம் முன்னோர்கள்

அறிந்துகொண்ட பொருளா? 'தான' என்பதற்கு இரண்டு இலக்கணங்கள் அந்த அத்தியாயத்தில் கொடுக்கப்பட்டுள்ளன. அவைகளை படித்து அறிந்தால் தெரிந்துகொள்ளலாம்.

இந்நூல் மனித குணங்களை, சமஸ்கிருத சொற்களால் குறிப்பிடப்பட்டதை தகுந்த சான்றுகளுடனும், விரிவுரைகளுடனும் எடுத்துக்காட்டி அதன் பொருள்களை எடுத்துரைக்க விழைகிறது. இதன் மூலம் அவைகளின் பொருளை சரியாக அறிந்துகொள்ளலாம்.

படிப்பதில் ஆர்வம் கொண்டவர்கள் மனித விழுமியங்களுக்கான சமஸ்கிருத சொற்களை நன்கு மனத்தில் புரிந்துகொண்டால் எனது முயற்சிகள் யாவும் பயனடைந்ததாகக் கருதுவேன்.

இதை நிறைவுசெய்வதற்கு முன் பாரதிய வித்யா மந்திர் மூலம் பிரசுரம் செய்ய முன்வந்த கொல்கத்தாவின் பாரதிய வித்யா மந்திர் தலைவரும், பெரும் வள்ளலும், தொழிலதிபருமான முனைவர் பி.டி. முந்திராவுக்கு எனது நன்றிகளை தெரிவித்துக்கொள்கிறேன். அவரது உதவியாளரான ஸ்ரீ சங்கர்லால் சோமானி அவர்களுக்கு இந்நூலை இறுதிவரை பார்த்து உதவியதற்கும் எனது நன்றிகளை தெரிவித்துக்கொள்கிறேன். நூற்படிவம் பார்த்து உரிய குறிப்புகளையும் அளித்த எனது மதிப்பிற்கும் மரியாதைக்கும் உரிய எனது உற்ற நண்பர் ராஜஸ்தான், ஸ்ரீகங்கா நகரைச் சேர்ந்த முனைவர் சத்திய விரத வர்மாவுக்கும் என் நன்றிகளைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

## A Brief Note About The Author

Born on 29th, September 1930, Prof. Satya Vrat Shastri had his early education under his father, Prof. (Chanu Deva Shastri. He was consistently top rank holder up to Post-Graduation and won University Medals. After doing his Ph.D at the Banaras Hindu University he joined the University of Delhi where during the forty years of his teaching career he held important positions of the Head of the Department of Sanskrit and Dean of the Faculty of Arts. He was also the Vice-Chancellor of Shri Jagannath Sanskrit University, Puri, Orissa. He is the first recipient of the Jnanpith Award in Sanskrit, 2009 and the Padma Bhushan Award, 2010.

He has the distinction of having been Visiting Professor in five Universities on three Continents. Among his many foreign students the most prominent is Her Royal Highness Maha Chakri Sirindhorn, the Princess of Thailand. He has attended and chaired a number of national and international conferences and seminars and delivered more than a hundred lectures in Universities and institutions of higher learning in Europe, North America, Southeast Asia and the Far East.

Both a creative writer and a literary critic, Prof. Satya Vrat Shastri has to his credit three Sanskrit Mahakavyas of about a thousand stanzas each, a Prabandhakavya, a Patrakavya (in two volumes), three Khandakavyas, the first ever diary in Sanskrit *Dine Dine Yati madiyajivitam* and the first ever autobiography in Sanskrit *Bhavitavyanam Dvarani Bhavanti Sarvatra*. The well-acclaimed critical work, *The Ramayana-A Linguistic Study* which is the first ever linguistic appraisal of not only the *Valmiki-Ramayana* but of any extant Sanskrit work, *Kalidasa Studies* in two volumes, two studies on Thailand, *Sanskrit* and *Indian Culture in Thailand* and *Thaidesa ke Brahmanas, Discovery of Sanskrit Treasures* (in seven volumes), *Sanskrit Studies—New Perspectives* and *Sanskrit Writings of European Scholars,* more than a century and a half of research articles and Forewords to a hundred and thirty books are his contributions as a critic. He has enormous experience in translation work. He has translated A.A. Macdonell's *A Vedic Grammar for Students* in Hindi, *siramacaritabdhiratnam* of Nityananda Shastri in

English, the thousand Subhasitas, wise sayings, the *Subhasitasahasri* in Hindi and English, the *Canakyaniti* in Hindi and English, and the select poems in different languages of poet laureates of Europe in Sanskrit. He is the subject matter of seventeen theses for the degrees of M.Phil., Ph.D and D.Litt in Indian Universities.

He is the recipient of eighty six honours and awards, national and international, including Padma Shri, Padma Bhushan, President of India Certificate of Honour, Thai Royal Decoration "The Most Admirable Order of Direk Gunabhorn", the Honour "Autorita Academische Italiano Straniere", the Civil and Academic Authority for Foreigners from the Govt. of Italy, the Medallion of Honour from the Catholic University, Leuven, Belgium, the Golden Prize from, CESMEO, the International Institute of Advanced Asian Studies, Torino, Italy and five Honorary Doctorates from Indian and foreign Universities. In the Citation for the Honorary Doctorate at the Silpakorn University, Bangkok, he was described as "a living legend in the field of Sanskrit."



# பதிப்பாளர் உரை

- டாக்டர் பிதால் தாஸ் முந்தரா
தலைவர், பாரதிய வித்யா மந்திர்

மனித பண்புகளே உரைகல்லாயிருந்து மனிதனை விரோதியாம் சுழல்காற்றினிலிருந்து நல்வாழ்க்கை நடத்த பேருதவி செய்கின்றன. பரோபகாரம் (பிறர் நலனுக்காக சுயநலமின்றி செயல்படுதல்), அகிம்சை (பிறருக்கு தீங்கிழைக்காமல் இருத்தல்), அஸ்தேய (பிறரது உடைமைகளை கவராமல் இருத்தல்) இவைகளே பண்டைய இந்திய சமுதாயத்துக்கு அஸ்திவாரமாக இருந்ததென்பதை வரலாறு எடுத்துக்காட்டுகின்றது.

இன்றோ நாம் விசித்திரமானதொரு சமுதாயச் சூழலில் வாழ்கிறோம். தொலைவில் வாழும் குடும்பத்தவர்கள், பேருவகை விரும்பும் கேளிக்கை வாழ்க்கை முறை, வன்முறை கிளர்ச்சிகள், உலக பொருளாதார முன்னேற்றத்தினால் ஏற்பட்ட புதிய நண்பர்கள், பெண்களிடமும் சிறுவர்களிடமும் நடக்கும் கொடுமையான செயல்கள் ஆகியவைகளே தினசரி வாழ்க்கையில் அதிகமாக காணக்கிடைக்கின்றன. இச்சூழலில் இம்மண்ணின் பண்புகளிலிருந்து துளிர்விட்டு வரும் ஆன்மாக்களுக்கு ஆறுதலுணர்வு அளிப்பது எப்படி?

இன்றைய சமுதாயத்துக்கு 'மனித மாண்புகள்' பேஸ்புக், ட்விட்டர்களைக் கடந்து அதிகமான அமிர்தம் பொழிபவைகளாகும். இந்த 'மனிதத்தின் மாண்புகள் - விளக்கமும் விரிவுரையும்' என்ற நூல் மனிதத்தின் மாண்புகளை அலசி ஆராய்ந்து எடுத்துக்கொடுப்ப துடன் இன்றைய சூழ்நிலைக்கு மிகவும் இன்றியமையாததாகவும், அதன் பயன் இவ்வளவுதான் என்று வரையறுத்து கூற இயலாததாகவும் அமைகிறது.

கலாசாரம் என்பது நமது மாண்புகளை ஆதாரமாகக்கொண்டுள்ளது. அவைகளே நமது கலாசாரத்துக்கு ஒரு வடிவமைப்பை அளிப்பதாகும். இந்த அஸ்திவாரம் திடமானதாகவும், சக்திவாய்ந்ததாகவும் இருந்திடின் முன்னேற்றமென்பது திண்ணம். அப்படிப்பட்ட ஆக்கபூர்வமான சக்தி பூமியிலிருந்து சந்திர மண்டலத்திற்குச் செல்லக்கூடிய அரிய விசையையும் சக்தியையும் பெற்றுத் தந்திடும். ஆனால் கலாசாரத்தின் அஸ்திவாரம் தகுந்த முறையில் அமையவில்லையாகில் ராக்கெட் வெடித்து முழுமையான நாசத்தையே விளைவிக்கும். இதற்கு தீர்வு காண வேண்டுமாகில் நமது சம்ஸ்காரங்களினால் நம்மை புனிதமாக்கிக்கொண்டு அவைகளை வாழ்க்கை நிகழ்ச்சிகளுடன் இணைத்து நமது கலாசாரத்தை மேம்படுத்திக்கொள்வதே ஆகும். கலாசாரமென்பது திடமான கரைகளுடன் கூடிய நதியைப் போன்றது. அந்த ஆற்றில் புது நீர்வெள்ளம் பாய்ந்து ஓடிவரும். மனித பண்புகளே இக்கரைகளை சரியாகவும், திடமாகவும், பரிசுத்தமாகவும் வைத்து சமுதாயத்தின் மாசுகளை அறவே களைந்திடவல்லது.

இக்காரணம் கொண்டே இந்நூல் என்னை வெகுவாகக் கவர்ந்தது. இது ஒப்புயர்வற்றது, அபரிமிதமானது, தனித்தன்மை வாய்ந்ததுமாகும். பேராசிரியர் சத்ய விரத சாஸ்திரி அவர்களின் முயற்சி சொற்களினால் எடுத்துக்கூற இயலாததாகும். பிரத்யேகமான சிறப்பு வாய்ந்தது. மிகவும் உயர்ந்த தெய்வீக நூல்களின் கலைக்களஞ்சியமாக விளங்கும் மதிபடைத்த அவரே இந்நூலின் தேரோட்டியாவார். இதர கற்றறிந்த பலமேதைகளின் பேரறிவாம் உயர் மணிகளை சேகரித்துள்ளார். அவைகளை எல்லாம் இணைத்து தன் பேரறிவாகிற அமிர்தத்துடன் கலந்து வளமாக்கியுள்ளார். முனைவர் சாஸ்திரி அவர்கள் அயரா முயற்சியுடன் உழைத்து பேரவாவுடன் இந்நூலை இயற்ற முனைந்துள்ளார். பெருவதற்கரிய இவ்வரிய செய்திகள் அடங்கிய இந்நூல் எல்லா இடங்களையும் சென்றடைய வேண்டும் என்பதே எமது அவா. இதே தலைப்பில் இனி ஒரு பகுதி வெளிவர நாம் முயற்சி செய்தல் வேண்டும். முனைவர் சாஸ்திரி அவர்கள் இப்பணியில் ஈடுபட்டுள்ளார். சமுதாயத்தின் ஒவ்வொரு மூலை முடுக்குகளிலும் இந்நூல் சென்றடைய வேண்டும் என்பதே விரும்பத்தக்க அவாவாகும்.

மனித நெறிமுறைகளையும் அதன் இலக்கியங்களையும் வெளியிடுவதே பாரதிய வித்யா மந்திரத்தின் நோக்கமாகும். அதனது தனிச் சிறப்படைவதற்கான இக்குறிக்கோள், படைப்பாளிகளின்

எண்ணங்களின் பிரதிபலிப்பாகும். தனது குறிகோள்களுக்கேற்ப சமுதாயத்தில் பண்புநிறை கல்வியளிக்கும் இரு கல்விக்கூடங்களை தற்சமயம் நடத்திவருகிறது. பாரதிய வித்யா மந்திரின் தலைவனாக, சத்ய விரத சாஸ்திரியின் சாணக்கிய நீதி என்னும் நூலை சில காலம் முன்பு வெளியிட்டது குறித்து நான் மிகவும் பெருமையடைகிறேன். இந்நூலானது கௌடில்யர் கூறிய பண்புகளையும் கொள்கைகளையும் பிரதிபலிக்கின்றதாய் அமைந்து இரண்டு நூல்களுமே பொதுவான கருத்துக்களையே வற்புறுத்துகின்றன.

பாரதிய வித்யா மந்திர், பின்தங்கிய தொழிலாளிகளுக்கு பயிற்சியளித்திட முன்னோடியாக ஒரு பயிற்சிக்கூடத்தை நிறுவி நடத்திவருகிறது. நடைமுறையில் பயன்படும் பண்புகளை ஆசான் -மாணாக்கன் வழியில் பரப்பிட ஒரு திட்டத்தை ஏற்றுக்கொண்டுள்ளது. இத்திட்டத்தில் மனித பண்புகளின் அடிப்படை கொள்கைகள் புதிய மாணவர்களுக்கு கற்றுக்கொடுக்கப்படுகிறது.

சத்ய விரத சாஸ்திரியை நான் அவரது வீட்டில் சந்திக்கும் நேரமெல்லாம், அவரது மனைவி பெரும் விதுஷியான திருமதி முனைவர் உஷா சாஸ்திரி அவர்களை கண்டு ஆசிபெறும் வாய்ப்பு கிடைக்கப்பெற்றுள்ளேன். மாபெரும் அறிஞரின் பின் இப்படிப்பட்டதொரு ஊக்கமளிக்கும் சக்தி அவரே ஆவார்.

இந்நூலைப் பற்றிய உங்களது கருத்துக்களை வரவேற்கிறோம். மனப்பூர்வமான ஆழ்ந்த வாழ்த்துக்கள்.

பாரதிய வித்யா மந்திர்
சிம்ப்ளக்ஸ் ஹவுஸ்,
27, ஷேக்ஸ்பியர் சரானி,
கொல்கத்தா - 700 017.

## Publisher's Note

The touchstone of human values sustains life against hostile winds. Historically, values like *paropakora* (working selflessly for the benefit of others), *ahimsa* (not injuring others), *asteya* (not stealing from others) have been the foundations of ancient Indian society. Today, we live in a wired society. Long-distance families and friendships in a global economy, hedonistic lifestyles, rising incidents of violence towards women and children are real in present times. Where is the anchor for our troubled souls? Where is that touch of solace which stems from the brick and mortar of earthy values? The importance of the topic "Human Values" is immeasurable in today's context to reveal the nectar beyond Facebook and Twitter. This flagship book on Human Values aims to explore such a relevant area as well as the social morass which prevails today.

I must begin writing this note with an expression of my high esteem for Professor Dr. Satya Vrat Shastri. A Jnanpith Laureate in Sanskrit literature, he is the rare combination of the ancient traditions of panditya as well as the attributes of the modern intellect.

Culture is based on the human value system which moulds its structure. Say, if the structure is strong and energy is applied through it, progress is inevitable. Such a positive force has the capacity to propel a rocket from the earth to the moon. But without a proper structure, the rocket simply explodes leading to destruction. The solution lies in developing a structure through *sanskara* (refining), which leads to *sanskarana* (collation) and development of *sanskrti* (culture). Culture is like a river with banks stable and new water flows. Value system will keep the banks intact and clean the pollution of the society.

That is the reason why, the significance of this book in my eyes is immense. The effort of Professor Dr. Shastri is unique and unprecedented. The charioteer of this book is himself a great mind with encyclopeadic knowledge of scriptures. He has collected gems of wisdom from other learned minds, synthesized them and enriched the book with the elixir of his own wisdom too. Dr. Shastri worked tirelessly on this book with

amazing alacrity. It is my heartfelt wish that the precious message of this book spreads everywhere. We still have to work on yet another volume on the same topic. Dr. Shastri is already working on it. It is desirable that this book reaches each and every nook and corner of our society.

This publication on human ethics and ethical literature is a reflection of the publisher's — i.e. the Bharatiya Vidya Mandir's commitment towards excellence. The Bharatiya Vidya Mandir, is already running two schools reflective of its commitment to value education in our society. As the President of the Bharatiya Vidya Mandir, I feel proud to state that we have recently published a book entitled Canakyaniti by Dr Satya Vrat Shastri. The book is on the values extolled by Kautilya and shares common ground.

The Bharatiya Vidya Mandir has also started a flagship training programme for the underprivileged workers working on different project sites of Simplex Infrastructures. It is a practical exercise in the propagation of Human Values through Guru-Shishya Pratha, as the gurus teach the new pupils the rudiments of the subject.

Whenever I meet Dr. Satya Vrat Shastri at his residence, I have the privilege of meeting his wife Dr. Usha Shastri, an eminent scholar herself and the pleasure of being blessed by her. She is the inspiration and the energy behind the work of the great scholar.

We look forward to your valued feedback on this book.

With earnest regards.

**Dr. Bithal Das Mundhra**
Chairman

Bharatiya Vidya Mandir
Simplex House,
27, Shakespeare Sarani,
Kolkata - 700 017.

# அறிமுகம்

தீர்மானங்கள், கொள்கைகள், குறிக்கோள்கள், உயர்ந்த எதிர்பார்ப்புகள் இவைகள் யாவும் மனிதனின் மாண்புகளுக்கு - பண்புகளுக்கு - நன்னெறிகளுக்கு காரணமாக அமைகின்றன. அநேகமாக பல மாண்புகள், பரோபகாரம் - பிறருக்கு நன்மை செய்தல், அகிம்சை - பிறரிடம் வன்முறை செய்யாமலிருத்தல், பிறருக்கு தீங்கிழைக்காமல் இருத்தல், அஸ்தேய - களவாடாமை, திருடஸங்கல்ப - திடமான உறுதி, ஏகாக்ரதா - இலக்கை அடைவதில் ஒருமுகப்பட்ட சிந்தனை, அக்ரோத - கோபத்துக்கு வசமாகாமலிருத்தல், விவேக - பகுத்தறிந்தாராய்தல், சந்துலன - செயல்களில் நடுநிலை காத்தல், தேசபக்தி - நாட்டுப்பற்று முதலியன எல்லோருக்கும் பொதுவானதே.

சில அந்தந்த தேசத்திற்கும், அந்தந்த வட்டாரத்துக்கும் அவரவது கலாசாரத்துக்கேற்ப அந்தந்த காலத்துக்கும், அந்தந்த சூழ்நிலைக்கும் ஏற்ப அமைந்தவைகளாகும். சிலர் அவரவரது மதத்துக்கேற்ப சில கோட்பாடுகளை அமைத்து அவைகளை அம்மதத்தவர்கள் கடைப்பிடிக்க வேண்டியது இன்றியமையாததென வரையறுத்து விடுகின்றனர்.

இந்தியப் பண்பாட்டில் கற்புக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. பால் சமத்துவம் மிகவும் இன்றியமையாத ஒன்றாக பேசப்படும் இன்றைய சமுதாயத்துக்கு அது கொடுமையானதாகவும், பொருத்தமற்றதாகவும் தோன்றலாம். ஆனாலும், ஒரு குடும்பத்தின் ஒருமைப்பாடு என்பது பெரும்பாலும் பெண்களின் தூய்மையையும் கற்பையுமே அடிப்படையாகக் கொண்டதால் மேற்கத்திய நாடுகளைப் போலில்லாமல், குடும்பம் சீர்குலையாமல் ஒற்றுமையுடன் இணைந்திருப்பதற்கான பெரும் பொறுப்பு பெண்களின் நடத்தையே இன்றியமையாததாக

இருக்கின்றது. அதனாலேயே பெண்களுக்கு நம் சமுதாயத்தில் அதிகமான மரியாதையும் கௌரவமும் கொடுக்கப்படுகிறது.

பெண்கள் தேவதைகளாக போற்றப்படுகிறார்கள். எங்கு பெண்கள் போற்றப்படுகிறார்களோ அங்கு தேவதைகளும் மகிழ்ச்சியடைகின்றனர். 'யத்ர நார்ய பூஜ்யந்தே தத்ர ரமந்தி தேவதா' என்று கூறப்படுகிறது. அவர்களுக்கு தேவதைகளுக்கொப்பான இடம் கொடுக்கப்பட்டது. இன்றும் கொடுக்கப்படுகிறது. அவர்களது குழந்தை பருவத்திலும் முக்கியமாக நவராத்திரி நாட்களில் அவர்கள் தேவதைகளின் துர்கா தேவியின் அம்சமாகவே, ஸ்வரூபமாகக் கருதப்படுகிறார்கள். அந்நாட்களில் அவர்களுக்கே மிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. அவர்களது பாதங்கள் கழுவப்படுகின்றன. புத்தம் புதிய ஆடைகள் கொடுக்கப்படுகிறார்கள். அவர்களுக்கு நல்ல ருசிகரமான ஆகாரம் கொடுத்து கையில் செல்வமும் கொடுக்கப் படுகிறது. பண்டைய காலமுதற்கொண்டே கற்பில் சிறு வீழ்ச்சியையும் இந்திய சமுதாயம் ஏற்பதில்லை. அதை வெறுக்கிறார்கள்.

இந்த கற்பு, கணவனிடம் அன்புடனும் சிரத்தையுடனும் இருப்பதாகும். இந்த கற்பு என்பது அவர்களது ரத்தத்தில் ஊறியதாக ஆகிவிட்டது. அதனாலேயே இன்றைய சூழ்நிலையிலும், வாழ்க்கை என்பது அதிவிரைவாக ஓட்டமாக ஓடிக்கொண்டிருக்கும் சந்தர்ப்பத்திலும், மேற்கத்திய நவீன கலாசாரங்கள் நம் வாழ்க்கையில் ஊடுருவிப் பரந்திடினும் அக்கருத்தை விட்டு வெளிவருவது இயலாததாக ஆகிவிடுகின்றது. இல்லையெனில் நவநாகரீக உடை அணிந்துகொண்டு, உயர்ந்த கல்வியில் தேர்ச்சிபெற்று, பெரிய பெரிய உயர்ந்த பொறுப்புகளை அலுவலகங்களில் ஏற்றவர்கள்கூட கர்வாசௌத் அன்று தங்களது கணவன்மார்களின் நலம் பேணுகின்றவர்களாய் நாள் முழுவதும் உணவருந்தாமல் உபவாசம் இருந்து மாலையில் சந்திரனைக் கண்ட பிறகே உணவருந்துகின்றனர்.

மத்திய காலத்தில் நமது மன்னர்கள் அல்லது நம்மை ஆண்டவர்கள் பலம் குன்றி பெண்களை காக்க இயலாமல் இருந்தபோது பெண்கள் கணவன்மார்களை இழந்தபோது தாங்கள் காப்பவரின்றி அல்லல் படுவதைக்காட்டிலும் உயிரை விடுவதே மேல் என்று கருதுகின்றவர் களாய் தங்களது உயிரையே தியாகம் செய்தனர். இதுவே சதி எனப்பட்டது. சதி என்ற இச்சொல் சிவனது முந்தைய பிறப்பில் மனைவியான சதி, தன் தகப்பனார் தன் கணவனை மதிக்காமல் அவமதித்ததால், அதை தாங்கவொண்ணாமல் தன்னுடலை தியாகம்

செய்ததிலிருந்து பிறந்ததாகும். அந்த சந்தர்ப்பத்திற்கு அதுவே உகந்ததாக அமைந்தது. அதுவே வாழ்க்கையின் மாண்பாகவும் கருதப்பட்டது. ஆனால் பல மாறுதல்களுக்குட்பட்ட காலசூழ்நிலை யில் அப்பழக்கத்தை பின்பற்றுவது பொருந்துவதாக இல்லை. அது ஒரு காலத்திற்கும் ஒரு சந்தர்ப்பத்திற்கும் ஏற்றதாக அமைந்தது. இப்படிப்பட்ட சில பொருந்தாத பழக்கங்கள் இன்றும் நம் செவி களில் விழுகின்றன. ஆனால் இன்று இவைகள் ஒருவருடைய மரியாதையையோ கண்ணியத்தையோ அன்று போல் காப்பாற்று வதாக இல்லை.

இது இறந்த தன் கணவனுடன் தான் ஒன்றி இருப்பதன் அறிகுறியாக வும் கணவனின்றி வாழ்க்கை நடத்துவது ஒரு பயனும் பொருளும் அற்றது என்ற கருத்தை வெளிப்படுத்தவும் அமைகிறது. சிறிது அதிக மான பாலுணர்ச்சியில் சிக்கிய பெண்களை அக்கொடிய செயலில் ஈடுபடுத்தாமலிருக்க உற்றார் உறவினர்களின் முடிவான கருத்துடன் இணைந்த செயலுமாகும். ஆனால் இப்பொழுது அது சட்டத்தின் மூலம் முழுவதும் அறவே நீக்கப்பட்டுள்ளது. அதனால் அதைப்பற்றி அதிகமாக பேசவேண்டிய அவசியம் இப்பொழுது இல்லை.

இதன் அடிப்படை, பெண்களின் மரியாதையை பாதுகாப்பது என்பதே. அது இன்றும் மாறவில்லை. எந்த ஒரு சமுதாயமும் இலக்கைவிட்டு விலகாத ஆண்களையும் பெண்களையும் முழுவதுமாக உடையதாகஇதுவரை இருந்ததில்லை. சமுதாயம் மாறுதல்களை ஏற்கத்தான் வேண்டியுள்ளது. அதற்கு இந்திய சமுதாயம் விதிவிலக்கல்ல. இந்திய பெண்கள் தங்களது நிலையை மீறிச்செல்வதை இன்றும் இச்சமுதாயம் வெறுக்கிறது. அதை மிகக் கொடுமை யானதாகவே சமுதாயம் இன்றும் பார்க்கிறது. அண்மை காலத்தில் கற்பழிப்பிற்காக நடந்த நிகழ்ச்சிகளின் கூச்சலிலும் குழப்பத்திலும் ஆண்களும் இணைந்தே மிக்க கண்டனத்தையும் எதிர்ப்பையும் காட்டினர். இதனால் மன உறுதியையும் தார்மீக நடத்தையிலிருந்தும் நழுவி வீழ்வதோடு பொதுமக்களின் பயங்கரமான எதிர்ப்பையும் தீர்மானமாகக் கொண்டுள்ளது. இதற்கு முக்கியமான காரணம் கற்பைக் காப்பதே. அதிலும் இந்திய சமுதாயம் கற்பிற்கு ஒரு சிறப்பான முக்கியத்துவம் கொடுத்திருப்பதே ஆகும்.

இதே பெண்களின் தற்காப்பை கருத்தில் கொண்டுதான் முகமதியர் சமுதாயத்திலும் பெண்கள் வெளியில் செல்லும் பொழுது உறவினர்களான ஆண்களுடன் செல்லுதல் வேண்டுமென்ற

இருக்கின்றது. அதனாலேயே பெண்களுக்கு நம் சமுதாயத்தில் அதிகமான மரியாதையும் கௌரவமும் கொடுக்கப்படுகிறது.

பெண்கள் தேவதைகளாக போற்றப்படுகிறார்கள். எங்கு பெண்கள் போற்றப்படுகிறார்களோ அங்கு தேவதைகளும் மகிழ்ச்சியடைகின்றனர். 'யத்ர நார்ய பூஜ்யந்தே தத்ர ரமந்தி தேவதா' என்று கூறப்படுகிறது. அவர்களுக்கு தேவதைகளுக்கொப்பான இடம் கொடுக்கப்பட்டது. இன்றும் கொடுக்கப்படுகிறது. அவர்களது குழந்தை பருவத்திலும் முக்கியமாக நவராத்திரி நாட்களில் அவர்கள் தேவதைகளின் துர்கா தேவியின் அம்சமாகவே, ஸ்வரூபமாகக் கருதப்படுகிறார்கள். அந்நாட்களில் அவர்களுக்கே மிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. அவர்களது பாதங்கள் கழுவப்படுகின்றன. புத்தம் புதிய ஆடைகள் கொடுக்கப்படுகிறார்கள். அவர்களுக்கு நல்ல ருசிகரமான ஆகாரம் கொடுத்து கையில் செல்வமும் கொடுக்கப் படுகிறது. பண்டைய காலமுதற்கொண்டே கற்பில் சிறு வீழ்ச்சியையும் இந்திய சமுதாயம் ஏற்பதில்லை. அதை வெறுக்கிறார்கள்.

இந்த கற்பு, கணவனிடம் அன்புடனும் சிரத்தையுடனும் இருப்பதாகும். இந்த கற்பு என்பது அவர்களது ரத்தத்தில் ஊறியதாக ஆகிவிட்டது. அதனாலேயே இன்றைய சூழ்நிலையிலும், வாழ்க்கை என்பது அதிவிரைவாக ஓட்டமாக ஓடிக்கொண்டிருக்கும் சந்தர்ப்பத்திலும், மேற்கத்திய நவீன கலாசாரங்கள் நம் வாழ்க்கையில் ஊடுருவிப் பரந்திடினும் அக்கருத்தை விட்டு வெளிவருவது இயலாததாக ஆகிவிடுகின்றது. இல்லையெனில் நவநாகரீக உடை அணிந்துகொண்டு, உயர்ந்த கல்வியில் தேர்ச்சிபெற்று, பெரிய பெரிய உயர்ந்த பொறுப்புகளை அலுவலகங்களில் ஏற்றவர்கள்கூட கர்வாசௌத் அன்று தங்களது கணவன்மார்களின் நலம் பேணுகின்றவர்களாய் நாள் முழுவதும் உணவருந்தாமல் உபவாசம் இருந்து மாலையில் சந்திரனைக் கண்ட பிறகே உணவருந்துகின்றனர்.

மத்திய காலத்தில் நமது மன்னர்கள் அல்லது நம்மை ஆண்டவர்கள் பலம் குன்றி பெண்களை காக்க இயலாமல் இருந்தபோது பெண்கள் கணவன்மார்களை இழந்தபோது தாங்கள் காப்பவரின்றி அல்லல் படுவதைக்காட்டிலும் உயிரை விடுவதே மேல் என்று கருதுகின்றவர் களாய் தங்களது உயிரையே தியாகம் செய்தனர். இதுவே சதி எனப்பட்டது. சதி என்ற இச்சொல் சிவனது முந்தைய பிறப்பில் மனைவியான சதி, தன் தகப்பனார் தன் கணவனை மதிக்காமல் அவமதித்ததால், அதை தாங்கவொண்ணாமல் தன்னுடலை தியாகம்

செய்ததிலிருந்து பிறந்ததாகும். அந்த சந்தர்ப்பத்திற்கு அதுவே உகந்ததாக அமைந்தது. அதுவே வாழ்க்கையின் மாண்பாகவும் கருதப்பட்டது. ஆனால் பல மாறுதல்களுக்குட்பட்ட காலசூழ்நிலை யில் அப்பழக்கத்தை பின்பற்றுவது பொருந்துவதாக இல்லை. அது ஒரு காலத்திற்கும் ஒரு சந்தர்ப்பத்திற்கும் ஏற்றதாக அமைந்தது. இப்படிப்பட்ட சில பொருந்தாத பழக்கங்கள் இன்றும் நம் செவி களில் விழுகின்றன. ஆனால் இன்று இவைகள் ஒருவருடைய மரியாதையையோ கண்ணியத்தையோ அன்று போல் காப்பாற்று வதாக இல்லை.

இது இறந்த தன் கணவனுடன் தான் ஒன்றி இருப்பதன் அறிகுறியாக வும் கணவனின்றி வாழ்க்கை நடத்துவது ஒரு பயனும் பொருளும் அற்றது என்ற கருத்தை வெளிப்படுத்தவும் அமைகிறது. சிறிது அதிக மான பாலுணர்ச்சியில் சிக்கிய பெண்களை அக்கொடிய செயலில் ஈடுபடுத்தாமலிருக்க உற்றார் உறவினர்களின் முடிவான கருத்துடன் இணைந்த செயலுமாகும். ஆனால் இப்பொழுது அது சட்டத்தின் மூலம் முழுவதும் அறவே நீக்கப்பட்டுள்ளது. அதனால் அதைப்பற்றி அதிகமாக பேசவேண்டிய அவசியம் இப்பொழுது இல்லை.

இதன் அடிப்படை, பெண்களின் மரியாதையை பாதுகாப்பது என்பதே. அது இன்றும் மாறவில்லை. எந்த ஒரு சமுதாயமும் இலக்கைவிட்டு விலகாத ஆண்களையும் பெண்களையும் முழுவதுமாக உடையதாகஇதுவரை இருந்ததில்லை. சமுதாயம் மாறுதல்களை ஏற்கத்தான் வேண்டியுள்ளது. அதற்கு இந்திய சமுதாயம் விதிவிலக்கல்ல. இந்திய பெண்கள் தங்களது நிலையை மீறிச்செல்வதை இன்றும் இச்சமுதாயம் வெறுக்கிறது. அதை மிகக் கொடுமை யானதாகவே சமுதாயம் இன்றும் பார்க்கிறது. அண்மை காலத்தில் கற்பழிப்பிற்காக நடந்த நிகழ்ச்சிகளின் கூச்சலிலும் குழப்பத்திலும் ஆண்களும் இணைந்தே மிக்க கண்டனத்தையும் எதிர்ப்பையும் காட்டினர். இதனால் மன உறுதியையும் தார்மீக நடத்தையிலிருந்தும் நழுவி வீழ்வதோடு பொதுமக்களின் பயங்கரமான எதிர்ப்பையும் தீர்மானமாகக் கொண்டுள்ளது. இதற்கு முக்கியமான காரணம் கற்பைக் காப்பதே. அதிலும் இந்திய சமுதாயம் கற்பிற்கு ஒரு சிறப்பான முக்கியத்துவம் கொடுத்திருப்பதே ஆகும்.

இதே பெண்களின் தற்காப்பை கருத்தில் கொண்டுதான் முகமதியர் சமுதாயத்திலும் பெண்கள் வெளியில் செல்லும் பொழுது உறவினர்களான ஆண்களுடன் செல்லுதல் வேண்டுமென்ற

நியதியைக் கொண்டுள்ளார்கள். மேலும் ஆண்களின் காம உணர்ச்சியுடன் கூடிய பார்வையிலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ளவே அவர்கள் உடலை முழுவதுமாக மறைத்துக்கொள்கிறார்கள், அவ்வாறே புர்கா என்னும் சீலையையும் முகமூடியையும் அணிந்துகொள்கிறார்கள்.

இதைத்தவிர மற்றும் இந்தியர்களுக்காகவே அமைந்த முக்கிய நற்பண்புகள் பல உள்ளன. அவைகள் இன்றியமையாதனவையாக வழக்கத்தில் இருந்தவைகளாகவும் அமைகின்றன. அவைகளில் முக்கியமாக குறிப்பிடத்தக்கவை தாய், தந்தை, ஆசான் இவர்களை கடவுளாகக் கருதி அவர்களுக்கு மேலான முதல் மரியாதை கொடுப்பதாகும்.

தைத்தரீய உபநிஷத்தில் சிக்ஷா வல்லியில் சீடர்கள் படிப்பை முடித்து பிரிந்து செல்லுகையில் கொடுக்கும் ஆணையாம், விதிமுறைகளில் தாய், தந்தை, ஆசான் இவர்களை கடவுளாகக் கருதி விசேஷ மரியாதை கொடுப்பதுடன் அதிதி அதாவது விருந்தினர்களைக்கூட தேவதைகளாகக் கருதும்படி கூறப்பட்டுள்ளது.

'மாத்ரு தேவோ பவ, பித்ரு தேவோ பவ, ஆசார்ய தேவோ பவ, அதிதி தேவோ பவ'. இது ஒரு கம்பீரமான உன்னதமான மாண்பாகும். ஒருவன் சொல்லொண்ணா சிக்கலையும் இன்னல்களையும் எதிர்கொள்ளும் பொழுது இவை சமுதாயத்தை நல்லிணக்கத்துடன் அழைத்துச் செல்வதற்கு உதவிடும் ஓர் உன்னதமான வழிகாட்டும் கருவியாக அமைந்துள்ளன.

இக்கருத்தினாலேயே ராமபிரான் தன் தந்தையின் ஆணைக்கு அடிபணிந்து மறு சிந்தனையின்றி அவ்வாணையிலிருந்து சிறிதும் நழுவாமல் நொடியில் காட்டிற்குச் சென்று தந்தை, தன் சிறிய அன்னைக்குக் கொடுத்த இரு வரங்களாகிற வாக்கை காப்பாற்றும்படி செய்து பதினான்கு வருடங்கள் காட்டிலேயே வனவாசம் புரிந்தார். இவ்வாறு தன்னுயிரான மகனை பிரியும் தாங்கமுடியாத வேதனையையும் இன்னலையும் பொறுத்துக்கொள்ள முடியாதவராக இருந்தாலும், தான் கொடுத்தவாக்கிலிருந்தும் வரங்களிலிருந்தும் தசரதர் பின்வாங்கவில்லை. அவர் தானே தன் மகனை காட்டுக்குச் செல்லும்படிக் கூறவில்லை. ஆனால் சிறுதாய் தான் எடுத்துரைத்தாள் என்று கூறுகிறார். தன் தந்தையின் தர்மசங்கட நிலைமையை உணர்ந்து தந்தையின் இருவரம் கொடுத்த வாக்கை பரிபாலனம் மீறாமல் இருப்பதற்கும் அவ்வாறே தந்தை சொல் மீறாமல் தந்தைக்கு

அடிபணிந்திருப்பதையும் எடுத்துக்கூறி இந்திய கலாசாரத்தை உன்னதமான முறையில் உயர்ந்த சிகரத்தில் இருத்தி ராமாயணத்தில் அழியாச் சொற்களால் வருணித்துள்ளார். 'தன் தந்தைக்கு அடிபணிந்து அவரது விருப்பத்திற்கேற்ப நடப்பதைக் காட்டிலும் வேறு உயர்ந்ததொரு தருமமும் இல்லை' (2.19.22). தாயோ இந்திய கலாசாரப்படி பூமியைக் காட்டிலும் உயர்ந்தவள் ஆவாள். 'மாதா குருதரா பூமே:' தந்தையைக் காட்டிலும் தாய் ஆயிரம் மடங்கு உயர்ந்தவளாவாள். 'ஸஹஸ்ரம் ஹி பிதுர்மாதா கௌரவேணாதிரிச்யதே' (பாலராமாயணம் 4.30) ஆசானோ பிரம்மா, விஷ்ணு, சிவன் என முக்கடவுளுக்கும் சமமானவராவார். 'குருர்ப்ரும்மா குருர்விஷ்ணு குருர்தேவோ மஹேஸ்வர:' விருந்தினரோ எல்லா கடவுளையும் தம்முள் கொண்டவர். 'அதிதி: ஸர்வதேவதா:'

தன் சுயமரியாதையை காப்பாற்றிக்கொள்வதில் சமரசம் செய்துகொள்ளாமல் இருத்தல் இந்தியர்கள் பண்டைகாலந்தொட்டு பெருமையாகக்கொள்ளும் மற்றுமோர் மூல மாண்பாகும்.

மகாராணா பிரதாப் காட்டில் அலைந்தான். அவனது குழந்தைகள் புல்லாலான ரொட்டிகளை உண்ணவேண்டி இருந்தது. ஆனால் அவனோ தனது சுயமரியாதையையும் விட்டுக்கொடுக்கவில்லை. அதே நேரம் கைதியும் ஆகவில்லை. எவ்வளவு தூரம் தருமத்தை காக்கமுடிகிறதோ அதுவரை அதற்கு முயற்சிசெய்வது இந்தியர்களின் மாண்பாகும்.

தனது ஒன்பதாம் வயதில் தனக்குரிய தருமத்தைக் காக்க குரு கோவிந்த சிங் தம் தந்தையிடம் தன்னுயிரை தியாகம் செய்ய உற்சாகத்துடன் ஊக்கமளித்தார். கட்டாயப்படுத்துவதால் பிறரது தருமத்தை ஏற்பதைக்காட்டிலும் தன் தருமத்தைக் காக்க தன்னுயிரை கொடுப்பதே மேலானதாகும். அவரது ஏழு வயது, ஒன்பது வயதுகொண்ட குழந்தைகள் மாற்று தருமத்தைக் கடைப்பிடிப்பதைக் காட்டிலும் தன் தருமத்தைக் காத்து அதற்கு தன்னுயிரை ஈந்திடுவதே சிறந்ததென நினைத்தனர். தனது மற்ற இரு குழந்தைகளும் போர்முனையில் உயிர்த் தியாகம் செய்தபின் குரு கோவிந்த சிங், கொடிய ஔரங்சீப்புடனும் அவனது படைகளுடனும் போராடினான் ஆனால் தன் தோல்வியை ஒப்புக்கொள்ளத் தயாராக இல்லை.

தாய் நாட்டிற்காக தன்னுயிரையே மிக்க களிப்புடன் ஈந்த பகத் சிங், ராஜ்குரு, சுகதேவ் முதலியவர்களின் தியாகத்தை எவராலும் மறக்கமுடியுமா என்ன?

சுயமரியாதையுடன் வாழ்தல், சுதந்திரமாய் வாழும் விருப்பம், தருமத்தைக் காத்தல், தாய்நாட்டுப்பற்று இவைகளே அவர்களுடைய பண்புகளை பறைசாற்றுகிறது. தங்களுடைய பண்புகளை காப்பதற் காக மேலான தியாகத்தை செய்து வரலாற்றில் அழியாப் புகழிடம் பெற்றவர்கள் இவர்கள்.

இந்தியர்கள் கடைப்பிடித்து வந்த மனித பண்புகளை முழுவதுமாக அறிந்துகொள்ள வேண்டுமானால் அவர்களது அடிப்படை பண்புகளை அறிந்துகொள்வது இன்றியமையாததாகும். காலம் செல்லச்செல்ல சிறிது சிறிதாக நாகரீகம் முன்னேற்றமடைய மக்கள் மிருகங்களைக் காட்டிலும் உயர்ந்த மேலான வாழ்க்கை வாழ கற்றுக்கொண்டனர்.

ஒருக்கால், ஒரு குழுவாகக் கூடி வாழ்வதன் எழுச்சி தங்களைக் காப்பாற்றிக்கொள்வதற்காக ஏற்பட்டதாக இருக்கலாம். தனிப்பட்டு தன்னைக் காப்பாற்றிக்கொள்வது என்பது மாறி, குழுவாக இணைந்து காத்துக்கொள்வதாக உருவெடுத்திருக்கலாம். இக்கொள்கையினின்றும் உயிர் வாழ்வதன் அத்தியாவசியத்தை மனிதன் அறிந்துக் கொண்டிருக்கலாம்.

இதுவே வாழ்க்கையில் நம்பிக்கையை ஏற்படுத்திட மனிதன் தன் குழுவின், சமுதாயத்தின் பண்புகளை புரிந்துகொள்ள தொடங்கி யிருக்கலாம். இதுவே பண்புகளில் நம்பிக்கை ஏற்படுத்தும் விடியலாக இருக்கலாம். இந்த பண்புகளின் அடிப்படை விஷயங்கள் ஸ்ருதி, ஸ்ம்ருதி, புராணங்களில் செதுக்கப்பட்டுள்ளன. அறிவாற்றலில் உயர்ந்தவனாக இருப்பதால் மனிதன் எதையுமே சரியா தவறா என்று சிந்திக்கத் தொடங்கினான்.

முதலில் தன்னொருவனுக்கு உகந்ததா என்றும், பின்னர் சமுதாயத்துக்கு உகந்ததா என்றும், பின்னர் ஒட்டுமொத்தமாக மனித இனத்துக்கு ஏற்றதா என்றும் சிந்திக்கத் தொடங்கினான். கடைசியில் வாழ்க்கையின் ஒவ்வொரு படியிலும் உகந்ததா அல்லது உகந்த தில்லையா என்பதை தன் பகுத்தறிவினால் தீர்மானிக்கத் தொடங்கி னான். தனி ஒருவரைப் பற்றியதில் தானே சிந்தித்து செயல்பட்டான். ஆனால் சமுதாயத்துக்கு பொதுவாக அமைந்தவைகளில் அவன் பிறருடன் கலந்து ஆலோசிக்கலானான். அந்த மாண்புகள் சில, காலத்துக்கும் இடத்துக்கும் ஏற்றதாக ஒத்துவரவில்லையாகில், அந்தந்த காலத்துக்கும் இடத்துக்கும் ஏற்ப அந்த பண்புகளை மாற்றி அமைக்க வேண்டியவை என்பதை அறிந்து கொண்டான்.

அதனால் காலத்தையும் இடத்தையும் அறிந்துகொள்ள வேண்டியது அவசியம் என்பதை உணருதல் வேண்டும். அடுத்து எழும் கேள்வியோ இந்த பண்புகள் யாருக்காக என்பதாகும். இதற்கான பதிலோ பொதுவாக சமுதாயத்துக்காக என்பதேயாகும். மனித பண்புகள் சமுதாய நலனைக் குறித்தில்லையாகில் அவைகள் பண்புகளாக ஏற்கும் தகுதியைப் பெறுவதில்லை.

பண்புகளை ஏற்பதற்கு அடிப்படையாகத் தேவை, அவை சமுதாயத்திலுள்ள பிறர் நலனுக்காக அமைய வேண்டும் என்பதேயாகும். இப்படி பிறரது நலனைப்பற்றி குறிப்பிட்ட பின்னர், தனி மனிதனின் வாழ்க்கையில் அமையும் மாண்புகளைப் பற்றி சிந்திக்க வேண்டும். பிறரது நலன் கருதி தனிமனிதன் தனது பண்புகள் முழுவதையுமே தியாகம் செய்துவிட வேண்டுமா? அல்லது தனது முன்னேற்றத்துக்காக தானே தன் பகுத்தறிவுக்கேற்ப மாண்புகளை அமைத்து அவைகளை அனுசரிக்க வேண்டுமா?

இந்த அனைத்திலும் ஒன்றை கவனத்தில் கொள்ளுவது அத்தியாவசியமானதாகும். ஒருவன் தன் பகுத்தறிவினால் ஆராய்ந்து பண்புகளை அனுசரிக்கிறானோ இல்லையோ, அந்த பண்பு என்பது ஒருவனது ஆன்மீக வளர்ச்சியை வளர்ப்பதாக இருக்கவேண்டும். இவ்வாறு ஆன்மீக வளர்ச்சி இல்லையாகில் அவைகளை மாண்புகள் என்று கூறுவது பொருந்தாததாகும். இந்தியர்களின் பண்புகளை அமைத்துக் கொள்வதில் கீழ்க்கண்ட அடிப்படையான கொள்கைகளை கவனத்தில் கொள்ளவேண்டும்.

1. வாழ்க்கையில் நம்பிக்கை
2. அறிவாற்றலின் பிரதிபலிப்பு
3. சுற்றுச்சுழலின் அறிவு புகட்டல்
4. பிறர் நலம் பேணுதல்
5. ஆன்ம வளர்ச்சி அல்லது ஆன்ம அறிவு

மனித மாண்புகளை விரிவான, பரந்த முறையில் முழுவதுமாக அறிந்துகொள்ள வேண்டுமானால் அவைகளை பல பிரிவுகளில் பிரித்து தெரிந்துகொள்வது சாலச் சிறந்ததாகும். அவையாவன - உடலையொட்டிய மாண்புகள், மனதைச் சார்ந்த மாண்புகள், பொருளாதார மாண்புகள், ஒழுக்கத்தையொட்டிய மாண்புகள், சமூக மாண்புகள், ஆன்மீக மாண்புகள், அழகியல் மாண்புகள்.

- வயதுக்கும், சாதிக்கும், தொழிலுக்கும் உகந்த ஆரோக்கிய மான உடல், நல்ல பலம், வாட்டசாட்டமான அங்கங்கள், கவர்ச்சியான முகம் முதலியவை உடலையொட்டிய மாண்புகளாகும்.

- மனதையொட்டிய மாண்புகளில் சுயபலம், தன்னம்பிக்கை, கௌரவமான கட்டு, சுய சார்பு என்கிற தன்னையே சார்ந்திருத்தல், மனத்திருப்தி, அச்சமின்மை, பொறுமை, மனதிடம், இரக்கம் முதலியவைகளாகும்.

- பொருளாதார மாண்புகளில் முக்கியமானவை - நேர்மையான முறையில் செல்வம் சம்பாதித்தல், நல்ல காரணங்களுக்காக செலவு செய்தல், சிக்கனமாக இருத்தல், நற்பணிகளில் தாராளமாக வழங்குதல், பதுக்கிவைக்காதிருத்தல் இவைகளாகும்.

  - நீதி சாஸ்திரத்தில் செல்வத்துக்கு மூன்று வழிகள் கூறப் பட்டுள்ளன. தானம் செய், அனுபவி அல்லது அழித்துவிடு. 'தானம் போகோ நாசஸ் திஸ்ரோ கதயோ பவந்தி வித்தஸ்ய'.

- கடமையுணர்தல், நேர்மை, ஆழ்ந்த ஈடுபாடு, தியாகம், தரும சிந்தனை, சேவை செய்தல், நன்னடத்தை, பண்பாட்டு வழக்கங்கள், வாய்மையில் நம்பிக்கை, ஒழுங்குமுறை சட்டம் இவைகளை மதித்தல் ஆகியவை ஒழுக்கத்தை யொட்டிய மாண்புகளாகும்.

- சமூக மாண்புகளாகக் கூறப்படுபவை - ஒருங்கிணைதல், கருணை, ஒத்துழைப்பு, மனிதநேயம் முதலியவைகளாகும்.

- தேசப்பற்று, கட்டுப்பாடு, வெற்றியைக் கொண்டாடுதல் அரசியல் மாண்புகளாகும்.

- கடவுளிடம் திடநம்பிக்கை, கடவுள் பக்தி, மந்திரங்களை உச்சரித்தல், ஆண்டவனுக்கு பூசை செய்தல், பிரார்த்தனைகள் செய்வது, ஞானஒளியைத் தேடல், தன்னையறிதல் இவைகள் ஆன்மீக மாண்புகளாகும்.

- அறிவையொட்டிய மாண்புகளோ அபார கற்பனை, அறியும் ஆவல், புலனாராய்தல், படைப்பாற்றல், ஆராயும் தன்மை, காலத்தின் பிரதிபலிப்பு, பகுத்தறிந்தாராய்தல் ஆகியவையாகும்.

- அழகியல் மாண்புகளோ கலைகளை ரசித்தல், இயற்கையை நேசித்தல், மனிதர்களின் அழகை ரசித்தல் ஆகும்.

இவ்வாறு மாண்புகளை - பண்புகளை வகைப்படுத்துவதால், இவைகள் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டவையல்ல என்பதல்ல. உண்மையில் இந்த எல்லா பண்புகளுமே வாழ்க்கையென்னும் பெரும் மரத்தின் கிளைகள் போன்றவைகளாகும். நாம் இருக்குமிடத்தி லிருந்து அவைகளை தேர்ந்தெடுப்பது எளிதாய் இருந்திடும்.

மற்றுமொரு முக்கிய கேள்வி இங்கு எழுவது என்னவென்றால் சில நேரங்களில் இரு பண்புகள் ஒன்றுக்கொன்று முரண்பட்டதாகத் தோன்றும். அவைகளை சரிப்படுத்துவது எப்படி?

ஒரு பிரசித்திபெற்ற எடுத்துககாட்டு உள்ளது. தெய்வீகமான பசு ஒன்று கசாப்புக்காரனிடமிருந்து தப்பி ஓடி, இந்துக்களின் தெரு ஒன்றில் நுழைந்துவிட்டது. அந்த கசாப்புக்காரனோ பசு எந்த வழியாகச் சென்றது என்று கேட்டால், அதற்கு பதில் என்ன கூறமுடியும்? உண்மையை எடுத்துக் கூறினால் கசாப்புக்காரன் பசுவை கொன்றுவிடுவான். அது இந்துக்களுக்கும் முகமதியர்களுக்கு மிடையே கலகத்தை ஏற்படுத்தும். பலர் உயிரிழக்க நேரிடும். கசாப்புக்காரனிடம் வேறு வழியைக் காட்டினாலோ அது உண்மை பேசுவதாகாது. நம் வேதநூல்களோ சத்தியத்தை உரைக்கும்படி கட்டளையிடுகிறது. 'ஸத்யம் வத' என உண்மை பேசு என்கிறது.

நம் இந்திய அறிஞர்களோ இரு முரண்பட்ட மாண்புகள் சேரும் நேரம் எப்படி தீர்வளிப்பதென்பதை 'ஸ்ருதி ஸ்ம்ருதி ஸதாசார ஸ்வஸ்ய ச ப்ரியம் ஆத்மன:' என்று கூறுகின்றனர்.

இப்படி முரண்பாடுகள் தோன்றுகையில் முதலில் வேதங்களை அணுகுதல் வேண்டும். பிறகு ஸ்ம்ருதிகள் (கட்டளை சட்டங்கள்), பிறகு நன்னெறி வழிகள். இம்மூன்றினாலும் ஒருவருக்கு சமாதானம் கிடைக்கவில்லையானால் ஒருவரது மனசாட்சியை ஏற்க வேண்டும்.

மற்றுமோரிடத்தில் 'மஹாஜன யேன கத ஸ பந்தா' என்று கூறப் பட்டுள்ளது. அதாவது மகான்கள் எவ்வழியை கடைப்பிடித்தார்களோ அவ்வழியே சிறந்ததாகும். அதனால் மகான்கள் காட்டிய வழியைப்பின் பற்றுவதே மிகச்சிறந்ததாகும். முரண்பாடெழும் சந்தர்ப்பங்களில் மகான்கள் காட்டிய வழியே பாதுகாப்பானதாக அமையும்.

பல பிரிவினருக்கு பலதரப்பட்ட பண்புகள் ஏற்கத் தகுந்தவைகளாக அமைகின்றன. இதை உபநிடத்திலுள்ள ஒரு கதை விளக்கமாக எடுத்துக் கூறுகிறது.

பிரஜாபதிக்கு தேவர்கள், மானுடர்கள், அரக்கர்கள் என மூன்று பிரிவினர்களைச் சார்ந்த மகன்கள் இருந்தனர். அவர்கள் அவரது வீட்டிலேயே இருந்துகொண்டு கல்வி கற்றனர். கல்விப் படிப்பை முடித்ததும் அவர்கள் மூவரும் அவரை அணுகி தங்களுக்கு அறிவுரை வழங்கும்படிக் கேட்டுக்கொண்டனர்.

அவரோ 'த' என்ற ஓரெழுத்தை எடுத்துக் கூறினார். பின்னர் அவர் களிடம் அதன் பொருள் என்ன என்று வினவினார்? தேவர்களோ 'த' என்றால் 'தாம்யத' 'கட்டுப்பாட்டுடன் இருக்க வேண்டும்' என்றனர். மானுடர்களோ 'த' என்றால் 'தத்த' 'வாரி வழங்குங்கள்' என்றனர். அரக்கர்களோ 'த' என்றால் 'தயத்வம்' 'கருணையோடு இருங்கள்' என்றனர்.

அவர்களது பதில் அவருக்கு மிகவும் மகிழ்ச்சி அளித்தது. புதிர் போன்ற ஓரெழுத்தை அவர்கள் முழுமையாக அறிந்துகொண்டார்கள் என மனத்திருப்தி அடைந்தார். மேலும் அவர் கூறியதாவது - மேகங்கள் தங்களது 'த த த' இடிமுழக்கத்தினால், 'கட்டுப்பாட்டுடன் இருங்கள்', 'வாரி வழங்குங்கள்', 'கருணையோடு இருங்கள்' என்ற செய்தியை நமக்கு எடுத்துரைக்கின்றன என்றார்.

பிரஜாபதியின் மூன்று மகன்களும் அவரவர்களுக்கு பொருத்தமானபடி அவர் கூறிய எழுத்திற்கு பொருள் அறிந்துகொண்டனர். தேவர்களிடம் எல்லாமே நிறைந்திருந்தது. அதனால் அவர்களுக்கு கட்டுப்பாடு மிகவும் இன்றியமையாததாக இருந்தது. அதை அவர்கள் வளர்த்துக்கொள்ள வேண்டும். மானுடர்களோ தங்களிடம் உள்ளவைகளை எல்லோருடனும் பகிர்ந்துகொள்ள வேண்டும். தங்களுக்கென பதுக்கி சேர்த்து வைத்துக்கொள்ளுதல் கூடாது. அரக்கர்களோ சுபாவத்திலேயே கொடிய குணங்கள் நிறைந்தவர்கள். சமுதாயம் நன்கு இணைந்து ஒற்றுமையுடன் இருக்க வேண்டுமானால் கருணை இன்றியமையாததாகும். அதை அவர்கள் புரிந்துகொண்டனர்.

(ப்ருஹ்தாரண்யக உபநிஷத் 5.2).

மூன்று வழிகளில் இந்திய பண்புகளை அறிந்துகொள்ளலாம்:

1. மெய்யியலின் தத்துவ அடிப்படை

2. சமுதாய விழிப்புணர்ச்சி

3. தனி மனிதனின் பண்பு

தவம், தியாகம், சேவை, தன்னை அறிவதற்கான பக்திமார்கத்தில் ஈடுபாடு இவைகளினால் இந்திய அறிவாளிகள் நல்ல திடமான ஆன்மீக அஸ்திவாரத்தை அடைந்துள்ளனர். நமது வாழ்க்கை நெறி, மதம், இலக்கியம், கலைகள், கலாசாரம், பண்பாடு இவை யாவையுமே ஆன்மீகத்துடன் வளர்ந்தன. வாழ்க்கையாம் பெரிய ஆலமரம், அதன் பெரும் கிளைகள், சிறு கிளைகள், இலைகள், பூக்கள், பழங்கள் இவை யாவையுமே இத்திடமான வேரிலிருந்தே சக்தி பெற்றுள்ளன.

இந்திய பண்புகளுக்கான அஸ்திவாரம் இந்திரியங்களுக்குப் புலப்படாத ஒன்றின் மேலுள்ள நம்பிக்கையேயாகும். அதுவே உலகைப் படைத்து, காத்து, அழிக்கவல்லது. அதற்கு பல உருவங்களும் பல பெயர்களும் உண்டு.

'ஏகம் சத் விப்ரா பஹுதா வதந்தி'. அதாவது அது ஒன்றே - ஆனால் அறிவொளி பெற்றவர்களும், ஆன்மஞானிகளும் அதைப் பலபெயர் கொண்டு அழைக்கின்றனர். அதன் இயற்கைத்தன்மை, எழில், குணங்கள் இவைகளுக்கேற்ப ஆன்மஞானிகள் அதன் பல உருவங்களை கற்பனையில் காண்கின்றனர். இந்திய பண்புகளின்படி இதுவே எங்கும் நிறைந்துள்ளது. படைப்பதும் காப்பதும் அதுவே. ஆனால் அது நம் புலன்களால் அறியமுடியாதது. அது நமது வாக்கினால் மாத்திரமல்ல மனதினாலும் அறிய இயலாததாகும். முனிவர்கள், தவசிகள், முற்றும் துறந்த முனிவர்கள் யாவரும் அதை மெய்ஞானத்தினாலேயே உணரமுடியும் என்கிறார்கள்.

நமது இந்தியபண்புகளின்படி உயர்ந்தவர்கள் என்பது செல்வம், திறமை, உலக வசதிக்கான சாதனங்களைக் கொண்டவர்களல்ல. மெய்ஞானத்தை அடைந்தவர்களும், அவ்வழியில் செல்பவர்களுமே உயர்ந்தவர்கள் ஆவார்கள். விஞ்ஞானிகள் தற்காலத்தில் காரிய காரணமென்னும் கொள்கையை அறிவுறுத்துகிறார்கள். ஒவ்வொரு காரியத்திற்கும் காரணம் ஒன்று இருக்க வேண்டும். ஏதோ ஒரு முறையில் இவ்வுலகம் முழுவதுமே சுழன்றுகொண்டே இருக்கிறது. அவ்வாறு சுழல்வதானால் அதை சுழற்றிடும் ஒருபொருளும் இருக்க வேண்டுமல்லவா. அப்பொருளே உருவமற்ற ஒன்றாகும். அதற்கு எண்ணிலடங்கா பெயர்கள் உள்ளன.

இவ்வுலகம் முழுவதுமே ஒரு குறிப்பிட்ட விதிமுறைக்குட்பட்டு சுழன்றுகொண்டிருக்கிறது. காலமறியா இவ்விதிகளே 'ருத' எனப்படு கிறது. அதுவே அசையும் பொருள், அசையாப் பொருள் என எல்லாபொருட்களையும் நிர்வகிக்கின்றது. சூரியன், சந்திரன், கோள்கள், விண்மீன்கள், இரவுகள், பகல்கள், பருவங்கள், குளிர்காலம், கோடை காலம், பயிர்கள் வளர்தல், மலர்கள் மலருவது, மரங்கள் கனிகளைக் கொடுத்தல், அவைகளின் அழிவு, குழந்தை பிறத்தல், வாலிபமடைதல், மூப்பெய்தல், மரணம் இவை யாவையுமே ஒரு நிரந்தரமான என்றுமிருந்திடும் அழியா விதியின் பலபடியான மாற்றங்களேயாகும்.

இந்த இயற்கை நியதியில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவர்கள் இந்தியர்கள். அவர்கள் நூறாண்டுகாலம் வாழ்ந்திட பிரார்த்திக் கின்றனர். அவர்கள் இயற்கையுடன் சமநிலைகொள்ள முயற்சி செய்வது இயற்கையை வெல்வதற்கல்ல. அவர்கள் பயிர்களையும் தாவரங்களையும் மதிப்பது மாத்திரமின்றி அவைகளை தொழு கின்றனர். அவர்கள் உடலுடன் நிலைத்திருப்பதை விரும்புவதில்லை, அதை வேண்டுவதுமில்லை.

ஏனெனில் நிலையாமை இயற்கை நியதியாகும். இயற்கையின் விதிகளை மீறுவதாலோ துண்டிப்பதாலோ வாழ்க்கையை அமைதியுடனும் வளமுடனும் வாழ இயலாதென்பதில் முழுமையான நம்பிக்கையை கொண்டுள்ளனர்.

மனித இனம் புலன்களுக்கு புலப்படாத பொருளின் சிறப்பானதொரு அம்சமாவார்கள். அப்பொருளிலிருந்து தோன்றி அதிலேயே மறைந்தும் விடுகின்றனர். இந்தியர்கள் 'அம்சாம்ச பாவத்தில்' அம்மூலப்பொருளின் அம்சம் என்பதில் திடநம்பிக்கை கொண்டவர்கள். தீயின் பொறிபோலவும், நீரின் துளிபோலவும், நீரின் அலைபோலவும் இருப்பதாகக் கருதுகிறார்கள். தீயின் பொறியில் தீக்குள்ள எல்லா குணாதிசயங்களும் உண்டு. அதன் அளவுதான் குறைவானது. அத்தீப்பொறி வைக்கோலுடன் இணைந்துவிட்டால் அது தீயாகவே மாறிவிடும். அதுவே அதன் குறிக்கோளுமாகும். உண்மையில் மேலான தத்துவத்தின் ஒரு அம்சமான மனிதன் தன் தெய்வத்தன்மையை வளர்த்துக்கொண்டால் அவன் தெய்வத்துடன் இணைந்துவிடுவான்.

முதன்முதலாக மேற்கத்திய தத்துவத்தில் மனிதன் முழுவதும் நல்லவனுமல்ல கெட்டவனுமல்ல. அவனை நம் விருப்பப்படி மாற்றிவிடலாம் என்பதாகும். இது நம் இந்திய சிந்தனைக்கு

ஒவ்வாததாகும். உண்மையைக் கூறப்போனால் இத்திட நம்பிக்கை தான் இந்திய ஆன்மீகத்தின் அஸ்திவாரமாகும். இவ்வான்மீக எண்ணத்தினால் வாழ்க்கையில் இந்தியனின் குறிக்கோள் உலகியலில் உன்னதமடைவதல்லை. அது அவனுக்கு எல்லையில்லா வசதிகளைப் பெற்றுத்தந்திடினும் வாழ்க்கையில் இன்றியமையாததாகக் கருதப்படும் தருமத்தை அடிப்படையாகக்கொண்ட அமைதியையோ மகிழ்ச்சியையோ அளிக்கவல்லதல்ல.

தருமமென்பது பகுத்தறியும் உன்னத சக்தியாகும். அதுவே ஒவ்வொருவனையும் தன் கடமையை விடாமல் ஆற்றிடத் தூண்டிவிடும். நமது ஆன்மீக நூல்களோ 'அப்யுதய' என்னும் உன்னத வழியென்றும், 'நிஸ்ரேயஸ்' என்னும் ஆன்மீக வழியென்றும் இரு வழிகளை எடுத்துரைக்கிறது.

தருமமே அனைத்து பண்புகளுக்கும் அடிப்படையாக அமைகிறது. இந்திய பண்புகளின் உன்னதமான மாளிகை தருமத்தின் அஸ்திவாரத்திலேயே நிற்கின்றன. அதன் பெருக்கை வாழ்க்கையின் பல கட்டங்களில் காண இயலும். இதுவே வாழ்க்கையைப் பொருளுடன் கூடியதாகவும் பயனுள்ளதாகவும் செய்கிறது. நல்லறிவு, பக்தி, செயல் இவைகளே தர்மத்தின் படிகளாக அமைகின்றன. இவைகளை தங்கள் தங்களது சுபாவத்துக்கேற்ப சௌகரியத்துக்கும், விருப்பத்துக்குமேற்ப சரியான அளவில் சேர்த்து கடைப்பிடிக்கிறான்.

நல்லறிவுடன் இணைந்த பக்தியே வாழ்க்கையில் உயர்ந்த பண்பாக ஏற்கப்படுகிறது. பக்தியே குருட்டு நம்பிக்கையாய் இல்லாமலிருந்திட அறிவென்னும் அடித்தளம் இன்றியமையாதது. மனிதன் எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் செயலிழந்து இருக்க முடியாது. இதில் நாம் முழு விழிப்புணர்ச்சியுடன் இருத்தல் மிகவும் முக்கியமானதாகும். அறிவு, பக்தி, செயல் என்ற மூன்றின் கலவையே நல்லதொரு போற்றத்தக்க பலனை அளிக்கவல்லது. அவைகளின் சேர்க்கை காலத்திற்கு காலம் மாறுபடலாம். ஆனால் அது நம் குறிக்கோளை விட்டு மோக்ஷ மென்னும் விடுபட்ட நிலைமையை விட்டு அகன்றுவிடக்கூடாது.

உலகத் துன்பங்களிலிருந்தும் அல்லல்களிலிருந்தும் விடுபடுதல், உலக வாழ்விலிருந்துமீண்டு விடுபடுதல், ஆன்மாவும் கடவுளும் ஒன்றி ஐக்கியமாதல் என பலவிதமாக அமைகிறது. இந்திய வாழ்க்கையின் குறிக்கோள் நான்கு விதமானது. தருமம் - நேர்வழி, அர்த்தம் -உலகச்செழுமை, காமம் - உலக இன்பம் நுகருதல், மோக்ஷம் - விடுபட்டு வீடு பெறுதல் என்பவைகளாகும்.

தருமம் என்பது அர்த்தம், காமம் என்பவைகளைவிட மேலானதாகும். இவைகளை கட்டுப்பாட்டுக்குள் வைப்பது அத்தியாவசியமாகும். தருமம் மூலம் வீடு பெறுதலே கடைசியில் நமது இறுதி குறிக்கோளாகும்.

நம் இந்திய வாழ்க்கையின் முதுகெலும்பு எது என்னும் கேள்வி எழுந்தால் அதற்கான பதிலோ உலகியலில் ஒட்டாமல் பற்றற்றிருத்தலே ஆகும்.

எல்லாம் முழுமையில் நிறைந்து வாழ்ந்திடினும் 'புன்ஜீதா' அவைகளை பற்றற்ற நிலையில் அனுபவிக்கவேண்டும் 'தேன த்யக்தேன' என்று ஈசாவாஸ்ய உபநிஷத் எடுத்துரைக்கிறது. வாழ்க்கையில் தேவைகளை பூர்த்திசெய்துகொள்ள செல்வமே இன்றியமையாததாகும். அதை உழைத்து சம்பாதிக்க வேண்டும். சாதாரண மனிதன் ஒருவன் நிறைசெல்வம் திரட்டிடும் ஆவல் உடையவனாக இருக்கலாம். ஆனால் அந்த ஆவலை தரும வழியினில் கட்டுப்படுத்த வேண்டும். அதாவது தரும மார்க்கத்தில் பணம் சம்பாதித்தல் வேண்டும். இதைப்போலவே மனிதனின் விருப்பங்களும் இச்சைகளும் முடிவற்றவைகளாக இருக்கலாம். ஆனால் தகாத வழியில் அவைகளை பூர்த்தி செய்துகொள்வது சரியல்ல.

அது மாத்திரமன்றி அவர்களுக்கு சரியான வழி காட்டிட வேண்டும். இல்லாவிடில் மனிதன் வழி தவறி இங்குமங்கும் அலைந்திடுவான். உபநிஷத் இதை அழகாக படம் பிடித்துக் காட்டுகிறது. வாழ்க்கை தேராகும். புலன்கள் குதிரைகளாகும். நம் மனதே கடிவாளமாகும். பகுத்தறியும் சக்திகொண்ட விவேகமே ரதத்தின் ஓட்டுனர் ஆகும். இவை யாவும் தருமத்திற்கு ஒப்ப இருந்திடின் வீடு பெறும் வழியில் சென்றிடும். அவைகள் தன் கட்டுப்பாட்டை மீறிவிட்டால் வழி தவறிவிடும். இந்தியனின் வாழ்க்கை முறையை இதைவிட அழகாகவும் தெளிவாகவும் விவரிக்க இயலாது.

செயல் கொள்கை: இந்திய பண்புகளில் 'கர்மன்' என்பது மற்றுமோர் இன்றியமையாத தொடர்பாகும். ஒவ்வொருவரும் நல்லதோ கெட்டதோ தங்களது செயலுக்கான பலனை அடைகிறார்கள். இச்செயல்கள் மூன்றுவிதமானவையாகும்.

பொதுவாக இந்த ஆன்மீக அடிப்படையில் தான் இந்தியனின் வாழ்க்கை பண்புகள் பிறந்து வளர்ந்துள்ளன. நம் கலாசார முன்னேற்றமெனும் நீண்ட வரலாற்றில் சில ஏற்றுக்கொள்ளத்

தக்கவைகளும் சில விதிவிலக்குகளும் உள்ளன. இருந்திடினும் வாழ்க்கையின் இந்த ஒழுக்க நெறிகளே இந்திய வாழ்க்கையின் முக்கியமான, தேவையான ஓட்டத்தை பிரவாகமாக நடத்திக் கொடுக்கின்றன.

ஆரோக்கியமான சமுதாயத்தை அமைப்பதற்கான முயற்சிகள் இந்தியாவில் எப்பொழுதுமே எடுக்கப்பட்டு வருகின்றன. இதற்கு ஆசிரம முறை கண்ணாடிக்கு சட்டமிடுவதுபோல் அமைகிறது. இது இல்லாவிடில் நிலையான சமுதாயம் கிடைத்தற்கரியதாகும். மனித சமுதாயத்தை கூர்ந்து கவனித்தோமானால் அது எல்லா வற்றிற்கும் பொதுவான எல்லாவற்றையுமே தன்னுள் அடக்கிவைக்க இயலுவதாக அமைந்துள்ளது.

வாழ்க்கையின் முதல் இருபது ஆண்டுகள் குழந்தைகள் முழுமையான மேம்பாட்டை அடையத் தேவையானவைகளைப் பெற வேண்டும். தேக ஆரோக்கியம் ஜீவாதாரமான மனோதிடம், மனம், புத்தி, ஆன்மா என்ற எல்லாம் முன்னேற்றமடைய வேண்டும். அச்சமயம் தன்னை அறிவதற்கான ஆன்மீக நூல்களை கற்றுத்தெளிவதுடன் தன் வருங்கால வாழ்க்கையை வகுத்துக்கொள்ள தேவையான ஏதோ ஒரு கலையையோ கைத்தொழிலையோ கற்கவேண்டும். இக்காலமே தனக்கு ஞானோபதேசம் ஏற்படுவதற்கும் தேவையான மனச்சக்தியை கட்டுப்பாட்டுடன் வைத்துக்கொள்வதற்கும் உரிய காலமாகும்.

தன் புத்திக்கூர்மையை வளர்த்திட சிறப்பாக பகுத்தறியும் திறனை பலப்படுத்திட ஞானொளி நிறைந்தவர்களையும் ஆசான்களையும் அணுகுவது இன்றியமையாததாகும். அறிவு தாகத்தையும், ஐயங்களையும் தீர்த்துக்கொள்வதும் இச்சூழலில் மிகவும் பொருந்துவதாகும். சமுதாயத்தில் தான் நடந்துகொள்ள வேண்டிய முறைகளையும், பல நற்பண்புகளையும் கற்றிட உற்ற காலம் இதுவேயாகும்.

ஒட்டுமொத்தமாகக் கூறப்போனால் தன் வாழ்க்கையை செம்மையாக நடத்திட தேவையானவைகளை கற்றுத்தெளியும் காலமிதாகும். பழங்காலத்தில் இந்த பண்புகளை கற்பது என்பது சிறிது எளியதாக இருந்தது. ஏனெனில் குருகுலவாசம் இருந்ததால் எளிதாகக் கற்க முடிந்தது. தற்காலத்தில் பிரம்மச்சரிய வயது காலத்தில் தங்கி படிக்கும் கல்வி நிலயங்களும் அதிலும் ஊக்குவிப்பவைகளும், ஆக்கபூர்வமான படைப்புத்திறன் கொண்டவைகளும் கலாசாரத்தை ஒட்டிய வேலைகளை சாதிக்க உதவுபவை ஒரு சிலதே உள்ளன.

வாழ்க்கையில் பெரிய வாய்ப்பாக இருப்பது கிருஹஸ்த ஆசிரமே எனக் கருதப்படுகிறது. இது மற்ற மூன்று ஆசிரமங்களுக்கு தேவையான எல்லாவற்றையும் வகுத்திட வழி வகுக்கிறது. இருபத்தைந்து முதல் ஐம்பது வயது வரை இன்றியமையாத உயர்ந்த பொறுப்புகளை ஏற்றிடும் காலமாகும். இது மிகவும் முக்கியமான பிரபலமான காலகட்டமாகும். ஒருவன் இக்காலகட்டத்தில் எல்லாவற்றையும் அனுபவிக்கவும், பயன்படுத்தவும், தன் தேவைகளையும் உலக இன்பங்களையும் பூர்த்தி செய்துகொள்ளும் காலமாகும்.

உலக உடைமைகள், உலக இன்பங்களை நுகருதல் இவை யாவும் தருமத்தை அடிப்படையாகக் கொண்டதாக இருந்திட வேண்டும். இதன் பிறகு மூப்பு நிலை ஏற்பட மனிதன் குடும்பம் என்ற சூழலிலிருந்து விலகி உயர்ந்து சமுதாயத்தை அன்புடன் போஷித்திட முயற்சி செய்கிறான். அக்காலத்தில் நாம் நம் கட்டுப்பாட்டையும் மனதிருப்தியையும் வெளிக்காட்டிட வேண்டும். பிறர் நலனில் குறிகொண்டவர்களாய் பிறரது இன்னல்களையும் துன்பங்களையும் களைந்திடுவதை தன் கடமையாகக் கருதி சேவை செய்வதுடன் அதை நிறைவேற்றிட வேண்டும். இது ஒருவனது கண்ணோட்டத்தையும் மன உணர்ச்சிகளையும் மேம்படச் செய்வதுடன் அவனது உள்மனதை தூய்மையாகவும் பரந்ததாகவும் செய்கிறது.

உலகியலில் இருந்து பற்றற்றநிலைக்கு மாறிச்சென்றிட ஓர் உரிய வழியாக அமைகிறது. மற்றவர்களை பேணிக்காப்பதுடன் தானும் மேம்பாட்டை அடைவதால் வாழ்க்கை பொருள் நிறைந்ததாக அமைகிறது.

சன்னியாச ஆசிரமம் கடைசியான நான்காவது ஆசிரமமாகும். இக்காலத்தில் உலகப்பற்றை அறவே நீத்து மேலான தத்துவத்தை அறிய மானுடன் ஒரு உயரிய உறவை அமைத்துக்கொள்ள வேண்டும். தன் குடும்பம், குழந்தை, செல்வம், புகழ் இவற்றின் மீது உள்ள பற்றைக் கடந்து செல்ல வேண்டும். மனிதனுக்கு இயற்கையாகவே புகழை அடையும் விருப்பம் உண்டு. அவ்விருப்பத்தை கடந்து சென்று அவன் புகழில் பற்றற்ற தன்மையை அடைய வேண்டும். பற்றற்ற நிலையை அடையும் வழி கடினமானதே. ஆனால் நேரானது, எளிதானது, இயற்கையானதே.

உண்மையில் துவக்கம் முதற்கொண்டே பற்றற்ற பாதையை ஏற்று உலக வாழ்க்கையை அமைத்துக்கொண்டால் இப்பாதையை

எளிதாக அமைத்துக்கொள்ளலாம். இந்தியர்கள் பெரும்பாலும் மறுபிறவியில் நம்பிக்கை கொண்டவர்கள். வாழ்க்கையின் இந்த கடைசி வழியில் தம்மை விடுவித்துக்கொள்ளும் முயற்சி கைகூடும், முடியும் என்றே கருதுகின்றனர்.

கல்வியறிவற்ற கிராமவாசிகள்கூட கடும் உழைப்பிற்குப் பிறகு பசியை தணித்திட ஒருவேளை உண்டு பசியுடன் இருந்திடுவான். ஆனால் மோக்ஷம் மற்றும் விடுதலை அடைந்துவிட வேண்டும் என்ற விருப்பத்தை ஒருபொழுதும் கைவிடமாட்டான். இதைவிட அரிய பெரிய ஆன்மீக வாழ்க்கை நெறி என்ன இருக்க இயலும்?

இரண்டாவதாக இன்றியமையாததாக அமையும் சமுதாய பண்பு சாதி முறையாகும். 'வர்ணவ்யவஸ்தா'. மனிதர்களின் அவாவும் இயற்கை சுபாவமும் ஒருபோல் அமைவதில்லை. 'பின்னருசிர்ஹி லோக' -எல்லோருக்கும் ஒரேவிதமான பணி கொடுத்தல் இயலாத தாகும். அவரவரது இயற்கை குணங்களை ஒட்டி சமுதாயத்தை மூன்று கூறுகளாகப் பிரித்தனர். அவை - தூய (சாத்விக), ஆர்வம் மிகக்கொண்ட (ராஜசிக), தாழ்மையானவர்கள் (தாமசிக).

கிருஷ்ண பகவான், பகவத் கீதையில் குணத்திற்கும், செயலிற்கும் ஏற்ப சமுதாயத்தை பிரித்துக் கூறியுள்ளார். அந்த நான்கு பிரிவுகள் அறிவாளிகள் (பிராம்மணர்கள்), வீரர்கள், பாதுகாப்பவர்கள் அல்லது மன்னர்கள் (க்ஷத்திரியர்கள்), வியாபாரிகள் (வைசியர்கள்), பணியாளர்கள், தொழிலாளிகள், திறமையற்றவர்கள் (சூத்திரர்கள்) ஆகும். இப்பிரிவினை ஒருவனது இயற்கை குணங்கள், திறமை, வல்லமை இவைகளைப் பொருத்து பிரிக்கப்பட்டது.

இப்பணிகளை திறம்படவும், நேர்மையாகவும் செய்வது அவர்களது நெறியாகும். கற்றல், கற்பித்தல், ஆன்மீக நூல்களைப் படித்தல், அதை ஆழ்ந்து சிந்தித்தல், சமுதாயத்தையும் தேசத்தையும் எத்திசை யில் நடத்திச் செல்ல வேண்டும் என்பதில் நாட்டமுடன் தியானம் செய்தல் இவைகள் பிராம்மணர்களின் கடமையாகும். அவர்களது வாழ்க்கை நெறி என்பதோ எளிய வாழ்க்கை நடத்துவது, விநயத் துடன் இருப்பது, தூய்மையாய் இருப்பது, பதவியிலும், செல்வம் சேகரித்தலிலும் பேராசையில்லாமல் இருத்தல் இவைகளாகும்.

க்ஷத்திரியன் தன்தேசம், சமுதாயம், மதம் இவைகளைக் காப்பதற்காக தன்னுயிரையும் அர்ப்பணிக்க தயாராக இருக்க வேண்டும். அவன் சமுதாயத்தில் விதிமுறைகளைக் காக்க உதவி செய்ய வேண்டும்.

வைசியன் விவசாயம், தொழில் செய்தல், ஆலைகள் நிறுவுதல், வியாபாரம், வாணிகம் முதலிய துறைகளில் ஈடுபட்டு நேர்மையான முறையில் பணம் சம்பாதிக்க வேண்டும்.

சூத்திரன் சேவை செய்தும், உடலுழைப்பினாலும் தன் வாழ்க்கைக்கு தேவையானவைகளை சம்பாதிக்க வேண்டும். நாட்பட சமுதாயத்தில் ஏற்பட்ட தவறான கருத்துகளால் இம்முறை பிறவியை ஆதாரமாகக் கொண்டதாக மாறிவிட்டது. அது சமுதாயத்தில் குழப்பத்தை உண்டு பண்ணியது. ஆனால் அது முதலில் ஏற்பட்ட மூலகாரணத்தை சற்றே ஆராய்ந்து பார்த்தால்அதில் ஆழ்ந்த கருத்திருப்பதை அறியலாம்.

எவ்விடங்களில் பெண்கள் மரியாதையுடன் மதிக்கப்படுகிறார்களோ அங்கெல்லாம் தேவதைகள் மகிழ்ச்சியுடன் களிக்கின்றனர். (யத்ர நார்யஸ்து பூஜ்யந்தே ரமந்தே தத்ர தேவதா:). இது பெண்களுக்கு எவ்வளவு மதிப்பும் மரியாதையும் பண்டைகாலம் முதற்கொண்டே கொடுக்கப்பட்டது என்பதை திட்டவட்டமாக எடுத்துரைக்கிறது. ஆண்களைக் காட்டிலும் பெண்கள் உயர்வாகக் கருதப்பட்டார்கள். நாம் சீதாராமன் என்று கூறும்பொழுது ராமனுக்கு முன்னர் சீதை என்ற பெயர் வைக்கப்படுகிறது. இது மாத்திரமன்றி மங்களகரமான காரியங்கள், வேள்விகளை மேற்கொள்ளும் நேரம் 'அர்த்தாங்கினி' எனப்படும் மனைவியின்றி அவைகள் நிறைவடைவதில்லை. மனைவியினால்தான் இல்லம் கிருஹம் ஆகிறது. (க்ருஹிணீ க்ருஹமுச்யதே).

இடைக்காலத்தில் வெளிநாட்டவர்களின் கொடுமையான நடத்தையினாலும் கெட்ட எண்ணங்களினாலும் பெண்களின் கௌரவமும் மரியாதையும் க்ஷீணமடையத் தொடங்கின. ஆனாலும் அக்காலத்திலும் பெருந்தகையர்களும், உயர்ந்த மனிதர்களும் குடும்ப வாழ்க்கை ஏற்றவர்கள் அளவுகடந்த மரியாதையை பெண்களுக்கு அளித்தனர். இன்றும் தென்னிந்தியாவில் பெண்களை அம்மா என மரியாதையுடனும் அன்புடனும் அழைக்கின்றனர். இந்த கலாசாரத்தில் அன்னையே குழந்தையின் முதல் ஆசானாகிறாள். சமூகத்திலும் அவள் நன்குகௌரவத்துடன் பாதுகாக்கப்படுகிறாள். இது இந்திய நெறிகளை எடுத்துரைக்கும் பிறிதொரு முறையாகும்.

பெண்கள் இயற்கையாகவே தியாகம் செய்யும் மனப்பான்மை கொண்டவர்கள். அவர்கள் கணவனிடம் காட்டும் பரிவும் பக்தியும் அசாத்தியமானவை. அவர்கள் ஆண்கள் வழி தவறிச் செல்வதை

பெரும்பாலும் விரும்பாமல் கண்டிப்பதுண்டு. ஆனால் தன்கற்பை ஒருபொழுதும் இழப்பதில்லை. அது குடும்பத்தை சீர்குலையச்செய்யும். மணம்புரிந்து பிறந்த குழந்தைகளுக்கு அபாயகரமான விளைவுகளை ஏற்படுத்தும்.

வழிநடத்திச் செல்வோரின்றி புத்தி குழப்பத்தையும் அடைந்து தவித்திடுவார்கள். அவர்கள் பரிவுடனும் அன்புடனும் தங்கள் கணவன்மார்களை தவறான வழியில் செல்வதைத் தடுத்து தன் கட்டுக்குள் அமைந்த முறைகள்படி அவனைத் திருத்தி நேர்வழிப்படுத்தவும் முயல்கிறார்கள். கூட்டுக் குடும்ப முறை விதிவிலக்காத கலாசாரத்தைத் தழுவியதால் இன்றும் குடும்பத்தில் ஒரே பழக்கவழக்கத்தை ஏற்றுக்கொள்கின்றனர். மேல்நாட்டு நாகரிகத்தின் மத்தியில் இன்றும் பெண்கள் பெரியவர்களை மதித்தும் தன் கணவனின் பெற்றோர்களுக்கும் சேவை செய்கின்றனர். இப்படிப்பட்ட பெருந்தன்மை குணம் படைத்த அவர்கள் குடும்பத்தின் தூண் ஆவார்கள்.

ஒரு பழைய பாடலொன்று, ஒரு மருமகளின் நடத்தை எப்படி இருக்க வேண்டுமென்பதை அழகாக எடுத்துரைக்கிறது.

அப்யுத்தானம் உபாகதே கிருஹபதௌ தத்பாஷணே நம்ரதா
தத்பாதார்பிததிருஷ்டி: ஆஸனவிதிஸ் தஸ்யோபசர்யா ஸ்வயம்
ஸூப்தே தத்ர ஸயீததத்ப்ரதமதோ ஜக்யாத் ஸய்யாம் இதி
ப்ராஜ்ஞை: புத்ரி நிவேதிதா: குலவதூ ஸித்தாந்த தர்மா அமீ||
(பால ராமாயணம் 4.43)

'வீட்டு எஜமானன் வீட்டிற்கு வரும்பொழுது அவனை எதிர்கொண்டு அழைத்தல், வினயத்துடன் அவனுடன் உரையாடுதல், அவனது பாதங்களில் தன் கண்களைப் பதித்தல், அவனுக்கு இருக்கை அளித்தல், அவனுக்கு தானே பரிமாறுதல், அவன் படுத்த பின்பே தான் உறங்கச் செல்லுதல், காலையில் அவன் எழும் முன்னர் தான் எழுதல் ஓ! மருமகளே! ஓர் உயர்ந்த குடும்பத்தின் மருமகளுக்கான உயர்குணங்கள் இவைகள்' என நம் முன்னோர்கள் குறித்து வைத்துள்ளனர்.

பேராசையை அடக்குவதும் ஆன்மீக வளர்ச்சிக்கான தியாகமும் இந்தியப் பண்புகளில் எடுத்துக்காட்டாக இருக்காமல் இருக்கலாம். ஆனால் அவைகளின் அவசியத்தை வற்புறுத்திக் கூறுவது இந்தியப்

பண்புகளேயாகும். பௌதிக துறையில் உள்ளவர்களுக்கான ஒழுக்கக் கோட்பாடுகளில் பேராசையைக் கட்டுபடுத்தல் (அலோலுபதா) சிறப்பாக குறிப்பிட வேண்டியதாகும். துறவிகளுக்குக் கொடுக்கப் படும் மரியாதை மன்னர்களுக்கும் மன்னாதி மன்னர்களுக்கும் கொடுப்பதைவிட பன்மடங்கு அதிகமாகும். அவர்கள் அடிகளில் வீழ்ந்து வணங்குதல், அல்லலுற்றபொழுது அவரது அறிவுரையைக் கேட்டல் இவைகளுடன் சமுதாயத்தை நல்வழியில் நடத்திச்செல்ல அவர்களது தவம் சிறந்த கருவியாகக் கருதப்படுகிறது.

சடங்குகள் இந்திய சமுதாயத்தில் முக்கிய இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றன. அவைகளைச் செய்வதால் அவைகளுடைய சிறப்பு தன்மையை வெளிப்படுத்துவதோடன்றி நம் ஆன்மாவை உயர்த்தி தூய்மையானதாகச் செய்வதற்கும் வழி வகுக்கிறது. நமது பதினாறு முக்கிய சடங்குகளில் சில உலக வாழ்க்கைக்கு உதவுவதாக உள்ளது. மற்றவை நாம் நற்கதியடையவும் மேலுலகம் அடைவதற்கானவைகளுமாகும்.

பிறந்த நாள், உபநயனம், திருமணம் முதலிய சடங்குகள் மிக்க மகிழ்ச்சியுடன் கொண்டாடுவதற்காக அமைந்திருப்பதுபோல் இறுதிச் சடங்கு (அந்த்யேஷ்டி) முதலியன வாழ்க்கையில் எதுவுமே நிலையற்றவை என்பதை வெளிக்காட்டுகின்றன. தங்களது வசதிகளை யும், இன்னல்களையும் மறந்து மக்கள் சமுதாயம் மற்றவர்களது சடங்குகளில் பங்குகொள்வதையே இது எடுத்துக்காட்டுகிறது. இது சமுதாயத்தை பரந்து விரிவடையச் செய்கிறது. துக்கநிலமையில் கருணையுடன் பரிந்துரைத்தல் துன்பத்தை குறைவடையச் செய்யும். மகிழ்ச்சியில் மகிழ்ச்சியை இன்னும் மகிழ்ச்சி பொங்கிடச்செய்யும். இந்த பண்புகள் முக்கியத்துவம் குறைந்தனவா?

இந்தியர்கள் வாழ்க்கை இலக்கை அடைவதற்கு முக்கியத்துவம் கொடுப்பதுடன் அடையும் வழிக்கும் முக்கியத்துவம் கொடுக்கிறார் கள். தவறான வழியில் செல்லுதல் தவறான முடிவையே கொடுக்கும். சிறிது காலத்துக்கு அவை நல்லவைகளாகத் தோன்றலாம். ஆனால் இறுதியில் உண்மை அது அல்ல என்பது புலப்படும்.

நமது இலக்கு எதுவாக இருந்தாலும் செல்வமீட்டுதல், பதவியடைதல், புகழ் அல்லது மற்ற எந்த உலகியல் வசதியானாலும் சரியான வழியில் சென்றடைதலே மெச்சத்தக்கதாகும். போரிலும் நல்ல விதிமுறைகள் பின்பற்றப்பட்டன. அவர்கள் எப்பொழுதுமே தருமத்தை காக்கவே தருமவழியில் போரிட்டனர். அதனாலேயே அது தருமயுத்தம் எனப்பட்டது.

இந்திய பண்புகளில் புறத்தைக்காட்டிலும் அகத்துக்கே அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. ஜீவாதார மூச்சே உடலைவிட முக்கியமானது. ஆடை சுத்தமாக இருப்பது இன்றியமையானதே. ஆனாலும் அதை யார் அணிகிறார்கள் என்பது இன்றியமையாததாகும். அதனாலேயே சுவாமி விவேகானந்தர் புதிதாக திருமணம் புரிந்து கொண்ட வெளிநாட்டு மணமக்களைப் பார்த்து கூறினார் - 'உங்களது தேசத்தில் தையல்காரனே ஒருவனை பண்பட்டவனாகவும் நல்ல குணம் கொண்டவனாகவும் செய்கிறான். ஆனால் நான் எந்த தேசத்திலிருந்து வருகிறேனோ அங்கு உயர்ந்த மேலான குணங்களை உடையவனே பண்பட்ட உயர்ந்தவனாகக் கருதப்படுகிறான்.

உண்மையிலேயே நேர்மையை ஏற்கவில்லையாகில் சடங்குகளுக்கு ஒரு பலனுமில்லை. இக்கருத்தைக்கொண்டே புத்த மதமும் சமண மதமும் தோன்றின. மீண்டும் இடைக் காலத்தில் இந்த சவால்களை எதிர்ப்பதற்கே கபீர் முதலிய மகான்கள் அவதரித்து வாழ்க்கையின் சாரமான தத்துவத்தை ஸ்தாபனம் செய்தனர். இந்த தேசத்து காப்பியங்களில், மொழி, சந்தஸ், அணிகள் முதலியவைகளுக்கு இன்றியமையாத இடம் கொடுக்கப்பட்டபோதிலும் ரசமென்னும் காவியத்தின் உயிர்நாடியாகக் கருதப்பட்டது.

சிற்பிகள், ஓவியக்காரர்கள் தங்களது கலைத்திறனை வெளிக்காட்டு கிறார்கள். ஆனால் அறியப்படும் இறுதிப்பொருளே இன்றியமையாத தாகக் கருதப்பட்டது. அதன் வருணனையில் சத்தியம் உண்மை இருக்கலாம். ஆனால் அதில் சிவம், சுந்தரமும், அதாவது அது உயர்ந்ததாகவும், தனி எழில் நிறைந்ததாகவும் இருக்க வேண்டும்.

சமநிலை இந்திய பண்புகளின் மற்றுமோர் உயர்ந்த குணமாகும். லட்சியவாதம்-யதார்த்தம்; அகம்-புறம்; அறிவு-உணர்ச்சி; நேர்மையான செயல்கள்-மகிழ்ச்சியுடன் அனுபவித்தல்; இகபர-உலக சமநிலை; சிந்தனையும்-உணர்ச்சியும்; வாய்மையும்-உண்மையும்; உரிமையும்-கடமையும்; சமூகம்-கிராமம்; கலையும்-காப்பியமும்; தாய்நாடு-அயல்நாடு; செல்வம்-அதை அனுபவித்தல்; மனிதர்கள்-இயற்கை சமநிலை.

இப்படி வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையிலும் சமன்பாட்டிற்கு ஒரு தனி இடம் உண்டு. இது ஒரு சரியான கலவையாகி வாழ்க்கைக்கு பொருத்தமானதாக அமைகிறது. இயற்கையில் சரியான அளவில் கலந்துள்ள தூய்மை, ஆர்வம், இருள், இக்கலவையே இயற்கைவிதியாய் பிரபஞ்சத்தை நடத்தி வருவதுபோல் உயிர்வாழ் ஜீவர்களையும்

இக்கலவையே போஷிக்கிறது. அதனாலேயே காப்பியங்களிலும் ரசம், எண்ணங்கள், கருத்து சொற்றொடர்கள் என யாவும் சரியான கலவையில் அமைந்துள்ளதை காண்கிறோம். வண்ண ஓவியத்தில் இருக்கும் பிரத்தியேகமான வண்ணக்கலவை போலவே பாட்டிலும் மேல் கீழ் ஸ்தாயிகளில் குரல் ஏறி இறங்கும் பாங்கும் அமைந்துள்ளன. இப்படி சரியான அளவில் கலவையை அமைப்பது தான் இந்தியாவின் கலைகளுக்கும், கைவேலைப்பொருள்களுக்கும் ஒரு தனி அழகைக்கொடுத்து மெருகூட்டுகின்றன.

இந்தியர்கள் பொதுவாகவே சிரத்தையுடன் கூடிய வாழ்க்கையில் நம்பிக்கை கொண்டவர்கள். செயலை மூலமாகக்கொண்ட தத்துவ மார்க்கத்தில் நம்பிக்கைகொண்டவர்கள். அதனால் நம் செயல்களுக் கான பலன்கள் உடனேயோ அல்லது சிறிது காலம்கடந்தோ நம்மை திண்ணமாக வந்தடையும் என நம்புபவர்கள். இது அவர்களை தேவையில்லாததொரு அவநம்பிக்கையை ஏற்கவிடாமல் மனத்திருப்தியை அளிக்கிறது. இந்திய சமுதாயத்தினால் பொறுக்கி எடுத்துக்கொள்ளப்பட்ட சில பண்புகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

இந்தியன், பசுவையும் பிராமணனையும் (அறிவாளிகளாக) போற்றுவது மாத்திரமன்றி சிறப்பான மரியாதையுடன் வணங்கு கின்றனர். அவனுக்கு வேதம், புராணம், ஸ்ம்ருதி இவைகளின் மேல் முழுமையான நம்பிக்கை இல்லாமல் போகலாம். ஆனால் தாய், தந்தை, குரு, வயது முதிர்ந்தோர் இவர்களிடம் மரியாதையுடன் நடந்துகொள்வான். இந்த மதிப்பு அவனை செயல்செய்வதை தூண்டுவதுடன் அது அவனுக்கு எப்பொழுதும் மகிழ்ச்சி அளிக்கிறது. சேவை செல்வத்தினால் இருக்கலாம் இல்லாமலும் இருக்கலாம். ஆனால் புத்தியில் திடமாயிருப்பது திண்ணம். இது தன் தாய், தந்தை, கடவுள் இவர்களுக்கு அவன் செய்யும் ஓர் கைமாறாகும்.

மாணாக்கர்கள் எப்பொழுதும் அடக்கமாக பணிவுடனும் காக்கும் பொறுப்பு கொண்டவனாகவும், ஞானமடைய உழைக்கின்றவனாயும் இருக்க வேண்டும். அயராத பயிற்சியில் ஈடுபட்டு அறிவைப்பெற வேண்டும். ஆடம்பரத்தை நினைப்பதுகூட அவனுக்கு பொருந்துவதல்ல. அவன் தன் ஆசானிடமிருந்து அறிவை மாத்திரம் அடைந்தால் போதாது. அவரிடமிருந்து நன்னடத்தையையும் கற்றுத்தெளிதல் வேண்டும். அப்போதுதான் பண்பட்டவனாகி நல்ல குடிமகனாக ஆவான். இந்திய சமுதாயம் நல்ல பண்பாட்டுடன்

கூடியவனையே பெரிய அறிவாளியைக் காட்டிலும் மேலாகப் போற்றுகிறது.

நற்குணங்களை, தொடர்ந்து அறிவுறுத்தும் பொருட்டே குழந்தை களுக்கு நல்ல நல்ல பொருள் நிறைந்த பெயர்கள் இடப்படுகின்றன. இந்தியர்கள் பெயர், அழகு, உருவம் மூன்றின் சேர்க்கையிலேயே நம்பிக்கை கொள்கின்றனர். உயர்ந்த நல்ல கருத்துக்களை கற்றறிதல், உயர்ந்த செயல்கள், உயர்ந்த மனிதர்களின் சேர்க்கை இவை சிறப்பான பொருள் நிறைந்ததொரு செயலாகும். ஒரு சரியான உயர்ந்த செயல்களின் வழிக்கு அழைத்துச் செல்கிறது. அதன் வழி உயர்ந்த மேன்மையான குணங்களாம் அஸ்திவாரத்தை அமைத்திட அதன் மேல் இந்தியப் பண்புகளின் அமைப்பு என்னும் மேலான கட்டிடம் திடமாக நிற்கிறது.

விடியற்காலையில் எழுந்திருப்பது போற்றப்படுகிறது. அமைதியான அக்காலை நேரம் நேர்மையான சிந்தனைகள் மனதில் எழுப்புகிறது. இதன் காரணமாகத்தான் இந்தியர்கள் விடியற்காலை நேரத்தில் பிரார்த்தனை, தியானம் முதலியன செய்கின்றனர். மனிதனின் முழுமையான வளர்ச்சிக்கு நல்ல ஆரோக்கியமான உடல் இன்றியமையாததாகும். காலை நேரத்தில் இந்தியர்கள் நீராடுவதினால் உடலை சுத்தம் செய்கின்றனர். தேகப்பயிற்சி உடலை ஆரோக்கியமாக வைக்கிறது. பிறகு பெரியவர்களை வணங்கி ஆசிகளைப் பெறுதலால் பண்புடனும் வினயத்துடனும் இருப்பதுடன் சேவை செய்வதில் நம்பிக்கைகொள்ளும் மனப்பாங்கையும் வளர்க்கிறது.

வேள்விகளைச் செய்வதால் தானிருக்கும் இடத்தை தூய்மையாய் வைப்பதுடன் அவனது மனதும் ஆன்மாவும் தூய்மையாக இருந்திடச் செய்கிறது. அவன் தான் கடினமாக உழைத்து சேகரித்த செல்வத்தைக்கொண்டு எளிமையான சுத்தமான பூர்ண ஆரோக்கிய மான உணவை உட்கொள்கிறான். இவ்வுணவு ஸ்தூலமான பூதஉடலுக்கும் சூக்ஷ்மமான மனதிற்கும் போஷாக்களிக்கிறது. தூய்மையற்ற உணவு தூய்மையான மனதை ஏற்படுத்த இயலாது. அதனால் இந்தியர்கள் அதை ஏற்றுக்கொள்வதில்லை. அவன் தான் எதை உண்ண வேண்டும் எதைத் தவிர்க்க வேண்டுமென்பதை நன்கு அறிந்திருக்கிறான்.

விருந்தோம்பல் இந்தியர்களின் சிறப்பான இயல்பாகும். விருந்தாளியை மிக்க கவனத்துடன் உபசரித்து அவரது ஆசிகளை எப்பொழுதும் ஆதரவுடன் ஏற்கிறான். இதில் உபசாரம் செய்வதைக்

காட்டிலும் நல்ல எண்ணங்களும், தன்னை அர்ப்பணித்துக்கொள்வதும் சிறப்பாக விளங்குகின்றன. நமது பண்புகளின்படி எங்கு நம்மை மதிக்கிறார்களோ அங்கே நாம் செல்ல வேண்டும். வயது முதிர்ந்தவர்களையும் உடல் நிலை சரியற்றவர்களையும் பராமரித்து சேவை செய்வது மனிதாபிமான கடமையாகும். அதை தன்னலமின்றியும் பணிவுடனும் செய்ய வேண்டும்.

அகங்கார மமதையை ஏற்படுத்தும் சேவைக்கு இந்தியப் பண்புகளில் இடமேயில்லை. நேர்மையுடனும் சுயநலமின்றியும் நன்கொடை அளித்தல் வேண்டும். அந்த நன்கொடை செல்வமாகவோ, உடலுழைப்பாகவோ, அறிவாகவோ இருக்க வேண்டும். அது தகுந்த பாத்திரத்திற்கு, முன்பின் அறியாதவர்க்கு கொடுக்க வேண்டும். நன்கொடையை பிரகடனம் செய்தல், அதன் மூலம் கைம்மாறு பெறுதல் இவை செருக்கை உண்டாக்கி ஒருவனது கீர்த்தியை கெடுக்கும் (கீர்திர்ஹ்ருஷ்யதி கீர்தனாத்). அறிவுதான் உயர்ந்த தானமாகக் கருதப்படுகிறது (ஸர்வேஷாம் ஏவ தானானாம் வித்யாதானம் விஸிஷ்யதே).

நல்ல உயர்ந்த சேவைக்கு வேண்டா பிரகடனத்திற்கு இடமேயில்லை. நல்லாடை உடுத்துவதைவிட நற்பண்புகளுக்கு நல்ல மதிப்பு உண்டு. பெரியவர்களிடம் மரியாதை காட்டுவதுடன் தன்னுள் அடக்கத்தையும் வளர்த்துக்கொள்ள வேண்டும். வயோதிகர்களை மரியாதையுடன் வணங்கி அவர்களது ஆசிகளைப் பெற வேண்டும். அவர்களிடம் பேசுகையில் நான்கு முக்கிய குறிப்புகளை மனதில் கொள்ள வேண்டும். தன்னைக் கேட்டாலொழிய பேசுதல் கூடாது. இனிமையாகப் பேச வேண்டும். நல்ல வசனங்களை கையாள வேண்டும். நல்லதையே பேச வேண்டும். மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்ள தகுந்தபடி பேச வேண்டும். இரவில் வெகு நேரம் விழித்திருக்கக்கூடாது. சீக்கிரம் படுக்கச்சென்று சீக்கிரம் எழுதல் வேண்டும்.

மலைகளில் இமாலயத்திற்கும், ஆறுகளில் கங்கைக்கும், நகரத்தில் காசியாம் பனாரஸுக்கும், நூல்களில் வேதம் புராணம் இவைகளில் திடநம்பிக்கை உண்டு. அதை நாம் கௌரவிக்கிறோம்.

தன் தனிப்பட்ட பண்புகள் உயர்ந்ததாக இருக்க வேண்டும் என்பது ஒவ்வொரு இந்தியனின் ஓர் உயர்ந்த கொள்கையாகும். நன்னடத்தையே உயர்ந்த பண்பாகும் (ஆசாரோ பரமோ தர்ம:).

எக்கொள்கையை ஒருவன் பின்பற்றுகிறான் என்பது முக்கியமல்ல. ஒருவனது நடத்தையே முக்கியமானதாகும். மதம், செயல், பிரிவு, சாதி, மாகாணம், மொழி, தேசம் இவை ஒருவனது மேம்பாட்டை வெளிப்படுத்துவதல்ல. அவனது நன்னடத்தையே அவனது மேன்மையை வெளிப்படுத்தும். அதனால் மேற்கூறப்பட்ட பண்புகளை பயிற்சி செய்து அனுசரித்தாலும் தருமத்துடன் ஒட்டிய ஒருவனது தனிப்பட்ட நன்னடத்தை உடனிருத்தல் வேண்டும் என மனு கூறுகிறார்.

வித்வத்பி: ஸேவித: ஸத்பி: நித்யம் அத்வேஷராகிபி: |
ஹ்ருதயேனாப்யுதஞாதோ யோ தர்ம: தம் நிபோதத ||

'கற்றறிந்த (வேதங்களை) மகான்களால் கற்றுணர்ந்து மனதில் நற்குணங்களை இருத்தி விரோதமும் அதிக அன்பையும் தவிர்த்த மகான்களால் அனுசரிக்கப்பட்ட புனிதமான விதிகளை கேளுங்கள்.'

மனு தருமத்தைப் பற்றி கூறுகையில் -

த்ருதிர்க்ஷமா தமோ ஸ்தேயம் ஸௌசம் இந்த்ரியநிக்ரஹ: |
தீர்வித்யா ஸத்யம் அக்ரோதோ தஸகம் தர்மலக்ஷணம் ||

மனதிருப்தி, மன்னித்தல், சுயக்கட்டுப்பாடு, தூய்மையாக்கும் விதிகளை ஏற்று அனுசரித்தல், இந்திரிய இணக்கம், விவேகம், மேலான ஆத்மஞானம் இவை தர்மத்தின் பத்து குணாதிசயங்களாகும். இதைத்தொடர்ந்து,

தஸலக்ஷணானி தர்மஸ்ய யே விப்ரா: ஸமதீயதே |
அதீத்ய சானுவர்தந்தே தே யாந்தி பரமாம் கதிம் ||

இந்த பிராமணர்கள் பத்து லக்ஷணங்கள் கொண்ட விதிமுறைகளை முழுவதும் விவரமாகப் படித்து அவைகளுக்கு கீழ்படிந்து மேலான கதியை அடைகின்றனர். கடவுள் கிருஷ்ணர் பகவத்கீதையில் இருபது விதமாக விவரித்துக் கூறுகிறார். பாகவத புராணத்தில் முப்பது விதமாக விவரித்துக் கூறுகிறார்கள். எவனொருவன் தருமத்தை அடிப்படையாகக் கொண்டவைகளை அனுசரிக்கிறானோ அவன் உலகத்திலுள்ள கெட்ட குணங்களான பேராசை, சினம், பொறாமை, அழுக்காறு, அகங்காரம் முதலியவைகளினின்றும் விடுபட்டவனாய் தன் உண்மையான பலத்தையும் ஆற்றலையும் அறிந்துகொள்கிறான்.

எவனொருவன் தருமத்தின் விதிமுறைகளை அறிந்து அதன் நற்பண்புகளை அனுசரித்து மேற்கூறியபடி அதை அனுசரித்து செல்கிறானோ அவன் முதல் நான்கு நற்பண்புகள் எனக் குறிப்பிடப் பட்ட அகிம்சா - மற்ற ஜீவராசிகளுக்கு இம்சை செய்யாதிருத்தல், சத்ய - உண்மையை கடைப்பிடித்தல், அஸ்தேய - களவாடாமை, இந்த்ரிய நிக்ரஹணம் - தன் புலன்களை கட்டுப்பாட்டில் கொண்டுள்ளது, அவைகளை விடாமல் கடைப்பிடிக்கின்றவனாய் இறுதியில் எல்லாவற்றிற்கும் மூலமாய் அடிப்படையாய் இருக்கும் 'ஆத்மன: ப்ரதிகூலானி பரேஷாம் ந ஸமாசரேத்' என்று தனக்கு எவை எவைகளை பிறர் செய்யக்கூடாதென்று நினைக்கிறானோ அதை அவனும் செய்யாதிருத்தல் என்ற விதியைக் கடைப்பிடித்து மேன்மையடைகிறான்.

தற்காலத்தில் பாலுணர்ச்சியை பற்றி அதிகமாகப் பேசப்படுவதால் பெண்கள் தகாத முறையில் பல அவமரியாதைகளுக்கு ஆளாகிறர்கள். இதற்கு முக்கிய காரணம் நம்மை மிகவும் பக்குவப்படுத்தும் 'பிற பெண்களை தன் தாயாராகக் கருத வேண்டும' என்கிற விதிமுறையைக் கைவிட்டதாலாகும். 'மாத்ருவத் பரதாரேஷு'. இவ்வாறு பெண்களைப் போலவே செல்வத்தைக் குறித்துமாகும். 'பரத்ரவ்யேஷு லோஷ்டவத்' என்று பிறரது செல்வத்தை மண்ணைப்போல் கருதுவதாகும்.

இப்படிப்பட்ட பண்புகளை ஏற்று அனுசரிப்பதால் மனிதன் நன்கு செதுக்கப்பட்டவனாகி பண்பட்டவனாய் தன் ஆழ்மனதில் எழும்பும் குரலைக் கேட்கும் திறன் பெற்றவனாய் 'அகுதோபய' என்னும் அச்சமின்றி இருக்கும் நிலையைப் பெற வாழ்க்கையில் தெளிவும் அமைதியும் பெற்றுவிடுகிறான்.

பொதுவாக, இந்தியர்களின் சிந்தனை குறித்து பேசப்படுவது என்னவென்றால் இது தனி ஒருவனை மையமாகக்கொண்டது என்பதாகும். தான் உயர்ந்து உலகியல் மேம்பாடு, மனம், ஆன்மா என எல்லாம் மேம்பட்டு இறுதியில் மோக்ஷமென்னும் மேம்பாட்டை அடைதல் வேண்டும் என வற்புறுத்தி கூறுகின்றனர் என்பதாகும். இது ஒரு தவறான கருத்து. இதைத் திருத்தம் செய்திடல் வேண்டும். இந்தியப் பண்புகள் ஒரு தனி மனிதனை மாத்திரம் குறித்துக் கூறவில்லை. அது பொதுவாக எல்லா மனிதர்களையும் குறித்தே கூறுவதாகும் (ஸர்வபூதஹிதே ரதா:). எல்லா மனிதர்களை மாத்திரமல்ல. அனைத்து ஜீவராசிகளுக்குமாகும்.

தனி மனிதன் தன் சிந்தனையில் எல்லோருடைய நலனையும் பேணுதல் வேண்டும்.

சர்வோ பவந்து சுகினோ சர்வ சந்து நிரோமயி |
சர்வ பத்ராணி பஸ்யந்து மா கசித் துகம் அப்னுயாத் ||

'எல்லோரும் மகிழ்ச்சியுடன் இருக்கட்டும். எல்லோரும் வியாதியின்றி இருக்கட்டும். எல்லோரும் நல்லவைகளையே அனுபவிக்கட்டும். எவரையும் துன்பம் அணுகக் கூடாது'.

இந்தியாவில்தான் பூமியை தாய் என்னும் நிலையில் காண்கிறோம். ப்ருத்வீ சூக்தத்தில் அதர்வ வேதத்தில் ருஷி கூறுகிறார். பூமி அன்னையானவள் (மாதா பூமி:). இவன் அவளது மகனாவான். (புத்ரோஹம் ப்ருதிவ்யா:). இந்தியாவில்தான் அவள் மீது காலடி வைப்பதற்கு மன்னிப்பு கோரப்படுகிறது. அவள் அன்னையாகப் போற்றப்படுபவள். மரியாதைக்குரியவள்.

ஸமுத்ரவஸனே தேவீ பர்வதஸ்தனமண்டலே |
விஷ்ணுபத்நீ நமஸ்துப்யம் பாதக்ஷேபம் ஸஹஸ்வ மே ||

'ஓ! தேவதையே! விஷ்ணுவின் மனைவியே! நீங்கள் கடலை ஒட்டியாணமாகக்கொண்டு, மலைகளை பரந்த மார்பகங்களாகக் கொண்டுள்ளீர்கள். கருணைகூர்ந்து நான் காலடி வைப்பதை பொறுத்துக்கொள்ள வேண்டும்'.

ஒரு தச்சனால் மரத்தை வெட்டி அறுத்து, தேய்த்து வீட்டிற்குத் தேவையான கதவு, சன்னல்கள் முதலியவை செய்யும் நேரம் இப்படிப்பட்ட மன்னிப்பு மரங்களிடமும் வேண்டப்படுகிறது.

யாநீஹ பூதானி வஸந்தி தானி
பலிம் க்ருஹீத்வா விதிவத் ப்ரயுக்தம் |
அன்யத்ர வாஸம் பரிகல்பயந்து
க்ஷமந்து தே சாத்ய நமோஸ்து தேப்ய: ||

'எந்தெந்த ஜீவராசிகள் அம்மரத்தில் வசித்து வந்ததோ அந்தந்த ஜீவஜந்துக்கள் எல்லாம் இந்த பொருத்தமான பலியை ஏற்றுக்கொண்டு வேறு இடத்தை தேர்ந்தெடுத்துக்கொள்ளட்டும். என்னை அவைகள் மன்னிக்கட்டும். நான் அவைகளை வணங்குகிறேன்.'

தற்காலத்தில் சுற்றுச்சூழலைக் காப்பாற்ற விரிவான பல பேச்சுகள் பேசப்படுகின்றன. இச்சந்தர்ப்பத்தில் மகாபாரதத்தில் கூறப்பட்டுள்ள

ஒரு சிறுகதையை எடுத்துரைப்பது பொருந்துவதாகும். ஒருமுறை மன்னன் ப்ருது அரசாண்டுகொண்டிருந்தான். அச்சமயம் பூமி பிரம்மதேவனை அணுகி மன்னன் தன்னை மிகவும் இம்சை செய்வதாக புகார் கூறினாள். உடனே பிரம்மாவும் அவளது வார்த்தைகளைக் கேட்டு மன்னனை அழைத்து அதற்கான காரணம் என்ன என வினவினார். மன்னன் அதற்கு பூமி தன் மக்களுக்கு போதுமான அளவிற்கு பொருட்களை அளிப்பதில்லை என்று கூறிட பிரும்மதேவனும் பூமியை அழைத்து மன்னனது பதிலை எடுத்துரைத்து அதற்கான காரணத்தையும் விளக்கமாகக் கூறும்படி வினவினார்.

பூமியோ, அம்மன்னன் தன்னை தேவைக்கும் அதிக அளவில் தோண்டி பயிர்களை வளர்த்து தன்னை பயன்படுத்திவிட்டான் என்றும் தன் மேல்மட்ட மண்ணெல்லாம் அரித்து அடித்துச் சென்று எனது உரமே குறைந்துவிட்டது. இப்பொழுது நான் என்ன செய்யமுடியும் என்றது. அப்பொழுது பிரம்மதேவன் பூமியை ஒரு பசுவாக மாறி அவர்களுக்கு பாலாக சுரக்கும்படி கூறினான். பூமியும் அதற்கிணங்கியது. ஆனால் அது சில நாட்களுக்கே பொருந்தியது. மன்னன் மீண்டும் பிரம்மதேவனிடம் முறையிடுகையில் மக்கள் தங்குமிடமே இல்லாமல் போய்விட்டதே என்று முறையிட்டான். அப்பொழுது பிரம்மதேவன் மன்னனைக் கண்டு இனி பூமியைத் தோண்டி வேண்டியவைகளை பெற்றுக்கொள்ளுங்கள். ஆனால் மிக ஆழமாக தோண்டாமல் பூமியைத் துன்புறுத்தாமல் பணியை மேற்கொள்ளும்படி கூறினார்.

இச்சிறுகதையிலிருந்து தொன்றுதொட்டே அக்காலம் முதல் மக்கள் சுற்றுச்சூழலைப் பற்றியும் மணல் அரித்துச் செல்வதைப் பற்றியும் எவ்வளவு கவனம் கொண்டிருந்தார்கள் என்பது புலப்படுகிறது.

புராணக்கதையில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் காளியன் பாம்பைக் கொன்ற கதையிலிருந்து இந்தியர்கள் நீரை சுத்தமாக பராமரிப்பதில் எவ்வளவு கவனமாய் இருந்தார்கள் என்பது புலனாகிறது. காளியனோ ஆற்று நீரில் விஷத்தை கக்கி மாசடையச்செய்தான்.

இதைத்தவிர ஸ்ம்ருதிகளில் ஆற்று நீரில் எச்சில் துப்பக்கூடாது, அதனருகில் சிறுநீர் கழித்தல் எல்லாம் கூடாது என்றும் விளக்கமாகக் கூறுகின்றன. உணவுப் பதார்த்தங்கள் மீதமிருந்தால் அதை ஆற்றில் எறிதலும்கூடாது. எந்த வேண்டாத பொருட்களையும் ஆற்றில் எறிந்திடக்கூடாதென்று கூறி நீரை சுத்தமாகவும் அவ்விடத்தை

ஆரோக்கியமாகவும் வைப்பதற்கான விதிமுறைகள் வகுக்கப் பட்டிருந்ததைக் காணலாம்.

பழங்காலத்து இந்தியர்கள் மனிதன் சுற்றுச்சுழலைக் காப்பதுபோல் சுற்றுச்சுழலும் மக்களைக் காப்பதை எடுத்துக் கூறுகின்றனர். இது மகாபாரதத்தின் ஒரு சுலோகத்தில் கூறப்பட்டுள்ளது. காட்டில் அடைக்கலமில்லாவிடில் புலிக்கு கதியில்லை அவ்வாறே புலியில்லாவிடில் காட்டிற்கும் பாதுகாப்பில்லை.

நிர்வாணோ வாத்யதே வ்யாக்ரோ நிர்வாக்ராம் சிட்யாதே வனம்

பொதுவாக, இந்தியர்கள் சுற்றுச்சுழலை பக்தியுடனும், ஆதரவுடனும், கருணையுடனும், செய்நன்றியுடனும் அணுகி வந்தனர். இதுவே சுற்றுச்சூழலின் சிக்கல்களை நட்பின் அடிப்படையில் தவிர்த்து காப்பாற்றிவந்தனர். அவர்கள் சுற்றுச்சூழலின் துகளிலும் அமைதியை யும் ஒற்றுமையையும் விரும்பினர். இதை பல துதிகளில் காணமுடி கிறது. அதர்வ வேதத்திலுள்ள அதிகமாக எல்லோராலும் பாடப்படும் இச்சுலோகத்தில் அவர்கள் பூமி, ஆகாயம், நீர், மூலிகைகள், செடிகொடிகள், திசைகள் என எல்லாம் அமைதியுடன் வாழ வேண்டுமென பிரார்த்திக்கிறார்கள். அமைதி அமைதி என்று எங்கும் அமைதியை விழைகிறார்கள்.

த்யான் ஷாந்திஹி ப்ருத்வி ஷாந்திர் அபாஹ் ஷாந்திர் ஓசதயஹ் ஷாந்தி....

ஷாந்திர் ஏவ ஷாந்தி......

இந்த பண்புகள் தான் இத்தனை காலமாக இந்தியர்களை காப்பாற்றி வந்தன. முக்கியமாக இந்தியர்கள் இதை நன்கு அறிவார்கள். சில எல்லோருக்கும் பொதுவாக நிரந்தரமானவை. சில இந்தியர்களுக் காகவே அமைந்துள்ளன. ஆனால் காலம் செல்லச் செல்ல சில காரணங்களால் அது சிறிது சிறிதாக குறைந்துக்கொண்டு வருகின்றது. அது நமது துர்ப்பாக்கியமே. இழிஊழ் என்றும் கூறலாம்.

இப் பண்புகளின் முக்கியத்துவத்தை மனதில் நன்கு அறிந்து நிறுத்தி தற்காலத்திய சமுதாயத்தில் ஏற்படும் தவறான வழிகளைத் தவிர்த்து நமது சமுதாயத்தின் வளர்ச்சியையும் அழகையும் நிலைநிறுத்துதல் இன்றியமையாததாகும். இந்த இலக்கை அடையவே இந்நூல் சமர்ப்பிக்கப்படுகிறது.

# 1

# அஹிம்ஸா

## அகிம்சை

'அஹிம்ஸா பரமோ தர்ம:" அகிம்சை மேலான நற்பண்பாகும் என்பது ஒரு நாலடி பாடலின் நான்காவது அடியாகும். இது இந்தியாவில் மிகப் பிரசித்தி பெற்ற பாடலாகும். இது அகிம்சையை உயர்ந்த இன்றியமையாத தத்துவம் என்று ஏற்றுக்கொள்ளும் சமணர்களின் ஆன்மீக நூலிலிருந்து எடுக்கப்பட்டதல்ல. இதைப்பற்றி பல நூல்களில் பேசப்பட்டபோதிலும் மகாபாரதத்தில் விவரமாகக் கூறப் பட்டுள்ளது. அம்புப் படுக்கையில் இருந்த பீஷ்மரை, யுதிஷ்டிரர் பல கேள்விகளைக் கேட்கிறார். இது மகாபாரதத்தில் அனுசாஸன பருவத்தில் இடம்பெறுகிறது. அங்கு ஒருவன் சொல், செயல், எண்ணம், என்ற மூன்றிலும் ஹிம்சையை ஏற்காமல் கடைப்பிடிக்காமல் அல்லல்களிலிருந்தும் சோகத்திலிருந்தும் விடுபடுவதெப்படி? அகிம்சை என்பது சொல், செயல், எண்ணம், உணவருந்துதல் முதலிய நான்கிலும் அவை ஒன்றுக்கொன்று தொடர்புகொண்டுள்ளதால் கடைப்பிடித்தல் வேண்டும். இந்த நான்கினின்றும் ஒன்றை கடைப் பிடிக்காமல் மற்ற மூன்றை கடைப்பிடித்தாலும் அது போதுமான தன்று என்று கூறி ஒரு எடுத்துக்காட்டுடன் அதை விவரிக்கிறார்.

யானையின் ஒருபாதம் பல சிறிய பிராணிகளின் பாதங்களை தன்னுள் அடக்கிக்கொள்கிறது. அதைப்போலவே எல்லா நற்செயல் களும் அகிம்சையில் அடக்கம் கொள்கின்றன. இப்படித்தான் அகிம்சை நிலைபெறுகிறது. இப்பொழுது புலால் உண்பதை தவிர்க்க வேண்டும். இது மூன்று படிகளில் ஏற்றுக்கொள்ளப்படவேண்டியவை.

முதலில் ஒருவன் நான் மாமிசம் உண்ணமாட்டேன் என வாயினால் திடமான தீர்மானம் ஏற்றுக்கொள்ள வேண்டும். இது மனிதன்

மனதினால் ஹிம்சையிலிருந்து நீங்கியிருப்பதாகும். இரண்டாவதாக அவன் தன் வாயினால் நான் எந்தவிதமான மாமிசத்தையும் ஏற்கமாட்டேன் என்று கூற வேண்டும். சிலரோ பசுவின் மாமிசம், பன்றி மாமிசம், கோழி, மீன் என்ற சிலவற்றையே தவிர்ப்பர். அதனால் எந்தவிதமான மாமிசத்தையும் ஏற்கமாட்டேன் என்று கூறிட வேண்டும். மூன்றாவதாக ஒருவன் பிராணிகளை நான் கொல்லமாட்டேன் என்று செயலினால் நீங்கியிருப்பதாகும். ஒருவன் தன் நாவின் ருசியைக் கட்டுப்படுத்தி மாமிசம் உண்பதைத் தவிர்ப்பது செயலினால் நீங்கியிருப்பதாகும்.

அடுத்தபடியாக பீஷ்மர் திடமாக மாமிசம் உண்பதை தவிர்க்க வேண்டுமென்பதை நடைமுறையில் அனுசரிக்க வேண்டுமென்பதை வற்புறுத்தி கூறுகிறார். மாமிசம் உண்பவர்கள் புலாலுண்பதால் ஏற்படும் நன்மைகளை விவரமாக எடுத்துக் கூறிடுவர். அதற்குக் குறைவு ஒன்றுமில்லை. அது உடலுக்கு புரதசத்தை அளிக்கிறது. அது உடலின் எடையையும் சக்தியையும் அபிவிருத்தி செய்கிறது. (இதை ஆங்காங்கே எடுத்துக்காட்டுடன் கூறப்படும் கூற்று - 'மாம்சம் மாம்சேன வர்ததே' (மாமிசம் மாமிசத்தினால் வளர்கிறது).

இவையெல்லாம் அவர்கள் தங்களது நாவின் ருசியை திருப்தி செய்து கொள்வதற்கேயாகும். இவ்வாறெல்லாம் மாமிசம் உண்பதால் ஏற்படும் நன்மைகளையும் கெடுதல்களையும் எடுத்துரைக்கின்றனர். வரலாற்றிலிருந்தே மேன்மக்கள் தங்களது சதையை மற்றவருடைய சதையையும் உயிரையும் காக்க அர்ப்பணித்தார்கள் என்பதை பீஷ்மர் மேற்கோள்களுடன் எடுத்துக்கூறுகிறார். 'ஸ்வமாம்ஸம் பரமாம்ஸேன பரிபால்ய' என்று பிறரைக் காப்பாற்றி சுவர்க்கம் அடைந்தனர். 'திவம் கத:' இவ்வாறு பல எடுத்துக்காட்டுகளுடன் எடுத்துக்கூறியும் யுதிஷ்டிரர் மனம் ஏற்றுக்கொள்ளவில்லை. மீண்டும் மீண்டும் அகிம்சையே மேலான தருமம் என்பதை பீஷ்மரின் எதிர்மறையுடன் கூடிய மாறுபட்ட கருத்துக்களுடன் கூடியதாக, அதாவது சிரார்த்தமென்று மேலுலகம் சென்ற நம் மூதாதையருக்கு மாமிசம் மிகப் பிடித்தமானதென கருதி மாமிச உணவு படைத்து அவர்களை திருப்தி செய்வதையும் எடுத்துரைக்கிறார்.

கொல்லாமல் மாமிசம் எப்படி கிடைக்கும் என்று வாதாடுகிறார். கொல்லக்கூடாது ஆனால் மாமிசம் கொடுக்க வேண்டும் என்பதே ஒன்றுக்கொன்று முரண்பாடானது அடிபட்டுப்போகிறதே. பீஷ்மர் முன் எடுத்துரைத்த மாமிசம் உண்ணல் கூடாது என்ற கூற்றில்ஐயம்

கொண்டவராய் 'ஜாதோ னோ ஸம்ஸயோ தர்மே மாம்ஸஸ்ய பரிவர்ஜனே' என்று அவரைத் தீவிரமாகத் தாக்கி கூறலுற்றார். மாமிசம் உண்பதைத் தவிர்ப்பதால் என்னென்ன நன்மைகள் ஏற்படும். அதற்கு மாறாக தவிர்ப்பதால் ஏற்படும் விளைவுகள் என்னென்ன என்பதை விளக்கமாக எடுத்துக்கூறும்படி கேட்டுக்கொண்டார். மேலும் மாமிசம் உண்பதென்பது எவ்வாறு, எவ்வளவு ஹிம்சையாகும்.

உயிர்வாழ் ஜீவன்களைக் கொன்று அதன் மாமிசத்தை உண்பது கெட்டதா அல்லது உண்ண மாமிசத்தை விலைகொடுத்து வாங்குவதா? மற்றவர்களுக்கு பரிமாற மாமிசம் கொடுப்பது ஹிம்சையா அல்லது பரிமாறின மாமிச உணவை உண்பது ஹிம்சையா? இவை யாவற்றையும் விவரமாக எடுத்துக் கூறும்படி யுதிஷ்டிரர் வினவினார்.

இவைகள் எல்லாவற்றிற்கும் பதிலளிக்கையில் எந்தவிதமான மாமிசத்தை உண்பதும் தவிர்க்கப்பட வேண்டியதாகும். அதுவே நற்பண்பாகும். என்று கூறி யுதிஷ்டிரரின் முதற்கேள்வியான மாமிசம் உண்பதை தவிர்ப்பதால் ஏற்படும் நன்மைகளைப் பற்றி பீஷ்மர் முதலில் பதிலளிக்கிறார்.

புலால் உண்பதைத் தவிர்ப்பதால் நல்ல உருவம் தோற்றம் அமையும். அங்கங்களில் ஊனம் ஏற்படாது. அது வாழ்நாளை நீண்டதாக்கிடும். புத்தி வளரும். நல்ல சிந்தனையுடன் தேகவலிமையும் ஞாபக சக்தியும் வளர்ந்து பெருகிடும். மாமிசம் உண்பதை தவிர்த்தல் என்பது மிகவும் சிறந்ததாகும். அதனாலேயே அது மாதம் ஒருமுறை அசுவமேத வேள்வி காத்தலுக்கு சமமாகக் கருதப்படுகிறது. ஆனால் ஒருமுறை ருசித்துவிட்டால் அதை தவிர்ப்பது மிகக்கடினமாகும். அப்படிச் செய்பவனுக்கு வேள்விக்காத்தலும் மற்ற ஆன்மீக நூல்களும் அவனுக்கு அளிக்க இயலாத நன்மைகளை பயந்திடும். அகிம்சை மேலான நற்பண்பாகிடும். கடுமையான தவமாகும். மேலான சக்தியாகும். இதிலிருந்துதான் ஏனைய தருமங்கள் பாய்ந்தோடுகின்றன.

> அஹிம்ஸா பரமோ தர்ம: ததாஹிம்ஸா பரமம் தப: |
> அஹிம்ஸா பரமம் ஸத்யம் யதோ தர்மா: ப்ரவர்ததே ||

அடுத்து யுதிஷ்டிரர் மாமிசம் உண்பதால் என்ன கெடுதல்கள் விளைகின்றன என்ற கேள்வியைக் கேட்க அதற்கு பதிலளிக்கையில் பீஷ்மர் கூறுகிறார், புல், கல், மரம் முதலியவைகளினின்றும் மாமிசம்

அடையப்படுவதில்லையே. இது உயிருள்ள ஒரு பிராணியைக் கொல்வதாலேயே கிடைக்கிறது. அதனாலேயே அதை உண்பது கெடுதல் ஆகிறது. 'தஸ்மாத் தோஷஸ்து பக்ஷணே'. பீஷ்மர் இங்கு ஒரு சுவாரசியமான விஷயத்தை எடுத்துரைக்கிறார். மாமிசம் உண்பவர்கள் இல்லையெனில் கசாப்புகடைக்காரனே இருக்கமாட்டான். மாமிசம் உண்பவர்கள் இருப்பதாலேயே கசாப்புக்காரனும் இருக்கிறான். மிருகங்களைக் கட்டிக் கொல்லும் கசாப்புக்காரனுக்கும் அவனிடமிருந்து மாமிசத்தை விலை கொடுத்து வாங்குபவருக்கும் அம்மாமிசத்தை ருசித்து சாப்பிடுபவர்களுக்கு மிடையே ஒருவிதமான வித்தியாசமும் கிடையாது. இம்மூன்றுமே உயிரை கொலை செய்வதேயாகும். 'ஏஷ த்ரிவிதோ வத:'.

இங்கு இரண்டாம் முறையாக மற்றுமொரு சுவாரசியமான விஷயத்தை எடுத்துக் கூறுகிறார். இங்கு அவர் முன்காலத்தில் அரிசியினால் மக்கள் ஒருவித விலங்கை உண்டாக்கிய முறையைப் பற்றி கூறுகிறார். அரிசியினால் மிருகங்களைப் படைத்து அதை வேள்விகளில் பலியாகக் கொடுத்தனர். 'வ்ரீஹிமய: பஸு:' யாகத்திலோ பலியாகக் கொடுக்கப்படும் மிருகத்தின் மேல் நீர் தெளிக்கின்றனர். 'ப்ரொக்ஷித'. அதற்கென விதிக்கப்பட்டிருந்த மந்திரங்களைக் கூறி நீரைத்தெளித்தல் முதலிய சடங்குகளுக்குப் பிறகே அதைப் பயன்படுத்தலாம். இவ்விதி சேதி மன்னர்களான வசுவினால் அக்காலத்திலிருந்த முனிவர்களுக்கு பதிலளிக்கையில் கூறப்பட்ட தாகும். இதன் பிறகு மாமிசம் உண்பதை தவிர்க்க வேண்டிய பருவங்கள், மாதங்கள், காலங்கள் இவைகளைப் பற்றி கூறுகிறார். இதை அனுசரிப்பதே ஓரளவு நல்ல விளைவுகளை ஒருவனுக்கு விளைவிப்பதாகும். ஏனெனில் இவ்வாறு உண்பதை விலக்குவதும் ஒருவிதமான கடினமான செயல் அல்லவா? என்று பீஷ்மர் கூறுகிறார்.

மாமிசம் உண்பதைத் தவிர்த்து மேலுலகமடைந்த, மேலுலகில் நல்ல இடங்களை அடைந்த மன்னர்களின் பட்டியல் ஒன்றை இங்கு பீஷ்மர் கொடுக்கிறார். மாமிசம் உண்பதையும் மது அருந்துவதையும் பிறவியிலிருந்தே தவிர்த்திடும் உன்னத வழியைக் கடைபிடிப்பவர்கள் உயர்ந்த மகான்களாகவும் முனிவர்களுக்கு இணையானவர்களாகவும் கருதப்பட்ட ார்கள். பீஷ்மர் மாமிசம் உண்பதை தவிர்ப்பதை தீவிரமாக வற்புறுத்துவதுடன், பல புகழாரங்களான துதிகளாகப் பாடப்படுவதையும் எடுத்துக்கூறி இதன் பலசுருதியுடன் நிறைவு செய்கிறார்.

'யார் மாமிசம் உண்பதை தவிர்க்கிறார்களோ அவ்வாறே பிறரை மாமிசம் உண்ணாமல் இருக்க பயிற்சி அளிக்கிறார்களோ இந்த புகழாரத்துதியை படிக்கிறார்களோ, அவர்களது நடத்தை எவ்வளவு மோசமானதாக இருந்திடினும் அவர்களது பாவங்கள் சிறிது சிறிதாக அழிக்கப்பட்டு நரகத்தின் திசை கூட அழைத்து செல்லப்பட மாட்டார்கள். அவர்களது எல்லா இச்சைகளும் கூட பூர்த்தி செய்யப்படும்.'

படேத்வா ய இதம் ராஜன் ஸ்ருணுயாத்வாபி அபீக்ஷ்ணஸ: |
விமுக்த: ஸர்வபாபேப்ய: ஸர்வகாமைர்மஹீயதே ||

இந்த சுலோகம் பீஷ்மருக்கும் யுதிஷ்டிரருக்கும் மாமிசம் உண்பதைப் பற்றிய உரையாடலின் முடிவாக அமையவில்லை. உண்பதற்கு பலவிதமான காய்கனிகள், இனிப்பு பக்ஷணங்கள், பழகேக்குகள் எல்லாம் கிடைக்கும் இந்நேரத்தில் மக்கள் ஏன் மாமிசம் உண்பதற்கு முயல வேண்டும் என்பதை யுதிஷ்டிரரால் அறிந்துகொள்ள முடிய வில்லை. இருந்தும் மாமிசம் உண்ண விரும்பினால் அவர்களுக்கு மாமிசத்தைக் காட்டிலும் மேலான ருசியுள்ளது வேறெதுவுமில்லை என்பதேயாகும். அதனால் மீண்டும் மீண்டும் வற்புறுத்தி மாமிசம் உண்பதனால் அமையும் நன்மைகள், தவிர்ப்பதால் ஏற்படும் நன்மை கள் இவைகளை மேலும் விவரமாக கூறும்படி வேண்டிக்கொள்கிறார்.

பீஷ்மர் யுதிஷ்டிரரிடம், உண்பதற்கான பண்டங்களில் மாமிசம் மிகவும் ருசிகரமானதே என்பதை ஒப்புக்கொள்கிறார். அதனால் பல உபயோகங்கள் உள்ளன. காயம்பட்டவர்களுக்கும், மெலிந்து களைத்தவர்களுக்கும், மீண்டும் மீண்டும் ஒரேவிதமான தினசரி கடும் உழைப்பை ஏற்கும் பணியாளர்களுக்கும் பயணம் செய்த களைப்பிற்கும் இது பலனளிப்பதாகும். இது சுவாசத்தை உடனே பெருக்கி உடலுக்கு தேவையான பலத்தை அளிக்கவல்லது. இந்த உணவிற்கு வேறெந்த உணவும் இணையாகாது. பிறகு ஏன் அதை ஏற்றுக்கொள்ளல்கூடாது?

ஆனால் அதை ஒருவன் ஏற்றுக்கொள்வதென்பது சரியல்ல. ஒருவன் தன் சதையை பிறர் சதையுண்டு பலப்படுத்துவதென்பது மிகவும் மோசமானதும் கீழ்த்தரமானதும் மிகக் கொடியதிலும் கொடியதான எண்ணமாகும். இவ்வுலகில் உயிரைவிட மிகவும் பிரியமானது வேறொன்றுமில்லை. ஒருவன் தன் உயிரை விட்டுவிட விரும்பவில்லையாகில் எதற்காக பிறரது உயிரை பறிக்க வேண்டும். அவன் தன்னைப்போலவே பிறரையும் கருத வேண்டும். மாமிசத்தை

தவிர்ப்பது மேலான குணமாகும். உண்பதோ மிகவும் கீழ்த்தரமான கெட்ட குணமாகும்.

இப்பொழுது அதை கடைப்பிடிக்கும் முறை வருகிறது. வேதங்களில் கூறியுள்ளபடி விதிமுறைகளை அனுசரித்து மாமிசம் உண்பதில் தவறொன்றுமில்லை என்று பீஷ்மர் கூறுகிறார். ஸ்ருதிகளுக்காகவோ, வேள்விகளுக்காகவோ யாகங்களுக்காகவோ மிருகங்களை பலியாக பயன்படுத்துவதில் தவறொன்றுமில்லை. அது தவிர க்ஷத்திரியர்களுக்கு வேறுவிதமான விதிமுறைகள் உள்ளன. அவர்கள் தங்களது உடலையும் உயிரையும் பணயம் வைத்து தன்னைப் பாய்ந்து வரும் கொடிய காட்டு விலங்குகளை வேட்டையாடுகின்றனர். அதனால் வேட்டையாடுதல் அவர்களுக்கு விதிவிலக்கானதல்ல. அவர்களுக்கு மறுக்கப்பட்டதல்ல. இதன் காரணமாகவே வேட்டையாடுகையில் மிகவும் கொடுமையான விலங்குகளைக் கொல்லுதல் பாபத்தைக் கொடுக்காது. அது பாபச்செயலாகக் கருதப்படுவதில்லை.

ஆனால் இவைகள் எல்லாம் விதிவிலக்கானவைகளேயாகும். பீஷ்மர், ஜீவராசிகளுடன் கருணையுடன் இருக்க வேண்டுமென்று முதலில் கூறிய செய்தியையே வற்புறுத்துகிறார். எந்த ஜீவராசியும் இறக்க விரும்புவதில்லை. அவைகளை உயிருடன் விடவேண்டியது தானே சிறந்தது.

ஜீவனை கொல்லாமையாகிற அகிம்சையைக் கூறி பிறகு இறுதியில் அகிம்சை மேலான நற்குணம், மேலான சுயகட்டுப்பாடு, மேலான தானமாகும். மேலான வேள்வி, மேலான கனி, மேலான நண்பன், மேலான மகிழ்ச்சியும் அதுவே என்கிறார். இது எல்லாவிதமான வேள்விகளிலும் தானத்திற்கிணையானது. எல்லா புண்ணிய தீர்த்தங்களிலும் நீராடுவதற்கு ஒப்பதாகும். எல்லா கொடைகளின் நற்பலன்களும் இதற்கிணையாகாது. பல நூறு ஆண்டுகள் இயற்றிய நற்பண்புகளை இவ்வளவு என்று கூட்டி இதற்கிணையானதென்று இறுதியிட்டுக் கூற இயலாது.

அஹிம்ஸா பரமோ தர்ம: ததாஹிம்ஸா பரோதம: |
அஹிம்ஸா பரமம் தானம் அஹிம்ஸா பரமம் தப; ||
அஹிம்ஸா பரமோ யஞஸ்ததா ஹிம்ஸா பரமம் பலம் |
அஹிம்ஸா பரமம் மித்ரம் அஹிம்ஸா பரமம் ஸுகம் ||
ஸர்வயஞேஷு வா தானம் ஸர்வதீர்தேஷு வா ப்லுதம்
அஹிம்ஸாயா.... நஹி ஸக்யா குணா: வக்தும் வர்ஷஸதைரபி ||

ஹிம்சை அல்லது கொடுமை மனது, சொல், செயல் (மனோவக்காய) என்ற மூன்றினாலும் செய்யக்கூடும். இம்மூன்றினின்றும் சபதமிட்டு நீங்கியிருப்பதே அகிம்சை என்று கூறப்படும். இதன் அடிப்படையான கருத்து, எந்த ஜீவராசிக்கும் காயமோ, புண்படுத்துவது மாத்திரமல்ல. கொல்வதோ புண்படுத்துவதோ முடமாக்கிடச் செய்வதோ வெளிப் படையாகவே விளக்கம் தேவையானவை என்பது தெரிந்ததே.

ஒருவனது மனதை துன்புறுத்துவது, அவனைப்பற்றி தகாத தவறான முறையில் பேசுவது, அவனது கெட்ட எண்ண அலைகளினால் ஒருவனை கீழே வீழ்த்திடும். அவைகளுக்கு விஞ்ஞான ரீதியில் விளக்கம் கொடுப்பது கடினமானதாகிலும் மௌனமாகக் கொடுக்கப் பட்ட சாபங்கள் யாரைக்குறித்து கொடுக்கப்பட்டதோ அவர்களை பாதிக்காமல் இருப்பதில்லை. வாசிக ஹிம்சை என்பது ஒருவனை வாயினால் சொற்களினால் நிந்திப்பதாகும். அவனது எதிரிலேயே அவனைப்பற்றி கெட்ட வார்த்தைகள் கூறுவது, அவனைக் கீழ்த்தரமாகத் திட்டுவதுமாகும். மகாபாரதம் ஒரு சிறப்பான எடுத்துக்காட்டை கர்ணபருவத்தில் எடுத்துக்கூறுகிறது.

யுதிஷ்டிரனின் தேரோட்டியை கர்ணன் கொன்று தலைக்கிரீடத்தை வீழ்த்திடவும், நகுலனுக்கும் அதே நிலைமை ஏற்படவும் தனது மற்றெரு சகோதரனான சகதேவனின் தேரில் ஏறிட, அவனைச் சூழ்ந்துகொண்டிருந்த சேனைத் தலைவர்களை அவர்களது சக்தியிழக்கச் செய்திட காயமடைந்த யுதிஷ்டிரர் தன் கூடாரத்திற்கு திரும்பிவிட்டார்.

அவரது அந்நிலையை பீமன் மூலம் அறிந்த அர்ஜுனன், கிருஷ்ணனுடன் அவரது நலமறிய கூடாரத்தை நோக்கி விரைந்தான். பீமனோ அர்ஜுனனை யுதிஷ்டிரரிடம் அனுப்பிவிட்டு கர்ணனை எதிர்ப்பதாகக் கூறிச் சென்றான். அடிபட்டதால் தன் வீரியமும் முகவொளியும் இழந்திருப்பதைக் கண்ட அர்ஜுனன் முகம் வாடியதைக்கண்டு மேலும் அதிக கவலையிலாழ்ந்த யுதிஷ்டிரர், கூட்டங்கூட்டமாயிருந்த சம்சப்தகர்களைக் கொன்ற, தன்னை மிக மோசமாக அடித்து நொறுக்கிய கர்ணனை கொன்றிருக்க வேண்டும் என்று அர்ஜுனன் மீது குற்றப்பாடல் பாடத் துவங்கினார்.

அர்ஜுனனோ பீமன் அவரைத் தாக்கியதைக் கூறியதால் யுதிஷ்டிரரது நலமறிய விழைந்து அங்கு வந்ததாகக் கூறினான். யுதிஷ்டிரர் தன் மனசமநிலை இழந்தார். கூர்மையான கடுஞ்சொற்களால், நாம் கையில் காண்டீவத்தை வைத்துக்கொண்டே

இந்நிலையிலிருப்பதைவிட அதை அதிக தேர்ச்சிபெற்ற ஒருவனுக்கு அளித்துவிடுவதே சிறந்தது என்றார். அதைக்கேட்ட அர்ஜுனன் தன் உறைவாளிலிருந்து கத்தியை கையில் எடுத்தான். கிருஷ்ணன், அர்ஜுனனது அச்சினத்தையும், மனநிலையையும், எதிர்பாராத கோணத்தில் நிகழ்ச்சிகள் மாறுவதையும் கண்டு அவனை நோக்கி அவன் என்ன செய்ய முயல்கிறான்? எதற்காக கத்தியை உறுவி வெளியிலெடுத்தான் என்றும் கேட்டார். அர்ஜுனன் அதற்கு தான் ஒருவரும் அறியாமல் தனிமையில் சபதம் ஒன்று எடுத்திருப்பதாகவும், அதன்படி தன் கையிலுள்ள காண்டீபத்தை தன்னைக்காட்டிலும் திறமைவாய்ந்த ஒருவரிடம் கொடுக்க வேண்டுமென்று கூறியவரது தலையை சீவிடவே எடுத்ததாகவும் கூறினான். யுதிஷ்டிரர்தான் இவ்வார்த்தைகளைக் கூறியது. இப்பொழுது அவர் தன் தலை இழக்க வேண்டும்.

கிருஷ்ணன், அர்ஜுனனை நோக்கி அவன் தன் சபதத்தை பின் வாங்கிக்கொள்ள ஒரு வழி உள்ளது. அது யுதிஷ்டிரரை மரியாதைக் குறைவாக அவமதித்து பேசுவதேயாகும். ஒருவன் தன் மரியாதையைக் காப்பாற்றி தக்கவைத்துக்கொள்ளும் வரை தான் உயிருடன் இருப்பதாக ஆகும். அவன் நிந்தனை சொற்களை வசை சொற்களை கேட்கும்படியானால் உயிருடன் இருந்தும் இறந்ததற்கு சமமாகும்.

ஒரு வயது முதிர்ந்தவரை நீ என்று விளித்துவிட்டால் அவரைக் கொன்றதற்கு சமமாகும். அதைக்கேட்ட அர்ஜுனன் யுதிஷ்டிரரை வாய்க்கு வந்தபடிபல நிந்தனை வசனங்களினால் நிந்திக்கத் தொடங்கினான். சபையில் சூதாட்டத்திலிருந்து துவங்கி சகோதரர் களின் அல்லல்கள், மரணம், நாசம் எல்லாமே அவரால் விளைந்தன என்று வசை மாரி பொழிந்தான்.

அதன் பிறகு மீண்டும் அர்ஜுனன் தன் கத்தியை உறுவி கையில் எடுத்தான். இச்சமயம் அவன் தன் மரியாதைக்குரிய பெரிய சகோதரனை தான் பல தகாத வசை சொற்களால் துன்புறுத்தியதால் அதன் பிராயச்சித்தமாக தற்கொலை செய்துகொள்ள நிச்சயித்தான். கிருஷ்ணன் விவரம் யாவும் நன்கு அறிந்திருந்தபோதிலும் ஊர்ஜிதப்படுத்திக்கொள்ள அவனிடம் கத்தியை உருவியக் காரணத்தை வினவினார்.

பிறகு அர்ஜுனனை தற்பெருமையாய் தன்னைப் புகழ்ந்து பேசும்படி கூறினார். தற்புகழ்ச்சி என்பது தற்கொலைக்கு நிகராகும். அதனால் அர்ஜுனன் செய்த தவறுக்கு, பேசிய தவறான பேச்சிற்கும்

பிராயச்சித்தம் செய்வது போலாகும். அர்ஜுனனும் கிருஷ்ணன் உபதேச சொற்படி நடந்து, நடக்கவிருந்த எதிர்பாராத அவலட்சண மான நிகழ்ச்சிகளை தடுத்துவிட்டார்.

இக்கதையினின்றும் அறியப்படுவது என்னவென்றால் இம்சை என்பது ஆயுதங்களினாலும், யுத்த தளவாடங்களினாலும் செய்யப்படுவது மாத்திரமல்ல. மனதையும் புத்தியையும் பாதிக்கும் சொற்களும் இம்சையாகும். கொடுமையான சொற்களால் மனம் நோகடிக்கும்படிச் செய்வதும் வாக்கு இம்சையாகும். தற்பெருமை தனக்குத்தானே செய்துகொள்ளும் இம்சையாகும். இவ்விரண்டுமே 'வாசிகஹிம்சை' - வாக்கினால் செய்யப்படும் இம்சையாகும். இவ்விரண்டுமே தவிர்க்கப்பட வேண்டியவைகளாகும்.

இப்படிப்பட்ட இம்சையினாலேயே பாண்டவர்களுக்கு பெரும் சேதத்தையும் கொடுமையான விளைவுகளையும் எதிர்க்க வேண்டியதாயிற்று. இம்மாதிரியான இம்சைகளை தடுத்திருந்தால் மகாபாரதத்தின் பக்கங்களை நிரப்பிய கொடுமையான நிகழ்ச்சிகளை தடுத்திருக்கலாம். திரௌபதி தன் நர்வை அடக்கி இம்மாதிரியான இம்சைக்கொப்பான சொற்களை கூறாமல் இருந்திருந்தால் - குருடனுக்கு பிறந்த குழந்தைகளும் குருடர்களே - என்ற சொற்களை வெளிப்படுத்தாமல் இருந்திருந்தால் ஒருக்கால் மகாபாரதப் போர் நிகழ்ந்திருக்காது!

பாணினீயின் தாதுபாடத்தில் கூறப்பட்ட இம்சை என்ற பொருளைக்கொண்ட சொல் 'ஹிஸி' என்ற வேர்ச்சொல்லிலிருந்து அமைந்தது. இதற்கு பொருந்துவதான வேறொரு சொல்லை பொறுக்கிகொடுப்பதும் இயலாததொன்றாயிற்று. இத்துடன் 'நும்' என்னும் சொல் இணைக்கப்பட வேண்டும். பாணீனீயின் விதிமுறைப்படி 'இதிதோ னும் தாதோ:' (7.1.58) 'ந்' இணைக்கப்பட வேண்டும். இத்துடன் கூட 'க்ருத்' ஒட்டும் 'குரோஸ்ச ஹல:' (3.3.103) என்றும் 'தப்' (அ) பெண்பாலை குறிக்கவும் (அஜாத்யதஸ் தப்), அத்துடன் எதிர்மறை பொருளை உணர்த்தும் 'ந' இதில் 'ந்' மறைந்து 'அ'வே சேர்க்க வேண்டும் (நலோபனஞ:). ஹிம்சை என்பது எந்தவிதமான இம்சையும் அற்றது என்பதை குறிப்பதாயிற்று. இதுவரை இது மனிதனின் பண்புகளில் முதன்மையான இடத்தைப் பெற்றிருந்தது. மனுவினால் நான்கு வருணத்தவருக்கும் பொதுவாகக் கடைப்பிடிக்க வேண்டிய ஐந்து கொள்கைகளில் முதலிடத்தை பெறுகின்றது.

அஹிம்ஸா ஸத்யம் அஸ்தேயம் ஸௌசம் இந்த்ரியனிக்ரஹ: |
ஏதான் ஸாமாஸிகம் தர்மம் சாதுர்வர்ண்யேப்ரவீன்மனு: ||*1

'உயிர்வாழ் பிராணிகளை கொல்வதிலிருந்து முழுவதும் அறவே நீங்கியிருத்தல், வாய்மை (உண்மை பேசுதல்), நேர்மையினின்றும் வழுவாமல், தகாத வழியில் பிறரது பொருட்களை அபகரித்தலை நீக்குதல், தூய்மை, புலனடக்கம் ஆகிய இவைகள் நான்கு வருணத்தவர்களுக்கும் பொதுவாக இருக்கக்கூடிய விதிமுறைகள் என மனு குறிப்பிடுகிறார்'.*2

லிங்க புராணத்தில்,

ஆத்மவத் ஸர்வபூதானாம் ஹிதாயைவ ப்ரவர்தநம் |
அஹிம்ஸைவ ஸமாக்யாதா யா சாத்மஞானஸித்திதா ||*3

என்று 'தன்னைச் சார்ந்தவர்கள் என்ற முழு எண்ணத்துடன் பிறர் நன்மைக்காக தான் முழுமனதுடன் முயற்சி செய்வதில் ஈடுபட்டிருத்தல் இவைகளே ஆன்ம ஞானம். அடைவதற்கான வழி வகுத்திடும்' என்று கூறப்பட்டுள்ளது.

இதுவே சமஸ்கிருத காவியங்களில் அகிம்சையைப் பற்றி ஆக்கப் பூர்வமாக விவரித்துக் கூறப்பட்டுள்ளதாகும். இதில் எதிர்மறையாக ஒன்றும் கூறப்படவில்லை. கொல்லாதே, புண்படுத்தாதே, காயப்படுத்தாதே என்ற எதிர்மறையான கருத்துக்கள் ஒன்றும் கூறப்படவில்லை. தன்னைப்போலவே பிறரை கருத்தில் கொண்டிரு. இதை அனுசரித்துவிட்டால் இம்சையில்லை, அடிபடுவதில்லை, காயப்படுவதில்லை அல்லது புண்படுத்துவதுமில்லை. எவருக்குமே தன்னை துன்பத்திற்கு ஆளாக்கிக்கொள்ள விருப்பமில்லை.

சபரபாஷ்யத்தில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது - 'ந கஸ்யசித் ப்ரதிகூலம் ஆசரதி அஹிம்ஸக:'*4

அகிம்சையை கடைப்பிடிப்பவன் எவரையும் எதிர்த்துச் செல்வ தில்லை. லிங்க புராணத்தில் கொடுக்கப்பட்ட இந்த இலக்கணம் அகிம்சையின் ஆன்மீக பலத்தை ஏற்று உலக வாழ்க்கையில் தினசரி நடப்புகளிலிருந்து உயர்ந்த மேலான அறிவும் ஆன்மபலமும் கொண்ட நிலமைக்கு ஏற்றமடையச்செய்கிறது. இவ்வாறு இருக்குமேயாகில் அகிம்சை எல்லாவற்றையும் தன்னுள் அடக்கி எங்கும் பரந்து வியாபித்ததாகிறது. இதை 'அஹிம்ஸா பரமோ தர்ம:'

என்று உயர்ந்த மேலான சட்ட விதியாக அமைவதில் விந்தை ஒன்றுமில்லையே. *5

இவ்வுலகை நடத்திச்செல்லும் விதிமுறைகள் போலவே இதையும் முனிவர்கள், தவசிகள், முன்னோடிகள், சிந்தனையாளர்கள், ஆன்மீக ஆசான்கள், ஆண்கள், பெண்கள் என எல்லோரும் காலங்காலமாக போற்றுகின்றனர். 'இரண்டுகால் பிராணிகளைக் கொல்லாதீர்கள்'.*6 'ஒரு கொம்புகொண்ட பிராணிகளையும், பசுக்களையும், குதிரை களையும், மனிதர்களையும் கொல்லாதீர்கள்' என்று ஸ்ருதி எடுத்துரைக் கிறது. கொலைசெய்யும் எண்ணமே பகைமை, விரோத உணர்ச்சி யினாலேயே ஏற்படுவதால் ஸ்ருதிகள்*7 இப்படிப்பட்ட உணர்ச்சிகளை அறவே நீக்கிடும்படி கூறுகின்றன. 'எவரும் எனக்கு*8 பகைவனாக இருக்க வேண்டாம்', 'மக்கள் ஒருவருக்கொருவர் பகைமையுணர்வுடன் இருக்க வேண்டாம்*9 என்றும் எடுத்துக்கூறுகின்றன.

'ஒருவரையொருவர் கொல்லாதீர்கள்' என்று சதபத பிராம்மணம்*10 கூறுகிறது.

அகிம்சைக்கான பிறிதொரு இலக்கணம் சமஸ்கிருத காப்பிய நூல்களில் ஒன்றான விஞ்ஞான பிக்ஷுவினால் இயற்றப்பட்ட யோகசாரசங்கிரஹம் என்னும் நூலில் உள்ளது.

கர்மணா மனஸா வாசா ஸர்வபூதேஷு ஸர்வதா |
அக்லேஸஜனனம் ப்ரோக்தா து அஹிம்ஸா பரமர்ஷிபி: |*11

செயல், எண்ணம், சொல் இவைகளினால் எந்நேரத்திலும் எக்காலத் திலும் பிறருக்கு தீங்கிழைக்காமல் இருப்பதே அகிம்சையாகும் என மேலான முனிவர்களால் கூறப்படுகிறது.

யானையின் பாதமானது மற்ற பாதங்களை தன்னுள் அடக்குவதுபோல இது தர்மம், அர்த்தம் எனற எல்லாவற்றையும் தன்னுள் அடக்குகிறது.

ஸர்வாணி ஏவாபிதீயந்தே பதஜாதானி குஞ்ஜரே |
ஏவம் ஸர்வம் அஹிம்ஸாயாம் தர்மார்தம் அபிதீயதே ||*12

ஜீவராசிகளைக் கொல்வதற்கு பிராயச்சித்தமே இல்லை. எப்பேர்ப் பட்ட சக்திவாய்ந்த வேள்விகளினாலும் இந்த பாவத்தை போக்கடிக்க இயலாது. சேற்றினால் சேற்றுநீரை கழுவ இயலாது. மதுபானத்தை மதுபானத்தினால் கழுவ இயலாது என பாகவதம் கூறுகிறது. (பாகவதம்).*13

ஜீவராசிகளை கொல்வதினால் அடையப்படுபவைகளை அறவே நீக்கிவிட வேண்டும். ஏனெனில் அது இவ்வுலகையே அழித்து விடும்.*[14] உலகமென்னும் பாலைவனத்திற்கு அகிம்சையென்பது அமிர்த ஊற்றாகும். 'அஹிம்ஸைவ ஸம்ஸாரமரௌ அம்ருதஸரணி:' *[15]

இது தாயைப்போல் எல்லோரிடமும் சென்றுவிடும். அல்லலெனும் காட்டுத்தீக்கு தாரையாய் மழைபொழியும் மேகக்கூட்டமாகும். இறப்பு, பிறப்பென்னும் சம்சார நோயினால் பீடிக்கப்பட்டவர்களுக்கு மிக உயர்ந்த சக்திவாய்ந்த மருந்தாகும்.*[16]

மாமுனிவர்களோ அகிம்சையே தருமத்தின் வாசற்படியாம் நுழைவாயில் என்கின்றனர். 'அஹிம்ஸா தர்மஸ்ய த்வாரம் உக்தம் மஹர்ஷிபி:' *[17]

தருமத்தின் ஆதாரம் அதுவே 'அஹிம்ஸாலக்ஷணம்'.*[18] அதாவது தருமத்தை அனுசரிப்பவர்கள் 'தார்மிகர்கள்' எனப்படுவார்கள். இல்லாவிடில் அகிம்சையின்றி தருமமேது. எல்லா ஜீவராசிகளும் உயிரையும் ஆன்மாவையும் இணைத்து வைக்கவே முயலுகின்றன. உயிரைவிட மிகவும் பிரியமானது உலகில் வேறு எதுவுமே இல்லை. நற்குணங்களை மேற்கொண்டு, முழு கருணை உள்ளத்துடன் அகிம்சையை மேற்கொண்டு ஜீவராசிகளின் உயிரைக் காக்க அகிம்சையை மேற்கொள்பவனின் நற்குணங்களை இவ்வளவென கணக்கிடுவது இயலாததாகும்.

ப்ராணானாம் பரிரக்ஷணாய ஸததம் ஸர்வா: க்ரியா: ப்ராணினாம் |
ப்ராணிப்யோபி அதிகம் ப்ரியம் ஸமஸ்தஜகதாம் நாஸ்தி ஏவ கிஞ்சித்
ப்ரியம் ||

புண்யம் தஸ்ய ந ஸக்யதே கணயிதும் ய: பூர்ணகாருண்யவான் |
ப்ராணானாம் அபயம் ததாதி ஸுக்ருதீ தேஷாம் அஹிம்ஸாவ்ரத: ||*[19]

பொதுவாக இம்சை செயல்களிலிருந்து நீங்கி ஒதுங்கி இருக்க வேண்டுமென்று கூறினாலும், வேண்டுமென்றே அறிந்துகொண்டே கொலைசெய்வது மிகவும் நிந்திக்க தக்கதாகும். பிராணிகளை ஒரு காரணமுமின்றி கொல்பவன் இறந்த பின்பு அப்பிராணிகளின் உடலில் எவ்வளவு ரோமக்கால்கள் உள்ளனவோ, எவ்வளவு ரோமங்கள் வளர்ந்திருந்தனவோ அவ்வளவு முறை அவன் தானே கொல்லப்படுவான்.

யாவந்தி பஸுரோமாணி தாவத் க்ருத்வா ஹி மரணம் |
வ்ருதா பஸுக்ன: ப்ராப்னோதி ப்ரேத்ய ஜன்மனி ஜன்மனி ||*[20]

எவனொருவன் ஒரு குற்றமுமறியா பிராணியை தன்னிச்சையை பூர்த்தி செய்துகொள்ள கொல்கிறானோ அவன் இவ்வுலகிலும் சரி மறு உலகிலும் சரி ஒருபொழுதும் மகிழ்ச்சியுடன் இருக்கமாட்டான்.

யோஹிம்ஸகானி பூதானி ஹினஸ்தி ஆத்மஸுகேச்சயா |
ஸ ஜீவன்ச ம்ருதஸ்ஸைவ ந க்வசித் ஸுகம் ஏததே ||*21

மேற்கூறப்பட்டுள்ள பாடலில் கூறப்பட்ட இரண்டு சொற்றொடர்களை சிறப்பாக கவனமுடன் புரிந்துகொள்ள வேண்டிய அவசியம் உள்ளன.

'அஹிம்சகானி பூதானி' இம்சை செய்யாத பிராணிகள், மற்றதோ 'ஆத்மசுகேச்சயா' தன் மனசுகத்தின் விருப்பத்திற்காக என்பவைகளாகும். தனக்கு இம்சை செய்யாத பிராணியென்றால் அது நமக்கு தீங்கு செய்யாமலிருக்கும்பொழுதா என்ற கேள்வி எழுகையில் மனு கூறுகிறார், அப்பிராணிகள் மிகவும் கொடிய விலங்குளாக இருந்தாலோ, ஒருவன் அதைக் கொல்லாமல் விட்டுவிட்டால் அது அவனைக் கொன்றுவிடும் என்பது திண்ணம். ஏனெனில் மாமிசம் உண்பது தானே அதன் இயற்கை உணவு.

இக்கருத்துதான் இந்திரன் உருவில் வந்த கழுகானது, புறா உருவில் வந்த அக்னி தேவதை இருவரும் சிபி சக்கரவர்த்தியின் நேர்மையையும் ஜீவகாருண்யத்தையும் பரிட்சை செய்வதற்காக வந்தனர். அப்புறாவோ சிபி மன்னனை புகலடைந்தது. மன்னனும் பாதுகாப்பதாக வாக்குறுதி கொடுக்க, மன்னனை விட்டு அகலவில்லை. கொடிய விலங்குகளை, அவைகள் பதுங்கி பதுங்கி இரையை நோக்கிச் செல்லும் பொழுது கொல்வதும் இன்றியமையாததாக அமைகிறது. கொடிய மிருகங்கள் கிராமத்தில் நுழைந்துவிட்டால் அது ஒரு பாவமும் அறியா அப்பாவி மக்களைக் கொன்று தின்றிடும். அந்நேரத்தில் மக்களின் உயிரைக் காக்க அவைகளை கொன்று வீழ்த்துவதே முறையாகும். இந்த ஹிம்சை, கொடிய செயல்.

கொடிய விலங்கின் கொடிய செயலிலிருந்து மக்களைக் காப்பதற்கு முயல்வது தன் சுயவிருப்பத்திற்காக அல்ல. 'ஆத்மஸுகேச்சயா ந' இது பிராணிகளின் உயிரைக் காப்பாற்றுவதற்காகவேயாகும். இது வாயில்லா அப்பாவி மிருகங்களான பசுக்கள், ஆடுகள், போன்ற பிராணிகளைக் காப்பதற்கே. மன்னர்கள் வேட்டையாட செல்வது முற்றிலும் மாறுபட்டதாகும். மன்னன் கொடியதோ அல்லது சாதாரண மிருகங்களையோ மனக்களிப்பிற்காக வேட்டையாடுகிறான்.

இது அவனுக்கொரு விளையாட்டு. வேட்டையாடுவது கேளிக்கை யாகும். சாதாரணமாக எல்லோரும் விளையாடுவதைப்போல் அவன் தன் மனங்களித்திட விளையாடும் ஒரு விளையாட்டாகும்.

இந்த சந்தர்ப்பங்களில் மனு, கொடிய விலங்குகளை கொல்வதை அனுமதிக்கிறார். இதைப்போலவே ஒரு கொலைகாரனையோ அல்லது தீவிரவாதியையோ தன்னுயிரையே பணயம் வைக்கத் தயாராயுள்ள பயங்கர பகைவனையோ கொல்வதற்கு அனுமதி அளிக்கப்பட்டுள்ளது. அவன் கண்ணில்பட்டதுமே மறு சிந்தனையின்றி அவனைக் கொன்றுவிடவேண்டும். 'ஆததாயினம் ஆயாந்தம் ஹன்யாதவிசாரயன்.'*[22] அது அவனது ஆசிரியனாக இருக்கட்டும், குழந்தையாக இருக்கட்டும், வயது முதிர்ந்தவனாக இருக்கட்டும் அல்லது அந்தணனாகவே இருக்கட்டும்.

'குரும் வா பாலவ்ருதௌ வா ப்ராஹ்மணம் வா நாததாயிவதே தோஷோ ஹன்துர்பவதி கஸ்சன'*[23] அவர்களை கொல்வதில் பாபமேதும் இல்லை என்று கூறுகிறார் விருத்தஹாரீதர். அதே முனிவர் இதற்கு முன்னர் ஒருவன் எவரையும் கொல்லக்கூடாது என்ற ஒரு பொது கட்டளையும் பிறப்பித்துள்ளார். 'ந ஹிம்ஸ்யாத் ஸர்வ பூதானி'.*[24] ஆனால், எந்த ஒரு விதியும் மாறுபட்ட நிலைமைகளில் மாறுபட்ட விலங்குகளுக்கேற்ப மாறியமையும். பகைவர்களின் இம்சை என்பது இம்சையை தடை செய்வதற்காகவே யாகும். அதனால் அதற்கு அனுமதி அளிக்கப்பட்டதேயாகும்.

இதைப்போலவே வேதங்களில் கூறப்பட்ட வேள்விகளுக்காக மறைநூல்களில் கூறியுள்ளபடி மிருகங்களை பலியிடுதல் இம்சை யாகாது. 'வைதிக ஹிம்ஸா ஹிம்ஸா ந பவதி' என்று ஒரு பிரபலமான கூற்று உள்ளது. வேதகர்மாக்களுக்காக பிராணிகளை கொல்லுதல் இம்சை ஆகாது. அதை அகிம்சையாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென மனு கூறுகிறார். ஏனெனில் இந்த தருமம் வேதத்திலிருந்து வெளிப்படுகிறது. உலகை சிருஷ்டி செய்த கடவுள், இந்த மிருகங்களை சிருஷ்டி செய்ததே வேள்விகளில் பலியிடும் பொருட்டேயாகும் என்று தான் கூறியதை ஊர்ஜிதம் செய்கிறார். 'யஞார்தம் பஸவ: ஸ்ருஷ்டா: ஸ்வயமேவஸ்வயம்புவா.*[25]

இவ்விடத்தில் விருத்த கௌதமர் வேறு ஒன்றை கூறுகிறார் 'அஹிம்ஸா வைதிகம் கர்ம'.*[26] அகிம்சை வேதங்களால் ஒப்புக் கொள்ளப்பட்டதே. இம்சை வைதிக கர்மாக்களில் அகிம்சையாகவே கருதப்படுகிறது. வைதிக பணிகளில் இந்த பிராணிகள் முதலில்

புனித நீரினால் நியமிக்கப்பட்ட விதிமுறைகளின்படி புரோக்ஷணம் - நீர் தெளிக்கப்படுகின்றன. மகாபாரதத்தின் அனுசாசன பருவத்தில் இம்சை, அகிம்சை இவைகளைப் பற்றி விவரமாக உரையாடும்பொழுது பேசப்படுகின்றன. பிறகு பலியாகக் கொடுப்பதற்கு முன்னர், அப்பிராணி யூபம் என்னும் கம்பத்தில் கட்டப்படுகிறது. மன்னர்கள் எவ்வளவு குதிரையை பலிகொடுக்கும் அஸ்வமேத யாகத்தையோ, கோமேதாஸ் எனப்படும் பசுக்களை பலிகொடுக்கும் வேள்விகளை செய்கிறார்களோ அதற்கேற்றபடி அவர்களது கீர்த்தியும் புகழும் உயர்ந்து பரவிடும்.

காளிதாசன் அயோத்தி தலைநகரில் பாயும் சரயூ நதிக்கரையில் புதைக்கப்பட்டிருந்த அவர்களது மூதாதையர்கள் அடுத்தடுத்து செய்த வரிவரியாயமைந்த வேள்விகளின் யூபஸ்தம்பங்களைப் பற்றி அழகாக பேசுகிறார். 'யூபா: தீரநிகாதயூபா.'*27 மேலும் ரந்திதேவனால் பலியாகக் கொடுக்கப்பட்ட பல பசுக்களின் ரத்தம் ஆறாகப் பாய்ந்தோடுவதையும் குறிப்பிடுகிறார். 'ஸ்ரோதோமூர்த்யா புவி பரிணதம் ரந்திதேவஸ்ய கீர்திம்.'*28

பெரும்பாலும், கொல்லுதல் பாபச்செயல் என்று கருதப்பட்ட போதிலும், புனிதமானதாகக் கருதப்படுபவைகளை கொல்லுதல் மிகவும் கொடியபாபமாகக் கருதப்படுகின்றன. அந்தணர்களையும், பசுக்களையும் கொல்லவே கூடாது என்று மனு கூறுகிறார். 'ந ஹன்யாத் ப்ரஹ்மணான் காஸ்ச'*29 அந்தணர்கள் சமுதாயத்தில் மிகவும் உயர்ந்தவர்களாய் கருதப்படுகிறார்கள். அவர்களிடம் செய்யப்படும் எந்தவிதமான இம்சையும் வெகுவாகக் கண்டனம் செய்யப்படுகிறது.

வாழ்க்கையில் சில சமயங்களில் நடைபெறும் நிகழ்ச்சிகளை இம்சையா அல்லது அகிம்சையா என்று தீர்மானிப்பது கடினமானதாக அமைகின்றது. மகாத்மா காந்தியடிகள் குஜராத்தின் தெருவில் ஒரு பசுவைக் கண்டார். அதுவோ தாங்கமுடியாத வலியினாலும் வேதனையினாலும் துடித்துக்கொண்டிருந்தது. அதை காண அவருக்கு சகிக்க முடியவில்லை. அவர் அதற்கு விஷம் கொடுத்து அதனுடைய வலியிலிருந்தும் வேதனையிலிருந்தும் விடுதலை அடையச்செய்தார். அப்பசு இறந்துவிட்டது. அமைதியடைந்தது. இரக்கம்காட்டி இறக்கவைத்தல் அகிம்சைக்கு எதிரானது என அகிம்சையை அனுசரிப்பவர்கள் கண்டனம் தெரிவித்தனர். அவர் களுக்கு பதிலளிக்கையில் காந்தியடிகள் தான் ஒருவிதமான இம்சையும் அதற்கு செய்யவில்லை என்று கூறினார். அவரது

எண்ணம் அதைக் கொல்ல வேண்டுமென்பதல்ல. அவர் அப்பசுவை வலியிலிருந்தும் வேதனையிலிருந்தும் விடுவிக்கவேமிக்க கருணை யுடன் அதைச் செய்தார். அது எவ்வளவு நேரம் அந்நிலைமையில் இருந்திருந்தாலும் அது அவ்வளவு நேரமும் வலியிலும் வேதனையிலும் துடித்துக்கொண்டே இருந்திருக்கும். அதனால் அவரது செயல் அகிம்சை செயலேயாகும்.

இதை எழுதும் ஆசிரியருக்கும் இப்படிப்பட்டதொரு இக்கட்டான நிலைமையை எதிர்கொள்ளவேண்டி வந்தது. அந்நேரத்தில் இம்சைக்கும் அகிம்சைக்கும் பிரிவு எங்குள்ளது என்பதை புரிந்து கொள்வதே கடினமாகிவிடுகிறது. இந்நிகழ்ச்சி அவர் பெல்ஜியம் நாட்டில் ல்யூவென் என்னும் நகரில் பணியிலிருந்த சமயத்தில் நடந்தது. அவர் பணியாற்ற வேண்டிய இடத்திற்கு செல்லுகையில் வழியில் நடைபாதையின் மேல் ஒரு பறவை தத்தித்தத்திச் செல்வதைக் கண்டார். அதே நேரத்தில் ஒரு பூனை அதன் மேல் குறிவைத்து உண்பதற்காக பாய்ந்து வேகமாக வருவதைக் கண்டார். அப்பறவையின் மேல் இரக்கம் கொண்டு தன் கையிலிருந்த குடையினால் அப்பூனையை தடுத்து நிறுத்தினார். அப்பறவை பக்கத்திலிருந்த ஒரு புதருக்குள் சென்று மறையும் வரை அங்கேயே நின்றுகொண்டிருந்தார். பிறகு மேலே தொடர்ந்து சென்று தான் போய்ச்சேரவேண்டிய இடத்திற்கு போய்ச் சேர்ந்தார்.

ஆனால் அவரது மனதில் தீவிரமான எண்ணங்கள் அலைமோத அவர் அமைதி இழந்தார். தான் செய்த செயல் சரியா தவறா என்ற எண்ணம் அவரது மனதை அமைதி இழக்கச்செய்தது. இம்சையா அகிம்சையா என்று சிந்திக்கத் தொடங்கினார். ஏனெனில் தனது இயற்கை குணத்தை ஒட்டியே அப்பூனை, பறவையை இரையாக அடைய தொடர்ந்தது. தான் ஒருக்கால் அப்பூனையை பசியுடன் தவிக்கவிட்டோமா என்ற எண்ணம் அவரை மிகவும் மனவேதனை யடையச் செய்தது. எண்ணங்கள் மோதிட அவரது தலை கனத்தது. இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் இம்சையை அகிம்சையாகச் செய்து விடுகின்றன. அவ்வாறே அகிம்சையும் சிலசமயம் இம்சை செயலாகிவிடுகிறது.

உண்மையாகவே அகிம்சையை நன்கு முழுவதுமாக நுகர்ந்து அனுபவிக்க வேண்டுமானால் இம்சைக்கு நேர் விரோதமானதாகும். இது மூன்று தளங்களைக்கொண்டது. 1.ஸம்ரம்ப, 2.ஸமாரம்ப, 3.ஆரம்ப ஆகியவைகளாகும். நமது எல்லா செயல்களுமே முதலில்

மனதில் நிகழ்கின்றன. அங்கே தீர்மானிக்கப்படுகிறது. ஒருவன் செய்யும் எல்லாச் செயல்களிலுமே இதுவே முதற்கண் ஆதாரமாக உள்ளது. இதுவே இம்சை செயலில் ஈடுபடுத்த ஆதாரமாகவுள்ளது. இந்த உத்வேகமே இறுதியில் ஒருவனை இம்சைசெயலில் ஈடுபடுத்து கிறது. இப்படிப்பட்ட கொடிய எண்ணங்களும், உத்வேகமும் இம்சை செய்வதற்கான முதல் தளமாக அமைகிறது. இதுவே 'ஸம்ரம்ப' எனப்படுகிறது.

இவ்வாறு தீர்மானிக்கப்பட்ட எண்ணங்களை செயல்படுத்த உதவும் உபகரணங்கள் கத்தி, கேடயம், துப்பாக்கி, தோட்டாக்கள். இம்சை செயலை செய்ய பயன்படுபவைகள், அவை தாள்நிறுத்தியாகவும் (paperweight) இருந்திடலாம் இவைகளே 'ஸமாரம்ப' எனப்படுகிறது.

'ஸம்ரம்ப', 'ஸமாரம்ப' என்ற இவ்விரண்டும் இணைந்ததே 'ஆரம்ப' என்பது. இது செயலின் துவக்கம் முதல் இறுதிவரை நடக்கும் எல்லா செயல்களையும் தன்னுள் அடக்கிடும்.

இப்பொழுது எழும் கேள்வியோ, இம்சை செயலில் ஈடுபடும் எண்ணம் ஒருவனுக்கு எப்படி ஏற்படுகிறது என்பதேயாகும். நான்குவிதமான தீங்கிழைக்கும் எண்ணங்கள் மனதில் எழுவதாலேயே அதாவது 'குரோத' - சினம்; 'மான' - செருக்கு, அகங்காரம்; 'மாயா' - மாயை; 'லோப' - பேராசை. ஜைன மதப்படி இதைக் கஷாயம் என்று கூறுவார்கள். இவை ஒவ்வொன்றும் மேற்கூறிய மூன்று தளங்களைக்கொள்ள, இம்சை என்பது பனிரெண்டு வகையிலமைகிறது.

இம்சை என்பது மனம் (எண்ணம்), சொல், செயல் 'மனோவக்காய' என முன்கூறிய வண்ணம் செயலில் அமைவதால், இம்மூன்று தளங்களிலிலுமாகச் சேர்ந்து இம்சை என்பது 12 X 3 = 36 என்று முப்பத்தாறு விதமாகிறது. இவை மனம், சொல், செயல் என ஒவ்வொன்றுடனும் சேர்ந்து மூன்று தளங்களில் அமைகிறது.

ஒருவன் அதில் விருப்பப்படுதல், ஒருவரை அதைச் செய்யும்படி தூண்டுதல், அதன் துப்பறிதல் ஆகும். மேற்கூறிய 36 வகையை இம்மூன்றுடன் வகைபடுத்தினால் 108 வகையில் அமைகிறது. அதாவது அகிம்சை என்பது மேற்கூறப்பட்ட 108 இம்சைகளிலிருந்தும் அறவே நீங்கியிருத்தலாகும்.

அகிம்சையைப் பற்றிய உரையாடலை மேலும் தொடர்ந்து விவரித்துக்கொண்டிருக்கும் இச்சந்தர்ப்பத்தில் இம்சை என்பது கொலை செய்வதையோ, காயப்படுத்துவதையோ, சித்திரவதை

செய்வதையோ, அங்கஹீனம் செய்வதையோ மாத்திரமோ குறிப்ப தல்ல என்பதுடன், இது பிறரது மான உணர்ச்சியை பங்கப்படுத்து வதாகவோ, ஒருவரது மன அமைதியையோ அல்லது மனவிருப் பத்தையோ கெடுப்பதாகவோ, ஒருவருக்கு சிறிதும் மனதிற்கிணங்காத செயலில் வற்புறுத்தி செயல்படுத்துவதோகூட இருந்திடலாம். அதுவும் இம்சையேயாகும்.

பொதுவாக ஒரு குழந்தை நுண்கலைகளிலோ, கட்டிடக்கலையிலோ, நகரமைப்பிலோ, திரையரங்கிலோ, மொழிகளிலோ, சமூக அறிவியலிலோ மேற்கொண்டு படிக்க ஆர்வமும் விருப்பமும் கொண்டதாக இருக்கையில் அக்குழந்தையை, பெற்றோர்கள் தங்களது கௌரவத்திற்காகவும், பெருமைக்காகவும் இந்திய ஆட்சிப் பணி தேர்வில் பங்குகொள்ள வற்புறுத்துதல் அவர்களுக்குச் செய்யும் கொடும் இம்சையாகும்.

இக்குழந்தைகளை இவ்வாறு வற்புறுத்துதல் அவர்கள் அத்துறையில் கவனமுடன் படிக்க இயலாததுடன் இணக்கமான துறைகளில் படிக்க வாய்ப்பும் கிடைக்காதவர்களாய் தங்களது தன்னம்பிக்கையை இழந்து அதனால் ஏற்பட்ட வடுவை வாழ்நாட்கள் முழுவதும் மனதில் உருத்திட தங்களது வாழ்க்கையிலேயே மகிழ்ச்சி அறவே களவாடப்பட்டதாக நினைத்து வாழ்க்கையை பாரமானதாகவும் பயனற்றதாகவும் நினைக்கின்றனர். அது அவர்களை மனோதத்துவ ரீதியில் மிகவும் பாதிக்கிறது. இது மனோதத்துவ இம்சையாகும்.

இந்நாட்களில் செய்தித்தாள்களில் இளம் மாணவ, மாணவியர்கள் தற்கொலை செய்துகொள்வதைப் பற்றிய செய்திகள் வெளியாவதை கண்கூடாகப் பார்க்கிறோம் படிக்கிறோம். அதற்குக் காரணம் அவர்கள் தேர்வில் நன்கு எழுதி நல்ல மதிப்பெண்களை எடுக்க இயலாததாலும், அதே நேரத்தில் பெற்றோர்களுடைய சினத்தையும் கடுஞ்சொற்களையும் சக மாணவ மாணவியர்களின் ஏசல்களையும் தாங்க இயலாதவர்களாக இருக்கின்றனர்.

அதேபோல் அரசியல்வாதிகள் மேடையில் ஏறி சொற்பொழி வாற்றுகையில், சிறிதும் கேட்போர்களின் ஆர்வத்தைப்பற்றி கவலை கொள்ளாமல் நீண்ட தவறான சொற்களினால் சுவாரசியமில்லாமல் பேசிக்கொண்டேபோவதும் ஒருவித இம்சையேயாகும். திருமண நிகழ்ச்சிகளில் இரவு 8 மணிக்கு இரவு உணவு பறிமாறுவதாக அறிவித்துவிட்டு நள்ளிரவு வரை வந்தவர்களை காக்கவைப்பதுவும் இம்சையேயாகும். விருந்தாளி ஒருவர் திடீரென முன்னறிவிப்பின்றி

நேரமில்லாத நேரத்தில் வந்து தனக்கு உகந்த மரியாதைகள் செய்யப்படவில்லை என்று குறைகூறுவதும் இம்சையேயாகும். ஒருவரை அலட்சியம் செய்தல், வேண்டுமென்றே ஒதுக்கிவைத்தல், குற்றம் காணுதல், முதலிய உசிதமற்ற செயல்களும் இம்சையே யாகும்.

இவ்வாறு எவ்வளவு எடுத்துக்கூறிடினும் அது மேலெழுந்தவாரியாக பனிக்கட்டியின் மேல் பாகத்தை பற்றிக் கூறுவதாகும். இம்சைக்கு பல உருவங்களும் தோற்றங்களும் உள்ளன. அதை எவ்வளவு தூரம் வேண்டுமானாலும் நீட்டிக்கொண்டே போகலாம். அது ஒருவருடைய மனப்போக்கையும், நடத்தையையும் பொறுத்து இம்சையாக மாறிவிடுகிறது. அதுவே மிகவும் பாதிப்பதாகும். மரணத்தை விளைவிக்கும் மற்ற இம்சைகளைக் காட்டிலும் மோசமான இம்சையாக இருந்திடலாம்.

நமது பொது அனுபவத்தில் நாம் காண்பது என்னவென்றால் வாழ்க்கையில் இம்சையை முழுவதுமாக விலக்குவதென்பது முற்றிலும் இயலாததாகும். ஒவ்வொரு நாளும் ஒவ்வொருவரும் அறிந்தோ அறியாமலோ நூற்றுக்கணக்கான பூச்சி புழுக்களையும் கொன்றுகொண்டுதான் இருக்கிறோம். இதில் பல ஜீவராசிகள் நாம் தெருவில் நடந்து செல்லுகையில் நமது பாதத்தின் அடியில் அகப்பட்டே நசுக்கப்படுகின்றன. நாம் சுவாசிக்கையில் காற்றை உள்ளிழுக்கும் பொழுதும் வெளிவிடும் பொழுதும் பல நுண்ணனு ஜீவராசிகள் உயிரிழக்கின்றன.

நாம் பழங்களையும் காய்கறிகளையும் அரியும்பொழுது கொல்லப் படுகின்றன. அவைகளை கொல்ல வேண்டுமென்ற எண்ணத்துடன் அவை கொல்லப்படுவதில்லை. இது இயற்கையின் போக்காகும். அவை தானாகவே ஒருவர் செய்யும் செயலில் இணைந்துகொள்கின்றன. தனக்கும் தன் குடும்பத்தினருக்கும் அடிப்படை தேவைகளான உணவு, உடை, ஆடை, தங்குமிடம் ஆகியவற்றை பூர்த்தி செய்துகொள்ள ஓரளவு இம்சை ஏற்பது கட்டாயமாகிறது.

செயல்கள் ஒவ்வொன்றாக அதிகரிக்க அதிகரிக்க இம்சையும் அதிகரிக்கிறது. ஒருவன் உறைவிடத்திற்காக மண்ணைத் தோண்ட வேண்டியது இன்றியமையாததாகும். சாப்பாட்டிற்காக உணவை சமைப்பது அவசியமாகிறது. தான் இருக்கும் இடத்தை சுத்தமாக வைத்துக்கொள்ள துடைக்க வேண்டியது அவசியமாகிறது. இந்த செயல்களிலெல்லாம் பல புழு பூச்சிகளெல்லாம் மிகவும் சிறியதாக

இருப்பதால் அவைகள் அங்குள்ளதை அறிந்துகொள்வதுகூட இயலாமல் போகிறது.

மகாபாரதத்தில் கூறியுள்ளபடி 'ஸூக்ஷ்மரூபாணி பூதானி தர்ககம்யானி கானிசித்' என கண்களை மூடித்திறப்பதில்கூட இம்சை ஏற்படலாம். இமைகளை மூடித்திறப்பதிலும் சில நுண்கிருமிகள் நாசத்தை அடையலாம். ஆனால் இவைகள் எல்லாம் தவிர்க்க முடியாதவை. ஆனாலும் ஒருவன் தானாகவோ பிறர் வழியாகவோ தெரிந்து இம்சை செயல்களைச் செய்தல் கூடாது. இதைத்தான் 'ஸங்கல்ப ஹிம்ஸா' என்கிறோம். ஸங்கல்ப என்றால் அறிந்து என்பது பொருளாகும். இங்கும் ஒருவன் மிக எச்சரிக்கையுடன் இருத்தல் வேண்டும். இப்படிப்பட்ட இம்சைகளும் ஓர் உயிரை காப்பதற்கோ அல்லது தாய்நாடு சிறிதும் கருணையின்றி பகைவர்களால் தாக்கப்பட்டாலோ அப்பொழுது அச்செயல்களை மேற்கொள்வது மன்னிக்கத்தகுந்தவைகளே.

இந்தக்காரணம் கொண்டே, ஜைன மதத்தை தீவிரமாக நம்பும் 'கரவெலா' என்பவர் அயல் நாட்டிலிருந்து ஆக்கிரமிப்பதற்காக வந்த 'டெமொட்ரியஸ்' என்பவரை சிந்துவைக் கடந்து செல்லும் வரை துரத்திச்சென்று விரட்டியடித்தார். அப்போரில் இம்சை நடந்தென்பது திண்ணமே. ஆனால் அதுவோ 'விரோதி ஹிம்சை' என்று நூல்களில் கூறப்பட்டுள்ளன. இது தவிர்க்கமுடியாதது. அதனால் அதை எவரும் எதிர்த்தும் நிந்தித்தும் கூறவில்லை.

அகிம்சையை போற்றி பின்பற்றுபவர்கள் இம்சை செய்பவர்களிடம் எந்தவிதமான கெட்ட எண்ணமோ அல்லது பழிவாங்கும் எண்ணத்தையோ கொள்வதில்லை. அவனை தடுப்பதும் துரத்தி ஓடச்செய்வதும் சரியானதே. ஆனால் அதனால் அவனிடம் வெறுப்புக்கொள்வதோ, பழிக்குப்பழி வாங்குவதோ சரியல்ல. மகாத்மா காந்தியடிகள், ஆங்கிலேயர்களின் கைப்பிடியிலிருந்து நம்மை விடுவித்துக்கொள்ள இயக்கங்களை மேற்கொண்டார். ஆனால் அவர்களிடம் பகைமை கொள்ளவோ வெறுக்கவோ கூறியதில்லை.

அவர் ஆங்கிலேய ஆதிக்கத்திலிருந்து அன்புடனும் நட்புடனேயே நமக்கு நாட்டை மீட்டுக் கொடுத்தார். அதுவே உண்மையான அகிம்சையாகும். இதுவே மிக்க கொடுமையிலும் கொடுமையான எதிரியின் மனத்தை மாற்றி நல்வழிபடுத்திடும். இவ்வழியே எங்கும் எப்பொழுதும் தீவிரமாக பின்பற்றுதல் வேண்டும்.

யோகதர்சனம் எடுத்துக்கூறும் இனம், காலம், இடம் இவைகளைக் கடந்த 'யம'ங்களில் 'ஜாதிதேஸகாலஸமயானவச்சின்ன'*30 ஐந்து பொதுவான விதிகளில் அகிம்சை முதலாவதாகும். இது தெய்வீகமான செல்வம் எனப்படும் 'தைவீ ஸம்பத்'*31 என்று கூறப்படுபவைகளிலும் அகிம்சை முதலிடத்தை பெறுகிறது என்று பகவத்கீதை கூறுகிறது.

'அகிம்சையை நன்கு முழுவதுமாக கடைப்பிடிப்போமாகில் பகைமை தானே அடியோடு நீங்கிவிடும்' என்கிறது யோகசூத்திரம். 'அஹிம்ஸாப்ரதிஷ்டாயாம். ... ...வைரத்யாக:'*32 இத்துடன் என்றும் எப்பொழுதும் பகைமையில்லை. 'அஹிம்ஸா ஸர்வதா ஸர்வதா ஸர்வபூதாநாம் அனபித்ரோஹ:' *33

பகைமை அகன்றிடின் எங்கும் அன்பு பெருகிடும். ஏனெனில் அகிம்சையை கடைப்பிடிப்போர் யாவரும் எல்லா ஜீவராசிகளையும், எல்லா பொருட்களையும் அன்பும் நட்பும் கலந்த கண்ணோட்டத்துடன் பார்க்கத் துவங்கிடுவர்.*34

## மேற்கோள்கள்


*1. *10.63*

*2. *Translation by G.Buhler, Sacred Books of The East, Motilal Banarasidass, Delhi, 1993.*

*3 *8.11*

*4 *K.U.6.32*

*5 *Mahabharata Anusaasanaparvan 116.38*

*6 *Vajasaneyasamhita 13.47*

*7 *ibid*

*8 *ma no dviksata kascana, rgveda 12.1.18*

*9 *ma no marta abhidRuhan ibid 1.5.10*

*10 *nanyonyam himsyavatam 3.4.1.24*

*11 *P.36*

*12 *yogasutra of Vijnanabhikshu 2.30*

*13 *1.8.52*

*14 *Yuktidipika 50*

*15 *Yogasutra 2.50*

*16 *Yogasastra 2.51.2*

*17 *Brahma-purana Purvardha 30 - 35*

*18 *Prabhandhacintamani p.42*

*19 *caturvargasangraha 1.13*

*20 *Manusmrti* 5.38

*21 *ibid* 5.45

*22 *ibid* 8.350

*23 *ibid* 8.351

*24 *Vruddhagautamasmrti* 5.74

*25 *Manusmrti* 5.39

*26 *ibid* 4.162

*27 *Raghuvamsa* 13.61

*28 *Purvamegha* 49

*29 *Manusmrti* 4.162

*30 2.30

*31 *Bhagavadgita* XVI 2

*32 *Yogasutra* 2.3.5.

*33 *Vyasabhashya under Yogasutra* 2.30

*34 *Mitrasya ma caksusa sarvani bhutani samiksantam. Vajasaneyisamhita* 36.18

# 2

# ஸத்யம்

## வாய்மை

இந்தியப் பாரம்பரியம், பண்டைகாலம் முதற்கொண்டே 'ஸத்ய' எனப்படும் வாய்மையை வற்புறுத்தி கூறுகிறது. குருகுலத்தில் அந்நாட்களில் தங்களது வேதக் கல்வியை முடித்துவிட்டு மாணாக்கர்கள், கிருஹஸ்த ஆசிரமத்தின் கடமைகளை ஏற்பதற்காக தங்களது வீட்டிற்குச் செல்வதற்குமுன், ஆசான்கள் அவர்களுக்கு பிரிவு உபசார அறிவுரை கொடுப்பது வழக்கம். தைதரீய உபநிஷத்தில் அதற்கொரு முன்மாதிரி கொடுக்கப்பட்டுள்ளது. தற்காலத்தில் நாம் பட்டமளிப்பு விழா என்றழைப்பதை நமக்கு முதன்முதலில் கிடைக்கும் வேதகால பட்டமளிப்பென்று இதைக் கூறிடலாம்.

இதில் முதன்முதலாக வற்புறுத்தி கொடுக்கப்படும் அறிவுரை வாய்மையை கடைப்பிடி, சத்தியத்தை கடைப்பிடி என்பதே ஆகும். 'ஸத்யம் வத'*[1] - அவரது அவ்வறிவுரையைத் தொடர்ந்து எதை ஒருவன் அலட்சியப்படுத்தக்கூடாது என்பதையும் ஆசான் அந்நேரத்தில் எடுத்துரைக்கிறார். 'ஸத்யான் ன ப்ரமதிதவ்யம்*[2] - வாய்மையை புறக்கணிக்கக் கூடாது. உபநிடதங்களைக் கூறிய மகான்கள் துறவிகள் வாய்மையை கடைப்பிடிப்பதென்பது எவ்வளவு கடினமானதென்பதை நன்கு அறிந்திருந்தனர்.

தங்கத்தின் பிரகாசமான பொலிவைக் காண்பவர்கள், அதனால் எப்படி கவராமல் இருக்கமுடியும்? அதைவிட்டு கண் செல்வதென்பது இயலாததென்றே கூற வேண்டும். 'ஹிரண்மயேன பாத்ரேண ஸத்யஸ்யாபிஹிதம் முகம்'*[3] - வாய்மையின் முகமானது பொன்னால் ஆன மூடியினால் மூடப்பட்டுள்ளது.*[4] அவர்கள் கடவுளிடம் அக்குடத்தை திறந்து வைக்கும்படி பிரார்த்திக்கின்றனர். ஏனெனில்

வாய்மையை விரும்புபவர் அதை கண்டிடலாமன்றோ. 'தன்மே பூஷண் அபாவ்ருணு ஸத்யதர்மாய த்ருஷ்டயே'*5

வாஜஸனேய சம்ஹிதை வாய்மையே வெல்லும் என்று கூறுகிறது. 'ஸத்யமேவ ஜயதே'*6 வாய்மை வழி பின்பற்றுவதாலேயே தெய்வீகத்தன்மை வெளிப்படுகிறது. 'ஸத்யேன பந்தா விததோ தேவயான:'*7 யாஞ்யவல்கிய ஸ்ம்ருதியில்*8, அறநெறியுடன் மதக்கோட்பாடுகளை அனுசரிக்கையில் நாம் கட்டாயமாகவும் இடைவிடாமலும் கடைப்பிடிக்க வேண்டிய பத்து யமங்களில் வாய்மையை சேர்த்துள்ளார். மனுவும் 'யமான் ஸேவேத ஸததம்'*9 என்று கூறுகிறார்.

ராமாயணத்தின் ஒரு சுலோகத்தில் வாய்மையைக் கடைப்பிடிப்பது ஆயிரம் அசுவமேத வேள்விகளை காத்தலுக்கு இணையானது என்கிறார் வியாசர்.

அஸ்வமேதஸஹஸ்ரம் ச ஸத்யம் ச துலயாத்ருதம் |
அஸ்வமேதஸஹஸ்ராத்தி ஸத்யம் ஏவ விஸிஷ்யதே ||*10

'ஒரு தராசின் ஒரு தட்டில் ஓராயிரம் அசுவமேத வேள்விகளையும் மறுபக்கம் வாய்மையையும் வைத்தால் வாய்மையே ஆயிரம் அசுவமேத வேள்விகளைக் காட்டிலும் அதிக எடையுள்ளதாக இருக்கும்.' அசுவமேத யாகமோ நமது மறை நூல்களில் 'வேள்வி களின் மன்னன்' 'க்ரதுராட்' என மிகவும் உயர்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது. 'ஸர்வபாபப்ரணோதன:' என்று பாபங்களை யெல்லாம் அழிக்கவல்லது என்றும் கூறப்பட்டுள்ளது. ஒரு அசுவமேத வேள்விக்கே இவ்வளவு சக்தியிருக்குமாகில் ஓராயிரம் அசுவமேத வேள்விகளை செய்வதனால் ஏற்படும் சக்தியைப் பற்றியோ பலனைப் பற்றியோ என்ன கூறுவது? வாய்மையோ இந்த நூறு அசுவமேதங்களுக்கும் மேலானதாகும்.

இச்சுலோகம் ராமாயணத்தில் எழுதப்பட்டுள்ளதே என்று வியப்படைய ஒன்றுமேயில்லை. அந்நூலோ வாய்மையைக் கடைப்பிடிப்பதற்கென்றே அமைந்ததாகும். தசரதன் கைகேயிக்கு இரண்டு வரங்கள் கொடுப்பதாக வாக்கு கொடுத்திருந்தான். அவளோ இக்கட்டான நேரத்தில் அதாவது ராமனுக்கு முடிசூட்டுவதாக வாக்குகொடுத்த பின்னர் அவ்வரங்களை கொடுக்கும்படி கூறினாள். இவ்விரண்டு வரங்களில் ஒன்றோ ராமனுக்கு பதிலாக பரதன் முடிசூட்டிக்கொள்ள வேண்டும், மற்றொரு வரத்தினால் ராமன்

பதினான்கு வருடங்கள் காட்டுக்குச் செல்ல வேண்டும் என்பதாகும். அவளுக்கு இரு வரங்கள் கொடுப்பதாக வாக்கு கொடுத்தபோதிலும் அதை அவள் கேட்கும் அத்தருணத்தில் கொடுக்க மனம் இசைய வில்லை. ராமனின் முகத்தை ஏறெடுத்துப் பார்க்கவும் இயலவில்லை.

அவன் வாய்திறந்து எதுவுமே கூறவில்லை. 'அனுக்தோபி அத்ரபவதா''*11. அவர் வாய் பேசாமல் இருந்தார் இருந்தபோதிலும் கைகேயி தான் அவனுக்கு எல்லாம் எடுத்துரைத்தாள். அங்கு நடந்த சூக்ஷ்மமான விஷயங்களைப் புரிந்துகொள்ள ராமனுக்கு அதிக நேரம் எடுக்கவில்லை. நொடியில் தன் தகப்பனார் கொடுத்த வார்த்தைகளை உணர்ந்து அவரது சத்தியத்தை காக்க மனதில் தீர்மானம் செய்துவிட்டார். அதையே கைகேயி ராமனிடம் எடுத்துக் கூறுகிறாள்.

'ஸத்யேன மஹதா ராம தாரயஸ்வ நரேஸ்வரம்'*12. அவன் தானே ராஜ்ஜியத்தைத் துறந்துவிட்டு காட்டிற்குச் செல்வதற்கு தயாராகிவிட்டான். இவ்வாறெல்லாம் செய்யும்படி அவனுடைய தந்தையார் கூறவேயில்லை. இருந்தாலும் ராமனிடம் எந்தவிதமான கீழ்ப்படியாமையும் ஏற்படவேயில்லை. இன்னும் கூறப்போனால் ராமன் தன் தாய் கௌசல்யையும் லக்ஷ்மணனும் எடுத்துக்கூறிய வேண்டுகோள்களை முழுவதுமாக ஆக்ஷேபித்து தனது முடிவை ஏற்றார்.

கௌசல்யையோ, தாயே எல்லோரைக் காட்டிலும் உயர்ந்தவள். தந்தையைக் காட்டிலும்கூட உயர்ந்தவளாக இருப்பதால் கைகேயி யின் வார்த்தைகளுக்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கவேண்டிய அவசியம் இல்லை என்று கூறினாள். ஆனால் ராமனோ தன் தந்தை இருவரங்கள் கொடுப்பதாக வாக்கு கொடுத்திருக்கிறார். அதனால் அவர் அவ்வாக்கை மீறாமலிருப்பது இன்றியமையாதது. இல்லாவிடில் அவர் சத்தியத்தை காப்பாற்றியவராக இருக்கமாட்டார். அந்த களங்கம் தந்தையைச் சேர, தான் அதற்குக் காரணமாக இருக்க அவர் விரும்பவில்லை. வாய்மையை நிலைநிறுத்த வேண்டும். வால்மீகி முனிவர் கேட்ட கேள்விகளுக்கு நாரத முனிவர் பதில் அளிக்கையில் வாய்மைய்யைப் பொறுத்தவரையில் அவர் பிறிதொரு தருமராசன் என்று விவரிக்கப்பட்டார்.

வாய்மையைக் காட்டிலும் மேலானதொரு தவமோ விரதமோ இல்லை. 'நாஸ்தி ஸத்யாத் பரம் தப: *13' என்று சாணக்கியர் கூறுகிறார். இதை .பிரசாரம் செய்வது சுலபமானது ஆனால்

கடைப்பிடிப்பதோ மிகவும் கடினமானது. தருமதேவதையின் அவதாரமாகக் கருதப்பட்டு தருமத்தையும் சத்தியத்தையும் சிறிதும் பிறழாமல் காத்தும் வந்த யுதிஷ்டிரரும் சத்தியத்தைக் கடைப்பிடிப்பதில் ஒரு சமயம் 'அஸ்வத்தாமா ஹதொ நரோ வா குஞ்ஜரோ வா' என்று அசுவத்தாமன் என்ற பெயர் கொண்ட மனிதனோ யானையோ கொல்லப்பட்டதென்று ஐயமேற்படும் இருபொருள் கொண்ட சொற்களைக் கூறினார். அதனாலேயே அவரது ரதமானது பூமியை தொட்டுவிட்டது இல்லாவிடில் ஐந்து விரலிடைவெளியில் மேலே இருந்திருக்கும்.

வாய்மையென்பது தெளிவானது என்பதுமாத்திரமின்றி சில நேரங்களில் பொய்யற்ற வாய்மையானது மானுடனுக்கு மேம்பட்ட சக்திபடைத்ததாக அமைகிறது. மகாத்மா காந்தியடிகள் எப்பொழுதும் வாய்மையையே கடைப்பிடிக்க வேண்டுமென்னும் கொள்கையை பின்பற்றியதால் அவரது குறிக்கோள்களை அடைவதில் பல சிக்கலான பிரச்னைகளை எதிர்கொள்ளவேண்டி இருந்தது. இரண்டும் கெட்ட தீர்க்க இயலாதநிலைகளில் அவர் சத்தியத்தை பரிசோதித்தார். ஆனால் அதை பிரசாரம் செய்திடவோ அதையே சார்ந்திருப்பதற்கோ இணங்கவில்லை.

வாய்மை என்பது ஒரு கருத்தாக்கம் (*concept*). அதை வற்புறுத்தி செயல்படுத்த வேண்டும், கற்றுக்கொடுக்க வேண்டும். ஆனால் பொய்யுரைப்பதோ தூண்டுதலின்றி தானே வெளிவருவதாகும். பொய்யைக் கண்டுபிடிப்பதற்கான ஒரு இயந்திரத்தை 'பொய்காண்' இயந்திரம் என்று ஒன்றை அமைத்துக்கொள்ளலாம் ஆனால் வாய்மையை கண்டெடுக்கும் ஓர் இயந்திரத்தை 'வாய்மை காண்' இயந்திரத்தை அமைக்க இயலாது.

வாய்மைக்கும் பொய்மைக்கும் ஒன்றுக்கொன்று பிரித்தறிவதில் உள்ள சிக்கலினாலேயே நமது குருமார்களும் ஆசான்களும் மனிதனின் வாழ்க்கையில் சில பொய்களுக்கும் இடம் கொடுத்துள்ளனர். உலகியல் நடவடிக்கைகளில் பொய்யையும் வாய்மையையும் கலந்தே கடைப்பிடிக்கும்படியும் கூறியுள்ளனர். 'ஸத்யான்ருதஸப்தெள மிதுனீக்ருத்ய நைஸர்கிகோயம் லோகவ்யவஹார:' *14

சுக்கிரன், மன்னன் பலியின் குரு. திருமாலின் நான்காவது அவதாரமான வாமனனிடமிருந்து எச்சரிக்கையாகவே இருக்கும்படி கூறினார். சிறிது மறைந்து ஒளிந்திருந்து அவன் வருகையில் இப்பொழுது அணுகுவது இயலாததென்று கூறிவிடும்படி கூறினார்.

ஆனால் பெருந்தன்மைகொண்டவனும் பொய் பேசாதவனுமான மன்னன் 'இல்லை' என்று பதிலளித்துவிட்டு சுக்கிராசாரியரிடம்,

'ந நர்மயுக்தம் வசனம் ஹினஸ்தி
ந ஸ்த்ரீஷு ராஜன் ந விவாஹகாலே
ப்ராணாத்யயே ஸர்வதனாபஹாரே
பஞ்சான்ருதான்யாஹு: அபாதகானி'' ||*15

'உண்மையற்ற சொற்களை பரிகாசமாக நகைச்சுவையுடன் கூறுவது ஒரு கெடுதலும் இழைக்காது. பெண்களிடம் கூடிக்களிக்கும் பொழுதும், திருமணம் நடத்துகையிலும், உயிருக்கு விபத்து ஏற்படுகையிலும், ஒருவனிடமுள்ள செல்வம் முழுவதையும் இழக்கும்படி நேரும் சமயமும் ஆக இந்த ஐந்து வகையான பொய்களும் பாபத்தை ஏற்படுத்தாது.'

இவ்வாறெல்லாம் இருந்தபோதிலும் மறைநூல்களோ வாய்மையை கடைப்பிடித்தலே நல்ல குறிக்கோளாகும் என்கின்றன. தருமத்தின் இரண்டாவது இலக்கணம் வாய்மையே என்று மனு கூறுகிறார். 'அஹிம்ஸா ஸத்யம் அஸ்தேயம்... தஸகம் தர்மலக்ஷணம்''*16 அசோகரும் தருமத்தின் லக்ஷணத்தில் இதை இணைத்துள்ளார். தில்லியிலுள்ள தோப்ரா பில்லர் எடிக்ட் ||-ல், கேள்வி ஒன்றிற்கு பதிலளிக்கையில் 'கியம் சு தன்ம்மேதி?' 'தருமம் என்றால் என்ன?' என்று கேட்டதற்கு அவரது பதிலோ - தம்மா அல்லது தருமம் என்பது 'பஹுகயானே தயா தானே ஸசே ஸிசயே ஸாதவே மாதவே, அபாஸ்நத: ஸத்யம் ஸௌசம் ஸாதுதா மார்தவம்' கருணை, கொடை, வாய்மை, சுத்தம், இரக்கம், தயை, மென்மை இவைகளாகும் என்று கூறுகிறார்.

தொன்றுதொட்டு பாரம்பரியமாக வந்த நீண்ட இந்திய வரலாற்றில் நிகழ்ந்துள்ள சத்தியத்தன்மையை கடைப்பிடிக்கும் நிகழ்ச்சி ஈடு இணையற்றதாக அமைந்துள்ளது. அரசன் அரிச்சந்திரன் வாய்மையை கடைப்பிடிப்பதில் மிகவும் ஈடுபட்டவனாக இருக்கையில் எக்காலத்திலும் வாய்மையை விடாமல் கடைப்பிடிக்கிறானா என விசுவாமித்திர முனிவரால் செய்யப்பட்ட கடுமையான எல்லா சோதனைகளையும் தாங்குகின்றவனாய் தன் வார்த்தைகளை விட்டகலாமல் காத்து நின்றான். மன்னன் தன்னரசை இழக்க வேண்டியாயிற்று. தன் மனைவியையும் மகனையும்கூட விற்க வேண்டிய நிலை ஏற்பட்டது. ஏன், தன்னயே விற்கும் நிலையும் ஏற்பட்டது. ஆனாலும் வாய்மையைக் கடைப்பிடிப்பதென்ற தன் வாக்குறுதியிலிருந்து எள்ளளவும் நழுவவில்லை. அதனாலேயே

அவனுக்கு சத்தியவாதி என்னும் மறுபெயர் அமைந்தது. 'சத்யவாதீ ஹரிஸ்சந்த்ர'.

இந்திய மரபில், வாய்மைக்கு மிகவும் உயர்ந்த இடம் கொடுக்கப்பட்டுள்ளது. வாய்மை நமது தொன்றுதொட்டு இருப்ப வைகளும் ஆன்மீக நூல்களான என்றும் அழியா வேதங்களுக்கு இணையாக பேசப்படுகின்றன. 'ஸத்யமேவ அக்ஷயா வேதா:'*[17] சத்யமே பிரும்மன் என்றும் அழைக்கப்படுகிறது. 'ஸத்யம் ஏகபதம் ப்ரும்ஹ' ராமாயணமோ சத்தியமும் பிரம்மமும் ஒரு பொருள் குறிக்கும் சொல் என்கிறது.*[18] இதை நாம் அறிந்துகொண்டு விட்டோமானால் அந்த முனிவர் கூறுகிறார் - 'இதமஹம் அன்ருதாத் ஸத்யம் உபைமி'*[19]. நான் அசத்தியத்திலிருந்து சத்தியத்திற்கு செல்கிறேன். உலகிலுள்ள யாவையுமே உண்மையற்றது: அதுவே உண்மையானது என்றுமிருப்பது, யாவும் அறிந்தது, தானே இருப்பது, மிகவும் உயர்ந்தது, மேலானது உண்மை.

'ஸத்யம் பரம்' மாயையைக் கடந்தது. 'நிரஸ்த குஹகம்'. அதையே நாம் எல்லோரும் வணங்குகிறோம். தீமஹி*[20]. வாய்மையே எல்லோருக்கும் பொதுவானது. கடந்தகாலத்திலும் உண்மையானது, நிகழ்காலத்திலும் உண்மையானது. வருங்காலத்திலும் உண்மையானது. 'ஸீ பீ சச், வொஹ் ஹை பி சச், வொ ஹொஸிபீ சச்' என்று நானக் கூறுகிறார். இறுதியில் பார்க்கப்போனால் வாய்மையும் கடவுளும் பிரிக்கமுடியாத ஒரே பொருளாகும். வாய்மையே கடவுள், கடவுளே வாய்மையாகும்.

அசோகர் மீண்டும் மீண்டும் வாய்மையை வற்புறுத்தி கடைப்பிடிக்க வேண்டுமென்று எடுத்துக்கூறிய பிறகு வாய்மை என்றால் என்ன என்று கூறியதுபோல் இதர பழைய பல சிந்தனையாளர்களும், அறிவாளிகளும் வாய்மை என்றால் என்ன என்பதைப் பற்றி கேள்விகளை எழுப்பியுள்ளனர். கேனோபனிஷத் வாய்மை என்றால் என்ன என்ற கேள்விக்கு பதிலுரைக்கையில் சொல், செயல், சிந்தனை மூன்றினாலும் மறுத்து திருத்தியமைக்காமையே, ஏமாற்றாமல் எடுத்துரைத்தலே வாய்மையாகும் என்கிறது. 'ஸத்யம் அமாயிதா, அகௌடில்யம் வாங்மனஃ காயானாம்'*[21] 'அமாயிதா' என்ற சொல்லுக்கு பொதுவாக நேர்மையான, செயற்கைதனமற்ற சொல், செயல், சிந்தனை என்ற மூன்றிலும் இருத்தலாகும்.

பேச்சில் செயற்கைதனம் என்றால் பேசும்பொழுதே தான் உபயோகித்த சொற்களினால் இரண்டிற்கும் மேற்பட்ட விரோதமான

கருத்துகளை வெளிப்படுத்துவதாகும். இது ஒரு சிறந்த கலையாகக் கருதப்படுகிறது. சொற்களை திருப்பியமைத்து, சொற்கள்ள திருத்தியமைத்து பல பொருட்களை உணர்த்தும்படியும் செய்வதாகும். அதன்படி ஒருவர் சொல்லியதை மறுத்து சொல்லாததுபோலாக்கி வேறொரு கருத்தை வெளிப்படுத்துவதுபோல் சொற்களை அமைப்பதாகும். தான் கூறியதில் இருக்கும் பொருளை இல்லையென கூறிடுவர். இதைத்தான் சாமர்த்தியம் என்றிடுவர். பேசுவது என்பது தன் மனதில் ஏற்படும் உணர்வுகளை வெளிப்படுத்துவதால் மனதில் உள்ள எண்ணமே ஆகும்.

பேசும் அச்சொற்களை திருத்தி திருப்பி அமைத்தல் என்பது அம்மனதின் எண்ணத்தை வெளிப்படுத்துவது தானே. உடலோ மனது கூறுவதைத்தானே செயலில் செய்து காட்டுகிறது. சொல், செயல், சிந்தனை ஆகிய மூன்றிலும் திருத்தி அமைத்தல் இல்லாம லிருப்பவர்கள் 'அமாயின்' எனப்படுவர். அப்படிப்பட்டவர்களிடமிருந்து வெளிவருவது 'அமாயிதா' 'மாற்றியமைக்காதது'..... அல்லது இருப்பதே, உள்ளதே ஆகும். இதுவே 'யாதார்த்யதா' வாய்மை என்ப்படும்.

'ப்ரஸ்தாவதரங்கிணி' ஒரு பழம்பெரும் கூற்றை வெளிப்படுத்துகிறது. அதன்படி வாய்மை என்பது சொல்லும் சிந்தனையும் ஒன்றியிருப்ப தாகும். 'யதார்த்தே வாங்மனஸே ஸத்யம்'*22. பொதுவாகவே நாம் ஒன்றைக் கூற முற்படுகையில் மனதில் நினைப்பதை அப்படியே வெளிப்படுத்துவதில்லை. அதற்கு நேர்மாறான கருத்தை வெளிப்படுத்திடுவோம். அவ்வாறு நாம் கூறுவது வாய்மை என்பதாகாது.

நள்ளிரவில், நாம் படுக்கத் தயாராக உள்ள நேரத்திலோ, அல்லது அயர்ந்து உறங்கிக்கொண்டிருக்கும் நேரமோ ஒருவர் வந்து வாசலில் மணியை ஓசைப்படுத்திடின் நமது உறக்கத்தை கெடுத்துவிட்டதாக நினைத்து அவருக்கு சாபம் கொடுத்திடுவோம். ஆனால் கதவைத் திறந்ததும் ஒரு ஆப்த நண்பனையோ, மிகவும் நம் அன்பிற்கு பாத்திரமானவரோ அல்லது வெகு நாட்களுக்குப் பின்னர் திடீரென வந்திருக்கும் ஒரு நெருங்கிய நண்பரையோ கண்டுவிட்டால் உடனே முகத்தில் ஒரு பெரிய புன்னகையுடன் தான் மிகவும் மகிழ்ச்சியுடன் இருப்பதாகவும் வந்த அவர்களை வரவேற்க ஒரரிய வாய்ப்பு கிடைத்ததை கண்டு பெரும் பாக்கியமாக கருதுவதாகவும் வெளியில் காட்டிக்கொள்வோம். இது உண்மையில் வாய்மையாகாது. அந்நேரத்தில் நமது மனதில் நினைத்த எண்ணமும் நாம் வாயினால்

கூறிடும் சொற்களும் ஒருமைப்பாட்டைக் கொண்டதல்ல. எப்பொழுது இரண்டும் ஒன்றியிருக்குமோ அதுவே சத்தியம் வாய்மையாகும்.

நாம் வாய்மை என்பதன் அளவையும் தரத்தையும் மாற்றியமைக்க முற்பட்டுவிட்டோம். அதனாலேயே எப்பொழுதும் அது ஒருபோல் இருப்பதில்லை. 'இது உண்மையே. இது முற்றிலும் உண்மையே', 'இது உண்மையைத் தவிர வேறெதுவுமில்லை' இப்படி இதுபோன்ற பல கருத்துக்களை வெளிப்படுத்துகிறோம். 'இது உண்மையை விட்டு முற்றிலும் அகலவில்லை', 'இது உண்மையே ஆனால் முற்றிலும் உண்மையல்லாமலில்லை', 'இது முழு உண்மை' என்றெல்லாம் கூறி வாய்மையை வாய்மை அற்றதில் இருந்து காக்க முற்படுகிறோம். இது தொன்றுதொட்டு நமக்கிருக்கும் வாய்மைக்கும் வாய்மை அற்றதற்கும் உள்ள முரண்பாட்டை உணர இயலாமையை குறிக்கிறது.

லிங்க புராணத்தின்படி நாம் கண்டதையும், கேட்டதையும், அறிந்துகொண்டதையும் அல்லது அனுபவித்ததையும், ஜீவராசிகளுக்கு தீங்கிழைக்காமல் இருக்குமேயானால் அதை சிறிதும் பிறழாமல் அப்படியே எடுத்துரைப்பதே சத்தியம் எனப்படுகிறது.

த்ருஷ்டம் ஸ்ருதம் சானுமிதம் ஸ்வானுபூதம் யதார்த்தத: |
கதனம் ஸத்யம் இதி உக்தம் ப்ராணிபீடாவிவர்ஜனம் ||*23

மேலே கூறியவண்ணம் 'ப்ராணிபீடாவிவர்ஜனம்' 'ஜீவராசிகளுக்குத் தீங்கிழைக்காமல்' என்று வாய்மையைப் பற்றி கூறுகையில் இக்கூற்று இந்தியப் பாரம்பரியத்தில் மிகவும் கவனம் கொள்ள வேண்டிய ஒன்றாகும். இது நடந்ததை அப்படியே எடுத்துரைப்பது என்பதைப் பற்றியது மாத்திரமல்ல. ஜீவராசிகளுக்கு துன்பம் விளைவிப்பதாக இருக்கக்கூடாது என்பதாகும். வாய்மையற்ற ஒரு கூற்று ஒரு அப்பாவியான ஜீவனைக் காக்குமேயாகில் அது வாய்மையேயாகும், உண்மையேயாகும்.

பத்மபுராணம் கூறுவதாவது - வாய்மையற்ற கூற்றொன்று ஒரு ஜீவன் உயிரைக் காக்குமேயாகில் அது உண்மையில் வாய்மையாகும். அப்படி செய்யாவிடில் அது உண்மையாகவே வாய்மையற்றதாகும்.

உக்த்வான்ருதம் பவேத்யத்ர ப்ராணினாம் ப்ராணரக்ஷணம் |
அந்ருதம் தத்ர ஸத்யம் ஸத்யமபி அன்ருதம் பவேத் ||*24

இதேகருத்து 'யோகஸூத்திரத்திலும்'*25 கூறப்படுகிறது. 'லாடஸம்ஹிதை'யிலும் இது கூறப்பட்டுள்ளது.

இச்சூழலில் எழும் கேள்வி என்ன என்றால் இதை இன்னமும் நாம் விடாப்பிடியாக ஏற்கவேண்டுமா? கொள்ளைக்காரனிடமோ அல்லது கொலைகாரனிடமோ நாம் மறைத்து வைத்திருக்கும் ஒரு அப்பாவி மனிதனைப் பற்றிய தகவலைத் தெரிவிக்க வேண்டுமா? அதனால் அவனைக் கொல்லவோ அல்லது அவனிடமுள்ளதை திருடிக்கொண்டோ செல்ல முடியும். இது வாய்மையாகுமா?

இப்படிப்பட்ட சூழல்களில் தான் நம்முன்னோர்கள் மேலான சிந்தனையாளர்கள், நன்கு யோசித்து அதிலுள்ள நுணுக்கங்களை எல்லாம் ஆழமாக சிந்தித்து அச்சூழல்களில் வாய்மையற்றவைகளை எடுத்துரைப்பதில் தவறொன்றுமில்லை என்று கூறியிருக்கிறார்கள். மகாபாரதத்தைப்போன்ற நூல்கள் இம்மாதிரியான சூழல்களில் வாய்மையைக் கடைப்பிடிக்கும் முறைகளை விளக்கமாகக் கூற முயற்சிசெய்துள்ளன. நன்கு பளிச்சென தெளிவாகத் தெரியும் வகையில் வாய்மையை எங்கெல்லாம் எடுத்துரைக்கக்கூடாது, எங்கெல்லாம் வாய்மையை எடுத்துரைக்க வேண்டும். எங்கு வாய்மை வாய்மையற்றதாக அமையும், வாய்மையற்றவை வாய்மையாக மாறிடும் என்பதைக் கூறுகின்றன.

பவேத் ஸத்யம் அவக்தவ்யம் வக்தவ்யம் அன்ருதம் பவேத் |
தத்ரான்ருதம் பவேத் ஸத்யம் ஸத்யம் சாபி அன்ருதம் பவேத் ||*26

'வாய்மையை உரைப்பது அத்தியாவசியமானால், எல்லாவற்றையும் நன்கு தெளிவாக அறிந்துகொள்ள வேண்டும். வாய்மை பிறருக்கு கெடுதல் விளைவிப்பதாக இருக்கக்கூடாது என்பதும் மிகமிக முக்கியமானதாகும்.'

யத் வித்யமானார்தவிஷயம் ப்ராணிபீடாகரணம் தத் ஸத்யம் அபி அஸத்யம் |*27

சமஸ்கிருத நூல்களில் ஒன்றுவிடாமல் வாய்மையை புகழ்வதுடன் பண்புமிக்க செயல்களில் இதற்கு எல்லாவற்றிலும் மேலான இடமளித்துள்ளனர். பிரும்மவைவர்த புராணத்தில் பண்புமிக்க செயல்களை படிப்படியாக ஒன்றுக்குமேல் ஒன்றாக ஏணிப்படிபோல் அடுக்கி கடைசியில் வாய்மையை உயர்வில் வைத்துள்ளனர். அங்கு வாய்மையையே மிகவும் உயர்ந்த படியில் வைத்து போற்றியுள்ளனர்.

'நாஸ்தி ஸத்யாத் பரோ தர்ம:'*[28] ஒரு பெரிய நீண்ட சதுரமான வாபி என்னும் கிணறை தோண்டுவதைக் காட்டிலும் நூற்றுக்கணக்கான கிணறுகளைத் தோண்டுவது மேலானதாகும். ஓராயிரம் கிணறுகள் தோண்டுவதைக் காட்டிலும் சிறந்தது ஒரு வேள்வி காத்தலாகும். ஒரு மகனைப்பெறுதல் ஒரு வேள்விக்கும் மேலானதாகும். ஆனால் வாய்மையைக் கடைப்பிடித்தலோ வேள்வியினும் சாலச்சிறந்ததாகும்.

மற்றுமோர் இடத்தில் இதற்கும் மேல் அழுத்தமான சொற்களால் எடுத்துரைக்கிறது. ஒருவன் நூற்றுக்கணக்கான கிணறுகளை தானம் செய்வதைக் காட்டிலும் நீண்ட சதுர வாபி ஒன்றை தானமாக அளித்தல் சிறந்ததாகும். இதைக்காட்டிலும் சிறந்ததோ ஒரு கன்னியை தானமளித்து திருமணம் முடித்தல். இம்மாதிரி பத்து கன்னிகைகளின் திருமணம் முடித்தலினும் சிறந்தது ஒரு வேள்விகாத்தலாகும். இவ்வண்ணம் நூற்றுக்கணக்கான வேள்விகளை காத்தலினும் சாலச் சிறந்தது வாய்மையைக் காத்தலாகும். இவ்வுலகம் முழுவதுமே வாய்மையை ஆதாரமாகக்கொண்டே நிற்கின்றது. வாய்மையினாலேயே ஆதவன் ஜ்வலிக்கிறான். காற்றும் வீசுகிறது. எல்லாப் பொருட்களும் அதையே சார்ந்துள்ளன. இதுவே மேலானது, மிக உயர்ந்தது. இதை கடைப்பிடிப்பவர்கள் தெய்வத்தன்மையை அடைகின்றனர்.

இந்தியாவில் அரசதர்மத்திற்கும் வாய்மையே இன்றியமையாததாகக் கருதப்படுகிறது. மன்னனுக்கு இருக்கவேண்டிய இன்றியமையாத குணங்களில் இதுவே முதன்மையாகக் கருதப்படுகிறது. 'ஸத்யம் ஸௌர்யம் தயா த்யாகோ ந்ருபஸ்யைதே மஹாகுணா:'*[29] வாய்மை, வீரம், கருணை, கொடை ஆகிய இவைகளே ஒரு மன்னனின் உயர்குணங்களாகும். இக்குணங்கள் அற்றமன்னர்கள் கெட்ட வலிமையிழந்த மன்னர்களாகிறார்கள்.

ஒருமன்னனுடன் உறவோ உடன்பாடோ ஏற்க வேண்டுமேயானால் அவன் வாய்மையைப் போற்றுபவனாக இருத்தல் வேண்டும்.

காளிதாசன் ரகுகுல மன்னர்களின் குணங்களை வெளிப்படுத்துகையில் மிகவும் சிறப்பான கருத்தை வெளிப்படுத்துகிறான். வாய்மையைக் காத்தல் பொருட்டு ரகுகுல மன்னர்கள் குறைவாக, அளவாக பேசிடுவார்கள் என்கிறார். 'ஸத்யாய மிதபாஷிணாம்'*[30]

மனித மனதை ஆராயும் அளவியலில் நம் முன்னோர்கள் எவ்வளவு திறமைக் கொண்டிருந்தார்கள் என்பதை இது எடுத்துக்காட்டுகிறது.

அதிகம் பேசுதல் வாய்மையிலிருந்து நழுவிச்செல்ல எளிதாக வழிவகுக்கிறது. வீண்பேச்சுகளும், வீண்புகழ்ச்சிகளும் மனிதனை எளிதாக வாய்மையென்னும் சிறுபாதையிலிருந்து விலகிச்செல்ல வழிவகுத்திடும். அதனாலேயே ஒருவன் பேச முற்படும் முன் சொற்களை வாய்மையென்னும் சல்லடையில் சலித்தெடுத்து பேசவேண்டுமென்று மனு கூறுகிறார். 'ஸத்யபூதாம் வதேத் வாசம்'. *31.

மேற்கோள்கள்


1. 11.1
2. ibid
3. Isopanisad 11475
4. Also yajurveda 40.17
5. ibid
6. Mundakopanisad 3.1.6
7. ibid
8. Yajnavalkyasmrti 3.5.312
9. 4.204
10. Ramayana II 19.2
11. ibid II 19.23
12. ibid II 18.40
13. Canakyasutrani 417
14. Sarirakamimamsabhasya 1.1.1.160
15. Mahabharata 1.82.16
16. Manusmrti 6.92
17. Ramayana II 14.7
18. ibid
19 Yajurveda 1.5
20. Srimadbhagavatapurana, 1.1
21. Kenopanisad 4.8
22. Prastavatarangini p.40
23 Lingapurana 8.13
24. Padmapurana 5.15.392

25. 1.21

26. *Mahabharata, Karnaparvan* 69.32

27. *Caritrasaratika* 2

28. *Brahmavaivartapurana, Janmakanda, Adyaya* 95 (Ref from *Sabdakalpadruma*)

29. *Hitopadesa* 3.31

30. *Raghuvamsa* 1.7

31. *Manusmrti* 6.46

# 3

## தரும

## தருமம்

தனது கல்வியை முடித்ததும் மாணாக்கன் ஆசானால் பிரிவு உபசார அறிவுரைகள் கொடுக்கப்படுகிறான். அச்சமயம் ஆசான் மாணாக்கனைப் பார்த்து தருமத்தைக் கடைப்பிடி 'தர்மம் சர'*[1] என்றும் தருமத்தை அசட்டை செய்துவிடாதே என்றும் அறிவுறுத்தப்படுகிறான். 'தர்மான்ன ப்ரமதிதவ்யம்'*[2] முனிவர்களும், ஞானிகளும், சிந்தனையாளர்களும் தத்துவ மேதைகளும், எழுத்தாளர்களும் விமர்சகர்களும் என எல்லோரும் தருமத்தை மிகவும் புகழ்வதோடன்றி, தருமத்தைப் பற்றி மிக்க கவனமும் கொண்டிருந்தார்கள். அதைக் காப்பாற்றினால் அது நம்மைக் காப்பாற்றிடும். அதைக் கொன்றால் அது நம்மைக் கொன்றுவிடும். 'தர்ம ஏவ ஹதோ க்னந்தி தர்மோ ரக்ஷதி ரக்ஷித:' *[3]

சொல் பிறப்பின்படி அதன் பொருளைக்கண்டால், தருமம் என்றால் தாங்குவது என்பதாகும். 'தாரணாத்தர்ம இதி ஆஹு:' தருமமே மக்களை இணைத்துவைக்கிறது. 'தர்மோ தாரயதே ப்ரஜா:'*[4] தர்மம் என்னும் சொல்லில் இரு பகுதிகள் உள்ளன. 'தா' என்றால் தாங்குதல், அதனுடன் 'मन्' என்னும் செய்வினை ஒட்டைச் சேர்க்க தாங்கும் பொருள் என்னும் பொருள் கொள்கிறது. இது தொகுக்கப்பட்ட சில விதிமுறைகளாகும்.

சில மரபு விதிகளையும், பழக்கவழக்கங்களையும் கொண்டது. இவைகள் ஒருவன் சமுதாயத்தில் எப்படி நடந்துகொள்ள வேண்டும், எந்த நடத்தைகளை மேற்கொள்ள வேண்டும் என்று பாரம்பரியமாக போற்றி வளர்த்துவந்தவைகளையும் நடவடிக்கைகளையும் வகுத்துக் கொடுக்கிறது. சமுதாய ஒழுங்கிற்கு இவைகளே ஆதாரமாகும். இவைகளை அனுசரிக்கவில்லையாகில் சமுதாயத்திற்கு ஒரு

ஊன்றுகோலின்றி பண்பாடற்ற காட்டுமிராண்டிகளாகவே மக்கள் இருந்திடுவர். இவைகளை மேற்கொள்ளாமல் ஒருவன் எதைச் செய்திடினும் இறுதியில் தன் ஆதாரமூல நிலையான மிருகமாகவே இருந்திடுவான். 'தர்மேண ஹீன: பஸுபி: ஸமான:' *5

இது இன்னது என்று திண்ணமாக விவரித்துக் கூற இயலாத இச்சொல்லின் இலக்கணத்தை எடுத்துக்கூற ஆதிகாலம் முதற்கொண்டே முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. நமக்கு விதிமுறைகளை முதன்முதலாக அமைத்துக்கொடுத்த மனு இதற்கு பத்து விதமான சிறப்பு குணங்களை எடுத்துக் கூறியுள்ளார். அவை - போதுமென்ற மனத்திருப்தி, மன்னிக்கும் மனப்பாங்கு, தன்னடக்கம், பிறரது பொருட்களை அபகரிக்காமலிருத்தல், விதிமுறைகளை சரிவர அனுசரித்தல், தூய்மை,புலனடக்கம், விவேகம், ஆன்மாவை அறிய விழைதல், வாய்மை கடைபிடித்தல், சினமறுத்தல் - இவைகளாகும்.

த்ருதி: க்ஷமா தமோஸ்தேயம் ஸௌசம் இந்த்ரியனிக்ரஹ: |
தீர்வித்யா ஸத்யம் அக்ரோதோ தஸகம் தர்மலக்ஷணம் ||*6

ஹிதோபதேசத்தில் இவை எட்டாகக் குறைத்து சொல்லப்பட்டுள்ளது.

இஜ்யாத்யயனதானானி தப: ஸத்யம் த்ருதி: க்ஷமா |
அலோப இதி மார்கோயம் தர்மஸ்யாஷ்டவிதா: ஸ்ம்ருத:' ||*7

வேள்வி, மறைநூலோதுதல், தானம், தவம், வாய்மை, மனோதிடம், மன்னித்தல், பொறாமையின்மை ஆகிய எட்டும், தருமத்தின் இலக்கணமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

பாகவத புராணம் மேலும் ஒன்றைக்குறைத்து தருமத்திற்கு ஏழு குணாதிசயங்களை குறிப்பிடுகிறது.

அஹிம்ஸா ஸத்யம் அஸ்தேயம் அகாமக்ரோதலோபதா |
பூதப்ரியஹிதேஹா ச தர்மோயம் ஸார்வவர்ணிக: ||*8

அகிம்சை, வாய்மை, களவாடாமை, பேராசையற்றிருத்தல், சினமறுத்தல், பொறாமையற்றிருத்தல், பிறர் நலம் பேணுதல், எல்லா சாதியினரிடமும்நல்லிணக்கத்துடன் இருத்தல் ஆகும்.

மனு பத்து குணாதிசயங்களைக் கூறிட அதை ஏழாக மேலே குறிப்பிட்டதை இங்கு ஐந்தாகக் குறிப்பிடுகிறார். அவை, 'பிராணிகளுக்கு தீங்கு இழைக்காமல் இருத்தல், வாய்மை, பிறர்

பொருட்களை விதிமுறையின்றி அபகரிக்காமல் இருத்தல், தூய்மை, புலனடக்கம்' ஆகும்.

அஹிம்ஸா ஸத்யம் அஸ்தேயம் ஸௌசம் இன்த்ரியனிக்ரஹ: |
ஏதம் ஸாமாஸிகம் தர்மம் சாதுர்வர்ண்யேப்ரவீன் மனு: ||*9

மேலும் இங்கு ஒன்றைக் குறைத்து ஐந்தை நான்காகக் கூறுகிறார். வேதங்கள், பரம்பரையான வழிகளை கடைப்பிடித்தல், மகான்கள் பின்பற்றிய பழக்க வழக்கங்கள், தன் மனதிற்கிணங்கியவைகள் - இவைகளே நான்காகும்.

வேதஸ்ம்ருதி ஸதாசார: ஸ்வஸ்ய ச ப்ரியம் ஆத்மன: |
ஏதச்சதுர்விதம் ப்ராஹு: ஸாக்ஷாத் தர்மஸ்ய லக்ஷணம் ||*10

மகாபாரதமோ மேலே கூறப்பட்ட எல்லாக் கருத்துக்களிலும் அடிப்படையாக இருக்கக்கூடிய சாரக்கருத்தை மனதிற்கொண்டு 'தர்மஸர்வஸ்வம்' தருமத்தின் சாரம் என 'பிறர் தனக்கு என்னவெல்லாம் செய்யக்கூடாதென நினைக்கிறானோ அவனும் அதை பிறருக்கு இழைக்கக்கூடாது'. 'ஆத்மன: ப்ரதிகூலானி பரேஷாம் ந ஸமாசரேத்' இதுவே ஆன்ருஸம்ஸ்யம்'*11 என்பதை விளக்குகிறது. பண்பட்ட குணங்களுக்குள் உயர்ந்ததாகக் கருதப்படும் இரக்கம் அல்லது கருணை ஆகியவை தருமமாகும். 'பரோ தர்ம:' அல்லது 'ஆர்ஜவ' நேர்மையான வழி. 'ஆர்ஜவம் தர்மஸ்ய இதி ஆஹு:' *12

தருமத்தின் இலக்கணத்தை சூட்சுமமாகவும் சுருக்கமாகவும் கூறியதால் அதை பலபடி விவரிக்கக்கூடியதாக அமைந்துவிட்டது. கணாதா என்கிறவர் 'யதோப்யுதயனி:ஸ்ரேயஸஸித்தி: ஸ தர்ம:'*13. உலக சௌகரியங்களை விருத்தி செய்துகொடுத்து கடைசியில் மேலான மோட்சத்தைக் கொடுக்கக்கூடியது தருமம் என்கிறார். ஆனால் ஜைமினியோ, 'சோதனாலக்ஷணார்தோ தர்ம:' என்று மறைகளில் கூறியுள்ள விதிமுறைகளே தர்மமாகும் என்கிறார்.

அசோக மன்னன் தர்மத்தை பாலி மொழியை அனுசரித்து 'தம்ம' என்று கூறுகிறார்.கருணை, ஈகை, வாய்மை, தூய்மை, நன்னடத்தை, மென்மை, இவைகளாகும். 'தயா, தானம், ஸசே, ஸோசவே, மாதவே, ஸாதவே'*14. இது மனு கூறியதொப்பதாகும். ஆகவே தர்மமென்பது அசோகர், மனு இவர்களது கருத்துப்படி எல்லா மதங்களுக்கும் பொதுவாக அமைந்துள்ள ஒழுங்குமுறை விதிகளாகும் எனக் கூறிடலாம்.

பொதுவாகவே சொல் என்பது பல பொருட்களைக் குறிக்கும் திறன் பெற்றிருப்பதைப்போல் தர்மம் என்ற சொல்லும் பல விதிமுறை கோட்பாடுகளையும் செயற்பயிற்சி முறைகளையும் கொண்டதாகும். 'க்ருதே ச ப்ரதிகுர்வீதஏஷ தர்ம: ஸநாதன:'*15 ஒருவன் செய்த உதவிக்கு பிரதி உதவி செய்தல் வேண்டும். இதுவே சுருக்கமாகக் கூறிடும் பொருளாகும். 'ஏஷ தர்ம: ஸனாதன:' என்றால் 'இதுவே பண்டைகால 'நீதியாகும்'.

பெரும்பாலும் இச்சொல் கடமையை உணர்த்திடுகிறது. மனுவும் தர்மத்தை கடமை என்றே கூறுகிறார். ஆனால் கிருத யுகத்தின் கடமை திரேதா யுகத்தின் கடமைகளினின்றும் மாறுபடுகிறது. அது போலவே துவாபர, கலி யுகங்களிலும் கடமைகள் வேறுபடுகின்றன. பகவத்கீதை 'ஸ்வதர்மே நிதனம் ஸ்ரேய: பரதர்மோ பயாவஹ:'*16. 'பிறர் கடமையை ஏற்பதைக்காட்டிலும் தன் கடமையை ஆற்றுவதில் உயிர் விடுதலே மேலானது' என்று குறிப்பிடுகிறது. ஓரிடத்திற்குக் குறிப்பிட்ட தர்மத்தை மற்றொரு இடத்தில் ஏற்பது நன்றன்று. காளிதாசனும் தருமத்தை இப்பொருள்படவே கூறுகிறான். 'ஷஷ்டாம்ஸவ்ருத்தேரபி தர்ம ஏஷ:'*17 'ராஜ்ஜியத்தின் பிரஜை களிடமிருந்து வசூல் செய்யப்படும் நிதியில் ஆறில் ஒரு பங்கை ஏற்பவர்களின் கடமை இதேயாகும்' என்கிறார்.

வாழ்க்கையின் நான்கு குறிக்கோள்களில் ஒன்று 'சதுர்வர்க' இது நேர்மையான வழி நன்னெறிகளாகும். இது ஒன்றே உற்ற நண்பனைப்போல மரணத்திற்குப் பிறகும் ஒருவனை பின்தொடர்கிறது. 'ஏக ஏவ ஸுஹ்ருத்தர்மோ நிதனேSபி அனுயாதி ய:'*18

சில நேரங்களில் கடமைகள் சில ஒன்றுக்கொன்று முரண்பட்டதாக இருந்திடும். அந்நேரத்தில் இரண்டையும் நன்கு பாகுபடுத்திப் பார்த்து முக்கியமானதை முதலில் ஏற்க வேண்டும். இம்மாதிரியான நேரங்களில் தவறு ஏற்படுதல் சகஜமே. காளிதாசன் தான் இயற்றிய ரகுவம்சத்தின் துவக்கத்திலேயே மிகவும் திறமைசாலிகளான ரகுவம்சத்து அரசன்கூட இம்மாதிரியானதொரு இக்கட்டான நிலைமையில் சரியான முடிவை தேர்ந்தெடுக்க இயலவில்லை என்பதைக் குறிப்பிடுகிறார்.

மாதவிடாய் முடிவடைந்த நேரம் ஒரு பெண்ணிடம், தன் மனைவியிடம் பாலின்பம் நுகருதல் ஒரு கணவனின் தலையாய புனிதக் கடமையாகும். இக்கடமையை தவறாமல் செய்திடுவதில் மிகவும் ஈடுபட்டு மிக விரைவில் அரசன் தன்னிருப்பிடம் திரும்பிச்

சென்றுகொண்டிருந்தான். தேவலோகத்தில் இந்திரனிடம் குறித்த பணியை நிறைவேற்றிய பிறகு திரும்பி விரைந்து வரும் மன்னன் வழியில் காமதேனுவின் மகளான சுரபி இருப்பதை கண்டான். ஆனால் நேரமின்மையால் அதை வலம் வருதலைத் தவிர்த்து விரைந்து சென்றுவிட்டான். இதனால் காமதேனுவின் சினத்திற்கு ஆளாகி குழந்தைபெறும் பாக்கியத்தை இழந்துவிட்டான். மேலும் சந்ததியைப் பெற காமதேனுவின் கன்றான சுரபிக்கு சேவை செய்ய வேண்டிய சாபத்தையும் அடைந்தான். இவ்விடத்தில் நன்கு ஆராய்ந்து பார்த்தோமானால் இரு இன்றியமையாத கடமைகள் இருந்தன. ஒன்று அவனது மனைவியைக் குறித்தது மற்றொன்றோ தெய்வீக பசுவை ஒட்டியது.

தன் மனைவியிடம் புணருதல் முக்கிய கடமையாகிலும் 'ஸாத்வாசரண' தெய்வீகப்பசுவை வலம் வருதலும் அவனது கடமை யாக இருந்தது. இவ்விரண்டிற்கும் இடையே சிக்கிய அவன் தனது உரிய தீர்ப்பை கவனமாக பரிபாலித்திருக்கலாம். தெய்வீக பிறப்பு கொண்டவர்களிடம் கடமையை சரிவர ஆற்றுதல் மானுடப்பிறப்பு கொண்டவர்களைவிட சிறந்ததாகும். இதனால் 'தருமலோபம்' 'தருமத்தை கைவிட்ட' தவறு தாற்காலிகமாக ஏற்பட்டுவிட்டது.

மகாபாரதத்திலும் இப்படிப்பட்டதொரு சிக்கலான நிகழ்வு ஏற்பட்டது. சூதாட்ட நேரத்தில் தன்னையே பணயம் வைத்து கட்டைகளை வீசி தன்னை இழந்துவிட்டார் யுதிஷ்டிரர். பிறகு தன் மனைவி திரௌபதியை பணயமாக வைத்து அவளையும் இழந்தார். தன்னை இழந்த பின்னர் தன் மனைவியை பணயம் வைத்து இழந்தார். அச்சந்தர்ப்பத்தில் திரௌபதியை சபைக்கு அழைத்துச் சென்றிட பிரதிகாமின் என்ற தேரோட்டி திரௌபதி இருக்குமிடம் வந்தான். அவனிடம் திரௌபதி தன்னைப் பணயம் வைத்து இழந்த பிறகு மற்றொருவரை பணயமாக வைக்க அதிகாரம் யுதிஷ்டிரருக்கு ஏது என்ற கேள்வியை எழுப்புகிறாள்.

பிரதிகாமியும் சபைக்குத் திரும்பி வந்து யுதிஷ்டிரரிடம் இக்கேள்வியை வைக்கிறான். யுதிஷ்டிரரால் இக்கேள்விக்கு பதிலே தும் கூற முடியவில்லை. துரியோதனனோ அவள் சபைக்குவந்து தானே சபையில் உள்ளோரிடம் இக்கேள்வியை கேட்பது சிறந்ததென்று நினைத்தான். மீண்டும் பிரதிகாமியை அனுப்பிட மாதவிடாயில் இருந்து ஓராடையே உடுத்துபவளாயிருப்பனும் திரௌபதி சபைக்கு வந்து தன் மாமனான திருதராஷ்டிரனிடம் வந்து நிற்கிறாள். இந்நேரத்தில் தான் துரியோதனனின் ஆணைப்படி

துச்சாதனன் அவளது கூந்தலைப் பிடித்து இழுத்து வந்துஅவளது துகிலுருவும் நிகழ்ச்சி நடைபெறுகிறது.

சபையிலிருந்த கண்ணியமான மேன்மக்கள் பீஷ்மர், விதுரர், துரோணர், கிருபர் முதலியவர்களில் ஒருவருமே வாய் திறக்கவில்லை. மௌனமாக இருந்தனர். அச்சமயம் துரியோதனனின் சிறிய சகோத ரர்களில் ஒருவனான விகர்ணன் திரௌபதியைச் சார்ந்து பேச முற்பட்டான்.

இங்கு இவ்வாதத்தில் கூறப்படுவது என்னவென்றால் திரௌபதி பாண்டவர்கள் ஐவருக்கும் உரியவள். ஆனால் எல்லோரையும் பணயம் வைத்து இழந்துவிட்டனர். அதனால் திரௌபதியை பணயம் வைக்கும் உரிமை அவர்களில் எவருக்குமே இல்லை. மேலும் யுதிஷ்டிரர் தன்னை இழந்துவிட்டாரென்றால் திரௌபதியும் அதில் அடக்கமே. அதனால் யுதிஷ்டிரருக்கு உரிமை இருக்கிறதா இல்லையா என்ற கேள்வியே எழுவதற்கு இடமேயில்லை என்றான்.

இருந்தும் துச்சாதனனால் கூந்தல் பிடித்திழுக்கப்பட்டு அவமானப்படுத்தப்பட்டபோதிலும் திரௌபதி மீண்டும் சபையில் அக்கேள்வியை எழுப்பி அதற்கான பதிலை எதிபார்த்திருந்தாள். அப்பொழுது பீஷ்மர் முன்வந்து தருமம் என்பது புதிரானது. மேலான சிந்தனையாளர்களையும், கற்றறிந்தவர்களையும்கூட கலக்கமடையச் செய்திடும். அவரோ தான் அக்கேள்விக்கு தக்க பதில் உரைக்கத் தகுந்தவனில்லை என்றும் யுதிஷ்டிரரிடமே அக்கேள்வியை கேட்குபடியும் கூறுகிறார். இறுதியில் அறிந்து கொள்வது என்னவென்றால் சில சந்தர்ப்பங்களில் தருமம் என்பது என்ன என்று முடிவு செய்வது மிகவும் கடினமானதொன்று என்பதேயாகும்.

தருமம் என்பது அந்தணர்கள், பசுக்கள், அரசர்கள் முதலியவர்களுக்கு முதல் மரியாதை அளித்தல், சந்தி நேரங்களில் உறங்காமல் பிரார்த்த னையில் ஈடுபட்டிருத்தல், பெரியவர்களை நீ என்று ஒருமையிலோ அல்லது பெயரெடுத்து அழைக்காமலிருத்தல்*[19] முதலிய சமுதாயத்துக்கு உகந்த விதிகளைப் பின்பற்றுதல், சமுதாயத்தினால் ஏற்றுக்கொள்ளப்பட்ட நன்னடத்தைகளை அனுசரித்தல் இவைகளைக் குறிப்பதாகும். மேலும் பல இங்கிதமான பண்பட்ட விதிகளை பின்பற்றுவதுமாகும். மேலும் இதன்படி தலையை இரு உள்ளங்கைகளினாலும் சொறிந்துகொள்ளாதிருத்தல்*[20], சூரியனுக்கும் நெருப்பின் எதிரிலும் சிறுநீர் கழிக்காதிருத்தல்*[21] (அவை கடவுளாகக்

கருதப்படுவதால்), குடியிருக்கும் இடத்தினருகில் சிறுநீர் கழிக்கா திருத்தல், கால்களை கழுவிய நீரை நல்ல நீரில் கலக்காதிருத்தல்,*22 வடக்கு திசையிலோ அல்லது மேற்கு திசையிலோ தலை வைத்து படுக்காமல் இருத்தல்*23 முதலிய பண்டைய கால நூல்களில் கூறப்பட்டவைகளை அனுசரித்தலாகும். இப்பண்பட்ட விதிகளில், கேட்காத பொழுது பேசுதலும்கூடாது என்பதுமாகும்.*24

எந்த ஒரு எதிர்பார்ப்புமின்றி தினசரி வாழ்க்கையில் இந்த தரும நெறிமுறைகளை அனுசரிக்க வேண்டுமென்று மீண்டும் மீண்டும் வற்புறுத்தி கூறப்பட்டுள்ளது.இதன் பலனை மறப்பவனோ அல்லது முழு நம்பிக்கையின்றி தீவிரமாக தாக்குபவனோ அதன் பலனை எள்ளளவும் பெறுவதில்லை.

ந தர்மபலம் ப்ராப்னோதி யோ தர்மம் தோக்துமிச்சதி |
யஸ்சைனம் ஸங்கடே க்ருத்வா நாஸ்திக்யாத் பாபசேதன: ||*25

மகாபாரதம் கூறுகிறது, விரும்பிய ஒரு பலனையும் கொடுக்காம லிருப்பினும் தருமத்தின் மேல் சந்தேகங்கொள்ளலாகாது. 'ந பலாபாவாத் தர்ம: ஸங்கிதவ்ய:'*26 பலனை எதிர்பார்த்து இது ஏற்கப்படு வதல்ல. இதை கவனமாக தவறாமல் அனுசரிப்பவர்கள் ஒரு பொழுதும் தீமையடைவதில்லை. அவர்கள் ஒரு குறிக்கோளை அடைய கடும் முயற்சி மேற்கொண்டிருந்தாலும் அதை தொடக்கம் முதல் தருமத்தை ஆதாரமாகக்கொண்டு முயற்சி செய்திருந்தால் தானாகவே அம்முயற்சி சுவர்க்கத்தின் அமிர்தத்தைப்போல கிட்டிவிடும்.*27 இங்கு இன்றியமையாததாக அமைவது என்ன வென்றால் தொடர்ந்து ஒருவன் நல்ல பணிகளையே மேன்மேலும் செய்திடல் வேண்டும். இவ்வாறு செய்வதே ஒருவனை தானாகவே அவன் அடைய விரும்பிய உயர்ந்த நிலைக்கு அழைத்துச்சென்று மேன்மையடையச் செய்திடும். அதனால் தருமத்தின் மகிமையைப் பற்றி ஐயங்கொள்ள வேண்டிய அவசியமே இல்லை.

இவ்வாறு தருமத்தைப்பற்றி பேசுகையில் ஒரு தருமத்திற்கு எதிராக மற்றொரு தருமம் வருமேயாகில் அது உண்மையில் தருமமாக ஆகாது. அது தவறான பாதையாகும். பிற தருமத்தை மற்றதொரு தருமத்தை எதிர்க்காத தருமமே உண்மையான தருமமாகும்.

தர்மம் யோ பாததே தர்மோ ந ஸ தர்ம: குவர்த்ம தத் |
அவிரோதாத் து யோ தர்ம: ஸ தர்ம: ஸத்யவிக்ரம ||*28

லோமாச முனிவர் யுதிஷ்டிரரிடம் சம்பாஷணை செய்கையில் உசீனரத்தைச் சேர்ந்த சிபி சக்ரவர்த்தியின் கதையை எடுத்துக்கூறுகிறார். அக்னி தேவதையே புறா உருவில் மறைமுகமாக வந்து தன்னைப் பிடித்து உண்ண வந்த கழுகு உருவில்வந்த இந்திரனிடமிருந்து தன்னைக் காக்கும்படி, மன்னனைச் சோதிக்க வேண்டி, வேண்டிக்கொண்டது.

கழுகோ மிகவும் தீவிரமாக தன்னிரையை தனக்குக் கொடுத்திடும்படி பலமுறை மன்னனை வேண்டிட, மன்னனோ சரணம் அடைந்தவரைக் காப்பதே தருமம் என்றெண்ணினாலும் கழுகின் இயற்கை உணவான பறவையை அதற்குக் கொடுக்காமல் இருப்பதும் பசியுடன் இருக்க விடுவதும் அதருமமன்றோ என்றெண்ணினான்.*29 ஆனால், புகலடைந்தவரைக் காப்பது உயர்ந்த தருமமெனக் கருதினான். இம்மாதிரி ஒருதருமம் பிறிதொரு தருமத்துடன் சிக்கியது

இப்படிப்பட்ட சந்தர்பங்களில்தான் எது சிறந்த தருமம் என்று தீர்மானிப்பது மிகவும் கடினமானதாக ஆகிறது. இந்த தெய்வீக தருமத்தை அறிதல் பாம்பின் பாதங்களைத் தேடுவதற்கு ஒப்பான தாகும் என்று கூறப்படுகிறது. 'அஹேரிவ ஹி தர்மஸ்யபதம் து:கம் கவேஷிதும்'*30 இச்சூழலில்தான் தருமத்தின் தலையாய பிரிவா யிருப்பதும், அதிலிருந்து நழுவிச் செல்வதற்கு அனுமதி கிடையாது என்று கருதப்படும் வாய்மைக்கும் நம் முன்னோர்கள் ஒரு கருத்தை வெளியிட்டுள்ளார்கள். 'பிறர் நலனுக்காக அமைந்ததே உண்மையில் வாய்மையாகும், மற்ற பிறவெல்லாம் பெயரளவில் அமைந்தவை யாகிடுமே'.

ந ஸத்யம் கேவலம் ஸத்யம் அன்ருதம் ததா அன்ருதம் |
ஹிதம் யத் ஸர்வலோகஸ்ய தத்ருதம் ஸேஷம் அன்யதா ||*31

'உண்மையில் பார்க்கப்போனால் வாய்மை என்பது வாய்மையாகாது. அதுபோலவே வாய்மையற்றதும் எப்போதும் வாய்மையற்றதும் ஆகும். எல்லோருக்கும் நன்மை பயப்பதே வர்ய்மையாகும். எஞ்சிய எல்லாம் மற்றவையே.'

இவ்வாறு தருமமென்பது அதைப் பற்றிப் படிப்பதனால் மாத்திரம் அறியப்படுவதில்லை. 'ந தர்ம: பரிபாடேன ஸக்யோ பாரத வேதிதும்'*32 அதை நடைமுறையில் அனுஷ்டிக்க வேண்டும். இதுவே சமுதாயத்தை நிலைபெறச் செய்கிறது. 'தாரணாத் தர்மேதி ஆஹு: தர்மோ தாரயதே ப்ரஜா:' இதனால், தூண்டப்படாதவர்களோ

தானியங்களில் வாடி வதங்கிப்போன தூள்கள் போலவும் இறக்கை யுள்ள ஜீவராசிகளில் கரையான் போன்றவர்களும் ஆவார்கள்.

'புலகா இவ தான்யேஷு புத்ரிகா இவ பக்ஷிஷு|
தத்விதாஸ்தே மனுஷ்யாணாம் யேஷாம் தர்மோ ந காரணம்' ||*33

தருமத்தைப் பின்பற்ற துணைவர்கள் தேவையில்லை. தனி ஒருவனாகவே அதை அனுசரிக்க இயலும். 'ஏக ஏவ சரேத் தர்மம் நாஸ்தி தர்மே ஸஹாயதா'*34 ஒருவன் உயிர்வாழும் வரை தருமத்தை அனுசரித்தல் வேண்டும். பொதுவாக தருமத்தை 'பிரவிருத்தி லக்ஷணம், நிவிருத்தி லக்ஷணம்'*35 'எவைகளை செய்ய வேண்டும், எவைகளை தவிர்க்க வேண்டும்' என இரு பிரிவுகளாக பிரித்திட லாம். இதிலும் பாத்திரத்திற்கும் நேரத்திற்கும் ஏற்ப இவை மாறியும் அமையலாம்.

சில நேரங்களிலும், சில சந்தர்ப்பங்களிலும் அதருமமே தருமத்தின் மூடியாக அமையலாம். நிந்திக்கத் தகுந்ததென கூறப்படும் களவு, பொய் பேசுதல், இம்சை செயல்களும்கூட தருமச் செயல்களாக மாறிடலாம். அதுபோலவே ஒருவனது உயிரோ அல்லது ஒரு குற்றமும் அறியா அபாயத்தில் சிக்கிய அப்பாவியின் உயிரைக்காக்க செய்திடும் இரக்கச் செயல் தருமமும் ஆகலாம். இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களே முனிவர் விசுவாமித்திரர் நாயின் மாமிசம் உண்டார் என்பதை சரியானதாக ஒப்புக்கொள்ளச் செய்தது.

அகிம்சையை காக்கும் தெய்வமெனக் கருதப்படும் மகாத்மா காந்தியடிகள் பசுவொன்றை தாங்கவொண்ணா வலியிலிருந்தும் வேதனையிலிருந்தும் விடுவிக்கவேண்டி 'மெர்ஸி கில்லிங்' எனும் இரக்கக் கொலையை ஆதரித்துக் கொன்றார். துரோணர் போர்முனையில் சைனியங்களை வெகுவாகக் கொன்றிட தரும்புத்திரர் அசுவத்தாமன் இறந்தான் என்னும் செய்தியை எடுத்துரைத்தார். இப்படிப்பட்ட செயல்கள் பொதுவாக சாதாரண நிலைமைகளில் மிகவும் நிந்திக்கத்தகுந்த அதருமம் என்றிருந்தாலும் மகாபாரதத்தை எழுதிய ஆசிரியரோ இதை 'ஆவஸ்திகா'' 'நிலைமையொட்டியது' என்று குறிப்படுகிறார்.

'ஆதானம் அன்ருதம் ஹிம்ஸா தர்மோ ஹி ஆவஸ்திக: ஸ்ம்ருத: |'*36 இச்சொல்லை விவரித்திடும் உரையாசிரியர் நீலகண்டர் 'அவஸ்தாவிஸேஷே பாவ:' என்று ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தை ஒட்டியது என்கிறார். 'ப்ராணத்யாகாதௌ அதர்மஸ்யாபி

ஸ்தேயாதேர்தர்மத்வாத்' உயிருக்கே ஆபத்து ஏற்படும் நேரத்தில் நிந்திக்கத்தக்கதொரு செயலும் 'அதர்ம' திருடல் முதலியவை 'தர்ம' தருமமாகவே கருதப்படும்.

மேலும் தருமம் என்பது மேலான கட்டுப்பாட்டுடன் நற்குணங்களை அனுசரிக்கும் ஒரு சில குடும்பங்களில் பரம்பரையாய் அவர்களுக்கெனவே குறித்து அனுசரித்துவரும் கடமைகள், போற்றத்தக்க செயல்களுமாகும். இதை 'குலதர்ம' குலதருமம் என்கின்றனர். இப்பழக்கவழக்கங்கள் ஒருவனை தான்தோன்றித்தனமாய் செல்வதிலிருந்து தடுத்து நேர்வழிப்படுத்த உதவுகிறது. இந்நியதிகளும் பழக்கவழக்கங்களும் ஒரு குடும்பத்தை, குலத்தை, ஒரு குடி இனத்தவர்களை, சமுதாயத்தை அவர்களுக்குள் எந்தவிதமான வேறு பாடுகள் இருந்தாலும் ஒன்றாக இணைந்திருக்க வழி வகுக்கிறது.*37

இந்தோனேஷியாவில் பாலியில் வசிக்கும் இது போன்றதொரு இனத்தவர்களே அங்கு தீவுக் கூட்டங்களில் முகமதிய மதத்தைப் பரப்பிடுகையில் தாங்கள் வசிக்கும் அப்பிரதேசத்தில் அம்மதத்தை பரவிடாமல் தடுத்திட உதவியது. ஓரிரு வயதான முதியவர்கள் மனதார விரும்பியும்கூட தங்களது சமுதாயத்திலிருந்து தங்களை வெளியில் அகற்றி ஒதுக்கிவிடுவார்களோ என்ற பயத்தில் மதமாற்றத்தை முற்றிலும் எதிர்த்துவிடச் செய்தனர்.

மறை நூல்களோ வாழ்க்கையின் எந்த நிலையில் இருந்தபோதிலும், மிகவும் பயங்கரமாக இருந்திடினும் தருமத்தை அனுசரித்தல் இன்றியமையாததென வற்புறுத்தி கட்டளையிடுகின்றன. ஒருவன் செயல்களிலும் தருமத்தை காத்தல் வேண்டும். இதற்காக வெளிவேஷம் (காவியுடுத்தல், சடை தரித்தல்) என்ற இவைகளை ஏற்கத் தேவையில்லை.

துக்கிதோபி சரேத்தர்மம் யத்ர குத்ராஸ்ரமே ரத: |
ஸம: ஸர்வேஷு பூதேஷு ந லிங்கம் தர்மகாரணம் ||*38

தருமத்தை அனுசரித்தால் ஒருவனுக்கு நினைப்பதைக் காட்டிலும் அதிகமான பலன் கிடைக்கக்கூடும். இத்தருமமே எந்நிலையிலும் ஒருவனைக் காத்திடும். ராமன் பதினான்கு வருடங்கள் காட்டிற்குச் செல்லுகையில் தாய் கௌசல்யை அவனுக்கு விடை கொடுத்தனுப்புகை யில் அவன் காத்துவந்த தருமத்தையே வேண்டிக்கொள்கிறாள்.

யம் பாலயஸி தர்மம் த்வம் ப்ரீத்யா ச நியமேன ச |
ஸ வை ராகவசார்தூல தர்மஸ்த்வாம் அபிரக்ஷது ||*39

'ரகு குலத்தில் உதித்தோர்களில் புலிபோன்றவனே, நீ எத்தருமத்தை அன்புடனும் தவறாமலும் பரிபாலித்து வந்தாயோ அத்தருமமே உன்னைக் காக்கட்டும்'

## மேற்கோள்கள்

1. *Taittiriyopanisad* 1.11
2. *ibid*
3. *Manusmruti* 8.15
4. *MBh (Mahabharatam) Karna.* 69.58. *Also see Ramayana: dharanaad dharmam ity ahuh dharmena vidhrutah prajah. Uttara* 597 - 8
5. *Hitopadesa, Kathamukha* 25
6. *Manusmruti* 6.9
7. *Hitopadesa* 1.8.
8. *Bhagavata purana II* 17.21
9. *Manu* 10.63
10. *ibid* 2.12
11. *Mbh Vana* 213.30
12. *ibid Anu* 142.30
13. *Yogasutra* 4, 100
14. *Delhi Topra Pillar Inscription No.*7 *line* 12
15. *Ramayana* 5.1.106
16. 3.35
17. *Abhijnanasakuntala V* 4
18. *Hitopadesa* 1.66
19. *Mbh Santi* 193.25
20. *ibid Anu* 10469
21. *ibid* 104.75
22. *ibid* 104.82
23. *ibid Anu* 104.48
24. *ibid Santi* 287.35
25. .*ibid Vana* 31.6

26 *ibid* 31.38

27 *ibid. nahi dharmad apaity arthah svargalokad ivamrutam, Udyoga* 37.48

28 *ibid* 131.11

29 *ibid Chapter* 131

30 *ibid Santi* 132.20

31 *Bharatamanjari Santi* 402

32 *Mbh Santi* 260.3

33 *ibid* 181.7

34 *ibid* 193.32

35 *ibid* 241.6

36 *ibid* 36.11

37 *ibid Vana* 243.2

38 *Hitopaqdesa* 1.91

39 *Ramayana* 2.25.3

# 4

## दान

## தானம்

தானம் வழங்கும் முறைபற்றி சமஸ்கிருத நூல்களில் வெகுவாக வற்புறுத்தி பேசப்பட்டுள்ளன. அவை கூறுவதன் உண்மையான பொருள், தங்களுடைய செல்வத்தையும் வளமைகளையும் பிறரிடம் குறிப்பாக இல்லாதவர்களிடமும், தேவையாயிருப்பவர்களிடமும் பகிர்ந்துகொள்ளும் மனவிருப்பமே காரணமாக இருக்கலாம். (செல்வங்களும் வளங்களும் இயற்கையில் எல்லோருக்கும் பொதுவாகவே பகிர்ந்து கொள்வதற்கானவை).

அவரவர் விருப்பப்படி அவைகளை பயன்படுத்திக்கொள்ளலாம். ஒருவன் தன்னிடமுள்ள உடைமைகளில் ஒருப் பகுதியை பிறருடன் பகிர்ந்துகொள்வதில் எந்தவிதமான கட்டாயமோ, பலவந்தமோ இல்லை. ஆனால் தானாகவே தன் மனவிருப்பப்படி பிறருடன் பகிர்ந்துகொள்ளும் விருப்பம் இருத்தல் வேண்டும். அவ்விருப்பம் சில எதிர்பார்ப்புகளுடன் இல்லாமலிருத்தல் வேண்டும். கொடையாளிகளும் வள்ளல்களும் தானமாக வழங்கும்பொழுது தங்களுடைய சுற்றத்தாரும் நண்பர்களும் அதனால் நன்மையடையும் நோக்கம் இருந்திடலாம்.

தானம் என்பதன் இலக்கணம் இவ்வாறு கொடுக்கப்பட்டுள்ளது -

'பரானுக்ரஹபுத்த்யா ஸ்வவித்தபரித்யாகோ தானம்'*1
'அனுக்ரஹார்தம் ஸ்வஸ்யாதிஸர்கோ தானம்'.*2

ஒருவன் தன் உடைமைகளை பிறர் நலனுக்காக அளித்தல் தானமாகும்.

பண்டைகால இந்தியர்கள் தானம் செய்யும் நேரம் வள்ளல்களான தாங்கள் யாசகர்களைக் காட்டிலும் மிக உயர்ந்தவன் என்ற எண்ணம் மனதில் ஏற்படாமலிருக்கவும், அக்கொடை அவர்களது மனதில் மமதையோ அகங்காரமோ ஏற்பட விதையாக அமையா திருக்க வேண்டியும், கொடை என்னும் நற்பணியினால் ஏற்படும் நற்பலன்களை வீணாக்காமல் இருப்பதற்கும் தேவையான பல முன்னெச்சரிக்கைகளை விடுத்துள்ளனர். இக்கருத்தானது தைத்தரீய உபநிஷத்தில்[*3] மாணவர்கள் தங்களது படிப்பை முடித்துவிட்டு தங்களது இல்லங்களுக்குத் திரும்பிச் செல்ல இருக்கையில் கொடுக்கப்படும் அறிவுரையில் குறிப்பாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

ஆசான் கூறுகிறார் - 'ஸ்ரத்தயா தேயம், அஸ்ரத்தயாதேயம், ஸ்ரியா தேயம், ஹ்ரியா தேயம், பியா தேயம்' மரியாதையுடன் கொடு, அவமரியாதையுடன் கொடுக்காதே, நிறைய அள்ளி வழங்கிடு, பணிவுடன் கொடு, மனதில் பய உணர்வுடன் வழங்கிடு.

தானம் வழங்கிடும் எண்ணத்தை ஒட்டி பல பிரிவுகள் உள்ளன. பகவத்கீதையில் சாத்வீகம், ராஜசம், தாமசம் என்று மூன்று விதமாக தானம் வழங்குதல் பிரிக்கப்பட்டுள்ளது. சரியான உரித்த காலத்தில் உரித்த இடத்தில் உசிதமான நபருக்கு (பாத்திரத்துக்கு), பிரதி உபகாரமாக எதையும் எதிர்பார்க்காமல் கடமையாகக் கருதி கொடுக்கப்படும் தானம் சாத்விக தானம் எனப்படும்.

தாதவ்யம் இதி யத் தானம் தீயதேனுபகாரிணே |
தேஸே காலே ச பாத்ரே ச தத் தானம் ஸாத்விகம் மதம் ||[*4]

தனக்கு சில பிரதி உபகாரங்களை எதிர்பார்த்து அந்த நம்பிக்கையுடன் விருப்பமில்லாமல் தயக்கத்துடன் கொடுக்கப்படும் தானம் ராஜசம் எனப்படும்.

யத்து ப்ரத்யுபகாரார்தம் பலம் உத்திஸ்ய வா புன: |
தீயதே ச பரிக்லிஷ்டம் தத் ராஜஸம் ஸ்ம்ருதம் ||[*5]

சரியான நேரத்திலும் இடத்திலும் இன்றி உசிதமற்ற நபருக்கு உரிய சடங்குகளும் இன்றி அளிக்கப்படும் தானம் தாமசம் எனப்படும்.

அதேஸகாலே யத் தானம் அபாத்ரேப்யஸ்ச தீயதே |
அஸத்க்ருத்ய அவஞாதம் தத் தாமஸமிதி உதாஹ்ருதம் ||[*6]

மேற்கூறப்பட்ட பிரிவுகளைத் தவிர பிற பல முனைப்பாற்றலைக் கொண்டு . கொடையாற்றலை மேலும் சில பிரிவுகளாகப்

பிரிக்கப்படுகின்றன. ஸ்கந்த புராணத்தில்*7 தர்மதானம், அர்த்ததானம், காமதானம், வ்ரீடாதானம், ஹர்ஷதானம், பயதானம் என ஆறு விதமாக பிரித்துக் கூறப்பட்டுள்ளன. தன் கடமையாகக் கருதி, வழக்கமாக உசிதமான பாத்திரத்திற்கு 'தர்மபுத்யா' எதிர்பார்ப்புகள் ஒன்றுமின்றி 'அனவேக்ஷ்ய ப்ரயோஜனம்' கொடுப்பது தர்ம தானமாகும்.

பேராசையினால் செல்வந்தர்களை வசீகரம் செய்து செல்வத்தை அபகரிப்பது அர்த்ததானமாகும். தனது பிரத்தியேகமான குறிப்பிட்ட பயனை அடைவதற்காக உசிதமற்ற நபருக்கு வெகுமதிகளை அளிப்பது 'காமதானம்' எனப்படும். தான் முதலில் கொடுத்த வாக்கைக் காப்பாற்றிக்கொள்வதற்காக தன் மானத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக தானம் வழங்குதல் வ்ரீடாதானமாகும். ஒரு மகிழ்ச்சிகரமான நிகழ்ச்சியைக் கண்டோ கேட்டோ மனங்களித்து வெகுமதிகளை அளிப்பது ஹர்ஷாதானமாகும். ஒரு ஆபத்தான நிலைமையிலிருந்தோ, தன்னை நிந்தனையிலிருந்து மீட்டுக்கொள்ளவோ கொடுக்கப்படும் தானம் பயதானம் ஆகும்.

பிறிதொரு சந்தர்ப்பத்தில் இதே புராணம் வேறு ஒரு விதமான தானத்தைப் பற்றி பேசுகிறது. அதை காம்யதானம் என்கிறார். அதாவது சந்ததியைப் பெறவோ, வெற்றியடையவோ, வளமை, மனைவி, மக்கள் என சில குறிப்பிட்ட ஒன்றை அடைவதற்காக தானாகவே தன் மனவிருப்பப்படி 'இச்சாசம்ஸ்தான்' தானம் அளிப்பது காம்யதானமாகும்.

கொடைகளுக்குள் உயர்ந்த கொடை என்பது ஒரு தகுந்த பாத்திரத்திற்கோ அல்லது ஒரு நிறுவனத்திற்கோ அது தனக்கு நல்லதையே செய்திடும் 'ஆத்மானுக்ரஹ' என்ற நம்பிக்கையுடன் மிகப் பணிவாக அளித்திடும் தானமே ஆகும். இந்த கருத்தை பாசன் தான் எழுதிய ஸ்வப்ன வாசவதத்தம் என்னும் நாடகத்தில் அழகாகக் குறிப்பிடுகிறார். அந்தப்புரத்தை காக்கும் கஞ்சுகி 'மகத நாட்டு இளவரசி பத்மாவதி அன்னை அரசியின் குடிலுக்குச் செல்லும் நேரம் தன்னன்மைக்காக பல தானங்களை வழங்க விரும்பிதயாராக இருக்கிறாள்' என்று விஞாபனம் செய்கிறான். 'ஆத்மானுக்ரஹார்தம் இச்சதீஹ ந்ருபஜா கஸ்யார்தம் கிம் தீயதாம்'*8

நம் பண்டைகால நூல்களோ, வழங்கிய தானத்தைப் பற்றி தானே புகழ்ந்து பேசுவதை தடைசெய்கிறது. 'ந தத்வா பரிகீர்தயேத்' அது அவனது புகழை அழிக்கக்கூடியது. 'கீர்தி: ஹ்ரஸதி கீர்தனாத்'

எல்லா தானங்களிலும் அறிவு தானமே தலைசிறந்ததாகும். 'ஸர்வேப்யோபி ஹி தானேப்யோ ப்ரஹ்மதானம் விஸிஷ்யதே'. அந்த தானமும் சிறிதும் சுயநலமின்றி வழங்க வேண்டும். தன் வாழ்க்கையை நடத்துவதற்காக தன் அறிவை விற்பவன் சரக்கு விற்கும் வியாபாரியேயாவான்.

யஸ்யாகம: கேவலஜீவிகாயை தம் ஞானபண்யம் வணிஜம் வதந்தி'

அக்னிபுராணத்தில் கூறியுள்ளதாவது எவனொருவன் வேதங்களையும், சங்கீதம், நடனம் முதலியவைகளையும் கற்றுக்கொடுக்கிறானோ அவன் சுவர்கத்தை அடைய வழி வகுத்துக்கொள்கிறான். இவ்வாறு அறிவை பகிர்ந்துகொள்ளுதல் என்பது கற்றுக்கொடுப்பது என்பது மாத்திரமல்ல, ஒரு புத்தகத்தை வெகுமதியாக அல்லது இனாமாக வழங்குவதுமாகும். அதுவும் தான் எழுதிய புத்தகத்தை வழங்குவது சிறந்ததாகும்.

லிகித்வா புஸ்தகம் தத்வா புக்திமுக்திம் அவாப்னுயாத் |
வேதஸாஸ்த்ரம் ந்ருத்யகீதம் யோSத்யாபயதி நாகபாக் ||*9

இவ்வாறு புத்தகத்தை வழங்குபவன் மகிழ்ச்சியை அடைவதுடன் சுவர்கத்தையும் அடைகிறான். அதை அவன் மீண்டும் மீண்டும் விடாமல் தொடர்ந்து செய்வது நல்லது. சூரியன் நீரை உறிஞ்சியெடுத்துக்கொள்வது, அதை ஆயிரம் மடங்காக மீண்டும் திருப்பி அளிப்பதற்கேயாகும்.

'ஸஹஸ்ரகுணம் உத்ஸ்ரஷ்டும் ஆதத்தே ரஸம் ரவி:'*10

இவ்வாறு காளிதாசன் கூறியுள்ளான். ஆனால் இக்கருத்தை வேதங்கள் நூறு கைகளால் செல்வம் சேர்த்து அதை ஆயிரக்கணக்கான கைகளால் விநியோகம் செய், பகிர்ந்து கொடு என்கிறது.

'ஸதஹஸ்தஸமாஹர ஸஹஸ்ரஹஸ்த ஸங்கிர'*11

தானம் என்பது உடனே தானாகவே கொடுக்கப்படவேண்டும். உடனே என்றால் ஒருவன் யாசகனது தேவையை அவன் கேட்காமலேயே, வெளிப்படுத்தாமல் தானாகவே அறிந்து உணர்ந்து கொடுக்க வேண்டும்.

தம் திகஸ்து கலயன்னபி வாச்ஞாம் அர்திவாகவஸரம் ஸஹதே
ய:' |*12

இந்தியர்கள் மனத்தத்துவப்படி, மறுபிறவி உண்டென்பது மனதில் ஆழமாக பதிந்த கருத்தாகும். இன்று இப்பிறவியில் 'எனக்குக் கொடு' 'எனக்குக் கொடு' என்று யாசிப்பவன் முன்பிறவியில் யாசிப்பவர்களைப் பார்த்து 'என்னிடம் கொடுக்க ஒன்றுமில்லை' 'என்னிடம் கொடுக்க ஒன்றுமில்லை' என்று கூறி திருப்பி அனுப்பியிருப்பவனாகும். இவ்வாறு 'இல்லை' 'இல்லை' என் திருப்பியனுப்பியவர்களே இப்பொழுது மற்றவர்களிடம் யாசிக்கும் நிலைக்கு தள்ளப்படுகிறார்கள்.

அக்ஷரத்வயம் அப்யஸ்தம் நாஸ்தி நாஸ்தீதி யத் புரா |
ததிதம் தேஹி தேஹீதி விபரீதம் உபஸ்திதம் ||*13

யாசிப்பவர்களை இல்லையென பதிலுரைத்து திருப்பி அனுப்பு பவர்களுக்கு இது ஒரு எச்சரிக்கையாக இருக்கட்டும். அப்படி இல்லை என்றுரைத்து திருப்பி அனுபபுவோர்கள் அடுத்த பிறவியில் பிறரிடம் யாசிக்கும் நிலைக்கு தள்ளப்படுவார்கள். இப்பரிந்துரையே ஒருவனை நல்வழியில் நடத்திச்சென்று தேவையுள்ளவர்களுக்கு பகிர்ந்துகொடுக்கும் தன்மையை வளர்த்திடும். தானம் வழங்குதல் என்பது இந்தியர்களுக்கு ஒரு மேலான வழி என்பது மாத்திரமல்ல. இது சமூகத்தில் உள்ளோரின் துன்பங்களையும் துயரங்களையும் நீக்கி தாழ்த்தப்பட்டவர்களுக்கும், வசதியற்றவர்களுக்கும் ஏழை எளியவர்களுக்கும் வாழ்க்கையில் மகிழ்ச்சியை அளிப்பதுடன் அவனும் வாழ்க்கையில் மேன்மையடைந்து தனது சிந்தனைகளையும் எண்ணங்களையும் மேலானதாக வளர்த்து நற்பண்புகளையும் வளர்த்து ஆன்மீகத்திலும் உயர்ந்திட வழி வகுக்கிறது.

இது மகிழ்ச்சியையும் மனநிறைவையும் அளிப்பதுடன் தான் செய்த வினைகளின் பலனை தான் அடைவதென்பது உறுதியானது அதிலிருந்து தப்ப இயலாது என்ற எண்ணத்தையும் உறுதிப்படுத்து கிறது. இக்காரணத்தை கொண்டாவது ஒருவன் யாசகர்களை தன்னிடம் ஒன்றுமில்லை என்று கூறி திருப்பியனுப்புதல் கூடாது.

ஒருவன் தான் கொடுப்பேன் என்று வாக்களித்திருந்தால் எந்நிலை யிலும் அதை மீறுதல் கூடாது. அதை எக்காரணத்தைக் கொண்டும் மீறுதல் கூடாது. ஏனெனில் அது பயங்கரமான விளைவுகளை ஏற்படுத்தும். அக்னி புராணத்தில் 'ஒருவன் தெய்வங்களுக்கோ, ஆசான்களுக்கோ, பெற்றோர்களுக்கோ கொடுப்பதாக வாக்குறுதி அளித்து பின்னர் அவ்வாக்கை நிறைவேற்றாவிடில் அவனது நூறு தலைமுறைகளும் அழிவடையும்.

குலானாம் து ஸதம் ஹன்தாதப்ரயச்சன் ப்ரதிஸ்ருதம் |
தேவானாம் ச குரூணாம் ச மாதாபித்ரோஸ்ததைவ ச ||*14

தகுந்த உசிதமான ஒருவருக்கு (பாத்திரம்) அளிக்கப்படாத, சென்றடையாத தானங்களினால் நன்மை ஏற்படுவதில்லை. தகுந்த நபர்களுக்கு அளிக்க வேண்டியது இன்றியமையாதது என்பதை நம் மறைநூல்கள் மீண்டும் மீண்டும் வற்புறுத்தி கூறுகின்றன. 'பாத்ரப்ரதிகதா வித்யா பாத்ரப்ரதிகதம் தனம்' கல்வியும் சரி செல்வமும் சரி தகுந்த நபருக்கு அளிக்க வேண்டும். உசிதமற்ற தகாதவர்களுக்கு அளிக்கப்படும் தானம் தகாத, வேண்டாத பலனையே அளித்திடும்.

'குபாத்ரேஷு ததா தத்தம் தானம் குபலதம் பவேத்'*15

கொடையளித்தல் என்பது மிகவும் உயர்ந்த உத்தமமான குணமாகும். அக்கொடையாளிகள், வள்ளல்கள் தனக்கென்று எதையுமே வைத்துக்கொள்ளாமல் செல்வத்தை மாத்திரமன்றி மனைவி மக்களைக்கூட பிறருக்கு தானம் செய்துள்ளனர். 'யாசகேப்யோ ததாதி அர்தம் பார்யா புத்ராதிகம் து அபி ன ஸங்க்ருண்ணாதி ச யத்கிஞ்சித் தானஸீல: ஸ உச்யதே'*16

அப்படிப்பட்ட வள்ளல்கள் பலரது நிகழ்ச்சிகள் நமது இந்திய பரம்பரையில் கூறப்பட்டுள்ளது. ததீசி, பலி, கர்ணன், முதலியோர் வரலாற்றில் அவர்களது குணங்களினால் அழிக்கமுடியா நிரந்தரமான இடம் பெற்றுள்ளனர். தலைமுறை தலைமுறையாய் பல்லாயிரக்கணக்கான மக்கள் பல நூற்றாண்டுகளாய் அவர்களைப் போற்றிட வரலாற்றில் அழியா பெயரும் இடமும் பெற்றுள்ளனர்.

கர்ணனை அவனது தந்தையான சூரியபகவான் அவன் இருப்பிடம் வந்து இந்திரன் ஒரு யாசகனாக வந்து உன்னிடம் யாசகம் கேட்பார் என்று எச்சரித்தார். இருந்தும் நடப்புகளை நன்கு அறிந்திருந்தும்கூட கர்ணன் தன் உடலின் பாகமாகவே அமைந்த கவசத்தையும் குண்டலத்தையும் தன் தசையிலிருந்து வெட்டி எடுத்துக் கொடுத்தான். இது அவனுக்கு அத்தனை வேதனையும் வலியும் அளித்தபோதிலும்கூட தன்னிடம் வந்து யாசிப்பவருக்கு வேண்டியதைக் கொடுக்காமல் திருப்பியனுப்புவது சரியல்ல என்ற தனது சபதத்தைக் காத்திடவே இவ்வாறு செய்தான்.

இந்த தியாகமானது மிகவும் மேம்பட்டதாகும் ஏனெனில் போருக்குச் செல்லுகையில் உடலுடன் பிறந்த இயற்கையான இக்கவச குண்டலங்களே அவனை தன் பகைவர்களிடமிருந்து

காத்துக்கொள்ள அவசியமாயிருந்தது. அவை இயற்கையாய் அமைந்திருந்ததால் அதனை பிரித்துக்கொடுக்கமாட்டேன் என்று கூறியிருந்தால் அது அவனுக்கு மிகவும் பயனுள்ளதர்க அமைந்திருக்கும். யாசகன் ஒருவனை இல்லை என்று திருப்பியனுப்பு வதில்லை என்ற சபதமே அவர்களை பல கொடுமையான சோதனை களுக்கு ஆளாக்கியது.

இப்படிப்பட்ட குணம் இல்லையென்றால் பலியும், வாமன உருவில் வந்து மூவடி மண்ணே வேண்டுமென கேட்ட விஷ்ணுவினால் ஏமாற்றப்பட்டிருக்கமாட்டான். இவ்வாறு பலி ஒப்புக்கொண்டதால் யாசகன் தன்னுருவை பெரியதாக மாற்றி இரண்டடியில் பூமியையும் விண்ணையும் அளந்துவிட்டு மூன்றாவது அடியால் கொடையாளி வள்ளலை பாதாளத்திற்கு தள்ளிவிட்டான்.

இந்திரன், வ்ருத்திரன் முதலிய அசுரர்களை வென்றிட ததீசி முனிவரிடம் சென்று அவரது முகுகெலும்பைத் தரும்படி யாசித்திட அவரும் தன் எலும்புகளைக் கொடுத்திட விசுவகர்மா அவ்வெலும்பு களைக் கொண்டு ஒரு வச்சிராயுதத்தை செய்துகொடுக்க இந்திரன் வ்ருத்திரன் முதலிய அரக்கர்களக் கொன்றுவிட்டான்.

'கொடு' என்ற சொல் மன்னன் திலீபனின் அரண்மனையில் கேட்பதற்கு கிடைப்பதேயில்லை என்கிறார். (மூன்று சொற்கள் அவரது அரண்மனையில் எப்பொழுதும் எதிரொலித்துக்கொண்டே இருக்கும். அவை மந்திரங்களின் ஒலி, வில்லின் நாணேற்றும் ஒலி, 'கொடுக்கப்படட்டும்' என்ற ஒலி ('த்ரயோ கோஷா ந ஜீர்யந்தி திலீபஸ்ய நிவஸனே மந்த்ரகோஷோ தனுர்கோஷோ தீயதாம் இதி வை த்ரய:').

சடங்குகளை செய்யும் முறைகளைக் கொண்ட நூலில் 'விச்வஜித்' என்றொரு வேள்வி இருக்கிறது. அவ்வேள்வியை செய்யும் மன்னன் தான் திக்விஜயம் செய்து சேகரித்த செல்வங்கள் யாவற்றையும் தனக்கென ஒரு சிறு பகுதியும் வைத்துக்கொள்ளாமல் தன்னை ஆண்டியாக செய்துகொண்டு தானம் செய்துவிடுவது வழக்கம்.

காளிதாசன் தான் இயற்றிய ரகுவம்சத்தில்''*17 அரசன் ரகு எல்லா திசைகளையும் வென்று வந்ததால் விச்வஜித் என்ற இந்த வேள்வியை செய்ய முற்படுகிறான். மன்னன் தன்னிடமிருந்த யாவற்றையும் தானம் செய்துவிட்டு நிற்கையில் ஒரு முனிகுமரன் தன் கல்வியை முடித்துவிட்டதால் தனது ஆசானுக்கு குருதக்ஷிணை கொடுக்க தன்

கையில் செல்வமில்லாததால் அப்புனித பணிக்கு மன்னனிடம் வந்து பதிநான்கு கோடி மதிப்புள்ள செல்வத்தை யாசிக்கிறான். அம்முனி குமரனது வேண்டுகோளை பூர்த்திசெய்வதற்காக ரகு மன்னன் செல்வத்திற்கு தேவதையான குபேரனிடம் சென்று மறுநாள் அவனை ஆக்கிரமித்து செல்வம் திரட்டுவதாக இருந்தான்.

ஆனால் மறுநாள் காலை விடியும் முன்னரே கஜானாவில் தங்கமழை பொழிந்ததாம். அரசன் மகிழ்ச்சியுடன் முழு செல்வத்தையும் அம்மாணாக்கனிடம் கொடுக்க, மாணாக்கனோ தனக்கு அவ்வளவு செல்வம் தேவையில்லை எனவும், தனக்குத்தேவையான தன் ஆசானுக்குக் கொடுக்க வேண்டிய செல்வத்தை மாத்திரம் எடுத்துக்கொள்வதாகக் கூறினான். ஆனால் மன்னனோ எஞ்சிய செல்வத்தைக் கொண்டு ஆசானின் ஆசிரம தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளவும் எனக்கூறி கொடுத்தான்.

செல்வத்துக்கு மூன்றே வழிகள் உள்ளன. ஒன்று தானமளித்தல், இரண்டாவது நன்கு அனுபவித்தல், மூன்றாவதோ வீணாக செல்வதே ஆகும். ஒருவன் தானமும் அளிக்காமல் தானும் அனுபவிக்காமல் போனால் அது வீணானதாகவே ஆகிறது.

> தானம் போகோ நாஸ: திஸ்ரோ கதயோ பவந்தி வித்தஸ்ய |
> யோ ந ததாதி ந புங்க்தே தஸ்ய த்ருதீயோ கதிர்பவேத் ||"*18

கல்வி நிறுவனங்கள் தனியார் அளிக்கும் கொடைகளினால் நடத்தப்பட்டு வந்ததென்பது இந்தியாவின் பணடைகாலம் முதல் இருந்துவந்த ஒரு வழிமுறையாகும். அரசாங்கத்திற்கு இதில் பங்கேதும் இருக்கவில்லை. குருகுலங்கள், பாடசாலைகள், சதுர்பாடிகள், டோல்கள் தற்காலத்தில் உள்ளதுபோல் வள்ளல்களின் கொடையினாலேயே நடத்தப்பட்டு வந்தன.

இந்தவிதமான ஏற்பாடுகள் இன்றும் ஆசிரமங்களை நடத்திடும் பழக்கத்தில் உள்ளதே. முன்காலத்தைப் போலவே இக்காலத்திலும் சிறிய அளவுகளில் பழக்கத்தில் உள்ளன. தரும கைங்கரியமாக தங்கும் விடுதிகள் அமைக்கப்படுகின்றன. பயணிகள் தங்க தருமசாலைகள், பசித்து வருபவர்களுக்கு இலவசமாக உணவளித்தல், தாகம் தீர்த்திட தண்ணீர் பந்தல்கள் அமைக்கப்படுகின்றன. வறுமையால் வாடுபவர்களுக்கு பிச்சையிடுதல் இன்றும் செய்யப்பட்டு வருகின்றன. தானம் செய்வதின் உயர்ந்த சிறந்த பலன்களை எடுத்துரைத்தல் செல்வந்தர்களையும், வசதிபெற்ற வளம்மிக்க

வாழ்பவர்களையும் இப்படிப்பட்ட தானதரும காரியங்களில் ஈடுபடுத்தத் தூண்டுகிறது.

பழங்காலத்திலேயே அதுவும் உபநிஷத காலத்திலேயே முனிவர்கள் உணவு தானியங்களை அதிகமாக பெற்றிருக்க வேண்டும், சேகரித்து வைக்கவேண்டுமென்றும் எடுத்துரைக்கின்றன. 'அன்னம் பஹூ குர்வீத | தத்வ்ரதம்' என்று தைதரீய உபநிஷதம் (3.9) எடுத்துரைக்கிறது. அதே உபநிஷதம் பின்னர் எவருக்கும் உணவு இல்லை என்று மறுத்துக் கூறக்கூடாது என்றும் கூறுகிறது. வீட்டிற்கு எவர் வரினும் அவருக்கு உணவு வழங்கிட வேண்டும். இவ்விரதத்தை எல்லோரும் கடைப்பிடித்தல் வேண்டும். 'நகஞ்சனவஸதௌ ப்ரத்யாசக்ஷீத, தத்வ்ரதம்' | (3.10).

ரிக் வேதத்தின் ஒரு மந்திரத்தில் ஒருவன் பிறருக்கு உணவளிக்க விரும்பவில்லையாகில், அவ்வுணவால் அவனுக்கு ஒரு பயனும் இல்லை. அது அவன் கொலை செய்வதற்கு சமமானதே. அவன் தெய்வத்தையும் மகிழ்ச்சியடையச் செய்வதில்லை. தன்னுற்ற நண்பர்களையும் மகிழ்ச்சியடையச் செய்வதில்லை. தனியாக ஒருவன் உணவை உண்பானாகில் அவன் பாபத்தையே உண்பதாகும்.

மோகம் அன்னம் விந்ததே அப்ரசேதா
ஸத்யம் ப்ரவீமி வத ஏவ தஸ்ய |
நார்யமணம் புஷ்யதி நோ ஸகாயம்
கேவலாகோ பவதி கேவலாதீ ||'[19]

இந்த ஒரு மந்திரம் மாத்திரமல்ல இதுபோல ஒன்பது மந்திரங்களைக் கொண்ட தெய்வீக தோத்திரம் முழுவதுமே தானம் வழங்க வேண்டுமென உபதேசிக்கிறது. உணவின்றி பசியினால் வாடுபவர்களுக்கும் போதுமான அளவு அருந்த உணவில்லாதவர்களுக்கும் தங்களது உணவை பகிர்ந்துகொள்ள வேண்டுமென்று அறிவுரை வழங்குகிறது. 10.117.1 மந்திரத்தில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது. 'பசி மரணமாகும். எவனொருவன் பிறன் ஒருவனுக்கும் உணவளிக்காமல் தானே உண்கிறானோ அவன் மரணத்தை நோக்கி விரைவாகச் செல்கிறான். பிறருடன் உணவை பகிர்ந்துகொள்பவன் அழிவதில்லை. பிறருக்கு உணவளிக்காதவனுக்கு உதவியளிக்கவோ அல்லது மகிழ்ச்சியளிக்கவோ ஒருவரும் இருப்பதில்லை.'

அதே மந்திரத் தொகுப்பில் மற்றுமொரு மந்திரத்தில் மற்றவர்கள் கொடுக்கட்டுமே என்ற எண்ணத்துடன் இருப்பவர்களைப் பற்றி

கூறுகிறார். 'கவனமாக நினைவில் வைத்துக்கொள். ஒரு பணியை திறம்படச் செய்வதற்கு ஒரே மாதிரியாக, இருவர் இருப்பதில்லை. இரண்டு பசுக்கள் ஒரே அளவில் பால் கொடுப்பதில்லை. இரட்டையர்களில் இருவரும் ஒரே அளவான சக்தியும் திறனும் படைத்தவர்களல்ல. ஒரே குடும்பத்திலுள்ள அங்கத்தினர்கள் எல்லோருமே ஒரேவிதமான தருமசிந்தனை உடையவர்களாய் இருப்பதில்லை. அதனால் ஒருவனிடம் சிறிது உணவிருக்குமாகில் அதை மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்ள வேண்டும்.'

இந்த கருத்தையே மேலும் 'உணவு வேண்டியவர்களுக்கு உணவளிக்காதவனுக்கும், வீட்டிற்கு வந்த விருந்தாளிக்கு உணவளிக்காதவனும் மகிழ்ச்சி அடைவதேயில்லை. ஒருவன் தனது பிடிவாத குணத்தினால் யாசகர்களுக்கு உணவளிக்காதவன், விருந்தாளி எதிரிலேயே தான் உணவு உண்பவன் ஒருபொழுதும் மனமகிழ்ச்சி அடைவதில்லை.'

உணவை மனிதர்களுடன் மாத்திரம் பகிர்ந்துகொள்ள வேண்டும் என்பதில்லை. ஒருவன் தான் உணவருந்தும் முன்னர் பறவைகள், பூச்சிகள், விலங்களுக்குக்கூட உணவளிக்க வேண்டும். சம்பிரதாய வைதிக முறையில் வாழ்க்கை நடத்துபவர்கள் இன்றும் 'பஞ்சகிராசா' என்னும் ஐந்து கபள உணவை எடுத்து வைக்கும் வழக்கத்தை அனுசரிக்கிறார்கள்.

இதன் மூல கருத்து பிருஹதாரண்யகோபனிஷத்ததில் கூறியுள்ளபடி உணவென்பது எல்லோருக்காகவும் அளிக்கப்பட்டது என்பதேயாகும். படைக்கும் கடவுள் எல்லோருக்காகவுமே இதை படைத்துள்ளார். 'இதமேவாஸ்ய தத் ஸாதாரணம் அன்னம் யதிதம் அத்யதே''*20 இக்கருத்தை ஒட்டியே கீதையிலும் கூறியுள்ளார். தன் ஒருவனுக்காக சமைப்பவன் பாபியாவான். அவன் உண்பதும் பாபமேயாகும். 'புஞ்ஜதே தே து அகம் பாபா யே பசந்தி ஆத்மகாரணாத்''*21 பிரபஞ்சத்தில் மனிதனும் ஒரு பகுதியாவான். இதிலிருந்து எவைகளையெல்லாம் அவன் பெறுகிறானோ அவைகளையெல்லாம் அவன் எல்லோருடனும் பகிர்ந்துகொள்ள வேண்டும்.

தானம் வழங்குவதை இவ்வளவு பெருமைகொண்டதாக நம் முன்னோர்கள் குறிப்பிட்டிடினும் அதற்கான சில நடைமுறை விளக்கங்களையும் கொடுத்துள்ளனர். இவை மூன்று விதமானவையாகும். செல்வம் முதற்கண் தான் சம்பாதித்து ஈட்டியதாக இருக்க வேண்டும். இரண்டாவதாக தன்னால் எவ்வளவு இயலுமோ அதற்குள்ளாகவே கொடுக்க வேண்டும். ஏனெனில் கொடுத்த பின்பு

அதைப்பற்றி பச்சாத்தாபம் கொள்ளலாகாது. 'தானம் ஸத்வமிதம் தத்யான் ந பஸ்சாத்தாபதூஷிதம்''*22 மூன்றாவது, செல்வத்தை தானமளித்தல். தனக்கோ தன்னைச் சார்ந்தவர்களுக்கோ தொந்தரவையும் கஷ்டத்தையும் கொடுக்கக்கூடாது.

அபராபாதம் அக்லேஸம் ஸ்வயத்னேனார்ஜிதம் தானம்
ஸ்வல்பம் வா விபுலம் வாபி தேயமிதி அபிதீயதே ||
ஸக்தேபரஜனே தாதா ஸ்வஜனே து:கஜீவினீ |
மத்வாபானவிஷாதா: ஸ தர்மாணாம் ப்ரதிரூபக: ||'*23

'தன் குடும்பத்தவர்களே செல்வமின்றி வருந்திட, போதுமான செல்வம் கொண்டவர்கள் தன்னிடமுள்ள செல்வத்தை பிறருடன் பகிர்ந்து கொள்ளுதல் வெறும் பெயரளவிற்கே தானம் அளிபவர்களாகி போலி தருமாத்மாக்களாவார்கள். அவர்கள் மது அருந்துபவர்களும், விஷம் விழுங்குபவர்களுமாவார்கள்.'

பழம் பெரும் நூல்களோ தான் யாசிக்கும் நிலையிலிருந்தாலும்கூட ஒருவன் தானம் பெருதலை தவிர்க்க வேண்டும். 'ப்ரதிக்ரஹஸமர்தோபி ந ப்ரஸஜ்யேத பரிக்ரஹே''*24 அப்படிப்பட்ட ஒருவன் வள்ளல்களும் பெரும் கொடையாளிகளும் பெரும் உயர்ந்த மேலான உலகங்களை அடைகிறான்.

தானமளித்தல் என்பது இந்தியர்களின் மையமானதொரு கருத்தாகும். இது ஒரு கடமையாகும். 'தானம் தர்ம:'*25 இதை ஒருவன் கடமையாக ஆற்றிடல் வேண்டும். இதுவன்றி நல்ல பெயரும் புகழும் கிட்டாது. 'ந தானேன வினா யஸ:'*26 தானம் என்பது தானே தன் விருப்பப்படி சிரித்த முகத்துடன் அளித்தல் வேண்டும். 'ஸ்மிதேன' கௌரவத்துடன் கொடுக்க வேண்டும் 'ஸத்காரபூர்வம்'*27 தானம் அளிக்காதவனை நிந்திப்பதற்கு போதுமான சொற்கள் இல்லை.

அவன் இப்புவிக்கு மரத்தைக் காட்டிலும், மலைகளைக் காட்டிலும், கடல்களைக் காட்டிலும் அதிக பாரமானவன். 'தேன பூமிரதிபாரவதீயம் ந த்ருமை:, ந கிரிபி: ந ஸமுத்ரை:'*28 'அராதி' என்பதற்கு 'பகைவன்' என்ற பொருள்கொண்ட மூன்றெழுத்துச் சொல்லை தவிர வேறு எதையும் சொல்வதற்கில்லை .இச்சொல்லின் பிறப்பான வேர்ச்சொல்லின் பொருள்படி 'ஒன்றும் தானம் அளிக்காத ஒருவன்' 'நாஸ்தி ராதிர்தானம் யஸ்ய' என்பதாகும். இந்திய சமுதாயம் அப்படிப்பட்ட ஒருவனை .பகைவனாகவே கருதுகிறது.

## மேற்கோள்கள்

1. *sarvaarthasiddhi* 6.12
2. *Tatvarthasutra* 7.38
3. *tattiriyopanisad* 1.11
4. 17.20
5. 17.21
6. 17.22
7. *Ma kau* 4.55-61
8. 1.8
9. *Agnipurana* 211.54
10 *Raghuvamsa* 1.18
11 *Atharvaveda* 3.24.5
12 *Naisadhiyacarita* 5.83
13 *Skandapurana Ma Kau* 2.65
14 209.29
15 *padmapurana* 3.71
16 *Sukraniti* 2.178
17 *Fifth Canto*
18 *Hitopadesa Mitralabha* 161
19 *Rgveda* 10.117.6
20 1.5.2
21 3.13
22 *Carucarya* 18
23 *Skandapurana Ma Kau* 4.67. *Also for similaridea see yajnavalkyasmrti* 1.10.213
24 *yajnavalkyasmrti* 1.10.213
25 *Canakyasutra* 155
26 *Sabharanjanasataka* 42
27 *Nitidvisastika* 28
28 *Naisadhiyacarita* 5.88

# 5

# ஆசாரம் (அல்லது) சதாசாரம்

## நன்னடத்தை

இந்தியக் கலாசாரம் நடத்தை அதாவது நன்னடத்தை மிகவும் இன்றியமையாதது என்று அறிவுறுத்தி அதை மனித நெறிகளில் மிகவும் உயர்ந்ததாகக் குறிப்பிடுகிறது. 'ஆசாரோ பரமோ தர்ம:'*[1] ஒருவன் நன்னடத்தையைக் கடைப்பிடிக்காவிடில் மிகவும் பவித்திரமெனவும், பாவனமெனவும் தூய்மையானதுமான வேதங்களும் அவனைக் காப்பாற்ற இயலாது 'ஆசாரஹீனம் ந புநந்தி வேதா:'*[2]

சாத்திரங்கள் நன்னடத்தையை மிகவும் உயர்ந்ததாகப் போற்றிப் புகழ்கின்றன. நன்னடத்தை என்பது நூல்களில் பரம்பரையாக சட்டங்களாகத் தொகுக்கப்பட்டு வந்த சில தூய்மையான கோட்பாடுகள் ஆகும்.சமுதாயத்தை மேன்மையடையச் செய்வ தற்கும், ஒருவன் தனது தனிப்பட்ட ஒழுக்கங்களைப் பாதுகாக்கவும், தன்னை சமுதாயத்துடன் இணைத்து நடத்திசெல்வதற்கும், சமுதாயத்தை நேர்மையாகவும், சீராகவும் நடத்திச்செல்லவும் அவை பயன்படுகின்றன.

ஒரு தனி மனிதனின் நன்னடத்தை என்பது சமுதாயத்தை மேன்மை யடையச் செய்வதில் அவனுடையப் பங்கை பொருத்ததாகும். காலத்தினால் சோதிக்கப்பட்டதும் பல காலமாக பழக்கத்தில் இருந்து வருவதுமான ஆசாரங்களை அனுசரிப்பதால் ஒருவன் மிகவும் அதிக அமைதியுடன் வாழ்க்கை நடத்த இயலும். இந்த ஆசாரம் - நன்னடத்தை என்பது தன்னுள்ளிருந்து வெளிப்பட்டு தன்னை கட்டுக்குள் இருப்பதற்கு பயன்படும் கோட்பாடுகளாகும். இதை நன்கு அனுசரிப்பவன் எப்பொழுதுமே தூய்மையாகவும் மகிழ்ச்சியுடனும் இருப்பான் என தேவீ பாகவதம் கூறுகிறது..

'ஆசாரவான் ஸதா பூத: ஆசாரவான் ஸதா ஸுகீ'[*3]

ஆசாரமற்ற ஒருவன் நல்லகுறிகளை அடையாளங்களாகப் பெற்றிருந்தாலும் நல்லறிவையோ அல்லது தானடைய விரும்பும் இலக்கையோ ஒருபொழுதும் அடையமாட்டான். அவன் நரகத்தையே அடைவான்.

ஸர்வலக்ஷணயுக்தோபி நரஸ்து ஆசாரவர்ஜித: |
ந ப்ராப்னோதி ததா வித்யாம் ந ச கிஞ்சித் அபீப்ஸிதம் ||[*4]

நன்னடத்தைகொண்டோன் 'ஆசாரவான் புருஷ:' சுவர்கத்தை அனுபவிப்பதுடன், கீர்த்தி. நீண்ட ஆயுள், மரியாதை, உலக இன்பம் முதலிய யாவற்றையும் அடைகிறான்.

ஆசார: ஸ்வர்கஜனன ஆசார: கீர்திவர்தன:|
ஆசாரஸ்ச ததாயுஷ்யோ தன்யோ லோகஸுகாவஹ:||[*5]
ஆசாரயுக்தோ த்ரிதிவம் ப்ரயாதி
ஆசாரவுான் ஏவ பவதி அரோக:|
ஆசாரவான் ஏவ சிரம் து ஜீவேத்
ஆசாரவான் ஏவ புனக்தி லக்ஷ்மீம் ||[*6]

மனு, நன்னடத்தையை தருமத்தின் ஒரு கூறாகக் கருதுகிறார். 'ஆசாரப்ரபவோ தர்ம:'

இப்படி 'ஆசாரம்' நன்னடத்தையை பற்றி வெகுவாகப் புகழ்ந்து பேசுவதைக் காணுகையில் ஆசாரம் நன்னடத்தை என்றால் என்ன என்ற கேள்வியே எழுகிறது. இதன் மூலக்கருச்சொற்கள் இரண்டாகும். 'ஆசர்யதே அனேன' 'எந்நடத்தையினால் வாழ்க்கை நடத்தப்படு கிறதோ' அது ஒன்று. மற்றையது 'ஒருவன் வாழ்க்கையில் எதைப் பின்பற்றி நடத்துகிறானோ' 'ஆசரதி அஸ்மின்' அதுவே ஆசாரம் என்பதாகும்.

மனு தான் இயற்றிய நூலில் இதை மிகவும் வற்புறுத்தி இன்றியமை யாததென கூறுவதுடன் 'என்றும் அழிவின்றி (ஸாஸ்வத) இருக்கும் நடத்தை' சாசுவதமான நடத்தை 'ஆசாரஸ்சைவ ஸாஸ்வத:'[*7] என்கிறார். மனுநீதியின் உரையாசிரியர் குல்லக என்பவர் 'ஸாஸ்வத:' என்பதற்கு வாழையடி வாழையாகக் கடைப்பிடித்து வந்த விதிகள் 'பரம்பரயாகத' என்கிறார். இங்கு அவர் மேலும் கூறுவதாவது, இது சாதாரண விதிகளின் சட்டத்தைக் கடந்ததாகும். இவைகளையே தன்னை யாரென அறிவுறுத்தும் புனித நூல்களும்

கற்றுக்கொடுக்கின்றன. 'ஸ்ருத்யுக்த: ஸ்மார்த்த ஏவ ச'*8 தன் மரியாதை யையும் நன்கு அறிந்து காப்பாற்றுபவனும் விழிப்புணர்ச்சியுடன் இவைகளை ஜாக்கிரதையாகக் காப்பாற்றி அனுசரித்திட வேண்டும். 'தஸ்மாத் அஸ்மின் ஸதா யுக்தோ நித்யம் ஸ்யாத் ஆத்மவான் த்விஜ:' *9

ஒரு பிராம்மணன் நன்னடத்தையின் விதிமுறைகளை பின்பற்றவில்லை யாகில் (ஆசார) மறைகள் ஓதிய பலனை அவன் அடைவதில்லை. ஆனால் நன்னடத்தையின் விதிகளைப் பின்பற்றுபவன் முழுவதுமான பலனை அடைகிறான். மகாபாரதத்தில் கூறியுள்ளது என்னவென்றால் நன்னடத்தையற்றவனை கூண்டிலிருந்து இறக்கை முளைத்த பறவைகள் வெளிச்செல்வதுபோல் வேத மந்திரங்களும் மரணத்தருவாயில் விட்டுச் சென்றுவிடும். 'நீடம் ஸகுந்த இவ ஜாதபக்ஷஸ்ச சந்தாம்ஸி ஏனம் ப்ரஜஹதி அந்தகாலே'*10

சதாசாரமென்பது ஆசாரமேயாகும். ஆயினும் 'சத்' என்பதற்கு பிறிதொரு பொருளும் விவரிக்கப்படுகிறது. இது ஒரு தொகைச்சொல்லாகும். இச்சொல்லை மூன்றுவிதமாகப் பிரித்திடலாம். 'ஸம் கஸாவ் அசாரஹ் கா ஸதாசார:'; ஸத் என்றால் நல்லது என்ற பொருளாகும். அதனால் ஸதாசார என்றால் நன்னடத்தை யாகும். மூன்றாவது 'ஸதாம் ஆசார: (ஸாதூனாம் ஆசார: இதி ஸதாசார:)' மகான்களின் நடத்தை ஆகும்.

இத்தொகை சொல்லின் பொருள், விஷ்ணு புராணத்தில் இவ்வாறு ஏற்கப்பட்டுள்ளது. அதன்படி 'ஸாதவ: க்ஷீணதோஷாஸ்து ஸச்சப்த: ஸாதுவாசக: தேஷாம் ஆசரணம் யத் து ஸதாசார: ஸ உச்யதே'.*11 'ஸாது' என்றால் மேன்மக்கள், விருப்பு வெறுப்பு அற்றவர்கள், குற்றமற்றவர்கள். 'ஸத்' என்ற சொல் அப்படிப்பட்ட மேன்மக்களைக் குறிக்கிறது. அவர்களது நடத்தை ஆசார: நன்னடத்தை எனப்படும். மனுவின் கருத்துப்படி ஸதாசார: நன்னடத்தை என்பது 'ஸ்ருதிஸ்ம்ருத்யுதித'*12 புனிதமான பரம்பரையாக வந்த ஆன்மீக உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் நூல்களில் கூறப்பட்ட நடத்தையாகும். இதையே அவர் 'ஸதாசார:' நன்னடத்தை என்கிறார். 'ஸ்ருத்யுக்த: ஸ்மார்த்த ஏவ ச'*13 என்று சொற்களை மாற்றியமைத்து கூறுகிறார்.

இந்த தேசமானது தேவதைகளால் நிர்மாணிக்கப்பட்டது. இது சரஸ்வதி நதிக்கும் திருஷ்டவதி நதிக்கும் இடையில் அமைந்த நான்கு வருணத்தவர்களும் கலந்த ஆர்யாவர்தம்*14 என்ற இத்தேசத்தில் முறைப்படி வாழையடி வாழையாக அனுசரிக்கப்படும் பழக்கவழக்கங்கள் நன்னடத்தை எனப்படும். 'ஸதாசார உச்யதே'*15

நடத்தை நன்னடத்தை என்பது மூவகைப்படும். 'காயிக வாசிக மானஸிக' உடல், வாக்கு, உள்ளம் என மூன்று வழிகளினால் ஆகும். இதையே சமணர்களான ஜைனர்கள் 'ஸம்யக் ஞான ஸம்யக் த்ருஷ்டி, ஸம்யக் சாரித்ர' என்று கூறுகின்றனர். உடலை தூய்மையாய் வைப்பதென்பது, நீராடுதல் 'ஸ்னான', புலனடக்கம், பிரும்மசரிய விரதம் காத்தல் 'ப்ரம்மசர்ய', அகிம்சை 'அஹிம்ஸா', பிறருக்கு உதவுதல் 'ஸத்யபாஷண', பிறர் மனம் நோகாதவண்ணம் அன்புடன் பேசுதல் 'ப்ரியபாஷண', கடவுளைப் புகழ்ந்து பாடுதல், மறை நூல் ஓதுவது 'ஈஸ்வரஸ்தவன' ஆகியவை வாக்கினால் கடைப்பிடிக்கப்படும் நன்னடத்தையாகும்.

மென்மை, கருணை, மனவலிமை, கொள்கையை உறுதியாய் கடைப்பிடித்தல், மன்னித்தல், ஆறுவிதமான பலவீனங்களையும் தவிர்த்தல் (தோஷ) மனதினால் கடைப்பிடிக்கும் நன்னடத்தையாகும்.

பழங்காலத்து நூல்களிலெல்லாம் நன்னடத்தையை, ஆசாரத்தை அனுசரிப்பது மீண்டும் மீண்டும் வற்புறுத்திக் கூறப்பட்டுள்ளது. ப்றபல துறைகளிலுள்ள விஷயங்களை போதிப்பதுடன் ஆசான் தன் மாணாக்கர்களுக்கு நன்னடத்தையையும் போதிக்கவேண்டும். 'ஸதாசாரஸ்ச ஸிக்ஷயேத்' இன்னமும் கூறப்போனால், இது ஆசானின் முதற்கடமையாகும். ஏனெனில் அவர் ஆசார்யர், ஆசான் 'ஆசார்ய: கஸ்மாத், ஆசாரம் க்ராஹயதி'*16.

அவர் ஏன் அப்படி அழைக்கப்படுகிறார் என்றால் அவர் ஆசாரங்களை நன்னடத்தைகளைக் கற்பிக்கிறார். இவ்வாறு கற்பிப்பதுடன் அவர் தன் நடத்தையினால், தான் அனுசரிப்பதனால் அவர்கள் அவைகளை கற்கும்படி செய்தல் வேண்டும். அவர் அவைகளை அனுசரிப்பதற்கு ஒரு முன்னுதாரணமாய் இருத்தல் வேண்டும். மாணாக்கர்கள் தங்களது படிப்பை முடித்துவிட்டு கல்விக் கூடத்தைவிட்டு தன் வீட்டிற்குச் செல்லுகையில் ஆசான் கூறுகிறார் 'ஸத்யம் வத, தர்மம் சர, ஸ்வாத்யாயான் மா ப்ரமத, மாத்ரு தேவோ பவ, பித்ரு தேவோ பவ, ஆசார்ய தேவோ பவ, அதிதிதேவோ பவ'*17. உண்மை பேசு, தர்மத்தை அனுசரி, மறை நூல் ஓதுவதை உதாசீனம் செய்யாதே, தாயை தெய்வமாகக் கொண்டாடு, தந்தையை தெய்வமாகக் கொண்டாடு, ஆசானை தெய்வமாகக் கொண்டாடு, விருந்தாளியை தெய்வமாகக் கொண்டாடு.

இறுதியில் தன்னை ஒரு மானுடனாகவே நினைக்கின்றவராய், ஒருக்கால் தன் நன்னடத்தையில் ஏதேனும் பிசகு ஏற்பட்டிருக்கலாம்

என்றெண்ணுகிறவராய் தன் சீடர்களைப் பார்த்து தன்னிடமுள்ள நற்குணங்களை ஏற்க வேண்டுமென்றும் மற்றவைகளை விட்டுவிடும்படியும் எச்சரிக்கிறார். 'யானி அஸ்மாகம் ஸுசரிதானி தானி த்வயோபாஸ்யானி ந இதராணி'

அநேகமாக எல்லா நீதிநூல்களுமே வாழ்க்கையில் நாம் கடைப்பிடிக்க வேண்டிய நன்னெறிகளைப் பற்றி எடுத்துரைக்கின்றன. ஒவ்வொரு கதையிலும் நல்லதொரு நீதியைப் புகட்டும் பஞ்சதந்திரம், ஹிதோபதேசம் நீதிக்கதைகளும், கட்டுக்கதைகளும் நன்னடத்தையை வலியுறுத்துகின்றன .இந்திய விவேகத்தையும் அறிவையும் உறைவிடமாகக்கொண்ட மகாபாரதத்திலும் தனிமனிதனுக்கும், சமுதாயத்திற்கும் தேவையான பல லட்சிய மனித நன்னடத்தையை வலியுறுத்திக் கூறுகின்றன.

அதன் உடன்பிறப்பு போன்ற ராமாயணத்திலும் அவை உள்ளன. அவை நமக்கு எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்படும் நன்னடத்தைகள் 'ஸதாசார ஆசார' என்ன என்று எடுத்துக்கூறுகின்றன. இவைகளில் கூறப்பட்ட கருத்துகள் எல்லோருக்கும் எக்காலத்திற்கும் எந்த இடத்திற்கும் பொருந்துவதாகும். இதற்கு எடுத்துக்காட்டாக வயது முதிர்ந்தவர்களுக்கு மரியாதை அளித்தல் என்பதைக் கூறலாம். வயதில் சிறியவன் தன் மூச்சைப் பிடித்துக்கொண்டு தன்னிருக்கையை விட்டெழுந்து பெரியவர்களுக்கு தலை வணங்கி தன் மரியாதையை வெளிக்காட்ட வேண்டும்.

ஊர்த்வம் ப்ராணா ஹி உத்க்ராமந்தி யூன: ஸ்தாவிரா ஆயதி|
ப்ரத்யுத்தானாபிவாதாப்யாம் புனஸ்தான் ப்ரதிபத்யதே ||*18

இக்கருத்தை, பெரியவர்களுக்கு மரியாதை அளித்திடல் வேண்டும் என்பதை வற்புறுத்துவதற்காகவே மகாபாரதத்தில் பெரியவர்களை நீ என்று ஒருமையிலும் அதேபோல் அவர்களது பெயரிட்டழைத்தலும் அறவே மறுக்கப்பட்டுள்ளன. 'த்வங்காரம் நாமதேயம் ச ஜ்யேஷ்டானாம் பரிவர்ஜயேத்'*19 அதிதி தேவோ பவ' விருந்தாளியாக எவர் வரினும் அவருக்கு உரிய மரியாதை கொடுக்கப்பட வேண்டும். அவரை மலர்ந்த முகத்துடன், மகிழ்ச்சியான உள்ளத்துடன், இனிமையான சொற்களாலும் எதிர்கொண்டு அழைக்க வேண்டும். எழுந்து, அவரை அணுகி, அவருக்கு இருக்கை அளிக்க வேண்டும். அதுவே வகுக்கப்பட்ட அனுசரிக்கும் முறையாகும்.

சக்ஷுர்தத்யான் மனோதத்யான் வாசம் தத்யாச்ச ஸூன்ருதம்|
உத்தாய சாஸனம் தத்யாத் ஏஷ தர்ம: ஸனாதன: ||*20

நன்னடத்தை கொண்டோரின் இல்லங்களில் புல்லிற்கோ (இருக்கை பாய் முதலியன முடைவதற்கான), இடத்திற்கோ (அமரச் செய்வதற்கான), நீருக்கோ (கால்களை கழுவுவதற்கும் குடிப்பதற்குக் கொடுக்கவும்) இனிமையான அன்பான பேச்சிற்கோ குறைவொன்றும் ஏற்படுவதில்லை.

த்ருணானி பூமிருதகம் வாக் சதுர்தீ ச ஸூன்ருதா |
ஸதாம் ஏதானி கேஹேஷு நோச்சித்யன்தே கதாசன ||*21

விருந்தோம்பல், நம் இந்தியப் பண்பாட்டில் மிகவும் தோய்ந்திருப்ப தால் பகைவன் ஒருவன் விருந்தாளியாக இல்லத்திற்கு வந்தாலும் அவனுக்கு உரியபடி விருந்தோம்பல் அளித்திட வேண்டும் என்பதே நம் பண்பாடாகும்.

'அரௌ அபி உசிதம் கார்யம் ஆதித்யம் க்ருஹமாகதே'*22

பெண்களுக்கும் நல்ல பணிவன்புடன் கௌரவமளித்தல் வேண்டும் என்று நம் ஆசாரம் எடுத்துரைக்கிறது. இதற்கு எடுத்துக்காட்டு அநேக இடங்களில் எடுத்துக் கூறப்படும் 'யத்ர நார்யஸ்து பூஜ்யன்தே ரமன்தே தத்ர தேவதா:'*23

'பெண்கள் எங்கு கௌரவிக்கப்படுகிறார்களோ அங்கு எல்லா தேவதைகளும் மகிழ்ச்சியுடன் உறைகிறார்கள்' என்ற மனுவின் மேற்கோள் மாத்திரமல்ல, இதற்கு அத்தாட்சியாக மகாபாரதத்தில் அவர்களுக்கு உரிய மரியாதை கொடுக்கப்பட வேண்டும் என்று கூறப்பட்டிருப்பதிலிருந்தும் தெரியவருகிறது. இதே மரியாதை ஊனமுற்றோர்கள், குருடர்கள், செவிடர்கள், சுமைபாரத்தைச் சுமந்து செல்வோர்கள் இவர்களிடமும் காட்ட வேண்டும். மன்னன் எவ்வளவு உயர்ந்தவனாக இருந்திடினும் பிராம்மணனுக்கும் பெரிய அறிவாளிகளான ஞானியர்களுக்கும் பின்னரே இருத்தப்படுகிறான்.

'அ(ன்)ந்தஸ்ய பந்தா பதிரஸ்ய பந்தா
ஸ்த்ரிய: பந்தா பாரவாஹஸ்ய பந்தா
ராஞ: பந்தா ப்ரஹ்மணேனாஸமேத்ய
ஸமேத்ய து ப்ரஹ்மணஸ்யைவ பந்தா ||*24

இம்முறையே பசுக்கள், கர்ப்பிணிகள், வயது முதிர்ந்தவர்கள், பலவீனமானவர்கள் முதலியோர்க்கும் பொருந்தும். இங்கு கூறப்பட்ட இம்முறையை ஒரு சமுதாயத்தில் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள இயலாத ஒருவிதமான மக்களுக்கும்

அனுசரிக்கப்பட வேண்டும். அதுவே குடிமை உணர்வுகொண்ட சமுதாயமாகும். இது நன்னடத்தையாகும்.

தன்னைக் கேட்காதபொழுது பேசக்கூடாது என்பதும் நன்னடத்தையைச் சேர்ந்ததாகும். அதைப்போலவே எவராலோ கேட்கப்பட்ட கேள்விக்கு கெட்ட எண்ணத்துடன் தானாக பதிலுரைத்தலும் தகாத ஒன்றாகும். 'நாப்ருஷ்ட: கஸ்யசித் ப்ரூயான் ன சான்யாயேன ப்ருச்சத:'*25 அதைப்போலவே ஒரு கூட்டத்தில் அல்லது சபையில் சரியான பொருத்தமான பதிலை எடுத்துரைக்க வேண்டும். அவ்வாறில்லாமல் வாய் திறக்காமல் இருத்தலோ அல்லது தவறான பதிலுரைத்தலோ பாபத்தை உண்டுபண்ணும்.

ஸபாம் வா ந ப்ரவேஷ்டவ்யம் வக்தவ்யம் வா ஸமஞ்ஜஸம் |
அப்ருவன் விப்ருவன் வாபி நரோ பவதி கில்பிஷ: ||*26

மேலும் இந்நாட்களில் இருப்பதுபோல் கழிவறைகள் அந்நாட்களில் இல்லையாதலால், இந்தியாவின் கிராமப்புரங்களில் இன்றும் வெளியிடங்களில் மலம் கழித்தல் பழக்கத்தில் இருப்பதுபோல் அன்றும் திறந்தவெளிகளில் மலஜலம் கழித்தனர். போதுமான சுகாதாரத்தை காக்கவும், சுற்றுச்சூழலைக் காக்கவும் சிறுநீர் கழிக்கவும் மலம் கழிக்கவும் சில விதிமுறைகளை அனுசரித்து வந்தனர். மக்கள் வசிக்கும் இடங்களின் அருகாமையில் இல்லாமல் தொலைதூரத்தில் சிறுநீர் கழிக்க வேண்டும் என்ற கொள்கையைப் பின்பற்றினர்.

அதேபோல் சூரியன் இருக்கும் திசையிலும், நெருப்பு, பசுக்கள், அந்தணர்கள் வரும் வழியில், நடுப்பாதையிலும், தண்ணீரிலும் சிறுநீர் கழிக்கக்கூடாதென்ற விதிமுறையைப் பின்பற்றினர். நீர்த்தேக்கத்தில் மலம் கழித்தலோ, சிறுநீர் கழித்தலோ அல்லது எச்சில் துப்புவதோ அல்லது உடலில் ஆடையின்றி நீராடுவதோ தடை செய்யப்பட்டது. கால் கழுவிய தண்ணீரையும், உணவுப் பொருட்களில் எஞ்சியவைகளையும் வசிக்கும் இல்லங்களிலிருந்து வெகு தொலைவில் எறியப்பட வேண்டும்.

தூராத் ஆவஸதான் மூத்ரம் தூராத் பாதாவஸேசனம் |
உச்சிஷ்டோத்ஸர்ஜனம் சைவ தூரே கார்யம் ஹிதைஷிண: ||*27

சந்தி நேரத்தில் உறங்குவதோ, படிப்பதோ, உண்பதோ முற்றிலும் மறுக்கப்பட்டது.

ஸந்த்யாயாம் ந ஸ்வபேத் ராஜன் வித்யாம் ந ச ஸமாசரேத் |
ந புஞ்ஜீத ச மேதாவீ ததாயுர்விந்ததே மஹத் ||*28

ராமாயணத்தில் பரதன், ராமனைக் காட்டுக்கு அனுப்பவதில் தான் பங்குகொள்ளவில்லை என்பதை தெளிவுபடுத்த பல சபதங்களை மேற்கொள்கிறான். அச்சந்தர்ப்பத்தில் குறிப்பாக சந்தி நேரத்தில் உறங்குவதைப் பற்றி எடுத்துக்கூறுகிறான். சந்தி நேரத்தில் உறங்குபவனுக்கு எந்த பாபம் ஏற்படுமோ அந்த பாபத்திற்கு நான் ஆளாகக் கடவேன் என்று பரதன் சபதமேற்கிறான்.*29

உடல் ஊனமுற்றோரை பரிகசிப்பது பண்பாகாது. அதுபோலவே பார்வையில்லாதவர்கள், காது கேளாதோர், கை,கால் போன்ற உடலுறுப்புகளை இழந்தோர் முதலியவர்களை பரிகசிப்பதும் பண்பட்ட குணமாகாது. 'தீனான்தபங்குபதிரா நோபஹாஸ்யா: கதாசன'*30 இவ்விதிமுறைகள் அறிவற்றவர்களுக்கும், வயோதிகர்களுக்கும், அருவருப்பான தோற்றம் கொண்டவர்களுக்கும், ஏழைகளுக்கும், கீழ் சாதியில் பிறந்தவர்களுக்கும்பொருந்துவதாகும்.

ஹீநாங்கான் அதிரிங்கான் வித்யாஹீனான் வயோதிகான் |
ரூபத்ரவ்யவிஹீனாஸ்ச ஜாதிஹீனான்ச நாக்ஷிபேத் ||*31

உண்மையில் நன்னடத்தை என்பது வயோதிகர்களுக்கு உரிய பரிவுடன் மரியாதை கொடுப்பதேயாகும். அவர்களை ஒருபொழுதும் சுமையாகவும் பாரமாகவும் நினைக்கக்கூடாது. அவர்களுடைய அனுபவங்களை பார்த்தோமானால் சிறப்பான மரியாதை கொடுத்தல் வேண்டும். நமது புராதன நூல்களில் பலர் நன்கு நிறுவப்பட்ட நன்னடத்தைகளை அனுசரிக்காததால் பல இன்னல்களுக்கு ஆளானவர்கள். பெரும்பாலும் வயோதிகர்களுக்கும், முதியோர்களுக்கும் பரிவுடன் காட்ட வேண்டிய மரியாதையைக் காட்டாததாலேயே என்பதை பல எடுத்துக்காட்டுகள் குறித்துக்காட்டுகின்றன. எக்காரணத்தைக்கொண்டும் அவர்களை நீ என்று ஒருமையிலோ அல்லது அவரது பெயராலோ விளித்தல் கூடாது. 'த்வங்காரம் நாமதேயம் ச ஜ்யேஷ்டானாம் பரிவர்ஜயேத்'*32

வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையிலும் துறையிலும் நன்னடத்தை காத்தல் என்பது இன்றியமையாதது. அதனால் பாதிக்கப்படாத நிலையே இல்லை எனலாம். இந்த நடத்தை என்பது இதை அனுசரிக்க வேண்டும், இவை கைவிட வேண்டுமென, நகங்களைக் கடித்தல், கூந்தலை சேர்த்து கட்டிவைத்தல் போன்ற பல நுணுக்கமான செயல்களைப் பற்றியும் பேசுகிறது.

இரு உள்ளங்கைகளையும் சேர்த்து நீர் அருந்துவது கூடாது என்று கூறுகிறது. 'ஜலம் னாஞ்ஜலினா பிபேத்'*33 ஒரே நேரத்தில் இரு

கைகளாலும் தலையை சொறிதலும் 'ந ஸம்ஹதாப்யாம் பாணிப்யாம் கண்டூயேத் ஜாது வை ஸிர:'[*34] கால் கைகளை அகலமாக விரித்து அமருதல் 'ந க்ஷிப்த பாதஜன்கான்ஸ்ச ப்ராஞா: திஷ்டேத் கதாசன', ஒரு கால் மேல் ஒரு காலிட்டு அமருதல்கூடாது 'பாதம் பாதேன நாக்ரமேத்'[*35]. ஆசான்கள், பெரியவர்கள், கடவுளின் சிலைகள் இருக்கும் பக்கம் கால்களை நீட்டி அமருதல் கூடாது 'குருதேவான் ப்ரதி ததா ந ச பாதெள ப்ரஸாரயேத்'[*36]

இம்மாதிரி ஒவ்வொரு சிறிய செயலிலும்கூட விதிமுறைகள் உள்ளன. எந்த திசை நோக்கி தலைவைத்துப் படுத்து உறங்க வேண்டும்? காலையில் எழுந்ததும் முதலில் என்னென்ன செய்ய வேண்டும்? சிறுநீர், மலம் முதலியன எத்திசை நோக்கி எப்படி அகற்றிட வேண்டும். பகலின் எந்நேரத்தில் எங்கு நீராட வேண்டும், ஒருவன் எப்படி என்ன உணவு எத்திசை நோக்கி அமர்ந்து ஆகாரமாக உட்கொள்ள வேண்டும்? என பல விதிகள் உள்ளன.

மனுஸ்மிருதி முதலிய ஸ்மிருதிகளும் வாமன[*37], பத்ம[*38] விஷ்ணு[*39] மார்கண்டேய[*40] முதலிய புராணங்களும் நடத்தையைப் பற்றி தனியாக ஒரு அத்தியாயம் முழுவதும் விவரமாக பேசுகின்றன. இவைகளில் ஒன்றைப் பற்றி அதாவது வாமன புராணத்தில் நமது இந்திய மூதாதையர்கள் நன்னடத்தையைப் பற்றி ஆசாரம் சதாசாரத்தைப் பற்றி என்னக் கூறியிருக்கிறார்கள் என்பதை சுருக்கமாக இப்பொழுது காணலாம்.

அதிகாலையில் எழுந்து ஒருவன் சுப்ரபாதம் என்னும் சூக்தங்களை படிக்க வேண்டும். பிறகு காலைக்கடன்களை செய்ய வேண்டும். எக்காரணத்தைக்கொண்டும் தெய்வச் சிலைகள், பசுக்கள், அந்தணர்கள் உள்ள இடங்களிலும், நெடும்பாதைகளில் நாற்சந்திகளிலும், மாட்டுத்தொழுவங்களிலும் மலம் கழித்தல் கூடாது. சாம்பல் குவியல், மாட்டுத்தொழுவம், உழப்பட்ட நிலம், நீர், கல்லினால் கட்டப்பட்ட பலிபீடம், மலை, பாழடைந்த ஆலயங்கள், எறும்புப்புற்று, மிருகங்கள் வசிக்கும் பொந்துகள் முதலிய இடங்களில் மலம் கழித்தல் கூடாது.

நடந்துகொண்டோ நின்றுகொண்டோ, ஆற்றின் கரையிலோ மலங்கழித்தல் கூடாது. உடலில் ஆடையின்றி நதியில் நீராடல் ஆகாது. ஒரே ஆடை உடுத்தி உண்ணுதலும் கூடாது. தீயவர்களிடம் சகவாசம் கூடாது. சந்திநேரத்தில் உண்ணக்கூடாது. பகலில் ஊடல் மறுக்கப்படுகிறது. ஒரு லட்சியமுமின்றி அலைந்து திரியக்கூடாது.

உகந்த காரணமின்றி தானம் அளித்தலும் கூடாது, மிருகங்களை கொல்வதும் கூடாது. பிறர் செல்வத்தையும், மனைவியையும் ஏறெடுத்தும் காணக்கூடாது. பிறர் மனையாள் ஆடையின்றி இருக்கும் நேரம் அவளைப் பார்க்கக்கூடாது. கள்வர்களுடன் உறையாடுதலும் கூடாது.

பெண்களின் மாதவிடாய் நேரம் அவர்களை பார்க்கக்கூடாது, அவளுடன் உறவுகொள்ளுதலும், பேசுவதும் கூடாது. அவள் ஆடையின்றி உறங்குவதும் தவறு. அவள் உண்ணும்பொழுது, தும்பும்பொழுது, கொட்டாவி விடும்பொழுதும், மலங்கழிக்க அமருகையிலும், கண்களில் மையிடுகையிலும், உடலில் அரித்தாரம் பூசுகையிலும், உடலை மறைத்துக்கொள்ளாத நேரத்திலும் பார்ப்பது கூடாது. நீர்நிலைகளில் சிறுநீரோ, வியர்வையோ எச்சிலையோ துப்பக்கூடாது (மனுஸ்ம்ருதியில் கூறியுள்ளதுடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம். 'நாப்ஸு மூத்ரபுரீஷம் வா ஷ்டீவனம் வா ஸமுத்ஸ்ருஜேத்'"41).

விஷப் பொருட்களையோ ரத்தத்தையோ கலத்தல் கூடாது. சூரியன் உதிக்கையிலோ அல்லது மறையும் நேரத்திலும், கிரஹண காலத்திலோ, நீரில் மறைந்திருக்கும்பொழுதும், ஆகாயத்தின் நடுவில் தலைக்கு மேல் இருக்கையிலும் காண்பது கூடாது. மலினமான எதையேனும் தொட்டால் உடன் நீராடல் வேண்டும். சவத்தைத் தூக்கி செல்பவரை நெருங்கினாலும் உடன் நீராடுதல் வேண்டும். பசு தன் கன்றை நக்கிடும்பொழுது காண்பதும் கூடாது அதைப்பற்றி பிறருடன் பேசுவதும் கூடாது.

எண்ணெய் பிழிந்தெடுத்த பண்டங்களை உண்பதும் கூடாது. அதிகமாக உண்ணுதல் கூடாது. அதிகாலையிலும் மாலையில் வெகு நேரங்கழித்தும் உண்ணுதல் கூடாது. இரண்டு கைகளையும் இணைத்து அதில் தண்ணீர் குடிக்கக்கூடாது. தன் மடியில் உணவை வைத்து உண்ணக்கூடாது. வெண்மையான வெண்கலத் தட்டில் கால் கழுவக்கூடாது. உடைந்த பாத்திரத்தில் உணவு உண்ணக்கூடாது. பிறர் அணிந்துகொண்ட செருப்பு, உடைகள், நகைகள், மாலைகள், தண்ணிர்பாத்திரம் இவைகளை உபயோகிக்கக்கூடாது. கை நகங்களையும், கூந்தலையும் வெட்டக்கூடாது,

இவ்வாறு இப்பட்டியல் வளர்ந்துகொண்டே போகிறது. பண்பான மனிதன் மென்மையாகப் பேசுவான், பிறருக்கு உதவுவான், குடும்ப பழக்கவழக்கங்களை அனுசரித்திடுவான், பெரியவர்களை மதித்திடுவான், பிறர் சினத்திற்கு ஆளாகாமல் இருந்திடுவான்.

தெய்வங்களை ஆராதித்து நல்லாசி பெற்றிடுவான். இவைகளே ச்ருதி ஸ்ம்ருதிகளில் கூறப்பட்ட ஆசாரமாகும். பண்புடையவர்கள் இவைகளை நடைமுறையில் அனுசரித்து உலகில் பேரும் புகழும் பெற்றிடுவார்கள். 'ஸ்ருதிஸ்ம்ருத்யுதிதம் தர்மம் அனுஷ்டிதம் ஹி மானவா இஹ கீர்திம் அவாப்னோதி'*[42]

இதுவே இந்தியர்களின் வாழ்க்கையில் இன்றியமையாத இடத்தைப் பெறுகிறது.

## மேற்கோள்கள்


1. *Vasistasmruti 6.3*
2. *Manusmruti 1.108*
3. *2.24.98*
4. *3.250.4*
5. *ibid 271.1.4*
6. *ibid*
7. *Manismrti 1.107*
8. *ibid 1.108,i*
9. *ibid*
10. *Udyogaparvan 35.42. The lines are found with a slight difference in the Vasistasmrti 6.3 chandaamsy enam mrtukale tyajanti nidam sakunta iva jatapakshah*
11. *Visnupuranam 111.11.3*
12. *IV 155*
13. *1.108*
14. *II 18*
15. *II 17*
16. *Nirukta 1.4.12*
17. *Taittiritopanisad, Siksavalli*
18. *Anusasanaparvan 193.25*
19. *Santiparvan 186.5*
20. *Vanaparvan 2.56*
21. *ibid 2.54*
22. *Santiparvan 186.5*
23. *III 56*
24. *Vanaparvan 133.1*
25. *Santiparvan 28735*

26. *Manusmrti VIII* 13

27. *Anusasanaparvan* 104.82

28. *ibid* 104.19

29. *Ayodhyakanda* 75.44

30. *Sukraniti III* 15

31. *Manusmriti IV* 141

32. *Santiparvan* 93.25

33. *Markandeya Puranam* 34.113 *The drinking of water, however, is permited out of one hand, the right one: daksinam tu karam krtva gokarnakritivat punah trih pibet ipsitam toyam, Haritasmrti* 4.26

34. *ibid* 34.44

35 *ibid* 34.45

36 34.112

37 *Chapter IV*

38. *Svargakanda, chapters* 29-31

39. 3.11

40. *Chapter* 34

41. *Manusmrti* 4.56

42. *ibid* 2.9

# 6

## கருணா

## கருணை

ஆங்கிலத்தில் '*pity*' '*mercy*' '*compassion*' என்ற மூன்று சொற்களே பிறருக்கு தீங்கு நேரும் சமயத்தில் மனப்பரிவுடன் உதவிசெய்வதற்கு இருக்கையில். சமஸ்கிருதத்தில் இதைப்போல இருமடங்கு அதிகமான அனுகம்பா, அனுக்ரோஸ, அனுக்ரஹ, கருணா, க்ருபா, தயா முதலிய சொற்கள் உள்ளன. இதிலிருந்தே இந்தியக் கலாசாரம் இதற்கு எவ்வளவு முக்கியத்துவம் கொடுத்திருந்தது என்பது புலனாகிறது. பொதுவாக இந்த எல்லா வடமொழிச் சொற்களுமே, ஒருசொல் பல பொருளை குறிப்பதுபோல் இன்றி, ஒரு பொருள் குறிப்பனவாகவே பயன்படுத்தப்படுகின்றன. ஆனால் இவ்விடத்தில் அது பொருந்துவதாக இல்லை. இந்த ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு விதமான உணர்வுகளைக் குறிப்பதாகவே அமைந்துள்ளதால் அவைகள் வெளிப்படுத்தும் உணர்வுகள் சிறிதுமாறுபட்டதாக அமைகிறது. அதை விளக்குவது மிகக் கடினமானதாகும். இவைகளில் மிகவும் அதிகமாக பயன்படுத்தும் சொல் 'தயா' தயை ஆகும். முற்றும் துறந்த முனிவரான கவிஞர் துளசிதாசர் இதையே தருமத்திற்கான அடிப்படை மூலஉணர்வாக எடுத்து விளக்குகிறார்.

தயா தர்ம கா மூல் ஹை பாப மூல அபிமான் |
துலஸீ தயா ன சோடியே ஜப் கட மே ப்ராண ||

'தயை தருமத்தின் வேறாகும். ஆணவமும் செருக்கும் பாபத்தின் வேறாகும். அதனால் நீ உயிருடன் இருக்கும் வரையில் தயையை கைவிடாதே.'

எல்லா ஜீவராசிகளும் சமமானவை என்கிற எண்ணம் மனதில் வேரூன்றினால் மட்டுமே தயை காட்டுவது சாத்தியமாகும். இந்த எண்ணமிருந்தால் தான், தன்னை பிறரிருக்கும் நிலையில் வைத்து

அவர்களது இன்பத் துன்பங்களை பகிர்ந்துகொண்டு அதற்கான தேவையான முயற்சிகளை எடுத்து அவர்களது அல்லல்களையும் துன்பங்களையும் அகற்றிடமுடியும். இதுதான் 'ஸமத்ருஷ்டி' எனப்படும். இதுவே எல்லோரும் சமமானவர்கள் என்னும் எண்ணத்தை வளர்த்து தனது வாழ்க்கையிலும் சவால்களை ஏற்றுபிறரது துன்பங்களை களைய முயற்சி செய்திடச்செய்யும்.

ஆற்றில் மூழ்கியவரை உயிருடன் கரைக்குக் கொண்டுவந்து சேர்ப்பது, தீப்பற்றி எரியும் கட்டிடத்தில் சென்று தான் கடுமையாக உழைத்துச் சேர்த்த செல்வத்தையும் பொருட்படுத்தாமல் தீயில் அகப்பட்டவர்களை காக்க செலவுசெய்து காப்பாற்றுதல், பிறரது துன்பங்களைத் துடைப்பதில் பங்கேற்று துன்பங்களை களைதல் ஆகும். இப்பணியில் தனக்குத் தெரிந்தவர், தெரியாதவர் என்ற எண்ணமே இருக்கக்கூடாது. இது சரியான நேரத்தில் சரியான உத்வேகத்துடன் செய்யும் செயல் ஆகும். இதுவே தயை ஆகும். வாயு புராணத்தில் தயை என்பதை இவ்வாறு விளக்கியுள்ளனர்.

ஆத்மவத் ஸர்வபூதேஷு யா ஹிதாயாஹிதாய ச |
ஸமா ப்ரவர்ததே த்ருஷ்டி: க்ருத்ஸ்னா ஹி ஏஷா தயா ஸ்ம்ருதா ||[*1]

'நல்லவனானாலும் சரி கெட்டவனானாலும் சரி நாம் எல்லோரும் சமம் என்னும் கண்ணோட்டத்துடன் எவரையும் நடத்துதல் தயை எனப்படும்.'

பவிஷ்ய புராணமோ,

அபாரே பன்துவர்கே வா மித்ரே த்வேஷ்டரி வா ஸதா |
ஆத்மவத் வர்தனம் யத் ஸ்யாத் ஸா தயா பரிகீர்தித: ||[*2]

'முன்பின் அறியா ஒருவனையோ, உறவினரையோ, நண்பனையோ, எதிரியையோ தன்னைப்போல கருதுவது தயையாகும்' என்று இலக்கணம் வகுக்கிறது.

யத்னாதபி பரக்லேஸம் ஹர்தும் யா ஹ்ருதி ஜாயதே|
இச்சா பூமிஸுத(ர)ஸ்ரேஷ்ட ஸா தயா பரிகீர்திதா ||

'ஓ! அந்தணரே! தனக்கு கஷ்டத்தைக் கொடுக்கினும் பிறரது கிலேசத்தை தீர்க்கவோ குறைக்கவோ மனதில் இச்சை ஏற்படின் அதுவேதயை எனப்படும்.'

இம்மாதிரி மேலே கொடுக்கப்பட்ட தயைக்கான எல்லா இலக்கணங்களையும் இணைத்துப் பார்த்தோமானால், பிறருடைய

கஷ்டங்களை நீக்கவோ குறைக்கவோ தானாக வேண்டுமென்றே மனதில் எடுத்துக்கொள்ளப்படும் முயற்சியே தயையாகும்.

மேற்கூறிய இலக்கணங்களைக் காணுகையில் தயை என்பது எல்லா உயிர் வாழ் ஜீவராசிகளையும் 'ஸர்வபூத' தன்னுள் அடக்கும் பரந்த நோக்கம் கொண்டதாகும். இது ஏதோ ஒரு பகுதியான, ஒருகூறான மனிதர்களுக்காக மாத்திரம் அமைவதல்ல. தயை என்ற சொல் ஒன்றே எல்லா உயிர்வாழ் ஜீவராசிகளுடனும் 'ஸர்வபூத' இணைந்து வருகிறது.

இதே பொருளை உணர்த்தும் மற்ற சொற்களுடன் அவை இணைந்து செல்வதில்லை. பொதுவாக நோக்குங்கால் 'ஸர்வபூதக்ருபா' எல்லா உயிர்வாழ் ஜீவராசிகளுடன் கிருபை என்றோ 'ஸர்வபூதகருணா' எல்லா ஜீவராசிகளுடன் கருணை என்றோ பயன்படுத்துவதில்லை. நாம் காணும் ஒரே பயன்பாடோ 'ஸர்வபூதானுகம்பா' என்று எல்லா உயிர்வாழ் பிராணிகளுடன் இரக்கம் காட்டுதல் என்பதேயாகும்.

இப்பொழுது இங்கு கருணை, இரக்கம், பரிதாபம் முதலிய சமஸ்கிருத சொற்களின் மிக நுணுக்கமான பொருள்களை உணர்ந்துகொள்ளுதல் உகந்ததாகும். ஆனால், அவைகளின் நுணுக்கமான பொருளை உணர வேண்டுமானால் அவைகளை காப்பிய நூல்களில் எவ்வாறு பயன்படுத்தியுள்ளார்கள் என்பதை பரிசோதித்துப் பார்த்தல் சிறந்ததாகும். இச்சொற்களின் பொருளை நூல்களிலிருந்து அறிவதுடன்கூட புனே நகரிலுள்ள டெக்கன் கலாசாலையில், தற்சமயம் நடந்துவரும் ஆய்வுப்பணியில் '*Sanskrit Dictionary on Historical Principles*, வரலாற்று அடிப்படையில் ஆய்வு செய்துவரும் சமஸ்கிருத அகராதியை பார்த்து அறிந்துகொள்ளுதல் சிறப்பாக அமையும்.

இப்பொழுது நாம் கருணை, இரக்கம், பரிதாபம் என்ற மூன்று சொற்களையும் சமஸ்கிருதத்தில் உள்ளபடி அகர வரிசைப்படுத்தி ஆராய்ந்திடுவோம். இதில் முதலில் வருவது 'அனுகம்பா' என்னும் சொல்லாகும். பாணினீ தானியற்றிய இலக்கண நூலில் 'ஸூத்ர அனுகம்பாயாம்'[3] என்று கூறி 'கன்' என்னும் ஒற்றைச் சேர்த்து 'அனுகம்பா' என்னும் பொருளில் வருவதாகக் கூறுகிறார். இதை 'பாலமனோரமா' உரையில் 'தயா,' தயை என்னும் பொருள்பட கூறுகிறார். இதே பொருளை, 'தத்துவபோதினி' உரையும் ஆமோதித்து 'க்ருபாதயானுகம்பாஸ்யாத்' என்று அமரத்திலிருந்து எடுத்துக்காட்டை கொடுக்கிறது.

ஆனால் 'புத்ரக' என்னும் சொல்லை எடுத்துக்கொண்டால், அது அன்பூட்டுவதாக அமைந்து 'என் அன்பு மகன்' என்னும் பொருளை உணர்த்துகிறது. இப்பொருள் அன்பிற்குப் பாத்திரமான, மென்மையான என்பதைக் குறிக்கிறது. இதிலிருந்து அச்சொல் கருணை என்னும் பொருளை உணர்த்துவதாகக் கொள்வது கடினமாகாது. எடுத்துக்காட்டாக 'கதம் ப்ராஹ்மணீ மாம் அனுகம்பதே'*4 'அந்த பிராம்மணப் பெண் என்னிடம் எப்படி கருணைகொண்டுள்ளாள்.' மேலும் 'கிம் உஜ்ஜிஹானஜீவிதாம் மாம் அனுகம்பஸே'*5 'உயிரில் நம்பிக்கை இழந்த என் மேல் ஏன் கருணை காட்டுகிறாய்?' இங்கு கருணை என்னும் உணர்ச்சி உள்ளது. ஆனால் இங்கு பயன்படுத்தியுள்ள முறையைக் காணுகையில் அது தன்னைவிட பெரியவர் / மேலதிகாரி / அதிக பலம் கொண்டவர் தன்னைவிட சிறியவரிடமோ / கீழதிகாரியிடமோ / பலவீனமான வரிடமோ காட்டிடும் கருணையை, பரிவை எடுத்துக்காட்டுகிறது.

தெய்வீக பசுவான நந்தினீ தன்னைப் பற்றி கூறுகையில் இச்சொல்லை பயன்படுத்துகிறாள். 'பக்த்யா குரௌ மயி அனுகம்பயா ச'*6. 'ஆசானிட்முள்ள பக்தியினாலும் என்னிடமுள்ள இரக்கத்தினாலும்' அப்பசுவைக் காப்பதற்காக தன்னையே மாற்றிக்கொடுக்க விருப்பங்கொண்ட மன்னன் திலீபனைப் பார்த்து, அதாவது ஒரு உயரிய மன்னனைக் குறிப்பதாக அமைந்துள்ளது. அதே உணர்வே மன்னன் திலீபன் 'பூதானுகம்பா தவ சேத்' 'உயிவாழ் ஜீவனிடத்தில் கருணை இருக்குமேயாகில்' என்று தன்னை அர்ப்பணித்துக்கொள்ள தயாராக இருப்பதாகக் கூறும் கூற்றிலும் வெளிப்படுகிறது.

'அனுக்ரோஸ' என்னும் சொல் 'அருள்', 'தயை' 'அனுக்ரஹ, 'க்ருபா' என்னும் பொருள்பட வெகு குறைவாகவே பயன்படுத்தப்படுகிறது. காளிதாசன் தான் இயற்றிய அபிஞான சாகுந்தலம், மேகதூதம் என்னும் இரண்டு படைப்புகளில் இச்சொல்லை பயன்படுத்தியுள்ளான். அபிஞான சாகுந்தலத்தில் மும்முறையும், மேகதூதத்தில் ஒருமுறையும் பயன்படுத்தியுள்ளான். அபிஞான சாகுந்தலத்தில் துஷ்யந்தன் சகுந்தலையின் பிரிவினால் வாடியபொழுது காமதேவனுக்கு தன்னிடம் சிறிதும் பரிவில்லை என முறையிடுகிறான். 'பகவான் காமதேவ ந தே மய்யனுக்ரோஸ:'.*7

இரண்டாவது முறையாக சகுந்தலை துஷ்யந்தனின் நினைவிலேயே ஆழ்ந்திருந்திருக்க 'அவன் உன்னை மறந்துவிடுவான்' என சகுந்தலை துர்வாசரின் சாபத்துக்கு உள்ளானபோது (துர்வாச முனிவருக்கு தகுந்த உபசாரம் செய்யாததால்) அவளுடைய தோழி பிரியம்வதை

முனிவரிடம் கெஞ்சிக் கேட்டுக்கொண்டபோது 'கிமபி புன: ஸானுக்ரோஸ: க்ருத:'*8 'சிறிது சமாதானத்தை அடைந்தார்'. இங்கு 'ஸானுக்ரோஸ:' என்ற சொல்லிற்கு 'ஆப்டே' பொருள் கூறும்போது 'சிறிது கருணை அல்லது இரக்கம் காட்டினார்' என்கிறார். அவர் இவ்விடத்தில் *sympathy* என்கிற ஆங்கில சொல்லிற்கும் ஸானுக்ரோஸ என்கிற சொல்லுக்குமான ஒற்றுமையை எடுத்துக்காட்ட முயலுகிறார். ஸானுக்ரோஸ: என்ற சொல் 'க்ருச்' 'அழு' என்னும் வேர்ச்சொல்லிலிருந்து 'அதனுடன்கூட' என்னும் முன்னொட்டைச் சேர்த்து அமைந்தது என்கிறார். ஆனால் '*sym*' என்கிற சொல்லுடன் 'பச்சாத்தாபம், வருத்தம் முதலிய எண்ணங்களுடன்' பொருள் கொள்கிறது.

மூன்றாவது முறையோ சகுந்தலை தான் மிகவும் துயரத்துக்கு உள்ளாகியிருக்கையில், அத்துயரத்திற்குக் காரணம் தனது முன்பிறவியில் தான் செய்த தீவினைப்பயனே என்று கூறி, இல்லாவிடில் இவ்வளவு இரக்கம்கொண்ட மனதுடைய தன் கணவன் என்னிடம் எப்படி கல்மனதுடையவராக ஆக இயலும் என்கிறாள். 'ஸானுக்ரோஸோபி ஆர்ய்புத்ரோ மயி விரஸ: ஸம்வ்ருத்த:'*9 இதற்கு உரை எழுதிய ஆசிரியர் 'ராகவபட்' என்பவர் இதை 'ஸக்ருபா' என்று கூறி இரண்டு சொற்களும் ஒரே பொருளைக் குறிப்பதாகக் கூறுகிறார். ஆனால் கிருபை என்பது இங்கு இரக்கத்தையோ கருணையையோ குறிப்பதாக இல்லை. பொதுவாக கருணையுள்ளம் கொண்ட துஷ்யந்தன் சகுந்தலையை முனிகுமரர்கள் அழைத்துவந்த நேரம் கருணையற்ற உள்ளம் படைத்தவனாக ஆகிவிட்டான்.

மேகதூதத்தில் கடைசி பாடலில் இச்சொல் அமைந்துள்ளது. யக்ஷன் முகிலிடம் தன் செய்தியை கருணைகூர்ந்து 'அனுக்ரோஸ:' எடுத்துச்செல்லும்படி கூறுகிறான். 'மயி ஸானுக்ரோஸபுத்யா'*10 (மல்லிநாதர் இதற்கு 'ஸானுக்ரோஸ' என்பதற்கு தயா என்று பொருள் கொள்கிறார்). ஆனால் இவ்விடத்தில் கருணையென்பது நட்பு உணர்ச்சியினாலோ அல்லது அவன் தன் அன்பிற்கு பாத்திரமான மனைவியை பிரிந்திருப்பதாலோ அமைந்ததாகும். 'ஸௌஹார்தாத்வா விதுர இதி வா'.

'அனுக்ரஹ' என்பது கருணையையோ அல்லது இரக்கத்தையோ குறிப்பதல்ல. இது அருளையும், சலுகையையும் குறிப்பதாகும். இது தெய்வீக அல்லது மகான்களின் சக்தியுடன் இணைந்து குறிப்பதாகும். இது காப்பியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளதிலிருந்து அறிந்துகொள்ளலாம். காளிதாசன் இச்சொல்லை நான்குமுறை

பயன்படுத்தியுள்ளான். இருமுறை ரகுவம்சத்திலும், ஒருமுறை குமாரசம்பவத்திலும் ஒருமுறை அபிஞான சாகுந்தலத்திலும் ஆகும்.

ரகுவம்சத்தில் பசுவின் கன்றான நந்தினியின் மேல் சிங்கமாக அமர்ந்து கொண்ட கும்போதரன் என்ற பெயர்கொண்ட அவ்விலங்கு தன்னை சிவப்பெருமானின் பணியாளனாகவும், தனது முதுகின் மேல் சிவபெருமான் கால் வைத்து எருதின் மேல் ஏறுவதனால் பெரும்பேறு 'அனுக்ரஹ' பெற்றவனாகவும் தன்னை அறிமுகம் செய்துகொள்கிறது. 'கைலாஸகௌரம் வ்ருஷம் ஆருருக்ஷோ: பாதார்பணானுக்ரஹ பூதப்ருஷ்டம், அவேஹி மாம் கிங்கரம் அஷ்டமூர்தே:'*11

இரண்டாவது முறையாக சிரவணின் தாய்தந்தையர் மன்னன் தசரதனுக்கு சாபம் கொடுக்கும் சந்தர்ப்பத்தில் இடம்பெறுகிறது. தசரதனோ அறியாமல் தவறுதலாக அக்குற்றத்தை செய்திட, சிரவணின் பெற்றோர்களால் இதைப்போலவே 'மகன் பிரிவின் வருத்தத்தினால் உயிர் நீக்கிடல் வேண்டும்' என்று சாபம் ஈந்தனர். ஆனால் தசரதனோ அதை ஒரு அருள்வாக்காகவே ஏற்றுக்கொண்டான். ஏனெனில் அது சமயம் அவனுக்கு சந்ததியேயில்லை. அதனால் திண்ணமாக தனக்கு சந்ததி மகன் பிறக்கப்போகிறான் என்றே எண்ணினான். 'ஸாபோபி அத்ருஷ்டதனயானனபத்மஸோபே ஸானுக்ரஹோ பகவதா மயி பாதிதோSயம்'*12 'மகனின் முககமலத்தைக் காணாத எனக்கு இது அருளாக வந்து சேர்ந்தது.'

குமாரசம்பவத்தில் இந்திரன் காமதேவனை அணுகும் சந்தர்ப்பத்தில் 'அவர் எதற்காக தன்னை நினைப்பதற்கான அருளைச்செய்தார்' 'அனுக்ரஹம் ஸம்ஸ்மரணப்ரவ்ருத்தம்'*13 என்று பயன்படுத்தப்பட்டுள்ளது.

அபிஞான சாகுந்தலத்தில், மன்னன் துஷ்யந்தன் சகுந்தலையின் தோழிகளிடம் அவளது வம்சத்தைப்பற்றி கேட்டபொழுது தோழி கள் 'அவன் விசாரிப்பதே அவள் செய்த அருள்' 'அனுக்ரஹைவேயம் அப்யர்தனா'*14 என்கின்றனர். 'அனுக்ராஹ்ய' 'அருள வேண்டும்' என்னும் சொல் பாணனால் 'காதம்பரி'யில் 'கதனேனாத்மானம் அனுக்ராஹ்யம் இச்சாம:'*15 'இதைக்கூறி எனக்கு அருள வேண்டும் என்று விரும்புகிறேன்' 'ந வயம் அனுக்ராஹ்யா: ப்ராயோ தேவதானாம்'*16 'ஒருக்கால் தேவதைகள் எங்களுக்கு அருளவில்லையோ'.

சமஸ்கிருத நூல்களில் 'தயை' தயா என்ற சொல்லுக்குப் பிறகு மிக அதிகமாக பயன்படுத்தப்பட்ட சொல் 'க்ருபா' கிருபை ஆகும். பெரும்பாலும் இவ்விரண்டு சொற்களும் ஒரே பொருளைக்

குறிப்பதாக அமைந்துள்ளன. இவைகளின் பொருள் மாறுபாட்டை எடுத்துரைப்பது மிகக்கடினமாகும். கிருஷ்ண பகவான் அர்ஜுனன் தனது உற்றார் உறவினர்களை போர்க்களத்தில் கண்டதும்தன் வலிமையை எல்லாம் இழந்துவிட்டான் என்று அறிந்ததும் அவன் மேல் 'கருணை (பச்சாத்தாபம்) 'க்ருபயா பரயாவிஷ்ட:'*17 மிகக்கொண்டார். பார்வதி 'சக்ரவாக பறவை தம்பதிகள் இரண்டும் பிரிந்திருப்பதைக் கண்டு கருணைகொண்டாள்'. 'சக்ரவாகயோ: புரே வியுக்தே மிதுனே க்ருபாவதீ'*18

'*Mercy or Compassion*' என்ற சொற்களுக்குப் பிறகு கடைசியாக 'கருணா' கருணை என்ற சொல்லின் இலக்கணமோ இவ்வாறு உள்ளது.

தீனேஷ்வர்தேஷு பீதேஷு யாசமானேஷு ஜீவிதம் |
ப்ரதிகாரபரா புத்தி: காருண்யம் அபிதீயதே ||*19

அல்லலிலும் வேதனையும் அச்சத்திலும் உழல்கின்றவர்களாய் உயிர்ப்பிச்சை கேட்போருக்கு உதவிடும் மனப்பாங்கே காருண்யம் கருணை காட்டுதல் எனப்படும். சர்வார்த்தசித்தி என்பவர் கருணைக்கு இலக்கணத்தை இவ்வாறு வகுக்கிறார். 'அவதிப்படுபவர்க்கு உதவுதல்' 'தீனானுக்ரஹபாவ: காருண்யம்.'*20 கருணை என்பது எல்லாம்வல்ல இறைவனிடம் உறைவதாகும். கருணையே உருவான வர். (பௌத்தர்கள் அவரை 'மஹாகருணா' என்றழைக்கின்றனர்).

ராமரை கருணையே வடிவானவர் என 'கருணாமயகாகுத்ஸ்தம் கருணாமயம் குணநிதிம் விப்ரப்ரியம்' என்றழைக்கின்றனர். மரணம் கொடியது. அதனால் அதை 'கருணாவிமுக' கருணைக்கு எதிரானது –'கருணாவிமுகேன ம்ருத்யுனா'*21 என்று இந்துமதியை இழந்து புலம்புகையில் கூறுகிறான். 'பாசன்' எழுதிய ஸ்ப்னவாசவதத்தில் தன் கணவன் பத்மாவதியை மறுமணம் புரிந்துகொள்ள, வாசவதத்தை தன் சக்களத்திக்கு மலர்மாலை தொடுக்கும்படி வேண்டிக்கொள்ளப்பட்ட நேரம் மனம் மிக நொந்த அவளது வாயிலிருந்து வெளிவந்த சொற்கள் 'கடவுளுக்கு இரக்கம் என்பதே இல்லை' 'அகருண: கலு ஈஸ்வர:'*22 என்பதாகும்.

மேகதூதத்தில் யக்ஷன், முகிலிடம் தன் அன்புக்காதலியின் நிலைமையைக் கண்டால் யாராகிலும் சரி புது நீரைப்போல் கண்ணீர் சொறிந்திடுவர். 'பெரும்பாலும் இளகிய மனம் படைத்த எவருமே இயற்கையில் இரக்கம் கொண்டவர்களே ஆவர்' 'ப்ராய:

ஸர்வோ பவதி கருணாவ்ருத்திர் ஆர்த்ராந்தராத்மா''*23 நைஷதத்தில் பொன் அன்னம் மன்னனின் கைகளில் சிக்கிக்கொண்டதால், தன் நிலைமையைக் குறித்து மிக வருந்தி புலம்புகிறது. ஏனெனில் மகவை அப்பொழுது பெற்றெடுத்த தன் மனைவியையும் வயது முதிர்ந்த தனது தாயையும் அதுவே பாதுகாத்து வந்தது. 'ஏ! கொடிய விதியே! இரக்கமும், அருளும் இல்லையோ உனக்கு' (என்னை பிடித்துவைத்துள்ளார்களே) - 'அஹோ! விதே! த்வாம் கருணா ருணத்தி நோ''*24

கருணை, இரக்கம், மென்மையான உள்ளம், தயை, அருள், சலுகை ஆகிய நெறிகள் யாவையுமே மனிதநேயத்துடன் இணைந்திருப்பவை. இவைகள் இல்லையெனில் உலகமே கொடுமையானதாக ஆகிவிடும். அவை நம்மை ஏற்றமடையச் செய்யும், மேன்மையடையச் செய்யும். மற்ற எல்லா குணங்களையும் போலவே இக்குணங்களும் சிலரிடையே இயற்கையாகவே பிறப்பிலிருந்து இருந்திடும். சிலருக்கோ நம் நன்னூல்களை கற்றறிந்து பழகி, நல்லோர்களுடன் கலந்து வாழ்ந்து பழக்கிக்கொள்ள வேண்டும்.

இருந்தும் இன்னமும் சிலர் பிறர் துன்பங்களையும் அல்லல்களையும் கண்டு மனம் சிறிதும் நெகிழாமல் இருக்கிறார்கள். அவர்களை இரும்பு இதயம் படைத்தவர்கள் என்றே கூற வேண்டும். அதன் காரணமாகவே அவர்கள் பல மிகவும் ஹீனமான கொடிய செயலில் தங்களை ஈடுபடுத்திக்கொள்கிறார்கள். அவர்கள் 'தவறான பாதையில் செல்பவர்களே' 'ஆததாயின:' அவர்கள் விரோதிகளும் கொடியவர்களும் ஆவர். அப்படிப்பட்டவர்களுக்கு மறு சிந்தனையின்றி மரண தண்டனை அளித்திட வேண்டும். 'ஆததாயினம் ஆயான்தம் ஹன்யாத் ஏவாவிசாரயன்''*25 ஆனால், அந்நடத்தை கொண்டோர் வெகுசிலரே. அது நாம் செய்த நல்வினைப் பயனேயாகும். 'விரோதிகளாகவும், கொடியவர்களாகவும் இல்லாமல் இருப்பதே மேலான தருமமாகும்' 'ஆன்ருஸம்ஸ்யம் பரோ தர்ம:''*26

சமஸ்கிருத காவியங்கள் முழுவதுமே கருணை, இரக்கம், பரிதாபம், முதலிய குணங்களால் நிறைந்திருப்பதோடு அக்குணங்களை மிகவும் உயர்ந்த குணங்கள் எனவும் போற்றுகின்றன. அவைகளில் ஏழையோ செல்வந்தரோ, அறிவாளியோ அறிவற்றவரோ, உயர்ந்தவரோ தாழ்ந்தவரோ, பலமுள்ளவனோ பலமற்றவனோ என வித்தியாசமின்றி யாவருமே தங்களிடமுள்ள எல்லாவற்றையும் பணயமாக வைத்து பிறருக்கு உதவி செய்துள்ளனர். அதற்கு மிகவும் போற்றத்தக்க

எடுத்துக்காட்டாகக் கூற வேண்டியவை வால்மீகி முனிவரும், உசீநர மன்னனான சிபியும் ஆவர்.

முதலில் குறிப்பிடப்பட்ட ராமாயண இலக்கியத்தை எழுதிய வால்மீகி முனிவரோ ஒரு பெண் கிரௌஞ்ச பறவை பரிதாபமாக மனதை உருக்கும் வண்ணம் கதறியது 'ருராவ கருணாம் கிராம்'*27 தன் ஜோடிப்பறவை தன்னுடன் ஊடலில் மூழ்கியிருக்கையில் ஒரு வேடனால் அடித்து கொல்லப்பட்டது. அந்த ஆண் பறவை பூமியில் வீழ்ந்து ரத்தத்தில் மூழ்கித் தவிக்கும் அந்த பயங்கரமான காட்சியைக் கண்டு முனிவர் மனம் உருகியது - 'ருஷே: தஸ்ய காருண்யம் ஸமபத்யத'. *28 உடனேயே அவர் உனக்கு இனி ஒரு மரியாதையும் இருக்காது என்று அவனுக்கோர் சாபம் கொடுத்தார் - 'மானிஷாத ப்ரதிஷ்டாம் த்வம் அகம:' *29 அப்பறவையின் மேல் அவருக்கு ஏற்பட்ட துயரமே ஒரு கவிதையாக வெளிவந்தது - 'ஸோக: ஸ்லோகத்வம் ஆகத:'*30

ராவணன் பலவந்தமாக தனது மடியிலிருத்தி அபகரித்துச் சென்று இலங்கையில் அசோக வனத்தில் அரக்கர்களின் காவலில் வைத்திருந்த சீதையுடன்கூட ராமர் மகிழ்ச்சியுடன் வாழ்ந்ததால், குடிமக்களும் இவ்வாறே பிறன் வீட்டிலிருந்தவர்களை ஏற்றுக்கொண்டிடுவார்கள் என்று மக்களிடம் எழும்பிய கூக்குரல் ஒன்று ராமரின் செவிகளில் வீழ்ந்திட ராமர் சீதையை நாடு கடத்திட வேண்டுமென்ற தண்டனையை அவளுக்குக் கொடுத்தார். அவளை நாட்டின் புறப்பகுதியில் பாயும் கங்கை நதிக்கரையில் தனிமையானதோர் இடத்தில், வால்மீகி முனிவரின் குடிலுக்கு அருகாமையில் விட்டு விடும்படியும் கூறினார்.

தனது சீடர்கள் மூலம் மிகவும் அழகான ஒரு பெண் தாங்கவொண்ணா துயரத்தில் ஆழ்ந்தவளாய் நதிக்கரையில் இருக்கிறாள் என்ற இச்செய்தியறிந்த வால்மீகி முனிவர் அவளை அணுகி, சமாதானம் செய்து அழைத்துவந்து தன் குடிலுக்கு அருகாமையில் இருக்கும் தவசிப்பெண்களை அழைத்து அவள் தன் உற்ற நண்பன் தசரத மன்னனின் மருமகள், ஜனக மன்னனின் மகள் என்றும் ஒரு குற்றமும் அற்றவளை 'அபாபா' நாடு கடத்தியுள்ள செய்தியை தெருவித்து அவளுக்கு உரிய சிறப்பான உதவிகளைக் கவனத்துடன் அளிக்கும்படி கூறினார். இந்த குடிலில்தான் சீதை இரட்டை குழந்தைகளை ஈன்றெடுத்தாள்.

அம்முனிவரே அவளுக்குச் சிறப்பான காப்பளித்து அவர்களை பேய், பிசாசுகளிடமிருந்தும் பாதுகாத்தார். அவர் ஒரு புல்லை எடுத்து

குசமென்னும் அதன் நுனிபாகத்தினால் ஒரு சிசுவை காக்க, லவ என்னும் பெயர் கொண்ட அடிப்பாகத்தினால் மற்றுமொரு சிசுவைக் காத்திட ஏற்பாடுகளைச் செய்தார். பின்னர் இருவருக்கும் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து வயதான பெண்மணிகளை அழைத்து அக்குழந்தைகளின் உடலை அப்புல்லினால் தடவச்செய்து லவ என்னும் பெயர்கொண்ட நுனிப்புல்லினால் தடவிய சிசுவிற்கு லவன் என்றும் குச என்னும் அடிப்புல்லினால் தடவிய சிசுவிற்கு குசன் என்றும் பெயரிட்டனர். (ராமாயணம், உத்தரகாண்டம் 49.66).

பின்னர் அவர் ராமாயணத்தை இயற்றிட சிறிது வளர்ந்த அக் குழந்தைகளுக்கு அதை கற்பித்தார். அவ்விருவரும் அதைப் பாடிட, முனிவர்களோ செவியுற்று ஆனந்த களிப்படைந்தனர். அங்கு குழுமிய முனிவர்கள் எல்லோரும் அவர்களை வெகுவாகப் புகழ்ந்து ஆசிகளை வாரி வழங்கி தங்களிடமிருந்த சிறிய சிறிய வெகுமதிகளை அவர்களுக்கு அளித்தனர். இவ்வாறு நூலின் மகிமையை நன்கு சோதித்து உணர்த்திய பின்னரே, தன்னுடன்கூட அயோத்திக்கு அவர்களை அழைத்துச்செல்ல ஏற்பாடுகளை செய்தார் வால்மீகி முனிவர்.

ராமர் அங்கு அசுவமேத யாகம் செய்துகொண்டிருந்தார். அச்சமயத்தில் சடங்குகளின் நடுநடுவே இடைவேளைகளில் காவியத்தை பாடி ராமர் அக்கதையை கேட்கும் படிச்செய்து தனது முக்கிய குறிக்கோளான ராமனையும் சீதையையும் சேர்த்து இணைத்திடவும் முயன்றார். இதன் மூலம் அவர் இரு குறிக்கோள்களை அடைய விரும்பினார். ஒன்று பொதுமக்களின் அபிப்ராயத்தை கருத்தை மாற்றியமைத்து சீதையை அங்கீகரிக்கச் செய்தல், குழந்தைகளோ பார்ப்பதற்கு ராமனை போலவே இருந்தனர். அதனால் அதைக்கண்டு தந்தை ராமன் சீதை களங்கமற்றவள் என்பதை திடமாக தீர்மானிக்கலாம். மேலும் சீதை உயிருடன் இருக்கிறாள் என்றறிந்தால் அவளை ராமனுடன் இணத்து வாழச்செய்யலாம் என்ற இரு குறிக்கோள்களையும் கொண்டிருந்தார்.

மற்ற முனிவர்களுக்கெல்லாம் அழைப்புச் செய்தி அனுப்பியதுடன் ராமன் அவர்களை அங்கேயே தன்னுடைய ஏற்பாடுகளுடன் தங்கவும் செய்திருந்தான். ஆனால் ராமன் வால்மீகி முனிவரை அழைக்கவில்லை. இவ்வாறு அழைப்பில்லாதபோதிலும் தானே பலவந்தமாக அந்த யாகத்திற்கு வந்தார். அக்குழந்தைகள் பாடியதைக் கேட்டு அதை இயற்றியவரைப் பற்றியும் அறிந்து பின்னர் ராமர், வால்மீகி முனிவரை அழைத்து சீதையையும் அழைத்து வரும்படி கூறினார்.

அதுமாத்திரமின்றி ராமரின் ஆணையின் பேரில் எல்லா முனிவர்களும், மற்றும் முக்கியநபர்களும் கூடியுள்ள அச்சபையில் சீதை குற்றமற்றவள் என்பதை ஆணையிட்டு எடுத்துக் கூற வேண்டு மென்றும் கேட்டுக்கொண்டார். வால்மீகியும் சீதையை அழைத்து வந்து பெரியோர்கள் யாவரும் கூடியிருந்த சபையில் கூறினார் - 'நான் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக தவமிருந்தேன். சீதை தவறிழைத்திருந்தால் எனக்கு அதன் பலன் தேவையில்லை.'

பஹூவர்ஷஸஹஸ்ராணி தபஸ்சர்யா மயா க்ருதா |
நோபாஸ்னீயம் பலம் தஸ்ய துஷ்டேSயம் யதி மைதிலீ ||*31

இம்மாதிரி வால்மீகி முனிவர் தான் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் செய்த தவத்தின் பலனை ஒரு அப்பாவிப் பெண்ணிற்காக பணயம் வைக்கிறார். இதுவே கருணைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். இதுபோன்ற கருணைக்கான ஈடுஇணையற்ற எடுத்துக்காட்டை உலக இலக்கியத்தில் காண்பது அரிதாகும்.

இதுபோன்றே ஈடுஇணையற்ற பிறிதொரு நிகழ்ச்சி மகாபாரதத்தில்*32 குறிப்பிடப்பட்டுள்ளது. தன்னிடம் வந்து புகலடைந்து தன்னைவிட்டுப் பிரிந்து செல்ல மனமற்ற புறாவைக் காக்கவேண்டி (கழுகு துரத்திக்கொண்டு வந்த புறாவை) சிபி சக்ரவர்த்தி தன்னுடலையே அதற்கு உணவாக அளித்து தியாகம் செய்தான்.*

---

* சிபி சக்ரவர்த்தி நேர்மையே உருவெடுத்தவன். அவனை சோதிக்க விரும்பிய இந்திரனும் அக்னி தேவனும் கழுகாகவும் புறாவாகவும் வந்தனர். புறாவோ மன்னனின் தொடையின் அடியில் புகலடைந்து தன்னைத் துரத்திக்கொண்டுவந்த கழுகிடமிருந்து காப்பாற்றிக்கொள்ள விரும்பியது. மன்னனும் கழுகானது மீண்டும் மீண்டும் தன் ஆகாரத்தை கொடுக்கும்படி வேண்டிக்கொண்டபோதிலும் அப்புறாவை காப்பாற்றுவதாக வாக்களித்தான். கழுகோ அதற்கு மாறாக வேறு உணவு எதையும் ஏற்க மறுத்துவிட்டது.

அதுவோ மன்னனின் சதையையே அதுவும் அந்த புறாவின் எடையளவே ஏற்பதற்கு ஒப்புக்கொண்டது. மன்னனும் அதை ஒத்துக்கொண்டு தராசு கொண்டுவந்து அப்புறா எடையளவு தனது உடலிலிருந்து சதையை அறுத்து தராசின் ஒருபக்கம் வைத்தான். ஆனால் புறாவின் எடையோ அதிகரித்துக்கொண்டே சென்றது. மன்னனும் மேலும் மேலும் சதையறுத்து தராசில் வைத்தான். கடைசியில் தானே தராசின் தட்டில் ஏறி அமர்ந்தான். இவ்வாறு இரவாப் புகழும் அடைந்தான். புகலடைந்தவர்களை கருணையுடன் காப்பவன் என்னும் அவன் புகழ் சொர்க்கத்திலும் பாடப்படுகிறது).

இரக்கத்தையும் கருணையையும் எடுத்துக்கூறும் பல நிகழ்ச்சிகளைக் கொண்ட புராணங்கள் என்னும் நூல் குவியலே கிடைக்கப்பெறுகின்றன. இங்கு எல்லாவற்றையும் எடுத்துக்கூற நேரமின்மையாலும் சாத்திய மாகாது என்பதாலும் முக்கியமாக குறிப்பிடத்தக்க சிலவற்றை இங்கு எடுத்துக்கூறிடுவோம். விஷ்ணு புராணம்[*33] ஔர்வா என்னும் பெயர்கொண்ட முனிவரின் கதையை எடுத்துரைக்கிறது. அதில் ஔர்வா என்னும் முனிவர் வாஹூ அன்னும் மன்னனின் பிறவா குழந்தையை உயிருடன் பாதுகாக்கிறார். அவளது சக்களத்தி பொறாமையினால் விஷம் பொருந்திய உணவை கொடுத்ததனால் அவள் குழந்தையை பெற்றெடுக்க முடியவில்லை. மகவின் பிறப்பு தள்ளிச் சென்றுகொண்டே இருந்தது. குழந்தை பிறப்பதற்கான சரியான காலம் கடந்து ஏழு ஆண்டுகள் கடந்துவிட்டன, இதற்குள் மன்னன் இறந்துவிட்டான். ராணியோ சிசுவை பெற்றெடுக்க இயலாமல் வயிறிலேயே தாங்கிக்கொண்டிருந்தாள். மன்னன் இறந்ததும் முனிவரிடம் கொடுத்த வாக்கையும் மீறி அவளும் தன்னுயிரை மாய்த்துக்கொள்ள நிச்சயித்தாள். அது மாத்திரமின்றி அத்துறவியோ உலக நன்மைக்காக அவளை சிசுவை பெற்றெடுக்கும்படிச் செய்து தானே அக்குழந்தையை வளர்த்து வந்தார். துறவி இப்படிச் செய்ததெல்லாம் உலக நன்மையைக் கோரியே. இதில் அவருக்கு தனக்கென எதுவுமே இல்லை.

பிரும்ம புராணத்தில்[*34] நெஞ்சை நெகிழவைக்கும் ஓர் கதை உள்ளது. காட்டில் ஒரு புறா தம்பதி இருந்தது. அதில் பெண்புறாவை ஒரு வேடன் பிடித்துக்கொண்டுவிட்டான். அவ்வேடன் அன்றைய இரவில் எதிர்பாராமல் அப்புறாவின் ஆண்புறா இருந்த மரத்தினடி யில் வந்துசேர்ந்தான். அப்புறாவோ தன் மனைவியை விட்டுவிடும்படி கேட்டுக்கொள்ள அவ்வேடனோ அதை மறுத்தான். ஆனால் பெண் புறாவோ வேடன் மேல் ஒரு தவறும் இருப்பதாகவே நினைக்கவில்லை, ஏனெனில் வேட்டையாடி பிடிப்பது அவனது ஸ்வதருமமல்லவா! அத்துடனின்றி அப்பெண்புறா மேலும் ஒருபடி உயர்ந்து தன் ஆண்புறாவைப்பார்த்து வேடன் நமது விருந்தாளி. அதனால் அவனுக்கு விருந்தோம்பல் செய்திடல் வேண்டுமென்று கூறிட ஆண்புறாவும் நெருப்பில் குதித்து தன்னுடலை அவனுக்கு உணவாக அளித்தது வேடனை வாய்திறக்காமல் மலைத்து நிற்கச் செய்தது.

அதே புராணத்தில் 92-ம் அத்தியாயத்தில் பிறிதொரு கதை உள்ளது. மஹூ என்றொரு பெண்ணிருந்தாள். அவள் சிறு வயதிலேயே கணவனை இழந்து விதவையாகிவிட்டாள். அவளுக்கொரு குழந்தை

இருந்தது. அதை காலவர் என்னும் முனிவரிடம் கொடுத்து வளர்க்கும்படி கூறிவிட்டு அவள் உலகை சுற்றி பார்க்கும் ஆவலில் சென்றுவிட்டாள். அவ்வாறு சுற்றி அலைகையில் அவள் ஒரு விபசாரியாக மாறிவிட்டாள். அவளது மகனும் வாலிபமடைய, உலகைச் சுற்றிப் பார்க்கும் ஆவலில் வெளிக்கிளம்பிச் சென்றான். இருவரும் ஓரிடத்தில் சந்திக்க தாய்-மகன் என்றறியாமல் அவளை தன் மனைவியாகக் கொள்கிறான். காலம் செல்ல இவ்விருவரும் தாங்கள் யார் என்பதை அறிந்து, மனம் வருந்தி உயிரை மாய்த்துக்கொள்ள தீர்மானிக்கின்றனர். அச்சமயம் கருணையே வடிவான முனிவர் காலவர் அங்கு தோன்றி அவர்களை நேர்மையான பாதையில் இட்டுச்செல்கிறார்.

புத்தர் கூறிய ஒன்பது நற்குணங்களில் ஒன்று இரக்கம் காட்டும் குணமாகும். 'இதிபி ஸோ பகவா அர்சாம் சம்மசம்பத்தோ விஜ்ஜசரணசம்பன்னோ சுகதோ லகவிடு அனுத்தரோ புரிஸதம்மசாரதி சத்த தேவமனுஷாணாம் புத்தோ பகவதி' - 'மிக உயர்ந்தவர்! மாசுகளை களைவதில் சிறந்தவரே, தானாகவே முழு ஞானியான புத்தர், தெளிவான அறிவில் சிறந்தவர், இரக்க குணம் படத்தவர், நிகழ்காலத்திலும் ஊழிலும் மிகவும் சிறந்தவர், உலகை அறிந்தவர், மனிதர்களை மனம் மாற்றி நடத்திச்செல்வதில் தலைசிறந்தவர், வானுலகத்தவர்க்கும் மனிதர்களுக்கும் ஆசானும், தருமத்தை கடைப்பிடித்து மனிதர்களை தட்டியெழுப்பி வழிநடத்திச் செல்பவரும் ஆவார்.

பிக்ஷு ஒருவர் இ ருந்தார் அவர் ரத்தபேதியினால் அவதிப் பட்டுக்கொண்டிருந்தார்.அவரது மலத்திலும் சிறுநீரிலுமே புரள் கின்றவராய் துர்நாற்றத்துடன் அவதிப்பட்டார். புத்தர் ஆநந்தா என்னும் சீடருடன் அவ்வழியாக இருக்குமிடத்தைச் சுற்றிப்பார்க்க வருகையில் அப்பிக்ஷுவைக் கண்டார். அவரை அந்நிலையில் கண்டதும் புத்தர் அவரை நோக்கி என்ன ஆயிற்றென்று வினவினார். உனக்கு என்ன வியாதி என்றார்? பெரியவரே! ரத்தபேதி என்றார். 'பிக்ஷு, உன்னை கவனிக்க இங்கு எவரும் இல்லையா?' என்று புத்தர் கேட்டார். அவரும் 'இல்லை' என்று பதிலளித்தார். 'மற்ற பிக்ஷுக்கள் உனக்கு உதவ முன்வரவில்லையா' என்று புத்தரும் கேட்க அதற்கு அவர் 'இந்த பிக்ஷுகளுக்கு நான் யாரென்பதே தெரியாது. அதனால்தான் அவர்கள் எனக்கு எந்த உதவியும் செய்வதில்லை' என்றார். உடனே ஆநந்தா தண்ணீர் கொண்டுவந்தார். இருவரும் அவர் மேல் தண்ணீரைத் தெளித்தனர். எழுப்பி படுக்கையில் படுக்க வைத்தனர்.

இதை ஒரு காரணமாகவும், ஒரு நிகழ்ச்சியாகவும் கொண்டு புத்தர் பிக்ஷுக்களை அழைத்து வினவினார் - 'பிக்ஷுக்களே! இங்கு யாரேனும் பிக்ஷு ஒருவர் உடல்நலம் குன்றி இருக்கிறாரா? நீங்கள் இவரை அறிவீர்களா'? 'ஆமாம் உள்ளார்' என்று பதிலுரைத்தனர். 'அவரது நோய் என்ன என்று தெரியுமா?' & பிரபோ! அவருக்கு ரத்தபேதி' அவரை கண்காணித்துக்கொள்ள எவரேனும் உள்ளார்களா? அவருக்கு ஒரு ஆசான் இருந்தால் அவரது உயிர் உள்ளவரை அல்லது அவரது உடல் குணமடையும் வரை அவரைக் காப்பது அவரது கடமையாகும். அவருக்கு குரு இருந்தால் இவ்வாறு செய்ய வேண்டும். அவ்வாறு அவருக்கென்று ஆசான் ஒருவர் இல்லையாகில் சமூகம் அவருக்கு இந்த உதவியை செய்ய வேண்டும். அவ்வாறு செய்யவில்லையாகில் அது பெரும் குற்றமாகும். இரக்கம் கருணைகாட்டல் என்பது என்றும் உள்ள இயற்கையான குணம். அதைக்காட்டி உதவி செய்திடல் வேண்டும்.

கீழ்க்கூறப்படும் தர்மத்தைப் பற்றிய அறிவுரையும் பௌத்தமதத்தில் இரக்கம், கருணை காட்டல் என்பது எவ்வளவு முக்கியமானதென்பதை எடுத்துக்காட்டுகிறது.

சவஸ்தியில் வசிக்கும் வாலிபன் ஒருவனுக்கு ஆசான் ஒருவர் தம்மத்தை எடுத்துரைக்கிறார். அவன் சனோனாவை ஏற்றுக்கொண்டான். அதனால் வீட்டையெல்லாம் விட்டு விட்டு சங்கத்தின் முழு அங்கத்தினராக ஆகி 'தேரா திச்சா' என்று மிகப்பிரபலம் அடைந்தான். பிறகு நாட்கள் சில கழிந்திட அவரது உடலில் வெடிப்புகள் ஏற்பட்டன. முதன் முதலில் அவை கடுகைப்போல சிறிய கொப்புளங்களாக வெளிப்பட்டன. ஆனால் அந்த வியாதி மேலும் மேலும் அவனை ஆட்கொள்ள அவை மெதுமெதுவாக வளர்ந்து பெரியதாக ராஜ்மா, பீன்ஸ், இலந்தை பழ அளவிற்கும் பெரியதாக வளர்ந்துவிட்டது. அவை திடீரென வெடித்து அதிலிருந்து நீரெல்லாம் வெளிவந்து உடல் முழுவதும் புண்ணால் மறைக்கப்பட்டதாயிற்று. அதனால் அவருக்கு எல்லோருமாகச் சேர்ந்து 'தேரா புட்டிகட்டா திச்சா' என்ற புனைப்பெயரை அளித்தனர்.

இன்னும் சில நாட்கள் கழிந்திட அவரது எலும்புகள் எல்லாம் சிதைந்து மிகவும் வேதனையும் வலியும் கொண்டார். அவருடன் 'அங்கு தங்கியவர்களால் அவரைக் கவனிக்க முடியவில்லை. அவரை வெளியே அகற்றிவிட்டார்கள். புத்தர் அவர் மேல் மிகவும் இரக்கம்

கொண்டார். அவரோ அர்ஹன்த் நிலையடைய தகுதியுள்ளவராக இருந்தார். புத்தர் தனக்குள் நினைத்துக்கொண்டார் - 'பிக்ஷுவை எல்லோரும் கைவிட்டுவிட்டார்கள். தற்சமயம் என்னைதவிர வேறு எவருமே உதவிசெய்ய இல்லை' என்று நினைத்துக்கொண்டே நெருப்பு வைத்திருக்கும் அறைக்கு சென்றார்.

அவரை ஒரு பெஞ்சியில் படுக்கவைத்து அவரது புண்களையெல்லாம் நன்கு கழுவிவிட்டார். பிறகு அருகிலிருந்த நெருப்பில் தண்ணீரைச் சூடுசெய்து, கோப்பை ஒன்று எடுத்துவந்து பிக்ஷுவின் படுக்கைக்கருகில் சென்று வெந்நீரை விட்டு நன்கு தேய்த்து சுத்தம் செய்து பின்னர் அவரது உடைகளையும் மாற்றிவிட்டார். கருணையே வடிவாக பிக்ஷுவின் தலையணை அருகில் நின்றுகொண்டு கூறினார் - 'நீ இன்னமும் சற்று நேரத்தில் தன்னினைவை இழக்கப்போகிறாய். உன் உடலால் இனி எந்த பயனும் இல்லை' இந்த அறிவுரை முடியவும் 'தேரா புட்டிகட்டா திச்சா' அர்ஹந்த் நிலை எய்தி அடுத்து நிர்வாணத்தையும் அடைந்தார். புத்தர் தானே அவரது இறுதிச் சடங்குகளை எல்லாம் செய்துமுடித்தார். பிறகு, அவரிடம் எஞ்சியுள்ளதைக் கொண்டு அவருக்கொரு சமாதியும் நிறுவச் செய்தார். இங்கு பிக்ஷுகளுக்கு கூறப்படும் புத்தமகானின் அறிவுரை இரக்கத்திற்கு கொடுக்கப்பட்ட இன்றியமையாத இடத்தை எடுத்துக்காட்டுகிறது. 'ஏ பிக்ஷுக்களே! மகிழ்ச்சிக்கு அழைத்துச்செல்லும் மிகவும் பாதுகாப்பான, திடமான வழி என்னால் உங்களுக்குக் கொடுக்கப்பட்டது. பயங்கரமான வழி அடைக்கப்பட்டுவிட்டது. தனது சீடர்களின் நலம் கருதி ஆசான் கருணையுடன் செய்திடும் ஒரு செயலே என்னால் செய்யப்பட்டது. அதனால் எப்பொழுதும் கருணையுடனும் இரக்கத்துடன் நிறைந்து இருந்திடுங்கள்' என்றார்.

கடவுள் புத்தரின் கருணை சமுதாயத்தின் நன்மைக்காகவே பரப்பப்பட்டது. இதை மகாகருணை என்றழைக்கின்றனர். இது புத்தருக்காக மட்டும் குறிப்பாக அமைந்ததல்ல. இது இந்தியப் பண்பாட்டில் மேலான தத்துவத்தையே குறிக்கிறது. கடவுளை 'கருணாவருணாலய' - கருணைக்கடல் என்றும் 'கருணாவதார' - கருணையே வடிவெடுத்தவர் என்றும் அழைக்கிறோம். இந்தக் கருணை தத்துவத்தை கொண்டே கடவுள் இந்த பிரபஞ்சத்தை நடத்தி வருகிறார்.

## மேற்கோள்கள்

1. *59.43*
2. *1.2.158*
3. *5.3.76*
4. *Malavikagnimitra Act III*
5. *Malatimadhava Aci X*
6. *Raguvamsa II 63*
7. *Ed. kale M.R.Gopal Narayen & co. Bombay 1920 Footnote p.64*
8. *Act III*
9. *Act VII after verse 24*
10. *Uttaramegha verse 52*
11. *11.35*
12. *Raghuvamsa IX 80*
13. *III 3*
14. *Ed.Kale M.R., Gopala Narayen & Co. Bombay p.30*
15. *p.134*
16. *p.61*
17. *Gita 1.28*
18. *Kumarasanbhava v.26*
19. *Adyatmakalpadruma 10.11*
20. *6.11*
21. *Raghuvamsa VIII 67*
22. *Act II*
23. *Uttaramegha 30*
24. *1.135*
25. *Manusmruti 8.350*
26. *kamandakiya nitisasara 36*
27. *1.2.11*
28. *1.2.13*
29. *1.2.15*
30. *1.2.40*
31. *Ramayana Uttarakanda 96.19*
32. *Vanaparva 131*
33. *IV 8*
34. *Chapter 80*

# 7

## சித்தசுத்தி

## மனத்தூய்மை

இயற்கை, மனிதனை நல்லதும் கெட்டதும் - அன்பு, கருணை, இரக்கம், மனநிறைவு முதலிய நல்ல எண்ணங்களுடன் போட்டி, பொறாமை, வெறுப்பு, பகைமை முதலிய கெட்ட எண்ணங்களையும் - பற்பல எண்ணக் குவியல்களுடன் கலந்தே படைத்திருக்கிறது. அவன் எதைத் தேர்ந்தெடுத்துக்கொள்வதென்பது அவனையே பொறுத்தது. நல்ல எண்ணங்களைத் தேர்ந்தெடுத்தானாகில் வாழ்க்கையில் மன அமைதியைப் பெறுகிறான். கெட்ட எண்ணங்களை அறவே நீக்குதல் சித்தசுத்தி - மனத்தூய்மையாகும்.

இம்மனத்தூய்மையினால் பகவான் கீதையில் கூறியுள்ளபடி 'ப்ரஸாதே ஸர்வதுக்கானாம் ஹானி: அஸ்யோபஜாயதே'*1 - 'பிரசாதத்தினால், அருளினால் எல்லா இன்னல்களையும் கடந்து செல்கிறான். மனம் அமைதியுடன் தெளிவாக இருக்கையில் மனம் சஞ்சலமின்றி ஒருமுகப்பட்டதாக ஆகின்றது. 'ப்ரஸன்ன சேதஸ:*2 உடன் பகுத்தறியும் தன்மை மேலோங்கி மனம் அலைபாயாமல் இருக்கிறது. 'புத்தி: பர்யவதிஷ்டதே' இப்படிப்பட்ட மனநிலையில் ஒருவன் பிரச்னைகளுக்கு தெளிவான முடிவெடுத்து, அதை திடமாகக் கடைப்பிடிக்க இயலும். அதனால் சரியான முடிவெடுத்து பிரச்னைகளுக்கு தீர்வுகாண தெளிவான சிந்தனையும், முடிவிற்கு சரியான வழியும் மிகவும் இன்றியமையாததாகும். அக்காரணத்தினாலேயே, நமது ஆன்மீக நூல்கள் மனத்தூய்மையை வற்புறுத்துகின்றன.

சித்தம் விஸோதயேத் தஸ்மாத் கிம் அன்யைர்பாஹ்யஸோதனை:|
பாவத: ஸம்விஸுத்தாத்மா ஸ்வர்கம் மோக்ஷம் ச விந்ததி ||*3

'அதனால் ஒருவன் மனதை தூய்மையாக வைத்துக்கொள்ள வேண்டும். இல்லையேல் மற்ற தூய்மைகளினால் பயன் ஏதுமில்லை. மனத்தூய்மை கொண்டவன் சுவர்க்கத்தை அடைவதுடன் விடுதலையும் பெறுகிறான்'. மனதின் இத்தூய்மையினால் ஒருவன் நல்லதும் கெட்டதும் ஆன எல்லாச் செயல்களையும் அழித்துவிடு கிறான். தூய்மை பெற்ற ஆன்மா உள்ளத்தில் தங்கி என்றும் இருந்திடும் அழிவில்லா ஆனந்தத்தை அடைகிறது.

மனத்தூய்மை என்பது சொல்வது எளிது, தூய்மையாக வைத்துக்கொள் வது மிகக்கடினம். பகவான் கிருஷ்ணனும் அர்சுனனின் கூற்றை அங்கீகரிக்கிறார். 'ஸஞ்சலம் ஹி மன; க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம்'*4 – 'ஓ கிருஷ்ணா! மனம் இயற்கையிலேயே சஞ்சல சுபாவம் கொண்டது. அத்துடன் மனம் திடமாக தீவிரமாக ஒத்து வருவதில்லை.' அதை அடக்குவது என்பது காற்றை அடக்குவதற்கு ஒப்பாகும். 'தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்.'*5 இதற்கு பகவான் கொடுக்கும் அறிவுரையோ 'அப்யாஸ' பயிற்சி யினாலும் 'வைராக்ய'*6 பற்றற்ற நிலையினாலேயே அதை அடக்கமுடியும் என்கிறார்.

பயிற்சியும் பற்றற்ற நிலையில் இருப்பதும் எளிதான வழியல்லவே! அவைகளோ மிகக் கடினமான விரதங்களாகும். கீதையின் 17-ம் அத்தியாயத்தில் பகவான் மூன்றுவிதமான தவங்களைப் பற்றி கூறுகிறார். அவை 'ஸாரீர' - உடலால், 'வாங்மய' - வாக்கினால், 'மானசிக' - மனதினால் செய்யும் தவங்களாகும்.*7 மனதினால் ஆன தவம் ஒருமுகப்பட்ட திடமான மனதாகும். வஞ்சகம், கபடம் முதலிய தீய எண்ணங்களை மனதிலிருந்து அறவே நீக்கிய தூய்மையான உள்ளம், மன மகிழ்ச்சியுடன் கூடிய நோக்கு, அமைதி, தன்னடக்கம் முதலியவைகளாகும்.

மன: ப்ரஸாத: ஸௌம்யத்வம் மௌனம் ஆத்மவினிக்ரஹ: |
பாவஸம்ஸுத்தி: இதி ஏதத் மானஸம் உச்யதே ||*8

மனதினால் செய்யும் தவத்தை கிருஷ்ண பகவான் இறுதியில் குறிப்பிட்டபோதிலும் மனோதவமே மற்றவைகளைக் காட்டிலும் மிகவும் சிறந்ததாகவும் எல்லாவற்றிற்கும் அடிப்படையானதாகவும் அமைகிறது. மனதைத் தூய்மையாக்குவது வாக்கிலும் உடலிலும் உள்ள மாசுக்களை உடனே எளிதாக அகற்றிவிடுகிறது. அதனால் மனதை முதலில் தூய்மையாய் வைத்துக்கொள்ள வேண்டும். பயிற்சியினால் மனதை தூய்மைபடுத்திடின் மற்றவை தானே அதை அனுசரித்து தூய்மையாகிவிடும்.

அதனால் நல்லுணர்வுடன் கொண்ட முயற்சிசெய்தல் வேண்டும். இதை 'ஸிவஸங்கல்ப' என்று நல்ல எண்ணங்கள், நல்ல தீர்மானங்கள் என்றும் இவைகளை நிர்ணயம் செய்துவிட்டால் 'இந்திரியாணி' புலன்கள் தானாகவே நல்ல முறையில் மனதில் வசத்தில் இருந்துவிடும். அடிமையாயிருப்பதற்கும் விடுதலையாகி இருப்பதற்கும் மனமே காரணமாகும். 'மன ஏவ மனுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ:' 'ராக' மற்றும் 'த்வேஷ்ய' - அன்பு மற்றும் பகைமை உணர்வுகள் மனதை ஆக்கிரமித்துக்கொள்கின்றன. இவ்விரண்டிலிருந்தும் விடுபட்ட மனம் தத்தளிக்காது. எப்பொழுதும் அமைதியில் ஆழ்ந்திருக்கும். தெளிவுடனிருக்கும்.

இதை அடைவதற்கு ஒருவன் உலகியல் யாவற்றையும் துறக்க வேண்டிய அவசியம் இல்லை. ஒருவன் உலகச்சூழலில் இருந்துகொண்டே இவைகளினால் பாதிக்கப்படாமல் இருக்க இயலும். அந்நிலையை பற்றருப்பதினால் அடையமுடியும். பற்றற்றிருப்பதினால் அவனது செயல்கள் பட்சபாதமின்றி முற்றிலும் சரியானதாகவே அமைந்திடும். அந்நிலையில் இருப்பவன் மனது குழப்பத்தை அடையாமல் 'அனுபப்லுதசேதஸ:'*9 தெளிவாக இருப்பதால் அவனால் கடந்த காலத்தையும் வருங்காலத்தையும் பார்க்க இயலும். 'அதீதானாகதஞானம் ப்ரத்யக்ஷான் ச விஸிஷ்யதே.'

'ஸத்வஸுத்தி' எனப்படும் மனத்தூய்மையை அடைவதற்கு இன்றியமையாததாக அமைவது 'ஆஹாரஸுத்தி' - தூய்மையான உணவை உண்பதே ஆகும். உபநிஷதோ 'ஆஹாரஸுத்தௌ ஸத்வஸுத்தி:'*10 என்று தூய்மையான உணவு தூய்மையான மனதுடன் இணைந்திருப்பதாகும். அதேபோல் உடல் தூய்மையும் அதை அனுசரித்து செல்வதாகும். அதனாலேயே இந்திய கலாசாரப்படி இரண்டிற்கும் முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. 'ஸதம் விஹாய போக்தவ்யம், ஸஹஸ்ரம்ஸ்னானம் சரேத். 'நூற்றுக்கணக் கானவற்றை நீக்கிவைத்து உணவை உண்ணுதல் வேண்டும். ஆயிரக்கணக்கானவற்றை விடுத்து நீராடலை ஏற்க வேண்டும். நீராடுதல் உடலை சறுசுறுப்பாக வைத்திடும் அது மனதை தூய்மையாக வைத்திடும்.

பண்டைகாலம் முதற்கொண்டே நம் முன்னோர்கள் மனது நன்கு திடமாகவும் தூய்மையாகவும் இருக்க வேண்டுமென பிரார்த்தித்தனர். 'மே மன: ஸிவஸங்கல்பமஸ்து'*11 நமக்கு எப்பொழுதும் நல்ல மனது இருக்கட்டும். 'அகன்மஹி மனஸா ஸம் ஸிவேன'*12 எனது மனது துக்கமின்றி இருக்கட்டும். 'அஸந்தாபம் மே ஹ்ருதயம்' என்னுடைய

நல்ல எண்ணங்களை எதிரில் வைக்கிறேன். 'ஆகூதம் தேவீம் ஸுபகாம் புரோ ததே'*13

மேற்கோள்கள்


1. *2.65*
2. *ibid*
3. *Skanda Purana Ma Kau 42.63-4*
4. *Bhagavadgita 6.34*
5. *ibid*
6. *ibid*
7. *ibid XVII 14-16*
8. *Brahmabindupanisad 2*
9. *Vakyapadiya 1.37*
10. *yajurveda 1.37. Vajasaneyasamhita 34.5.6*
11 *Atharvaveda 6.53.3*
12. *ibid 16.3.6*
13. *ibid 19.4.2*

# 8

# தைர்ய

## மனவலிமை

மகாபாரதத்தில் 'தீர' 'தைர்ய' - மனதிடம் என்னும் சொல்லுக்கு இலக்கணம் வகுக்கையில் இன்பத் துன்பங்களினால் மனம் பாதிக்கப் படாமல் இருக்கும் நிலை என்கிறார். 'த்ருதிர்னாமஸுகே துக்கே யதா நாப்னோதி விக்ரியாம்'*1 - இன்ப துன்பங்களினால் பாதிக்கப்படாமல் துன்பம் நேரும் நேரம் புலம்பாமலும், இன்பமேற்படும் நிலையில் வெற்றியில் துள்ளிக்குதிக்காமலும் இருப்பது மனதிடத்தின் மூலக்கரு குணமாகும். இதை இடைவிடாமல் எப்பொழுதும் அனுசரிப்பவன் 'மனதிடம் கொண்டவன்' - 'தீர' எனப்படுகிறான். 'தீர: துக்கை: ந தப்யதே ந ஸுகை: ப்ரஹ்ருஷ்யேத் ஸமேன வர்ததே ஸதைவ தீர:'*2

காளிதாசன் தான் இயற்றிய குமாரசம்பவத்தில் தவத்தில் ஈடுபட்டவர் களுக்கு ஒரு பெண் பணிவிடை செய்வதென்பது அவரது மன ஒருமைப்பாட்டிற்கு தடையாக இருப்பினும் பரமசிவன் பார்வதிக்கு பணிவிடை செய்ய அனுமதி அளிக்கிறார் என்கிறார். 'ப்ரத்யர்திபூதாம் அபி தாம் ஸமாதே:'*3 தடை ஏற்படும் நிலை ஏற்பட்டாலும் தன் ஒருமைப்பாட்டிலிருந்து பாதிக்கப்படாமல் இருப்பதே உண்மையான மனோதிடமாகும். 'விகாரஹேதௌ ஸதி விக்ரியந்தே யேஷாம் ந சேதாம்ஸி த ஏவ தீரா:'*4 - மிகவும் மோசமான நிலைமைக்கு உள்ளான போதிலும்கூட மனதிடங்கொண்ட தீரர்கள் தன் கட்டுப்பாட்டை மீறமாட்டார்கள். தன் மனதை அமைதியாக வைத்துக்கொண்டு சாதிக்க இயலாத பற்பல அரியசாதனைகளை வெற்றியுடன் முடித்துள்ளனர்.

மனதிடத்துடன் இருந்து பல சவாலான கடின செயல்களை மேற்கொள்ளும் பயிற்சியே வாழ்க்கையில் வெற்றிகொள்ள

மூலகாரணமாகும். இது இயற்கையில் பிறவிக்குணமாகவும் இருக்கலாம். இல்லையெனில் மகான்களின் அறிவுரைகளைக் கேட்டு திடமாக அவைகளைப் பின்பற்றுவதாலும் அக்குணத்தை பெற்றிடலாம். வாழ்க்கையில் பல சந்தர்ப்பங்கள் ஒருவனது மனதிடத்தை இழக்கும்படியாக நேரிடலாம். அத்தருணத்தில் அதை ஏற்பதைக் காட்டிலும் வேறு ஒரு வழியை தானே வகுத்துக்கொள்ள லாம். இதை சொல்வது எளிது. ஆனால் செயலில் அனுசரிப்பது கடினமே.

ஒருவன் திடமாக நின்று தனது உணர்ச்சிகளால், எண்ணங்களால், சிந்தனைகளால் பாதிக்கப்படாமல் இருக்க வேண்டும். தன் அன்பு மனைவி இந்துமதியை இழந்துவிட்டதால் மிக்க துன்பத்துக்குள்ளாகி அரசியல் பணிகளை சரிவர கவனத்துடன் செய்ய இயலாமல் இருந்த அஜனுக்கு, வசிஷ்டர் கொடுத்த அறிவுரையின் சாராம்சம் இதுவே என அக்கதையில் கொடுக்கப்பட்டுள்ளது.

'த்ருமஸானுமதோ: கிம் அந்தரம் யதி வாயௌ த்விதயேபி தே சலா:'[5] - பலமான காற்று வீசுகையில் மலை, மரம் என இரண்டுமே ஆடி சாயத் தொடங்கிவிட்டால் ஒரு மலைக்கும் மரத்திற்கும் என்ன வேறுபாடு உள்ளது? ஒருவன் திடமனதுடன் எப்படிப்பட்ட செயலாலும் ஆட்டம்கொள்ளாமல் நிமிர்ந்து திடமாக நிற்க வேண்டும். இதுவே உண்மையான நற்குணமாகும். இதற்கு இதனாலேயே நற்குணங்களின் எண்ணிக்கையில் முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது.

த்ருதி: க்ஷமா தமோ ஸ்தேயம் ஸௌசம் இன்த்ரியனிக்ரஹ:|
தீர்வித்யா ஸத்யம் அக்ரோதோ தஸகம் தர்மலக்ஷணம் ||[6]

இவைகளில் மனோதிடம் இன்றியமையாதது. இம்மனோதிடமே ஒருவனை சமாளிக்க முடியாத மிகக் கடினமான சூழ்நிலையிலும் மனதை சமநிலையில் இருத்தி வாழ்க்கையில் பல அரிய பெரிய சாதனைகளை செய்து பலராலும் பலதுறைகளிலும் போற்றப்படும்படி இருக்கச்செய்கிறது. ராமனை யுவராஜகுமாரனாக பட்டஞ்சூட்ட வெளியில் பிரகடனம் செய்த பின்பு தேரோட்டி சுமந்திரர் மூலம் அரண்மனையில் நடக்கும் வைபவங்களை எல்லாம் மறந்து தம் தந்தையால் அழைக்கப்பட்டார்.

மக்களின் களிப்பை கண்டு அவரோ மிக்க மனமகிழ்ச்சியுடன் தாய் கைகேயியுடன் இருந்த தம் தந்தையை நேருக்குநேர் சந்திக்கச்சென்றார். ஆனால் தகப்பனார் அவரை வழக்கம் போல் வரவேற்கவில்லை.

தந்தையோ மிகவும் தம்நிலை குலைந்திருந்தார். கைகேயி தான் வரமடைந்தக் கதையை எடுத்துரைத்து, மன்னன் வாக்களித்திருந்த அவ்விருவரங்கள் மூலம் பரதன் பட்டாபிஷேகம் செய்துகொண்டு பாராள வேண்டும் எனவும், ராமன் பதினான்கு ஆண்டுகள் காட்டில் வசிக்க வேண்டும் எனவும் கூறினாள். இவ்வாறு திடீரென ஏற்பட்ட நிகழ்ச்சிகளின் மாற்றங்கள் ராமனை சிறிதளவும் பாதிக்கவில்லை. மிகப்பரந்த மனம் கொண்ட ராமன் வருத்தமடையவும் இல்லை.

'ந சைவ ராம: ப்ரவிவேஸ ஸோகம்'*7

அரசைத் துறந்து காட்டிற்குச் செல்ல தயாராக இருந்த அவன் மனதில் எந்தவிதமான குழப்பமும் இல்லை. இவ்வாறு எதிலும் பற்றற்ற நிலையைக் கடைப்பிடிப்பவனால் தான் இவ்வாறு நிலை குலையாமல் இருக்க இயலும்.

ந வனம் கந்துகாமஸ்ய த்யஜதஸ்ச வஸுந்தராம் |
ஸர்வலோகாதிகஸ்யேவ லக்ஷ்யதே சித்தவிக்ரியா ||*8

மாரீசனைக் கொன்று திரும்பிய ராமன், சீதையின்றி காலியாக இருந்தக் குடில் கண்டு அவளைக் காணாமல் மனம் கலங்கினார். ஆனால் உடனேயே சற்று நேரத்தில் தைரியத்தை கைக்கொண்டு மனதில் தீர்மானமேற்று குரங்குகளுடனும், கரடிகளுடனும் ஒப்பந்தம் செய்துகொண்டு பலவானான ராவணனுடன் எதிர்த்து போரிட்டு வெற்றிகொண்டு சீதையை மீண்டும் பெற்றான்.

இவ்வாறு திடமான மனதுடன் இருப்பதென்பது பெரியோர்களின் தனிப்பட்ட சிறப்பு குணமாகும். மகான்கள் இடுக்கண் வந்தபோதிலும் மனதிடத்துடன் இருந்து அமைதி காத்து செயலில் வெற்றிகொள்வதென்பது இயற்கை குணமாகும். ஹிதோபதேசத்தில் கூறியபடி,

விபதி தைர்யம் அதாப்யுதயே க்ஷமா
ஸதஸி வாக்படுதா யுதி விக்ரம:|
யஸஸி சாபிருசி: வ்யஸனம் ஸ்ருதௌ
ப்ரக்ருதிஸித்தம் இதம் ஹி மஹாத்மன: ||*9

ஆபத்தில் மனோதிடம், செல்வம்வரின் பொறுமை, சபையில் பேச்சுத்திறன், போரில் வீரம், புகழில் விருப்பம், கற்பதில் திடமான பற்று, இக்குணங்கள் மேலோர்களிடம் இயற்கையாய் அமைந்த குணங்கள்.

ஆங்கிலேயர்களை எதிர்த்து போராட்டம் துவங்கிய போது ஆங்கிலேய சாம்ராஜ்ஜியத்தின் பலத்தை காந்திஜி அறிந்தாரில்லை. நேதாஜி சுபாஷ் சந்திரபோஸும் இந்திய தேசிய ராணுவத்தை துவங்கியபோது அவரிடம் எந்தவிதமான மூலதனமும் இல்லை. இருந்தும் அவர்கள் தொடர்ந்து பணியில் இறங்கினர். அவர்களது விடாமுயற்சியே அவர்களுக்கு உறுதுணையாயிருந்து. தேச விடுதலையை மீட்டுக்கொடுத்தது. இதுபோலவே எண்ணிலடங்கா வீரர்கள் விடாப்பிடியாக வீரத்துடன் வெளிநாட்டு அரசாள்பவர்களின் கொடுமையான விதிகளையும் எதிர்த்தனர். ஒருபொழுதும் மனதிடத்தை கைவிடவில்லை. கடைசி நொடிவரை அவர்கள் தங்களது உற்சாகத்தை தொடர்ந்து ஏற்றனர்.

அவர்கள் இரும்பு மனிதர்கள். அப்படிப்பட்டவர்களே தங்கள் குறிக்கோளை அடைகின்றனர். திறனற்ற கீழ்மக்களோ எந்த ஒரு பணியையும் சாதிக்க முடிவதில்லை. நடுவர்களோ பணியைத் துவங்கிடுவர். ஆனால் மத்தியில் ஏற்படும் தடங்கல்களை எதிர்க்க இயலாமல் பாதியில் கைவிடுகின்றனர். நல்ல திறன் படைத்த மேன்மக்களோ தடங்கல்களையெல்லாம் எதிர்த்துப் போராடி தாங்கள் துவங்கிய பணியை முடிக்காமல் அரைகுறையாக விடுவதில்லை.

ப்ராரப்யதே ந கலு விக்னபயேன நீசை:
ப்ராரப்ய விக்னவிஹதா விரமந்தி மத்யா:|
விக்னை: புன: புனரபி ப்ரதிஹன்யமானா:
ப்ராரப்தம் உத்தமகுணா: ந பரித்யஜந்தி ||*10

நல்ல அறிவுபூர்வமான அறிவுரை என்னவென்றால் காலம் நேரம் சாதகமாக இல்லாத நேரத்திலும் ஒருவன் மனோதிடத்தை விட்டுவிடக்கூடாது - 'த்யாஜ்யம் ந தைர்யம் விதுரேபி காலே'.*11

ஒருவன் தன்னை கட்டிற்குள் வைத்துக்கொள்ளும் திறன் கொண்டிருந்தால் வெற்றியடைவது திண்ணம் - 'தைர்யாத் கதாசித் கதிம் ப்ராப்னுயாத் ஸ;.'*12 கப்பலே உடைந்து சிதறினாலும் மனதிடம் கொண்டவன் கடலை நீந்தி கரை சேர்ந்திடுவான். வரலாறு கடலை நீந்திக் கடந்தவர்களின் பட்டியலையே கொடுக்கிறது. ஒரு உகந்த எடுத்துக்காட்டு வீரசவர்கர் குளிர்காலத்தில் பாரிஸ் நகரின் அருகிலுள்ள பனி போல் உரைந்த நீரில் கடலில் குதித்ததாகும்.

திடமனது, தேவையான இன்றியமையாத ஒரே குணம். அதுவும் அதற்கு எளிதாக புரிந்துகொள்ளும் வண்ணம் இலக்கணம் தேவையென்றால் காளிதாசனிடம்தான் செல்ல வேண்டும்.

'விகாரஹேதெள ஸதி விக்ரியந்தே யேஷாம் ந சேதாம்ஸி த ஏவ தீரா:'*13 - மன உளைச்சலுக்கு தேவையான காரணங்கள் சூழ்ந்திருந்தபோதிலும் எவர்களுடைய மனது தன்வசத்தினின்றும் பிறழாமல் கட்டுக்குள் இருந்திடுமோ அவர்களே தீரர்கள் ஆவார்கள்.

பிறிதொரு இலக்கணம் கூற வேண்டுமானால் 'துன்பத்திலும், செழுமையிலும் ஆக இரண்டு நிலைமையிலும் ஒருபோல் மனதை வைத்துக்கொள்வது.

ஸம்பத்தெள ச விபத்தெள ச மஹதாம் ஏகரூபதா |
உதயே ஸவிதா ரக்தோ ரக்தசாஸ்தமயே ததா ||*14

மேன்மக்கள் துன்பத்திலும் செழுமையிலும் ஒரேமாதிரியாக இருப்பர். சூரியன் உதிக்கும் காலையிலும் சிவப்பாக இருக்கிறான், அஸ்தமனமாகும் மறையும் நேரமும் சிவப்பாகவே இருக்கிறான். அப்படிப்பட்ட மனிதர்கள் உலகில் கிடைத்தற்கு அரிதானவர்கள் என்பது உண்மையே.

'செழிப்புடன் இருக்கும் நேரமும், கஷ்டம் வந்த நேரமும் போர்க்களத்திலும் திட உறுதியுடன் நிற்கின்றவனும், மூவுலகிற்கும் அழகூட்டும் நகையாய் விளங்கும் பிள்ளையை ஒரு தாய் பெற்றெடுத்தல் என்பது அரிதிலும் அரிது'.*15

மனோதிடத்தையும் பொறுமையையும் இயற்கை குணமாகக் கொண்டவர்கள் கெட்ட நிலைமையினால் கீழே தாழ்த்து அழுத்தப்பட்டாலும், தீயை தலைகீழ் வைத்தாலும் அதன் கொழுந்து கீழ்நோக்கிச் செல்லாமல் மேல் நோக்கி எழுவதுபோல் மேலெழுந்திடுவர்.

கதர்திதஸ்யாபி ஹி தைர்யவ்ருத்தேர்
ந ஸக்யதே தைர்யகுண: ப்ரமார்ஷ்டும் |
அதோமுகஸ்யாபி க்ருதஸ்ய வஹ்னேர்
நாத: ஸிகா யாதி கதாசித் ஏவ ||*16

மனோதிடம் படைத்தவர்கள், தங்கள் மனதின் தெளிவை இழந்து அலைபாய விடமாட்டார்கள். இதுவே அவர்களது சிறப்பான

தலைசிறந்த குணமாகும். அப்படிச் செய்யாவிடில் அவர்கள் மனோதிடம் கொண்டவர்கள் ஆகமாட்டார்கள்.

இக்குணம் படைத்தவர்கள் ஒருமுறை தீர்மானித்துவிட்டால் எண்ணிலடங்கா பல சிக்கல்களையும் தடங்கல்களையும் எதிர்த்து நிற்பார்கள். அதிலிருந்து பின்வாங்க மாட்டார்கள். 'க்ருச்ச்ரேபி ந சலதி ஏவ தீராணாம் நிஸ்சலம் மன:' அவர்களது மனவுறுதியின் முன்னர் அத்தடங்கல்கள் மிகச்சிறியதாகவே தோற்றமளிக்கும். 'இப்பூமி சிறு முற்றம் போலவும், பெருங்கடல் வாய்க்கால் போலவும், பாதாளம் ஒரு சிறு நிலம் போலவும், சுமேரு மலை எறும்புப்புற்று போலும் காட்சியளித்திடும்.

அங்கண்வேதி வஸூதா குல்யா ஜலதி: ஸ்தலீ ச பாதாலம் |
வல்மீகஸ்ச ஸுமேரு: க்ருதப்ரதிஞஸ்ய தீரஸ்ய ||*17

பல புதிய படைப்புகளும், கண்டுபிடிப்புகளும் இப்படிப்பட்டவர்களின் முயற்சியினால் ஆனதே. எத்தனை எத்தனை ஆண்டுகள் அவர்கள் ஊடுருவிச் செல்ல இயலாத அடர்ந்த காட்டிற்குள் காலங்கழித்தனரோ? இதை யார் அறிவார்கள்? வனவிலங்குகளைப் பற்றிய பல ஆராய்ச்சிகளைச் செய்துள்ளனர். ஆழ்கடலில் பல ஆபத்துக்களுக்கும் தங்களை ஆளாக்கிக்கொண்டு பல விபத்துகளையும் எதிர்கொண்டு பல கடல் ஆராய்ச்சிகளை நடத்தியுள்ளனர். பலர் தங்களது உயிரையே பலிதானம் செய்துள்ளனர்.

திபெத்திலுள்ள கோபி பாலைவனங்களைக் கண்டுபிடிக்க ஒரு 'ஸ்டீன்' அங்குள்ள ஓலைச்சுவடிகளை கண்டுபிடித்தெடுக்க ஒரு 'ராஹுல் சங்கீர்த்தியயன்' தேவைப்பட்டனர். நீரில் மூழ்கிய துவாரகையை கண்டெடுத்தார் எஸ்:ஆர்.ராவ். எட்மெண்ட் ஹில்லாரி, ஷெர்பா டென்சிங் இருவரும் எவரெஸ்ட் மலையில் ஏறி அதைக்காண முயற்சிசெய்து வெற்றிகண்டனர். விண்வெளி வீரர்கள் பலர் விண்வெளியில் வெற்றிகரமாக பயணம் செய்து சந்திரனில் இறங்கினர். செவ்வாய் கோளுக்கும் விண்கலம் அனுப்பப்பட்டுள்ளது மனிதன் முன்னேற்றப் பாதையில் முனைந்து இவ்வளவு முன்னேறிச் சென்றதற்கும் இப்படிப்பட்ட மனிதர்களின் பலரின் டைனமோ சக்தியினாலேயே முடிந்தது. மனித இனம் இம்முன்னேற்றங்களுக்காக இவர்களுக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளது.

தனக்கென ஒரு வழி வகுத்த பின்னர் அதிலிருந்து பின் செல்வதென்பதே கிடையாது. தனது குறிக்கோளை அடையும் வரை

இளைபாற மாட்டார்கள் - 'ந நிஸ்சிதார்தாத் விரமந்தி தீரா:'*18 எந்தவிதமான தூண்டுதலோ அல்லது ஏதேனும் அபாயம் ஏற்பட்டு விடுமோ என்ற அச்சமோ அவர்களைத் தீர்மானித்த வழியினின்றும் விலகச்செய்யாது. இக்கூற்றை மேலும் வலுப்படுத்துவது போல் பர்த்த்ருஹரி கூறுகிறார் மனதிடம் கொண்டவர்கள் தனது குறிக்கோளை வெற்றிகரமாக முடிக்கும் முன்னர் இளைப்பாற மாட்டார்கள்.

பாற்கடலைக் கடைந்த நேரம் வானுலகோர் விலைமதிப்பு கொண்ட மணிகள் அடைந்தபொழுதும் மகிழ்ச்சியும் அடையவில்லை. கொடிய விஷம் கிடைத்தபோதும் அச்சங்கொண்டு எடுத்தப் பணியில் கவனக்குறைவாகவும் இருக்கவில்லை.*19 அமிர்தம் கைக்கு கிடைக்கும்வரை இளைப்பாறவில்லையே! இவ்வாறு உண்மையிலேயே காரியத்திலேயே கண்ணாக இருப்பவர்களை, தேவகன்னிகைகளின் அம்பொத்த கடைக்கண் பார்வைகள் துளைக்காது. எவருடைய கோபக்கனலும் மனதை தடை செய்யாது. பொறாமையாம் பாசக்கயிறு அவர்களது புலன்களை எந்தப்பக்கமும் இழுத்துச் செல்லாது. அப்படிப்பட்ட மனிதன் மூன்று உலகையும் வென்றிடுகிறான்.

காந்தாகடாக்ஷவிஸிகா ந துதந்தி யஸ்ய
சித்தம் ந நிர்தஹதி கோபக்ருஸானுதாப: |
கர்ஷந்தி பூரிவிஷயஸ்ச லோபபாஸை:
லோகத்ரயம் ஜயதி க்ருத்ஸ்னம் இதம் ஸ தீர: ||*20

இதே பர்த்ருஹரி மற்றொரு இடத்தில் 'மனோதிடங்கொண்டவர்கள்' -'தீரா:' என்றால் தன் கொள்கைகளில் உறுதியாக நிற்பவர்கள் என்றும் நேர்மையான வழியினின்றும் சிறிதும் வழுவிச் செல்லாதவர்கள் 'ந்யாயாத் பத:' என்றும் கூறுகிறது. அதாவது தன்னைப் பற்றி பிறர் புகழ்ந்தாலும் இகழ்ந்தாலும், அதிர்ஷ்ட தேவதை அவர்களை அணைத்தாலும் அல்லது விட்டு விலகிச்சென்றாலும், மரண வாயிலில் உடன் நுழைபவரானாலும் அல்லது யுகமுடிவில் இறப்பவரானாலும் நேர்மை வழியினின்றும் விலகிச்செல்லார்கள்.*21

மனதிடத்துடன் தீர்மானம் செய்யப்பட்ட விரும்பிய இலக்கை அடைவதிலிருந்து, நீர் உயரத்திலிருந்து கீழ்நோக்கியே பாய்ந்து ஓடி வருவது போல், எதிர்த்து செயல்பட இயலாது. 'க்வ ஈப்ஸிதார்தஸ்திரநிஸ்சயம் மன: பயஸ்ச நிம்நாபிமுகம் ப்ரதீபயேத்.'*22

இப்படிப்பட்டவர்களுக்கு தனக்கு ஒத்தது என்றோ இல்லாததென்றோ சிறிதும் கவலை ஏற்படுவதில்லை - 'மனஸ்வீ கார்யார்தீ ந கணயதி து:கம் ந ச ஸுகம்.'*23

இவர்கள் தாங்கள் எடுத்துக்கொண்ட பணியை விடாமுயற்சியுடன் நிறைவுசெய்கிறார்கள். இங்கு புராணங்களில் குறிப்பிடப்பட்டுள்ள அரிச்சந்திரன் கதையை எடுத்துக்காட்டாகக் கூறலாம். அரிச்சந்திரன் சுடுகாட்டில் வரி வாங்கிச் சேர்க்கும் பணியில் இருத்தப்பட்டான். அவன் கையில் ஒரு காசுமில்லாத தன் மனைவியைக்கூட வரி வாங்குவதில் விதிவிலக்காக விடவில்லை. அவள் தனது சேலையின் ஒரு பகுதியை அவனுக்கு வரிப்பணமாக செலுத்தி இறந்த தன் அன்புமகனின் இறுதிச்சடங்கை செய்து விடைபெற்றாள்.

மேவாடைச் சேர்ந்த ராணா பிரதாப் தன் சுதந்தரத்தை இழந்து முகலாய சக்ரவர்த்தி அக்பரிடம் சரண் அடைய விரும்பாமல், தனக்கும் தன் குடும்பத்தாருக்கும் பல நாட்கள் உண்ண உணவின்றி காட்டில் மறைந்து வாழ்ந்தான். உண்மையில் அவனுக்கு புல்லே உண்ணக் கிடைத்தது. இருந்தாலும் அதை உண்டு தன் தலை நிமிர்ந்து நின்றான். அவர்களே உண்மையில் தீரர்கள், மனதிடம் கொண்டவர்கள் ஆவார்கள். அவர்கள் தைரியமே உருக்கொண்டவர்கள், வரலாற்றில் தனக்கென ஒரு இடத்தை ஏற்படுத்திக்கொண்டவர்கள் ஆவார்கள்.

இவ்வாறு ஏதேதோ பெரிய பெரிய விஷயங்களில் தான் என்றில்லை, அன்றாடம் நமது தினசரி வாழ்க்கையிலும் நாம் அமைதியுடன் மகிழ்ச்சியுடன் வாழ்வதற்கு பொறுமையை கைக்கொண்டோமாகில் எவ்வளவு உதவியாக இருக்கும். ஒரு மிகவும் சின்னஞ்சிறிய மனதிற்கு ஒவ்வாத செயலிலும் இதை நாம் காணலாம்.

எடுத்துக்காட்டாக காலைச் சிற்றுண்டி விரைவாக உண்பதிலேயே பார்ப்போமே. உன் கையிலுள்ள காப்பிக் கோப்பையை உன் மகள் ஓடி வந்து மோதிக்கொள்ள அது கீழே விழுகிறது. அச்சமயம் அலுவலகத்திற்கு செல்ல தயாராக இருந்த உனது சுத்தமான மேல் சட்டையின் மேல் காபி கொட்டியது. அதனால் சினங்கொண்ட நீ அவளைத் திட்ட அவளும் அழுகிறாள். உடனே நீ உன் மனைவியின் மேல் சாடுகிறாய். அவள் மேசையின் நுனியில் காப்பிக் கோப்பையை வைத்தது தவறு என்றும் அதனால் தான் குழந்தை கோப்பையை கீழே தள்ளிவிட நேரிட்டது என்றும் அவள் மேல் புகார் கூறுகிறாய். உங்கள் இருவரிடை வாக்குவாதம் ஏற்படுகிறது.

பிறகு நீ உன் மேல் சட்டையை மாற்றிக்கொள்ளச் செல்கிறாய். நீ உடை மாற்றிக்கொண்டு வந்தும் உன் மகள் இன்னமும் அழுகையை யும் நிறுத்திடவில்லை. பள்ளிக்குச் செல்லவும் தயாராகவில்லை. அதனால் அவள் பஸ்ஸை பிடிக்கத் தவறிவிட்டாள். அவளை பள்ளியில் கொண்டு சேர்த்திட நீ வேகமாக செல்கிறாய். உனக்கு நேரமாகிவிட்டதால் நீ அதிவேகமாக காரை ஓட்டுகிறாய். போலீஸிடம் அபராதம் செலுத்துகிறாய். பின்னர் அலுவலகத்தை அடைந்த நீ தனது கைப்பையை எடுத்துவர மறந்துவிட்டதை பார்க் கிறாய். இப்படிப்பட்ட எல்லா சிக்கல்களுக்கும் குழப்பங்களுக்கும் மூலகாரணம் நீதான் அல்லவா!

நீ நடந்த நிகழ்ச்சிக்கு இப்படி நடந்துகொண்டிருந்திருக்கலாம். நீ உன் மகளைப் பார்த்து போனால் போகிறது. இனி கவனமாக இரு. காலை உணவை வேகமாக முடித்துவிடு. நானும் உடை மாற்றிக்கொண்டு வந்து நீ பஸ்ஸில் போகையில் விடையனுப்பி வைக்கிறேன். நீ உனது கைப்பையை எடுத்துக்கொண்டு காரியாலயத்தை சரியான நேரத்தில் மகிழ்ச்சியுடன் அன்றைய பணியாற்றிடச் சென்றிடுவாய். இப்படி அமைதியாக இருந்திருந்தால் நீ அனாவசியமான சிக்கல்களையும் குழப்பத்தையும் நீக்கியிருக்கலாம்.

ஒருவன் திடநம்பிக்கையுடனும் பொறுமையுடனும் இருந்தால், துன்பத்தை கொடுக்கும் எல்லா அல்லல்களுக்கும் மனக்கிலேசத்திற்கும் காரணமாயிருக்கும் பல சந்தர்ப்பங்களையும் நிகழ்ச்சிகளையும் எளிதாக கடந்துவிடலாம். இங்கு ஒரு அழகான கதையை எடுத்துரைப்பது மிகவும் பொருந்துவதாகும்.

ஒரு குழந்தை மிகவும் இரைந்து கதறிக்கொண்டிருந்தாள். அவளுடைய தந்தை அவளை எப்படியெல்லாமோ சமாதானம் செய்ய முயற்சி செய்தார். எல்லாம் வீணாயிற்று. அக்குழந்தையோ நான் இந்த காலணியை அணிந்துகொண்டு பள்ளிக்குச் செல்லமாட்டேன். எனது வகுப்பிலுள்ள எல்லோரும் நல்ல நல்ல காலணிகளை அணிந்துகொண்டு வருகின்றனர் என அறியாத்தனமாக அடம்பிடித்தாள்.

தந்தையோ அவ்வளவு வசதி படைத்தவர் அல்ல. அவரது வருமானம் கட்டுக்குள் அடங்கியதே. அதற்குள் குழந்தையை மன மகிழ்ச்சியுடன் இருக்க முயற்சிசெய்தார். மேலும் அடுத்த மாத சம்பளம் வந்ததும் புதிய காலணி வாங்கித்தருவதாகவும் கூறினார். மீண்டும் மீண்டும் குழந்தை அடம் பிடிக்கவே அவரும் அக்காலணியை பழுது பார்த்து

தருவதாகக் கூறினார். அதைக்கேட்டு சக்கிலியன் அந்த காலணியை பழுது செய்யமாட்டான். ஏனெனில் அது மிகவும் கிழிந்து பழுதுசெய்ய இயலாததாக இருக்குமென நினைத்து குழந்தை சிறிது மனமகிழ்ந்தது.

குழந்தையும் தந்தையும் சக்கிலியன் இருப்பிடம் சென்றனர். சக்கிலியன் குழந்தையைப் பார்த்து 'நீ அதிகமாகவே விளையாடுவாய் என்று நினைக்கிறேன்' என்று கேட்டான். 'ஆமாம். அது போகட்டும் இந்த காலணியை பழுது செய்ய இயலுமா?' என்று முரட்டுத் தனமாகவே கேட்டது. 'இந்த காலணிகள் நன்றாகவே இருக்கின்றன. இதை சிறிது ஒட்டினால் போதுமானது' என்று கூறினான்.

குழந்தை மிகச்சினமடைந்தாள். தான் ஒரு ஜோடி புதிய காலணி வாங்கிக்கொள்வதிலிருந்து சக்கிலியன் தடுத்திவிட்டானே என நினைத்து அவனைப் பார்த்து கடுஞ்சொற்களை வீச தயாராக இருந்தாள். தற்சமயம் அக்குழந்தை தன் தந்தையை புதிய காலணி வாங்கிக்கொடு என்று கூற முடியாதே! 'என் காலணிகளை இப்படி வைத்த கண் எடுக்காமல் பார்க்கிறாயே, அதில் ஏதேனும் விலைமதிப்புள்ள கற்கள் இருக்கின்றனவா?' குழந்தை சீறினாள். 'இல்லை பாப்பா, நான் என்னிரு கால்களையும் விபத்தில் இழக்கும் முன்னர் நிறைய விளையாடுவேன். ஆனால் அதனால் நான் மனம் இழக்கவில்லை. உன்னைப்போன்ற சிறு குழந்தைகள் விளையாடுவதை மனக்களிப்புடன் பார்த்துக்கொண்டிருப்பேன். கடவுளிடம் அதைப் பார்க்கக கிடைத்த என் கண்களுக்கு என் நன்றியை செலுத்துகிறேன்' என்று அமைதியாகவே கூறினான்.

குழந்தை திகைத்து நின்றது. சக்கிலியனையும், அவனது துண்டிக்கப்பட்ட கால்களையுமே பார்த்துக்கொண்டிருந்த்து. ஆஹா! இருந்தும் எப்படி அவன் அமைதியாக இருந்துகொண்டு தனக்கு கடவுள் கொடுத்தவைகளைக் கொண்டு மனநிறைவுடன் கடவுளுக்கு நன்றி செலுத்துகிறான். இப்பொழுதும் அவன் சிரித்துக்கொண்டும் வாழ்க்கையை மகிழ்ச்சியுடனும் கழிக்கிறான். இதை நினைத்து குழந்தை வாழ்க்கையில் மிக உயர்ந்ததொரு பாடத்தை கற்றுக்கொண்டது. இனி காலணி பழையதாகிவிட்டது, கிழிந்துவிட்டதென்று அழுவதே நின்றுவிட்டது.

ஒருவன் அமைதியாக குழப்பமடையாமல் சமநிலையிலிருந்தால் எப்படிப்பட்ட கெட்ட நிலைமையும், பணச்சிக்கலையும் தானாகவே ஒருவழியில். சமாளித்துக்கொள்ளலாம். ஏனெனில் மனம்

சமநிலையில் இருப்பதால் அமைதியான மனத்துடன் எப்பேர்ப்பட்ட சிக்கலுக்கும் தீர்வு காண இயலும்.

'சுரங்க வழியின் முடிவில் வெளிச்சம் இருப்பது திண்ணம்' என்ற கூற்றிற்கேற்ப ஒருவன் முழு முயற்சியுடன் சுரங்கப்பாதையை கடந்திட வேண்டும். நடுவிலேயே நம்பிக்கையிழந்து நாசமடைதல் கூடாது. அதற்கு, பொறுமை, விடாமுயற்சி, மன உறுதி இவை தேவையாகும். இவைகளையே தைரியம் என்னும் சொல் குறிப்பிடுகிறது.

### மேற்கோள்கள்


1. *Santiparva* 162.19
2. *ibid* 89.9
3. *Kumarasambhava* 1.59
4. *ibid*
5. 8.90
6. 6.92
7. *Ramayana* 2.18.41
8. *ibid* 2.19.33
9. 1.31
10 *Nitisataka* 27
11 *Pancatantra, Mitralabha,* 216
12 *ibid*
13 *Kumarasambhava* 1.59
14. *Pancatantra Mitrasampraapti* 7
15. *Hitopadesa* 1.32
16 *ibid* 2.69
17 *Subhasitavali,* 227
18 *Nitisataka* 81
19 *ibid*
20 *ibid* 107
21 *ibid* 84
22 *Kumarasambhava* 5.5
23 *Nitiosataka* 82

# 9

## ஔசித்ய

## நடுநிலை

வாழ்க்கையில் நடுநிலை வகித்தல் இன்றியமையாததாகும். மனிதனின் எல்லா நடவடிக்கைகளையுமே நடுநிலைமை தாங்கியே செய்தல் வேண்டும். இதை ஏற்று செயல்பட்டால் வாழ்க்கை பிரச்சினையின்றி எளிதாக அமையும்.

'ஔசித்ய' என்ற சொல்லின் மூலக்கரு 'உசித' - தகுதியான, பொருத்தமான என்ற அடிச்சொல்லாகும். இனி தனிப்பட்ட ஒருவன் தானே சந்தர்பத்துக்கு ஏற்றவாறு தனக்கு உசிதமான உகந்த வழியை தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். நல்ல நூல்களும் ஆசான்களும் பெரியோர்களும் வழிகாட்டிவிடலாம். அறிவுரைகளை அளிக்கலாம். ஆனால் தீர்மானிப்பது தனிப்பட்ட நபரை பொருத்ததே.

'ஔசித்ய' 'உசிதம்' என்பது சந்தர்ப்பத்துக்கு சந்தர்ப்பம் மாறுபடுகிறது. ஒரு சந்தர்ப்பத்துக்கு உசிதமான முடிவு பிறிதொரு சந்தர்ப்பத்துக்கு பொருத்தமற்றதாக இருந்திடலாம்.

உசிதத்துக்கான இன்றியமையாத தேவை என்னவென்றால் நம்முடன் அக்கறை கொண்டவர்களின் அறிவுறைகளை ஏற்று நமது பகுத்தறிவை பயன்படுத்தி முறையான முடிவெடுக்கும் மனப் பக்குவமே. சந்தர்ப்பங்களை ஆராய்ந்து எடைபோடும் திறனும், பல வழிகள் உள்ளபொழுது சரியான வழியைத் தேர்ந்தெடுக்கும் திறனும் இன்றியமையாததாக ஆகும். இதற்கு சமுதாய மதக் கோட்பாடுகளை மீறாமல் இருத்தல், அவைகளுக்கு பொருத்தமற்ற முடிவை ஏற்பதால் பல இன்னல்களுக்கு ஆளாக வேண்டியும் ஆகிவிடும்.

இதில் முன்னர் நடந்துள்ள சந்தர்ப்பங்களில் ஏற்ற முடிவுகளைப் பற்றி அறிந்து முடிவெடுத்தல் சிறந்ததாகும்.

உசிதமானது என்பதைப்பற்றி பேசுகையில் உசிதமற்ற -'அனௌசித்ய' தகுதியற்றவைகளைப் பற்றியும் அறிந்துகொள்ள வேண்டும். இந்த தகுதியற்றவைகளைப் பற்றி அறிந்துகொள்வது ஒருவனுக்கு நேரான உசிதமான முடிவெடுக்க உதவியாயிருக்கும்.

'ஔசித்ய' தகுதி என்பது உடல், உள்ளம், பகுத்தறிதல், ஆன்மீகம், பேச்சு வாக்கு என்ற பல படிகளைக் கொண்டது.

உடலால் தகுதி என்பதற்கு கீதை ஆரோக்கியமான உடல் தேவை என் விளக்கம் தருகிறது.

> யுக்தாஹாரவிஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு |
> யுக்தஸ்வப்னாவபோதஸ்ய யோகோ பவதி து:கஹா ||*1

உணவிலும், கேளிக்கைகளிலும், செயல்களிலும், உறக்கத்திலும் விழிப்புணர்விலும் 'சமநிலையில் இருக்க வேண்டும். அவன் எல்லா துயரங்களையும் நீக்கவல்ல தியானப் பயிற்சியை ஏற்கலாம்.

அளவான மிதமான பூரண உணவை சரியான வழியில் அடைந்து உண்பது எல்லாவிதமான வியாதிகளையும், காய்ச்சல்களையும் அறவே நீக்கிவிடும் என்பதை அழுத்தமாக எடுத்துக்கூறும் ஓர் சிறுகதை உள்ளது.

புராணங்களில் வரும் முன்காலத்தில் இருந்த மருத்துவர் தன்வந்தரி ஒரு காட்டில் அலைந்துகொண்டிருந்தார். அவரை யாரென்று அடையாளம் கண்டுகொண்ட பறவை ஒன்று 'கோருக் கோருக் கோருக்' என்று கூவத் தொடங்கியது. இது பறவையின் குறிப்பு துவனியாக இருந்தபோதிலும் அக்கூவலில் சிறப்பான பொருளும் நிறைந்திருந்தது. 'கோருக்' - வியாதி இல்லாமல் இருப்பவர் யார்? என்பதாகும். தன்வந்தரி, தன் புத்திக்கூர்மையினால் அதன் பொருளை உணர்ந்து புத்திபூர்வமாக பதிலளித்தார் - 'ஹிதபுக் மிதபுக் ருதபுக் ஸோருக்ஸோருக்ஸோருக்'- எவனொருவன் பூரண உணவை அளவாகவும், நேர்மையான வழியில் சம்பாதித்தும் உண்கிறானோ அவன் வியாதியினின்றும் மீண்டிருப்பான்.

உடல் நலத்துடன் இருப்பதற்கு மூன்று படிகள் உள்ளன. 1. உணவை மிதமாக, அளவாக உண்ண வேண்டும். 2. அது பூரண உணவாக

இருக்க வேண்டும். 3. அதை நியாயமான வழியில் அடைய வேண்டும். (இது ஆன்மீக பரிமாணத்தைக் கொண்டது).

உண்மையில் எவனொருவன் அளவாக மிதமாக உண்கிறானோ அவன் அதிகமாகவே உண்கிறான். 'யோ மிதம் புங்க்தே ஸ பஹு புங்க்தே' - அதாவது எவனொருவன் அளவுக்கு அதிகமாக உண்கிறானோ அவனுடைய ஆயுள்காலம் குறைந்துவிடுகிறது. அதே நேரத்தில் எவனொருவன் அளவாக உண்கிறானே, அவனுக்கு ஆயுள் அதிகமாகிறது. அதனால் அவன் தனது நீண்ட ஆயுள்காலம் முழுவதும் உண்கிறான். அதாவது அதிகமாக உண்பவனைவிட அதிக அளவு உணவு, உணவை அளவாக எடுத்துக்கொள்பவனுக்கு கிடைக்கும்.

ஆயுர்வேத நூல்கள் எந்த நேரத்தில் எந்த உணவை ஏற்க வேண்டும் என்பதைக் குறிப்பாக எடுத்துரைக்கின்றன. காலையில் வாழைப்பழம், வெள்ளரிக்காய் இவைகளை தவிர்த்து மற்ற பழவகைகளை உண்ண வேண்டும் - 'ப்ராத: பலானி போஜ்யானி கதலீம் கர்கடீம் வினா'. பகலில் தயிரை உணவில் சேர்த்துக்கொள்ளலாம். ஆனால் இரவில் அதை தவிர்க்க வேண்டும். ஒருவனின் உடல் அமைப்பைப் பொறுத்து சாத்விக, ராஜச, தாமச என்ற உணவுவகைகளை பிரித்தெடுத்து உண்ண வேண்டும்.

உணவைப்போலவே பானங்களிலும் உள்ளன. ஒருவன் அடிக்கடி நீர் பருகுதல் வேண்டும். ஆனால் ஒவ்வொரு முறையும் சிறிதளவே பருக வேண்டும். 'முஹுர்முஹுர்வாரி பிபேத் அபூரி'.*[2] மேலும் உண்ணும்பொழுது இடையிடையே குடிக்கும் நீர் அமிர்தத்துக்கு ஒப்பானதாகும். உண்டு முடித்தபின் குடிக்கும் நீர் விஷமாகும்.

> 'மத்யே மத்யே அம்ருதோபமம்
> போஜனான்தே விஷம் வாரி'*[3]

சாப்பிடும்பொழுது மகிழ்ச்சியுடன் இருக்க வேண்டும். விதிமுறையில் 'ப்ரஸன்னமுகோன்னானி புஞ்ஜீத' என்று இவ்வாறு கூறப்பட்டுள்ளது. அது உண்ட உணவை ஜீரணிக்க உதவிசெய்கிறது. மன உளைச்சலுடனும் வெறுப்புடனும் கவலையுடனும் அல்லது வேதனையுடன் உண்ணும் உணவு நன்மை செய்வதில்லை என்பது போக, உடலுக்கு தீமையே செய்திடும்.

உண்ணும்பொழுது உணவைக் குறைகூறுதல் அறவே கூடாது என்பது திண்ணமாக ஏற்க வேண்டிய விதிமுறையாகும். அந்த தீய

எண்ணங்கள் உடலின் தீய சுரப்பிகளின் நீரைச் சுரக்கச்செய்து உணவை வீணாக்கிவிடும். 'அன்னம் ந நிந்த்யாத்'*[4] உணவருந் தும்பொழுது நல்ல சுத்தமான இடத்தில் அமர்ந்து நல்லோர்களுடன் அருந்துதல் வேண்டும். வேளை தவறி உண்ணுதலும் கூடாது. 'போஜனவேலாதிக்ரமே சிகித்ஸகா தோஷம் உதாஹரந்தி'*[5] மருத்துவர்கள் நேரத்தில் உணவருந்தாமல் தள்ளிப்போடுவதை தவறென்றும் கூறுகின்றனர்.

(பொதுவாக தற்காலத்தில் அதிகமான பணியிருப்பதனால் பகல் உணவை மதியம் நேரம் கழித்தும், இரவு உணவை நடுநிசியிலும் ஏதோ ஒரிரு கபளம் அள்ளிப்போட்டுக்கொள்கிறார்கள். காலை உணவையும் பகல் உணவையும் சேர்த்து 'ப்ரன்ச்' என ஏற்கின்றனர். அல்லது நேரங் கழிந்துவிடுவதால் பசி தாங்காமல் ஆரோக்கியமற்ற உடனே கிடைக்கும் உணவை (*junk food*) ஏற்கின்றனர்).

விதியோ 'ஸதம் விஹாய போக்தவ்யம்'*[6] என்று கூறுகிறது. நூற்றுக் கணக்கான பணிகளை விட்டுவிட்டு நேரத்தில் உணவு உண்ண வேண்டும். உண்பதைப்போலவே நீராடுவதுமாகும். இது மிகவும் முக்கியமானதாகும். எக்காரணத்தைக்கொண்டும் அதை தள்ளிப்போடு தல் கூடாது. 'ஸஹஸ்ரம் ஸ்நானம் ஆசரேத்'*[7] ஆயிரக்கணக்கான பணிகளை ஒதுக்கிவைத்து ஒருவன் நீராடுதலை ஏற்றிடல் வேண்டும்.

பேச்சு தகுதியைப் பற்றி கூறுகையில் ஒருவன் நிதானமாக கவனமாக சொற்களை பொறுக்கி பயன்படுத்துதல் வேண்டும். மனு ஸ்ம்ருதியில்,

> த்ருஷ்டிபூதம் ந்யஸேத் பாதம் வஸ்த்ரபூதம் ஜலம் பிபேத் |
> ஸத்யபூதம் வதேத் வாசம் மன:பூதம் ஸமாசரேத் ||*[8]

பார்வையினால் பரிசுத்தம் செய்து பாதங்களை வைக்க வேண்டும். துணியினால் சுத்தம் செய்யப்பட்ட நீரைக் குடிக்க வேண்டும். பேச்சை வாய்மையினாலும், மனதினால் தூய்மையாக்கப்பட்ட நடத்தையையும் கடைப்பிடித்தல் வேண்டும்.

மேலும் ஸ்மிருதி கூறுவதாவது - ஒருவன் கடுமையான சொற்களையும் பொறுமையுடன் கேட்க வேண்டும். பிறரை குறைகூறுதல் கூடாது. தேனில் தோய்த்த இனிமையான சொற்களை கூறுதல் வேண்டும் என ஸ்ருதி எடுத்துரைக்கிறது. 'மதுமயீம்வாசம்'*[9] பகைமைக்கு மூலக் காரணமாக இருக்கும் கடுஞ்சொற்களை ஒருவன் அறவே தவிர்த் திடல் வேண்டும் என கூறுகிறது. 'ஸா யோனி: ஸர்வவைராணாம்'*[10]

தகுந்த உசிதமான குணம் என்பது கோடிக்கணக்கான மற்ற குணங்களைக் காட்டிலும் உயர்ந்ததென தர்மாமிருதர் கூறுகிறார் -'குணகோட்யா துலாகோடிம் யத் ஏகம் அபி டீகடே'*[11]. ஏனெனில் இதுவே அடிப்படையாய் அமையும் மூலகுணமாகும். மற்ற குணங்கள் இதிலிருந்து பிறப்பவையே. இக்குணத்தை ஏற்பதால் பல தவறுகளையும் பல சிக்கலான அறியாமல் செய்யக்கூடிய தவறுகளையும் காத்திடலாம்.

'மது அருந்துதல், சூதாட்டம், பெண்களை அணுகுதல், வேட்டையாடுதல், பாடுதல், வாத்தியங்களை இசைத்தல் இவைகளில் ஈடுபடலாம். ஆனால் இவைகளில் மிதமிஞ்சி அதிகமாக ஈடுபடுதல் தீங்கிழைக்குமென மகாபாரதம் கூறுகிறது.

பானம் அக்ஷஸ்ததா நார்யோ ம்ருகயா கீதவாதிதம் |
ஏதானி யுக்த்வா ஸேவேத ப்ரஸங்கோ ஹி அத்ர தோஷவான் ||*[12]

ஒன்றை அடைய வேண்டும் என்று முயற்சிசெய்வதில் தவறு ஒன்றுமில்லை. ஆனால் எப்படிப்பட்ட வழியானாலும் சரி அதை அடைந்தே ஆக வேண்டுமென்பது தவறாகும். 'ஔசித்யம் கணயதி கோ விஸேஷகாம:'

'ஔசித்யம்' - தகுதி, பொருத்தமானது என்பதற்கு சரியான இலக்கணம் வகுத்தல் கடினமாகும். நம் பழைய நூல்களை படித்து ஆராய்ந்து அறிந்துகொள்வது இதற்கு முழு உதவியாக இருக்காது. ஆனால் எதிலும் எல்லையைக் கடந்து செல்வது கூடாது என்பதை ராமாயணம் எடுத்துக்காட்டுகிறது. 'ஸர்வத்ராதிக்ருதம் பத்ரே வ்யஸனாயோபகல்பதே'*[13] - எங்கும் எதிலும் அளவுக்கு மீறி அதிகமாக செய்தல் தீங்கிழைக்கும், அரக்கி வினதை சீதையைப் பார்த்து கூறும் பொழுது நீ ராவணனிடம் அடைக்கலம் புகுந்துவிடு. இல்லையெனில் நீ உயிரிழக்க நேரிடும். ஏனென்றால் காவலிலுள்ள இவ்வரக்கிகளே உன்னை அப்படியே விழுங்கி விடுவார்கள் என்று கூறுகிறாள்.

அலங்கார சாத்திரத்தில் காவிய இலக்கணத்தைப் பற்றிப் பேசுகையில் 'ஔசித்ய' - தகுதி என்னும் சொல் கையாளப்படுகிறது. க்ஷேமேந்திரர் இத்தலைப்பில் ஒரு தனி நூலே இயற்றியுள்ளார். அதில் உள்ளுரை உவமம், ரசம், அணிகள், தலைவன், தலைவி இவைகளை சித்தரித்து அமைத்து விளக்குகையில் எவை எவை பொருத்தமாக இருக்குமென்பதை விளக்குகிறார்.

இதற்கு எதிர்மறையான 'அனௌசித்ய'- உசிதமற்றது என்பதுடன் உணர்ந்து பார்க்கையில் இச்சொல், இடம், காலம் இவைகளுக்கு

நன்கு பொருத்தமாக அமையும் சொல்லாகும். நம் பழக்கவழக்கத்துக்கு பொருந்தியதாயும் சமுதாயத்தினால் ஏற்றுக்கொள்ளப்பட்டதும் 'உசித' - தகுந்தது, பொருத்தமானது எனக் கொள்ளலாம். இதற்கு எதிர்மறை சொல் 'அனௌசித்ய' - பொருந்தாததும், தகுதியற்றதுமாகும்.

'உசித' என்பது தகுதி என்றால் 'ஔசித்ய' என்பது தகுதியாயிருக்கும் தன்மை ஆகும்.

### மேற்கோள்கள்


1. *1.8.90. Manusmruti 6.92*
2. *10.20. Vaidyakiyasubhasitagrantha (quoted as a statement of Kshemakutuhala) Ed.Ghanekar, Govinda Bhaskar, Chowkamba Sanskrit series Office, Varanasi (quoted as the statement of Vrddhacanakya)*
3. *Ibid 10.19. p 87*
4. *Taittiriopanisad 3.6*
5. *A popular saying*
6. *Vaidakiyasubhasitasangraha 10.20. p.233*
7. *Ibid*
8. *6.46*
9. *Atharvaveda16.2.2*
10. *Uttararamacarita V 30*
11. *6.2.5*
12. *Santiparvan 140.26*
13. *Ramayana 5.24.21*

# 10

## ஔதார்ய

## தாராளம்

'ஔதார்ய' என்னும் சொல் 'உதார' என்னும் சொல்லிலிருந்து அமைந்ததாகும். அதற்கு பரந்த தாராளமான என்பது பொருளாகும். 'நியாயகந்தளி', இது சரியான நியாயமான வழியில் செல்வதற்கு வழிகாட்டுவதாகும் என்று கூறுகிறார். 'ஸததம் ஸன்மார்கவர்தினீ புத்தி: ஔதார்யம்' - இதுதான் பரந்த மனப்பான்மையாகும். இந்த மனப்பான்மைபடி செல்பவர்கள் தாராளமான மனது அடையவர்களாவார்கள். இவன் என்னைச் சார்ந்தவன் இவன் பிறரைச் சார்ந்தவன் என்று நினைப்பவர்கள் குறுகிய மனப்பான்மை கொண்டவர்களாவார்கள். தாராளமனம் கொண்டவர்களுக்கோ இவ்வையகம் முழுவதுமே ஒரு குடும்பமாகும்.

அயம் நிஜ; பர: வேதி கணனா லகுசேதஸாம்|
உதாரசரிதானாம் து வஸுதைவ குடும்பகம் ||*1

தன்னைச் சார்ந்தவர்களிடம் நற்குணத்துடன் நடந்துகொள்வதில் சிறப்பாக ஒன்றும் அமைவதில்லை. அவ்வாறு இருக்க வேண்டியதே சரியானது,. இயற்கையே. ஆனால் எதிராளியிடமும், தனக்கு தீங்கு இழைப்பவர்களிடமும் நற்குணத்துடன் நடந்துகொள்வதே உண்மையில் நற்குணமாகும். ராமர் தன் மனைவியை அபகரித்துச் சென்ற, தன் அல்லல்களுக்கெல்லாம் மூலக் காரணமாயிருந்த, கொடிய போரில் ஈடுபட்ட ராவணனைக் கொன்றதும், விபீஷணனை நோக்கி அவனை தன் தமயனுக்கு இறுதிச்சடங்குகளைச் செய்யும்படி எடுத்துரைக்கும் நேரம் 'உனக்கு (விபீஷணனுக்கு) என்ன உறவோ அவ்வாறே எனக்குக் ஆகிறான்' என்று கூறுகிறார். அது ராமரின் நற்குணத்தை எடுத்துக்காட்டுகிறது.

மரணாந்தானி வைராணி நிர்வ்ருத்தம் ன: ப்ரயோஜனம் |
க்ரியதாம் அஸ்ய ஸம்ஸ்காரோ மமாபி ஏஷ யதா தவ ||*2

மரணத்துடன் பகைமையெல்லாம் முடிவிற்கு வந்துவிட்டன. நம் குறிக்கோளும் நிறைவேறிவிட்டது. ராவணன் உனக்கு எவ்வளவு பிரியமானவனோ அவ்வாறே எனக்கும் பிரியமானவன். அதனால் அவனது இறுதிச்சடங்குகளை செய்திடு.

ஒரு மிகப்பழைய சமஸ்கிருத கவிதை பரந்த மனப்பான்மையை எடுத்துக்காட்டுகிறது.

உபகாரிணி ய: ஸாது: ஸாதுத்வே தஸ்ய கோ குண: |
அபகாரிணி ய: ஸ்ாது: ஸ ஸாது: ஸத்பிருச்யதே||*3

தனக்குநன்மைசெய்தவனிடம் நற்குணத்துடன் நடந்துகொள்வ தென்பதில் சிறப்பொன்றும் இல்லையே. தனக்கு தீங்கிழைத்தவனிடமும் நற்குணத்துடன் நடந்துகொள்பவனையே சான்றோர் நற்குணம் கொண்டவனாகக் கருதுவர்.

பரந்த தாராள மனமில்லையாகில் அந்நற்குணத்தினால் என்ன பயன்? இங்கு ஒரு பழைய கதையைக்கூறுதல் பொருந்துவதாகும். பேரரசன் அக்பரின் சபையில் ஜகந்நாத திரிசூலி என்னும் ஒருவர் இருந்தார். அவர் கவிபாடுவதில் சிறந்தவர். அவரோ 'அப்துல் ரஹீம் கான்-இ-கானா' என்னும் அறிவாளி, மேதையினுடைய நெருங்கிய நண்பராவார். மற்ற கவிகள் எல்லோரும் தான் இயற்றிய கவிதைகளை அவரிடம் கொடுத்து அவரது ஆலோசனையை ஏற்பர். கவிதையின் தரத்தையும் அவரே நிர்ணயம் செய்வார். அவர் ஒருமுறை இருவரி கவிதையொன்றை இயற்றினார்.

ப்ராப்ய சலான் அதிகாரான் ஸத்ருஷு மித்ரேஷு பந்துவர்கேஷு |
நாபக்ருதம் னோபக்ருதம் னோபக்ருதம் கிம் க்ருதம் தேன ||

நல்ல அதிகாரம் கொண்ட பதவியில் அமர்ந்திருக்கையில் ஒருவன் தன் எதிரிகளுக்கு ஒருவிதமான தீங்கும் இழைக்கவில்லை. தன் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் சலுகைகளும் அளிக்கவில்லை. ஒருவன் செய்ததுதான் என்ன?

இதைக் கேட்டுக்கொண்டிருந்த கவி கான்-இ-கானா அவைகளின் உயிரெழுத்தின் ஒரு மாத்திரையைக் குறைத்து இரண்டாவது அடியை கீழ்க்கண்டவாறு தொடுத்துப் பாடினார்.

'நோபக்ருதம் நோபக்ருதம் நோபக்ருதம் கிம் க்ருதம் தேன'

இங்கு பயன்படுத்தியுள்ள அணி 'யதாஸங்க்யா' என வரிசைக்கிரமப்படி ஏற்றுக்கொள்ள வேண்டும். அதன்படி 'அபக்ருதம்' என்ற சொல்லை 'ஸத்ருஷு' என்றும் இருமுறை கூறியுள்ள 'உபக்ருதம்' என்ற சொல்லை 'மித்ரேஷுபந்திவர்கேஷு' நண்பர்கள், உறவினர்கள் என்றும் இணைத்துக்கொள்ள வேண்டும். இங்கு 'அபக்ருதம்' என்ற சொல்லை மாற்றி 'உபக்ருதம்' என்று கூறி அச்சொல்லை 'ஸத்ருஷு' பகைவனிட மும் என்று இணைத்து தன் பெருந்தன்மையில் திரிசூலியைவிட பன்மடங்கு மேலே சென்றுவிட்டார். அதாவது அவரது கருத்துப்படி, அதிகாரப்பதவியில் இருப்பவர் பகைவனுக்கும் நன்மை செய்ய வேண்டும் என்பதாகும். இதுவே 'ஔதார்ய' - உண்மையான பரந்த தாராள மனதாகும்.

அப்படிப்பட்ட 'ஔதார்ய' - பரந்த தாராள மனதையே சீதை எடுத்துக்காட்டினாள். ராவணனைக் கொன்று, ராமர் வெற்றிகொண்டு விபீஷணனுக்கு பட்டம் சூட்டிய பிறகு அனுமன் சீதையிடம் செல்கிறான். அவளை கொடுமையான சொற்களாலும் குரூரமான செய்கைகளாலும் மிகவும் கொடுமைபடுத்திய பயங்கரமான அரக்கிகளை கொல்வதற்கு அனுமதி கேட்கிறார். ஆனால் சீதையோ அவர்களுக்கு ஒரு தீங்கும் இழைக்கக்கூடாதென்று உரைக்கிறாள். அவர்கள் தனது தலைவனால் இடப்பட்ட ஆணைகளையே பின் பற்றினார்கள் அல்லவா. அவர்கள் செய்த எல்லா கொடுமைகளையும் உடனே மன்னித்துவிட்டாள்.

'தாஸீனாம் ராவணஸ்யாஹம் மர்ஷயாமி'*4 - தன்னுடைய எல்லா துன்பங்களுக்கும், துக்கங்களுக்கும் தன் இழி ஊழையே காரணமாகக் கொள்கிறாள். மேலும் அவள் கூறுவதாவது, 'ந கஸ்சின்னாபராதயதி'*5 -யார்தான் குற்றம் செய்வதில்லை? அவ்வாறான தாராள மனதை அவள் பெற்றிருந்தாள். குற்றமும் கொடிய செயல்களில் மனமகிழ்ச்சி யுடன் இருந்தவர்களிடமும்கூட கொடுமையாக நடந்துகொள்வது சரியல்ல என்கிறாள்.

லோகஹிம்ஸாவிஹாராணாம் க்ரூராணாம் பாபகர்மணாம் |
குர்வதாம் அபி பாபானி நைவ கார்யம் அஸோபனம் ||*6

இடைக்கால பின்பகுதியில் ராணா பிரதாபின் கஜானாவை பாதுகாத்த அமைச்சர் பாமா ஷா என்பவரது மிகப்பிரசித்தி பெற்ற ஒரு நிகழ்ச்சி உண்டு. ராணா பிரதாபை பலமுள்ள மொகலாய

அரசர்கள் விடாமல் படையெடுத்ததால் போருக்குச் சென்று தன் செல்வத்தை எல்லாம் இழந்த சமயம். அவ்வமைச்சர் தனது மூதாதையர் மூலம் தனக்குக்கிடைத்த செல்வம் முழுவதையும் கொடுத்து போரை நிறுத்திவிடாமல் தொடர்ந்து நடத்திட உதவிசெய்தார்.

ஜைன முனிவர் சர்வாநந்தசூரி சுமார் 13 - 14-ம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். அவர் 'ஜகதூசரித' என்னும் ஒரு நூலை இயற்றியுள்ளார். அந்த ஓலைச்சுவடியில் ஜகது ஷா என்னும் பெயருடைய ஒரு பெரிய கொடைவள்ளலின் பெயர் இடம்பெற்றுள்ளது. குஜராத்திலுள்ள பத்ரேச்வர என்னும் இடத்தைச் சேர்ந்த அவர் ஒருமுறை தன் நகரத்தைவிட்டு வெளியே சென்றுகொண்டிருந்தார். அப்பொழுது ஒரு ஆட்டின் கழுத்தில் கட்டியிருந்த கல்மணி அவர்பார்வையில் வீழ்ந்தது. தீக்ஷ்ணமான அவரது பார்வையால் அவர் அந்த மணி மிக உயர்ந்தது என்பதை அறிந்தார். அவர் அந்த ஆட்டின் யஜமானனிடம் இருந்து அவன் கேட்ட விலைக்கு அதை வாங்கிக்கொண்டு வந்தார். பிறகு அதை நன்கு சுத்தம் செய்து மணியை நன்கு பாலிஷ் செய்து விற்றதில் அவருக்கு நூறாயிரம் பொற்காசுகள் கிடைத்தன. அந்த கல் ஒரே பெரிய வைரக்கல்லாகும். அப்பணத்தை முதலீடு செய்து வியாபாரம் செய்ய அவர் ஏராளமான செல்வத்தை அடைந்தார்.

இவ்வளவு அளவிற்கும் மீறிய அதிகமான செல்வத்தை அடைந்தும் அவர் செருக்கடையவில்லை. அவரது இயற்கை குணம் அவரை எல்லா நல்ல பணிகளிலும் அச்செல்வத்தை தாராளமாக பகிர்ந்து செலவிடச் செய்தது. பல ஆன்மீக தலங்களுக்கு யாத்திரை செய்ய ஏற்பாடுகள் செய்துகொடுத்தார். ஜைனர்களின் ஆலயங்களுக்கு பொன்னால் கோபுரங்கள் செய்து அளித்தார். ஐந்து பரமேஷ்டிகளையும் தொழுவதற்கான ஏற்பாடுகளையும் நன்கு செய்துவைத்தார். மேலும் இதுபோன்ற பல தரும பணிகளில் ஈடுபட்டு பல உயர்ந்த உதவிகளையெல்லாம் செய்துவந்தார்.

சம்வத் ஆண்டுகாலம் 1312-ல் (கி.பி.1255) அவனது குரு குஜராத்தில் பெரும் கொடிய பஞ்சம் ஏற்படப்போகிறதென்றும் அது மூன்றாண்டு காலம் நீடித்திருக்குமென்றும் கூறினார். அதை எதிர்பார்த்தே அவனும் நூற்றுக்கணக்கான பண்டக சேகரிப்பு சாலைகளை அமைத்து அவைகளில் தானியங்களை சேகரித்து வைக்கத்துவங்கினான்.

அதற்கடுத்த ஆண்டே குஜராத்தில் கடும் பஞ்சம் ஏற்பட்டது. அதனால் ஏற்பட்ட விளைவுகளை சொற்களால் விவரிக்க இயலாத தாயிற்று. மக்கள் எல்லோரும் உணவின்றி கதறினர். மக்களின் அல்லல்களை காண இயலாத அன்ஹில்வாத் மாநில மன்னன் வீசலதேவன் என்பவன் ஜகதுவின் செயலை, அவன் தானியங்களை சேர்த்து வைத்திருப்பதை அறிந்து மக்களின் அல்லல்களை நீக்கிட அவனிடம் அவைகளை விலைக்கு வாங்கிக்கொள்வதாகக் கூறினான். ஆனால் ஜகதுவோ அவைகளுக்கான விலையாக பணத்தை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டான். அவன் ஏறக்குறைய தனது 700-க்கும் மேற்பட்ட தானிய பண்டாரங்களை அப்படியே அவர்களுக்காக திறந்துவிட்டான். அவற்றில் இருந்த தானியங்களை இனாமாகவே மக்களுக்கு அளித்தான். இவ்வாறு இறவாப்புகழ் பெற்றான். பெரியோர்களின் மானம் காக்க விரும்பிய அவன் தங்கப் பிண்டங்களையும், பெரிய பெரிய லட்டுகளையும் அதனுள் பொன்னை நிரப்பி அவர்களது வீட்டு வாயிலில் கொடுக்கும்படியும் செய்தான்.

அண்மை காலத்தில் மகாத்மா காந்தியடிகள் ஆங்கிலேயர்களிடம் போராடி இந்தியாவுக்கு சுதந்திரம் வாங்கிக்கொடுத்தார். ஆனால் அவருக்கு ஆங்கிலேயர்களிடம் எந்தவிதமான பகைமையும் இல்லை. அவர் ஆங்கிலேய ஆதிக்கத்தையே எதிர்த்தார். ஆங்கிலேயர்களிடம் அவருக்கு எந்தவிதமான தீய எண்ணம் இல்லை என்பது மாத்திர மன்றி அவர் அவர்களை அன்புடனும் நட்புடனும் நடத்தினார். ஜவாஹர்லால் நேருவும் அம்முறையையே கையாண்டார். ஆங்கிலேய ஆதிக்கத்தை தூக்கியெறிந்தபோதும், காமன்வெல்த் நாடுகளின் கூட்டத்தில் மகிழ்ச்சியுடன் கலந்துகொண்டார்.

காளிதாசன் தாராள மனப்பான்மையை அபிஞான சாகுந்தலத்தில் வெகுஅழகாக கையாண்டுள்ளார். அதன் ஆறாம் காட்சியில் முதலமைச்சர், மன்னன் துஷ்யந்தனிடம் ஒரு வழக்கைப் பற்றி விவாதிக்கிறார். ஒரு பெரிய வியாபாரி தனமித்திரன் என்பவன் கப்பற் பயணத்தில் விபத்துக்குள்ளாகி இறந்துவிட்டான். அவனுக்கு சந்ததிகள் எவரும் இல்லாததால் சட்டப்படி அவனது சொத்து முழுவதும் அரசாங்கத்தை சேரவேண்டும் என்பதாகும். இதுவே முதலமைச்சரின் கருத்தாகும்.

ஆனால் அரசனின் கருத்து சிறிது மாறுபட்டதாக இருந்தது. அவர் விசாரித்து சோதனை செய்கையில் அவனது மற்றொரு மனைவி

கருத்தருத்திருக்கிறாள் என்றும் அதனால் அச்சொத்து முழுவதும் கருவிலிருக்கும் அச்சிசுவையே சேரும் எனவும் எடுத்துரைத்தார். மேலும் அவன் தன் ராஜ்ஜியம் முழுவதும் பறைசாற்றிக் கூறினான், தன் குடிமக்களில் யாரேனும் உறவினரை இழந்தால், தான் அவர்களை அவ்வுறவு முறை ஏற்று காப்பாற்றுவதாகவும், அது பாபமற்ற உறவாக இருத்தல் வேண்டும் என்றும் உரைத்தான்.

யேனயேன வியுஜ்யந்தே ப்ரஜா: ஸ்னிக்தேன பன்துனா
ஸ ஸ தாஸாம் ருதே பாபாத் துஷ்யந்த இதி குஷ்யதாம் ||*7

'ஔதார்ய' - தாராளமனப்பான்மை என்பது மனதை மாற்றிவிடும் என்பது அரிதல்ல. மிகமிகக் கொடியவனும்கூட இக்குணத்தினால் மனம் மாறி புதிய பிறவியெடுக்கிறான். இதற்கு புத்தரின் ஜதாகா கதைகளில் சிலாவத் என்னும்காசிராஜனின் கதை குறிப்பிடத்தக்கது.

அவனது நற்குணம் பகைவனுக்குக்கூட தண்டனை அளிப்பதில்லை என்பதேயாகும். அது மாத்திரமன்றி அவனுக்கு வெகுமதி கொடுத்து கௌரவிப்பான். ஒருமுறை அவ்னது ஒரு அமைச்சர், அவனது மனைவியிடம் தவறாக நடந்துகொண்டார். அந்த அமைச்சரை நாடு கடத்தினார். அந்த அமைச்சரோ அண்டை நாட்டரசனை அணுகி சாமர்த்தியமாக அவனது நம்பிக்கைக்கு பாத்திரமாகி காசி மன்னனை எதிர்த்து போருக்குக்குச் செல்லும்படி தூண்டிவிட்டான்.

சிலாவத்திடம் போதிய அளவு சைனியங்கள் இருந்தபோதிலும், சேனைத் தலைவர்கள் போருக்குச் செல்ல தயாராக இருந்திடினும் மன்னன் ரத்த வெள்ளத்தை தவிர்க்க விரும்பியவனாய் போரிடுவதைக் காட்டிலும் தன்னுயிர் விடுவதே மேல் என நினைத்து அவனை எதிர்த்துச் செல்லாமல் இருந்துவிட்டான்.

காசிராஜனையும் அவனது அமைச்சர்களையும் எதிர்த்து படையெடுத்து வந்த மன்னனின் ஆணைப்படி ஆற்றுமணலில் கழுத்து செல்லும்வரை குழிதோண்டி புதைத்தனர். இரவில் ஓநாய்களெல்லாம் அவர்களை உண்ணவேண்டி வருகையில் மன்னன் பெரிய ஊளைச்சத்தம் எழுப்பினான். சத்தத்தைக் கேட்டு ஓநாய் களெல்லாம் பயந்து அங்கிருந்து ஓட்டம் பிடித்துச்சென்றன. அவைகள் ஓடிச்சென்றதால் அங்குள்ள மணல்கள் சிதறின. அதன்மூலம் மன்னன் தான் முதலில் வெளிவந்து பிறகு மற்ற அமைச்சர்களை அங்கிருந்து தப்பிவிடச் செய்தான்.

இதனிடையில் சிலர் அங்கு ஒரு இறந்த சடலத்தை எடுத்துவந்து இரு நாட்டிற்கும் இடையே வைத்து யக்ஷர்கள் இருவரை அச்சடலத்தை சரிபாதியாக இருகூறாக வெட்டும்படி கூறினர். ஆனால் அவர்களால் அச்சடலத்தை சரியான இரு கூறுகளாக வெட்ட இயலவில்லை. அவர்கள் மன்னனை அணுகிட, மன்னனும் அதை இருகூறுகளாக வெட்டினான். யக்ஷர் இருவரும் மன்னனை கோசல மன்னனிடம் அழைத்துச்சென்றனர். கையில் வாளுடன் நிற்கும் மன்னனைக் கண்ட கோசல அரசன் தன் கண்களையே நம்ப முடியவில்லை. இவையெல்லாம் எப்படி நடந்தேறியது என்று கேட்டிட காசி மன்னனும் நடந்த விருத்தாந்தங்களை எல்லாம் நடந்தபடியே எடுத்துரைத்தான்.

கோசல மன்னனின் மனம் பச்சாதாபத்தினால் நெகிழ்ந்தது. இப்படிப்பட்ட பரந்த தாராள மனதுடையவனிடம் தான் எப்படி அவ்வளவு கொடூரமாகவும் கேவலமாகவும் நடந்துகொண்டோம் என்று நினைத்து மனம் வருந்தினான். காசி மன்னனிடம் மன்னிப்பு கோரி அவனது ராஜ்ஜியத்தை திருப்பிக்கொடுத்தான்.

மகாபாரதத்திலும் தாராள மனப்பான்மையை எடுத்துரைக்கும் பல நிகழ்ச்சிகள் உள்ளன. முதல் நிகழ்ச்சியோ பாண்டவர்கள் சூதாட்டத்தில் தங்களது ராஜ்ஜியமிழந்து, நாடு கடத்தப்பட்டு துவைத வனத்தில் ஏரிக்கரையினருகில் தங்கியிருந்தபோது நிகழ்ந்ததாகும்.

அச்சமயம் துரியோதனன் அரசாண்டதால் அவனுடைய வளமையையும் செழிப்பையும் பாண்டவர்களுக்கு எடுத்துக்காட்டி அவர்களது மனதை நோகடிக்கச்செய்து பொறாமைக்கு ஆளாக்கும் எண்ணத்துடன் சகுனியும் கர்ணனும் அங்கு சென்றனர். ராஜ்ஜியத்தின் புறநகரத்திலுள்ள பசுக்களை கண்காணிக்கும் வியாஜத்தில் துரியோதனன் சகுனியுடனும், கர்ணனுடனும் மற்றும் சைனியங்கள் முதலிய பெரும் படையுடனும் மனைவி மக்கள் முதலிய பரிவாரங்களுடனும் அங்கு சென்றான்.

துரியோதனன் எல்லோரும் அவ்விடத்தில் தங்குவதற்கான ஏற்பாடுகளை செய்யும்படி கட்டளையிட்டான். ஆனால் அவ்விடத்தை கந்தர்வர்கள் ஆக்கிரமித்து ஒருவரும் அங்கு வந்து தங்கக்கூடாதென்று கட்டளை பிறப்பித்திருந்தனர். அதனால் அவர்களுக்குள் கடும் போர்மூண்டது. அதில் கந்தர்வர்களின் தலைவன் சித்ரரதன் அவர்களை படுதோல்வியுடையும்படி செய்து

அவர்களை கைது செய்துவிட்டான். அப்பொழுது அங்கு அருகிலேயே தங்கியிருந்த யுதிஷ்டிரர் இதைக் கேள்வியுற்றதும், தன் சகோதரர்களை அழைத்து அவர்களை மீட்டுவரும்படி கூறுகிறார். பீமனுக்கு இதில் எள்ளளவும் உடன்பாடு இல்லை. இருந்தாலும் பெரிய சகோதரன் சொல்லிற்கு அடிபணிந்தான். ஏனெனில் அவர்களுக்குள் குடும்ப அங்கத்தினர்களில் மனக்கசப்பு இருக்கலாம். ஆனால் அதைக்கண்டு வெளியிலுள்ளவர்கள் அதை ஆதாயமாக பயன்படுத்திகொள்ளல் கூடாது.

பவந்தி பேதா: ஞாதீனாம் கலஹாஸ்ச வ்ருகோதர |
ப்ரஸக்தானி ச வைராணி குலதர்மோ ந நஸ்யதி ||*8

வெளியிலுள்ளவர்கள் குடும்பத்திலுள்ளவர்களை எதிர்த்தால் அதை பெரியோர்கள் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். இக்கட்டளையை ஏற்று பாண்டவர்கள் கந்தர்வர்களுடன் போரிட்டு துரியோதனனையும் அவனது பரிவாரங்களையும் காப்பாற்றினர். அது யுதிஷ்டிரரின் தாராளமனப்பான்மையை எடுத்துக்காட்டுகிறது. அவ்விடத்தில் வேறு எவர் இருந்திருந்தாலும் தனக்கும் தன் சகோதரர்களுக்கும் சொல்லவொண்ணா துயரங்களும் அல்லல்களும் அளித்த அவர்களை பகைவர்கள் கைது செய்ததை முற்றிலும் வரவேற்றிருப் பார்கள்.

இப்பேர்பட்ட தாராள மனப்பான்மையை யுதிஷ்டிரர் மற்றுமொரு முறை காட்டுகிறார். பாண்டவர்கள் குடிலைவிட்டு வேட்டைக்காக வெளியே சென்றிருந்தபொழுது, திரௌபதி தனிமையிலிருந்தபொழுது அவளை அபகரித்துச்செல்ல ஜயத்ரதன் முயன்றான். வேட்டையி லிருந்து திரும்பி வந்த அவர்களிடம் திரௌபதி கதறிக்கொண்டு பீமன் முதலியவர்கள் அங்கில்லாத சமயம் நடந்த விவரங்களை எடுத்துரைக்கிறாள். பீமனோ உடனேயே சென்று ஜயத்ரதனையும் அவனது சேனைகளையும் சண்டையிட்டு தோற்கடித்து எல்லோரையும் கைதியாக யுதிஷ்டிரர் எதிரில் கொண்டுவந்து நிறுத்துகிறான். தன் உறவுமுறையில் இருந்துகொண்டே மிகவும் நீசத்தனமான செயலை, திரௌபதியை மானபங்கம் செய்ய முற்பட்டபோதிலும், அவனை மன்னித்து விடுதலை செய்யும்படி ஆணையிடுகிறார். இதே ஜயத்ரதன் சிவனை தவமிருந்து ஆராதித்து, அர்ஜுனன் அவர்களுடன் இல்லாத நேரத்தில் பாண்டவர்களின் தோல்வியை வரமாகப் பெறுகிறான் என்பது பிறிதொரு நிகழ்ச்சியாகும்.

பஞ்சதந்திரம் தாராள மனப்பான்மையை வெகு அழகாக கதை மூலம் வெளிப்படுத்துகிறது. வேடன் ஒருவன் கையில் ஒரு கூண்டு, கயிறு, ஒரு தடி இவைகளை எடுத்துக்கொண்டு காட்டில் இரையைத்தேடி அலைகிறான். ஒருநாள் ஒரு பெண்புறாவை கண்டு அதைப்பிடித்து தன் கூண்டில் அடைத்துச்சென்றான். இதற்குள் கருமேகங்கள் ஆகாயத்தில் பெருகி சுழற்காற்றுடன் பெரும் மழையும் பொழிந்தது. ஆகாயம் சிறிது தெளிவடைய வேடன் ஒரு மரத்தடியை வந்தடைந்து, குளிரினாலும் பசியினாலும் பீடிக்கப்பட்ட தனக்கு யாரேனும் உதவி செய்ய வேண்டுமென வேண்டிக்கொண்டான்.

அதே மரத்தின் மேல்கிளையில், அவன் கைக்கூண்டில் அடைக்கப் பட்ட பெண்புறாவின் ஆண்புறா ஜோடி இவ்வளவு நேரமாகியும் தன் மனைவி திரும்பி வரவில்லையே என்று வருத்தத்துடன் அதை எதிர்பார்த்துக்கொண்டு துக்கத்துடன் இருந்தது. கூண்டிலிருந்த பெண்புறாவினால் அந்த ஆண்புறாவின் புலம்பலை கேட்க முடிந்தது. அது கூவி தான் கூண்டில் கீழே அடைப்பட்டு இருப்பதை அதற்கு தெருவித்தது. அது தன் ஆண்புறாவிடம் அவ்வேடனுக்கு விருந்தோம்பல் செய்யும்படி கூறி அது அவர்களது தருமமாகும் என்றும் எடுத்துரைத்தது.

அவ்வேடனுக்கு குளிரிலிருந்து காக்க ஆண்புறா எங்கிருந்தோ அலைந்து திரிந்து நெருப்புப்பொறியை கொண்டுவர வேடனும் சுள்ளிகளை அதிலிட்டு நன்கு குளிர் காய்ந்தான். அடுத்ததாக அவனுக்கு உணவளிக்க விரும்பிய புறா அத்தீயில் குதித்து தன்னுடலை அவனுக்கு உணவாக அளித்தது. வாழ்க்கையில் வேறு வழியின்றி கூண்டில் அடைக்கப்பட்டிருந்த பெண்புறாவும் அத்தீயினில் குதித்து தன்னுடல் நீத்தது. இதைக்கண்ட வேடன் மனம் மிக நொந்தான். தன் குரூரமான செயல்களை நினைந்து பச்சாதாபம் மிகுந்திட வேடனும் மேற்கொண்டு போய்க்கொண்டி ருக்கையில் காட்டுத்தீ ஒன்று கண்ணில் தென்பட அதில் குதித்து தன்னுடல் நீத்தான்.

ஆரிய சமாஜத்தை நிறுவிய சுவாமி தயானந்த சரஸ்வதி, காளியன் என்னும் புனைப்பெயர்கொண்ட ஜகந்நாதரால் விஷம் அருந்த கொடுக்கப்பட்டார். அவன் அதை பாலில் கலந்து கொடுக்க சுவாமியும் 1883-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 29-ம் தேதி இரவு அதை ஏற்றுக்கொண்டுவிட்டார். அது அவருக்கு மிகவும் அதிகமான உடல் வலியையும் வேதனையும் கொடுத்ததுடன் இறுதியில் அவர்

உயிர்நீத்தார். சுவாமி அக்கொடிய செயலை செய்தவன் அவன்தான் என்றறிந்தும்கூட அவனை மன்னித்து அவனுக்கு கையில் பணமும் கொடுத்து மேற்கொண்டு அவனுக்கு எந்தவிதமான சிக்கலும் ஏற்படாமலிருக்க நேபாளுக்கு செல்லவும் வழிவகுத்தார்.

அண்மையில் ஆஸ்திரேலியா கிறிஸ்துவ மிஷனரியில் அபிரகாம் ஸ்டீவார்டு ஸ்டென்ஸ் என்பவர் குஷ்டரோகத்தினால் அவதிப்படுவோர்க்கு சேவைசெய்வதில் தன் வாழ்க்கையையே அர்ப்பணித்தார். ஒரு சமயம் தன்னிரு சிறுகுழந்தைகளுடன் அவர் காரில்

அமர்ந்துகொண்டிருந்தார். அந்த கார் அவரது வீட்டுக்கு அருகிலேயே நிறுத்தப்பட்டிருந்தது. அவ்வமயம் சில தீயவர்கள் அக்காரை தீக்கு இரையாக்கினர். அவர்கள் உயிரோடு எரிக்கப்பட்டனர்.

இப்படிப்பட்ட கொடிய செயலைக்கண்டு அவரது மனைவி க்லாடி ஸ்டீவார்ட் ஸ்டென்ஸ்மனம் மிக வருந்தியபோதிலும் ஏசுநாதர் கூறியபடி - 'ஏ கடவுளே! அவர்களை மன்னியுங்கள். அவர்கள் செய்யும் செயலை அவர்களே அறிந்திலர் போலும்' என்ற உண்மையான கிறிஸ்துவ கொள்கைப்படி அக்கொடிய செயலை செய்தவர்களை மன்னித்துவிட்டாள்.

இயற்கை அன்னை மனிதர்களுக்கு பல நல்ல குணங்களை அளித்ததைப்போல பல கெட்ட குணங்களையும் கொடுத்திருக்கிறாள். அகங்காரம், மமதை, அதாவது இது என்னைச் சேர்ந்தது, தன்னைச்சார்ந்தது என்கிற எண்ணம். இவ்விரண்டு குணங்களும் மனிதனின் பார்வையை குறுகியதாக்கச் செய்கிறது. எல்லாவிதமான வெறுப்பு, மன உளைச்சல், விரோதத்தன்மை ஆகிய எல்லா உணர்ச்சிகளுக்கும் மூலகாரணமாயிருப்பது 'இது என்னுடையது, இது என்னுடையதல்ல' என்பதேயாகும்.

என்னைச் சார்ந்தது என்பதில் தனிப்பற்றும், என்னைச் சார்ந்ததல்ல என்பதில் பற்றற்றதன்மையும் அதாவது வெறுப்புணர்ச்சியுமாகும். பாண்டவர்களிடமும் கௌரவர்களிடமும் உள்ள வேற்றுமை உணர்ச்சி சஞ்சயனிடம் திருதராஷ்டிரன் கேட்ட கேள்வியிலேயே புலப்படுகிறது. இருவருமே திருதராஷ்டிரனைச் சேர்ந்தவர்கள்தானே. ஆனால் கீதையின்முதற் பாடலிலேயே 'என்னைச் சேர்ந்தவர்களும் பாண்டவர்களும் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள்?' என்று

கேட்டதிலிருந்தே வெளிப்படுகிறது. பாண்டவர்களும் அவனைச் சேர்ந்தவர்கள்தானே! அவனது உடன் பிறந்தவனின் மகன்கள்தானே!

'மமகார' என்னும் என்னைச் சேர்ந்தது என்ற எண்ணத்தைத் துறத்தலே 'ஔதார்ய' - தாராள மனப்பான்மையாகும். நீலகண்ட தீக்ஷிதர் அழகாகக் கூறியுள்ளார் -

> த்யக்தவ்யோ மமகாரஸ்ச த்யக்தும் யதி ஸக்யதே ஸோயம் |
> கர்தவ்யோ மமகார: கிம்து ஸ ஸர்வத்ர கர்தவ்ய: ||*9

உன்னால் முடியுமேயானால் மமதையை விட்டொழி (என்னைச் சார்ந்ததென்பதை). இல்லையெனில் மமதையை எல்லாவற்றிலும் கொள்.

இதே பொருளை ஆசாரியர் சங்கரர் வெளிப்படுத்துகிறார் -

> த்வயி மயி சான்யத்ரைகோ விஷ்ணு:
> வ்யர்தம் குப்யஸி மய்யஸஹிஷ்ணு:
> பவ சமசித்த: சர்வத்ர த்வம்
> வாஞ்சசி அசிராத் யதி விஷ்ணுத்வம் ||*10

'என்னிலும் உன்னுள்ளும் எங்கும் வியாபித்திருப்பவர் விஷ்ணுவே. அது பொறுக்காமல் காரணமின்றி நீ என்னிடம் ஏன் கோபப்படுகிறாய். நீ விரைவில் விஷ்ணுவை அடைய விரும்புவாயாகில் இதே உணர்ச்சியை எல்லாவற்றிலும் கொண்டுவிடு.'

மமகார*11 என்பதற்கு ஒரு அழகான பொருத்தமான எடுத்துக்காட்டை சங்கரர் கூறுகிறார். மக்கள் திரளாகக் கூடியிருக்கின்றனர். யாருடைய மகனோ அல்லது நண்பனோ இறந்துவிட்டதாக செய்தி வருகிறது. எல்லோருமே அச்செய்தியைக் கேட்டாலும் எவருடைய மகனோ நெருங்கிய நண்பனோ இறந்துவிட்டர்களோ அவர்களே பெரிதும் புலம்புகின்றனர். மற்றவர்கள் மனது சிறிது வேதனைபட்டாலும் அவ்வளவு துயரம் ஏற்படுவதில்லை. இதற்குக் காரணம் தன்னைச் சேர்ந்தவன் என்கிற மமகாரம் இல்லை என்பதேயாகும்.

நாம் எல்லோருமே ஒன்று சேர்ந்தவர்களே என்ற எண்ணம் இருப்பின் அதன் விளைவுகளே வேறாகும். இந்த மமகாரம் என்பது பேச்சளவில் மாத்திரமல்ல. பெரும்பாலும் நாம் பார்க்கிறோம், இயற்கை விபத்துகள் ஏற்படும்பொழுதும், வெள்ளம் ஏற்படினும், நில அதிர்ச்சி ஏற்படினும், ரயில், விமான விபத்துக்கள் ஏற்படினும்

அல்லது பொதுவாக ஒருவர் தீயில் சிக்கினாலோ நீரில் மூழ்கி னாலோ, அல்லது வீடு தீப்பற்றிக்கொண்டாலோ அவர்களது உயிரைக்காக்க முயற்சி செய்கின்றனர். ஒருவன் தண்ணீரில் மூழ்கும்பொழுதோ, நெருப்பில் சிக்கிக்கொண்டாலோ, விபத்துக் குள்ளானவர்கள் தன்னைச் சார்ந்தவர்கள் என்ற எண்ணம் மேலோங்கி வருகிறது. யாரைச் சேர்ந்தவர்களோ அவர்களே காப்பாற்றுகின்றனர்.

## மேற்கோள்கள்


1. *Pancatantra* 5.37
2. *RamayanaVI.111.100-1*
3. *Pancatantra Mitrabheda* 270
4. *Ramayana VI* 113.39
5. *ibid VI* 113.43
6. *ibid VI* 113.44
7. *VI* 23
8. *Vanaparvan* 243.2
9. *Pancatantra, kakolukiyam* 133-182
10. 11.1.1
11. *Bhajagovindamverse* 24

# 11

## க்ருதஞ்தா

## நன்றியறிதல்

'க்ருதஞ்தா' என்னும் சொல் 'ஞா' என்ற சொல்லுடன் 'க்ருத' என்ற ஒட்டும் இணைந்து அமைந்ததாகும். 'க்ருதம் ஜானாதி இதி க்ருதஞ:' - ஒருவன் தனக்கு செய்த உதவியை நின்னவில்கொண்டு நன்றி செலுத்துவதாகும். அத்துடன் 'தல்' என்னும் பின்னொட்டை இணைத்ததும் பண்புப்பெயராக மாறி 'செய்த உதவியை நினைவில் வைத்தல்' என்றாயிற்று. அதுவே நன்றியறிதல் ஆகும்.

தனக்கு ஒருவன் செய்த நன்மைகளை உடனே மறந்துவிடுவதே பொதுவான வழக்கமாகும். அதுமாத்திரமன்று தன்னிடம் வெகு கருணையுடன் நன்மைகளைச் செய்தவர்களை ஒதுக்கிடவும் நீக்கிடவும் முயற்சி செய்வர். அது மனிதனின் பலவீன குணமாகும். இவ்வாறு தனக்குச் செய்த நன்றியை மறந்தவர்களை மகாபாரதம் ஆறுவிதமாக பிரித்துக் கூறுகிறது.

'ஷட் ஏதே ஹி அவமன்யந்தே ஜனம் பூர்வோபகாரிணம்'*1 இவர்களில் தனக்குச் செய்த நன்மையை அடியோடு மறந்து செயலை வெற்றியுடன் முடிக்க மூலக்காரணமாக இருந்தவர்களை அலட்சியம் செய்பவர்கள் ஒருவகையைச் சேர்ந்தோர் ஆவார்.

'க்ருதார்தாஸ்ச ப்ரயோஜகம்'*2 - இவர்களே பெரும்பாலும் காணப் படுகின்றனர். இதற்கு மாறான எண்ணங்கொண்டோர் மிகச்சிலரே ஆவார்கள். இதன் காரணமாகவே இந்திய சிந்தனையாளர்கள் இவர்களை மிகவும் மேலானவர்களாக போற்றிப் புகழ்கின்றனர். அவர்களே நல்லாசி பெற்றவர்களாவார்கள். 'க்ருதினோ மனுஷ்யா:' ஏனெனில் தனக்கு நன்மை செய்தவர்களை எப்பொழுதும் நினைவில் .கொண்டுள்ளனர். இவ்வுலகிலேயே அவர்களுக்கு நிகரானது

எதுவுமேயில்லை எனலாம். சந்திரன், குபேரன், சூரியன், இந்திரன் முதலிய எவரையுமே அவர்களுக்கு இணையாகக் கூற இயலாது.

க்ருதம் பரேணாபி உபகாரயோகம் ஸ்மரந்தி நித்யம் |
தேஷாம் ந துல்யோ புவனே ஸஸாங்கோ ந வா குபேரோ ந
ரவிர்ன் ஸக்ர: ||*3

இதே கருத்தையே சாணக்கியரும் இரண்டு இடங்களில் குறிப்பிடுகிறார். தனக்கொருவன் செய்த எள்ளளவான சிறிய நன்மையையும் மலைபோல பெரியதாகக் கொள்வோன், மேலோன் எனப்படுபவன் - 'திலமாத்ரம் அபி உபகாரக்ருதே ஸைலமாத்ரம் மந்யதே ஸாது:' பிறிதொரு இடத்தில் மேலோனாகில் ஒருவன் தனக்கு ஒருவன் மிகச்சிறிய நன்மை செய்திடினும் அதற்கான பதிலாக சிறிய நன்மையையாவது செய்யாதவரை உறக்கம் கொள்ளமாட்டான். 'ஸ்வல்பம் அபி உபகாரக்ருதே ப்ரத்யுபகாரம் கர்தும் ஆர்யோ ந ஸ்வபிதி'*4

இதைப்போன்ற செய்நன்றி அறிதலைப் பற்றி ராமாயணத்திலும் கூறப்பட்டுள்ளது. ராவணனை எதிர்த்து போரிடச் செல்வதற்கு கார்காலம் முடிந்து இலையுதிர்காலம் வரும் வரை எதிர்பார்த்திருக்கும் சந்தர்ப்பத்தில் அமைந்துள்ளது.

சுக்ரீவன் ராமன் தனக்குச் செய்த நன்மைக்கு எதிர்நன்மை திண்ணமாக உடனே செய்வான் என ராமர் கருதியிருந்தார். ஒருவரிடமிருந்து நன்மை அடைந்ததற்கு திரும்பக் கைம்மாறாக நன்மை செய்யாமல் இருந்தால் அவன் உண்மையில் வீரன் ஆகமாட்டான். இவ்வாறு நன்றி விசுவாசமின்றி இருத்தல் என்பது சான்றோரின் மனதை புண்படுத்தும்.

உபகாரேண வீரஸ்து ப்ரதிகாரேண யுஜ்யதே |
அக்ருதஞோப்ரதிக்ருதி ஹந்தி ஸத்வவதாம் மன: ||*5

இரண்டாவது முறையோ சுக்ரீவன் சீதையைத்தேட ஒரு முயற்சியும் மேற்கொள்ளாமல் இருந்ததாகும். ராமர் வெகுண்டார். லக்ஷ்மணன் மூலம் செய்தி அனுப்பினார். லக்ஷ்மணன் அவனை நேரில் கண்டு கூறினான் - 'தனக்கு முதலில் ஒரு நன்மையை செய்யும்படி கூறி நண்பர்களாய் அடைந்து பின்னர் அவருக்குத் தேவையான நன்மையை எவன் உடன் செய்வதில்லையோ அவன் செய்நன்றி கொன்றவன். அவனை கொல்வதே சிறந்ததாகும்.'

பூர்வம் க்ருதார்தோ மித்ராணாம் ந தத் ப்ரதிகரோதி ய: |
க்ருதக்ன: ஸர்வபூதானாம் ஸ வத்ய: ப்லவகேஸ்வர ||*6

மேலும் அச்சந்தர்ப்பத்தில் பிரும்மதேவரால் செய்நன்றி கொன்ற ஒருவனைக்கண்டு மிகச்சினத்துடன் கூறப்பட்ட செய்யுளை நன்கு மனதில்படும்படி எடுத்துரைக்கிறார். இச்செய்யுள் எல்லோராலும் ஒருமுகமாக போற்றப்படுகிறது.

கோக்னே சைவ ஸுராபே ச செளரே பக்னவ்ரதே ததா |
ஸர்வஸ்ய நிஷ்க்ருதி: ப்ரோக்தா க்ருதக்னே நாஸ்தி நிஷ்க்ருதி: |*7

நல்லோர் அதாவது மேன்மக்கள் பசுவை கொன்றவனுக்கும் விடுதலை அளிப்பர். மது அருந்துபவனையும், திருடனையும், மேற்கொண்ட சபதத்தை மீறுபவர்களையும்கூட விடுவிப்பர். ஆனால் செய்நன்றி கொன்றவரை ஒருபொழுதும் அல்ல. அவன் விடுதலையடையவோ, மீளவோ வழியொன்றும் இல்லை.

இச்செய்யுளை லக்ஷ்மணன் 'ஸர்வலோகநமஸ்க்ருத' - எல்லா உலகத்தாராலும் போற்றத்தகுந்தது என்று கூறுவது மிகப்பொருந்து வதாகும். இது சமஸ்கிருத மொழி அறிஞர்களின் இடையில் மிகவும் அதிகமாக பயன்படுத்தப்படும். ஒன்றாகும்.

மகாபாரதத்தில் இதைப்போலவே கூறப்பட்டிருப்பது மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். செய்யுளின் மூன்றாம் அடியில் சிறிய மாற்றம் உள்ளது. அங்கு 'ஸர்வஸ்ய நிஷ்க்ருதி: ப்ரோக்தா' என்பதை மாற்றி 'நிஷ்க்ருதி: விஹிதா ராஜன்' என்று கூறப்பட்டுள்ளது. நான்காவது அடியில் 'க்ருதக்னே நாஸ்தி நிஷ்க்ருதி:' என்றே கூறி மூன்று அடிகளையும் அப்படியே கூறப்பட்டுள்ளது. இதுவே செய்நன்றி கொன்றவனுக்கு மிகவும் அழுத்தமாகவும் மனதில் படும்படியும் கூறுவதாக அமைந்துள்ளது.

ராமாயணத்தைப் பற்றி பேசுகையில் இங்கு ராவணனைப் பற்றி குறிப்பிடுவது மிகவும் பொருத்தமானதாகும். ராவணனிடம் பல குறைகள், பலவீனங்கள் இருக்கலாம். ஆனால் அவனிடம் செய்நன்றியறியும் இக்குணம் இருந்ததை குறிப்பிடுவது சிறந்ததாகும். சுகன், சாரணன் என்னும் இரு தூதர்கள் ராமனது படைபலத்தை எடை போட்டறியச் சென்றனர். ஆனால் திரும்பி வந்ததும் ராமனையே புகழத் துவங்கிவிட்டனர். தன் பகைவனின் புகழாரம் கேட்டு கடுஞ்சினமடைந்த ராவணன் அவ்விருவரையும் கொல்ல நினைத்தான். ஆனால் அவர்கள் தனக்கு முன்னர் செய்த நன்மை களை மனதில் நினைத்து சினத்தை கட்டுப்படுத்தி அவ்வெண்ணத்தை கைவிட்டான்.

ஹன்யாம் அஹம் து இமௌ பாபௌஸத்ருபக்ஷப்ரஸம்ஸினௌ|
யதி பூர்வோபகாரைர்மே க்ரோதோ ந ம்ருதுதாம் வ்ரஜேத் ||*8

இப்பொழுது அடுத்தபடியாக ராமாயணத்தை விடுத்து மகாபாரதத்துக்கு*9 செல்வோம். இதில் மனதில் உறையும் வகையில் செய்நன்றி கொன்றவனைப் பற்றி கூறப்பட்டுள்ளது. ஒருவன் செய்த நன்றியை மனதில் நினையாதவன் பிராம்மணனை கொன்றவனுக்கு ஒப்பாவான்.

நன்றியறியாதவனுக்கு பெயரும் இல்லை, மரியாதையுமில்லை, மனமகிழ்ச்சியும் இல்லை - 'குத: க்ருதக்னஸ்ய யஸ: குத: ஸ்தானம் குத: ஸுகம்.' செய்நன்றி கொன்றவனது இழிவான நிலைமையைப் பற்றி பேசுகையில் இந்நூலோ மாமிசத்தையே உண்ணும் கொடிய விலங்குகள்கூட இவனை உண்ணுவதில்லை என்று கூறுகிறது - 'க்ரவ்யாதயோபி ராஜேந்த்ர க்ருதக்னம் நோபபுஞ்ஜ்யதே.'*10

செய்நன்றி கொன்றவர்கள், நம்பிக்கை துரோகம் செய்தவர்களைப்போல நரகத்துக்கு செல்கின்றனர் - 'க்ருதக்னா: நரகம் யாந்தி யே து விஸ்வாஸகாதின:' அவர்கள் நரகத்துக்கு செல்வது மாத்திரமல்ல அங்கேயே எப்பொழுதும் இருக்கின்றனர் - 'க்ருதக்னானாம் கதிஸ்தாத நரகம் சாஸ்வதீஸ் ஸமா:' அதனால் எடுத்துக்கூறுவது என்னவென்றால், ஒரு பயனுமற்ற ஒருவனை எவரும் அணுகுவதில்லை. தான் கேட்டதை செய்து கொடுப்பவர்களையே பணி முடிந்த பிறகு சிறிதும் கண்டுகொள்ளாமல் இருப்பது சரியல்ல. அவனுக்கு உதவுவதையும் தவிர்த்தல் நன்று.

நானர்திகோர்தஸம்பந்தம் க்ருதக்னேன ஸமாசரேத் |
அர்தீ து ஸக்யதே போக்தும் க்ருதகார்யோ வமன்யதே
தஸ்மாத் ஸர்வாணி கார்யாணி ஸாவஸேஷாணி காரயேத் ||*11

நன்மதிகொண்ட மேன்மக்கள் அப்படிப்பட்ட பாபிகளும், சிறிதும் வெட்கமற்றவர்களுமான செய்நன்றி கொன்றவர்களை தவிர்த்தல் வேண்டும். 'பரித்யாஜ்யோ புதை: க்ருதக்னோ நிரபத்ரபா:'

ஒருவன் மனமகிழ்ச்சி அடைந்தால் செய்நன்றி அறிகின்றவனாய் இருத்தல் வேண்டும். இது அவனுக்கே பயனுள்ளதாகும். தனக்கு அமைந்த பயனையே அறிந்துகொள்ளாதவன் மிருகத்துக்கு இணையாகிறான்.

பவிதவ்யம் க்ருதஜ்ஞேன ஜனேன ஸுகமீயுஷா
வேத்தி ஸ்வார்தம் ந யஸ்ய தஸ்ய ஜீவிதம் பஸுனா ஸமம் ||*12

செய்நன்றியறிதல் என்னும் குணம் மனிதர்களைச் சார்ந்தது மாத்திரமல்ல. விலங்குகளும் அதிலும் மிகவும் கொடுமையான காட்டு விலங்குகளும் இக்குணத்தை கொண்டுள்ளன. சிங்கத்தை பற்றியதொரு பிரபலமான கதை உண்டு. ஒருசமயம் அதன் பாதத்தில் முள் தைத்துவிட்டது. அது தாங்கமுடியா வேதனையினால் துடித்தது. காட்டில் அலைந்து திரியும் ஒருவன் இதைப்பார்த்து அதன் முள்ளை வெளியே எடுத்துவிட்டான். அதற்கும் வேதனை நீங்கி அமைதி கிட்டியது. காட்டில் வசிக்கும் அவனையே மன்னன் ஒரு சமயம் அவன் செய்த குற்றத்துக்காக பிடித்து தண்டனை அளித்தான். அவனை அப்படியே ஒரு சிங்கத்தின் முன்னிலையில் நிறுத்தி அது அவன் மேல் பாய்ந்து கடிக்க வேண்டும் என்பது தான் அவனுக்குக் கொடுத்த தண்டனையாகும்.

அச்சிங்கத்திற்கு சில நாட்களாக உணவே கொடுக்கவில்லை. அதனால் அது அதிகமான பசியினால் பீடிக்கப்பட்டது. அதனால் அது இன்னமும் பயங்கரமாக அவன் மேல் பாய்ந்துவிடும் என நினைத்தனர். . ஆனால் அந்த சிங்கம் அவனைப் பார்த்தது. தன் காலிலிருந்து முள்ளையெடுத்து தனக்கு உதவியவனே இவன் என்பதை தெளிவாக தெரிந்துகொண்டது. அதனால் அவனைத் தொடவேயில்லை. விழுங்குவது போகட்டும் அவனை அணுகவேயில்லை. அப்படிப்பட்டதொரு செய்நன்றியை கொடிய காட்டு விலங்குகளும் அனுசரித்தன என்பதை எடுத்துக்காட்டுகிறது.

2010-ம் ஆண்டு ஜூலை மாதம் 21-ம் தேதியன்று 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்' பத்திரிகையில் 'இன்னர் வாய்ஸ்' - ஆழ்மனதின் ஒலி என்னும் தலைப்பில் வெளிவந்த சிறு கதையம்சம் ஒன்றை ஊர்வசி கோயல் என்பவர் எழுதியிருந்தார். அதை இங்கு குறிப்பிடுவது பொருத்தமாகுமே. 'நான் அப்பொழுதுதான் பணியிலிருந்து ஓய்வுபெற்றேன். நான் எனக்காக கட்டியிருந்த வீடு மிகப்பெரியது. அதனால் நான் வீட்டின் பின்புறத்தில் அமைந்த சிறு போர்ஷனை சந்தோக் சிங் என்னும் தொழிலாளிக்கு வாடகைக்கு கொடுத்தேன். அவனை சந்தித்த முதல் சந்திப்பிலேயே அவன் ஒரு வித்தியாசமான மனிதனாக அறிந்துகொண்டேன். அவனைப் பார்த்ததுமே அமைதியும் மகிழ்ச்சியும் மனதில் நிறைந்திருந்தது.

நான் பணியிலிருந்த கம்பீரத்துடன் அவனைப்பார்த்து 'சந்தோக் சிங் நான் இரவில் பத்து மணிக்கெல்லாம் வெளிவாயிலை தாளிட்டுவிடுவேன். அதற்குள் நீ வீடு திரும்பிவிட வேண்டும்'

என்றேன். 'அம்மா இது நல்லதே. நானும் ஒரு கட்டுப்பாட்டிற்குள் இருந்திடுவேன்' என்று சிரித்த முகத்துடன் கூறினான்.

ஒரு சில நாட்களுக்குப் பிறகு இரவு முழுவதும் வராந்தா விளக்கை எரியவிட்டிருந்ததைக் கண்டேன். நான் அதை அவனிடம் எடுத்துக் கூறியபொழுது 'அம்மா, நம் வீட்டு வாசல் வழியே வெளியே செல்பவர்களுக்கு இவ்வெளிச்சம் பலனுடையதாக இருக்குமே என்றே அப்படிச்செய்தேன். அதைப்பற்றி நீங்கள் சிறிதும் கவலைப்பட வேண்டாம். அதன் செலவை நான் ஏற்றுக்கொள்கிறேன்' என்றான்.

ஒருநாள் மாலை நேரத்தில் என் சிநேகிதி ஒருத்தி எனது வீட்டிற்கு வந்து என்னுடன் பேசிக்கொண்டிருக்கையில் என்னிடம், 'நீ வீட்டை வெகு குறைந்த வாடகைக்குக் கொடுத்திருக்கிறாய். நீ உன் அந்தஸ்துக்குப் பொருத்தமான ஒருவரை வாடகையில் அமர்த்திட வேண்டும் என்று ஆலோசனையும் அளித்திட்டாள்.' நானும் அவளது ஆலோசனையை ஏற்று ஒரு சிறு கதை எட்டுக்கட்டி என் வீட்டில் குடியிருந்த சந்தோக்கிடம் கூறினேன். அப்பா! என் மகன் அமெரிக்காவிலிருந்து திரும்பிவருகிறான் ஆகையினால் நீ வீட்டைக் காலி செய்ய வேண்டும்' என்றேன்.

அதற்கவன் பதிலளிக்கையில் 'மேடம், இது ஒரு மகிழ்ச்சியான செய்தி. நீங்கள் மிகவும் அதிர்ஷ்டம் செய்தவர்கள். பொதுவாக இங்கிருந்து நம் குழந்தைகள் வெளியே செல்வார்களே தவிர திரும்பி வருவதென்பது வெகு அரிது. நீங்கள் உண்மையிலேயே மிகவும் அதிர்ஷ்டசாலி. நான் இந்த மாத இறுதியில் வீட்டை காலி செய்து விடுகிறேன்' என்றான்.

வாக்குகொடுத்தபடியே அந்த மாத கடைசியில் வீட்டைக்காலி செய்துவிட்டான். அவன் வெளியே செல்லும் நேரம் அவனது அறையில் ஒரு மூலையில் ஒரு சிறு பெட்டி இருப்பதைக் கண்டேன். அதில் விலை உயர்ந்த எனது நெக்லெஸ் ஒன்று இருந்தது. ஆனால் பல நாட்களாக அது காணக் கிடைக்கவில்லை. நானும் அவனைப் பார்த்து சந்தோக் இது தங்கத்திலான நகை என்று உங்களுக்குத் தெரியாதா? என்று கேட்டேன். 'மேடம், நான் ஒது சிறிய சாதாரண பணியாளனாக இருந்திடலாம். ஆனால் தங்கத்தினால் ஆனது என்பதைக்கூட அறிந்துகொள்ளாத அளவிற்கு நானொரு முட்டாளல்ல' என்றான். நான் அவனையே ஆச்சரியத்துடனும், நம்பிக்கையின்றியும் கௌரவத்துடனும் பார்த்துக்கொண்டிருந்தேன்.

அவன் குதிரை வண்டியில் செல்லுகையில் அவனுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் நான் எவ்வளவு சிறியவளாகவும், குறுகிய மனம் கொண்டவளாகவும் இருந்தேன் என்பதை அறிந்தேன். அவன் மலையினும் உயர்ந்தவனாகிவிட்டான். எழுத்தறிவற்ற அப்பேதை எனக்கு வாழ்க்கையில் ஒரு பெரிய அரிய பாடம் புகட்டிவிட்டான். 'ஒருவிதமான புகாரில்லை. எல்லாவற்றிலும் நன்மையே'.

இதைப்போன்ற மற்றுமொரு சிறுகதை உள்ளது. அதையும் இங்கு குறிப்பிடுதல் மிகவும் பொருந்துவதாகும். 'வரிசையில் ஒருவன் நின்றுகொண்டிருந்தான். வரிசையோ மிக நீண்டதாக இருந்தது. தொடக்கமும் முடிவும் கண்ணில் படவில்லை. அதனால் அவன் மனம் மிகவும் நொந்து அமைதியை இழந்தான். ஒருவரை ஒருவர் பிடித்துத்தள்ளிட அங்கு ஒரே கூச்சலும் குழப்பமும் ஏற்பட்டது.

அவ்வரிசையில் நின்றுகொண்டிருந்த ஒருவன் அமைதியிழந்து தன் கைக்கடிகாரத்தை மீண்டும் மீண்டும் பார்த்துக்கொண்டே இருந்தான். அவன் நல்ல உடை உடுத்தியிருந்தான். ஆனால் வெயில் அதிகமாக இருந்ததால் வியர்வையில் நனைந்திருந்தான்.

'நீங்கள் விண்ணப்பம் செய்வது இதுதான் முதல் முறையா?' என்று வயது முதிர்ந்த ஒருவர் அவனைக் கேட்டுச் சிரிக்கவும் செய்தார். ஆனால் அவனோ வேறு பக்கம் திரும்பிப் பார்த்து அவ்வயோதிகர் கூறியதை மதித்து காதில் வாங்கிக்கொள்ளவும் இல்லை.

அச்சமயம் ஒரு சிறு பையன் தன்னை வெறித்துப் பார்த்துக் கொண்டிருப்பதை உணர்ந்தான். அவன் அப்பையனையும் மதித்துப் பார்க்கவில்லை.

இன்னமும் ஒரு சிலர் அவனுக்கு முன்னால் நின்றுகொண்டிருந்தனர். தனது கைக்குட்டையை எடுத்து தன் முகத்தில் வழியும் வியர்வையை துடைத்துக்கொண்டான். அச்சமயமும் அச்சிறுவனை பார்க்க அச்சிறுவனோ இவனையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருப்பதைக் கண்டான். ஆனால் இப்பவும் அவனது பார்வையை மதிக்கவில்லை. அச்சிறுவனோ வரிசையிலிருந்து சிறிது தள்ளி தூரத்தில் நின்று கொண்டிருந்தான். ஆனால் அவனது பார்வை மாத்திரம் இவனை விட்டு அகலவில்லை. அச்சிறுவனோ அவனிடம் ஏதோ சொல்ல விரும்புவதுபோல் பார்த்துக்கொண்டிருந்தான். அவனது பார்வை கியூவில் நின்றுகொண்டிருந்தவனை ஒருவாறு தாக்கியது.

இதற்குள் நல்வினைப் பயனால் அவனது முறையும் நெருங்கிட, அவனும் தன் விண்ணப்பதாள்களை கவுன்ட்டரில் இருந்தவரிடம்

எடுத்துக்கொடுத்தான். அத்துடன் ஒரு ஐந்நூறு ரூபாய் நோட்டையும் கொடுத்தான். அங்கோ சரியான தொகையை செலுத்தும்படி கூறப்பட்டிருந்தது. ஆனால் சில்லறை இல்லாததால் அவனால் அவ்வாறு சரியான தொகை செலுத்த முடியவில்லை. கியூவில் இருந்தவர்கள் அமைதி இழந்தவர்களாய் ஆர்ப்பாட்டம் செய்யத் தொடங்கினர்.

அம்மனிதனோ சங்கோசமடைந்து என்ன செய்வதென்று அறியாம லிருக்க அங்குள்ள எவரும் அவனுக்கு உதவிசெய்ய முன்வரவில்லை.

மனம் நொந்துபோய் கவுன்ட்டரை விட்டு வெளிச்செல்ல முயற்சி செய்கையில் திடீரென அங்கோர் கை தேவையான அளவான பணத்துடன் தோன்றியது.

அவனோ யாரது என்று வியப்புடன் பார்க்க அச்சிறுவனே என்பதை உணர்ந்தான். அச்சிறுவனோ வேறு ஒன்றையும் எதிர்பார்க்காமல் அவனை கண்டு 'ஐயா! நீங்கள் வியப்படையும்படி நான் ஒன்றும் செய்துவிடவில்லை. உங்களுக்குக் கொடுக்க வேண்டிய தொகையைத் தான் நான் இப்பொழுது இங்கு கொடுக்கிறேன். ஓராண்டு காலம் முன்னர் என் தாய் உடல்நிலை மோசமாக இருந்த நேரம் என் கையில் காசு இருக்கவில்லை. அப்பொழுது மருந்தகத்தில் நீங்கள் தானே ஐநூறு ரூபாய் கொடுத்தீர்கள். அதைத்தான் நான் இப்பொழுது உங்களுக்கு திருப்பிக் கொடுக்கிறேன்' என்றான்.

இருவருமே ஏதோ பெரிய சங்கடத்திலிருந்து விடுபட்டதுபோல் நின்றனர். புன்னகையுடன் இருவரும் அவரவரது வழியில் புறப்பட்டனர்.

சில சமயங்களில் ஆழ்ந்த ஈடுபாட்டுடனும் முழு கடமையுணர்வுடனும் பணிகளைச் செய்தபோதிலும் அவை எதிர்ப்பார்த்த தகுந்த பலனைக் கொடுக்காமல் இருக்கலாம். அச்சமயத்தில் தான் நாம் கடவுள் நமக்கு இதைகாட்டிலும் உயர்ந்த ஒன்றை கொடுக்க வைத்துள்ளார் என்று நினைவில் கொள்ள வேண்டும். இதற்கும் ஒரு எடுத்துக்காட்டு உள்ளது.

*1998*-ம் ஆண்டு. இதை எழுதுபவர் மொரீஷியசில் நடந்த பன்னாட்டு மாநாட்டிற்குச் சென்றிருந்தார். அதே நேரத்தில் அங்கு மிகப் பிரபல திரைப்பட நடிகர் அபிதாப் பச்சனும் படப்பிடிப்பிற்காக அங்கு வந்திருந்தார். மாநாட்டை ஏற்பாடு செய்திருந்தவர்கள் அவரையும் மாநாட்டிற்கு அழைத்திட தீர்மானம் செய்தனர்.

நடிகரும் அதற்கு ஒப்புக்கொண்டார். அவர் பேசுகையில் அவரது வாழ்க்கையில் நடந்ததொரு சம்பவத்தை எடுத்துரைத்தார். அவரது தந்தையார் ஹர்வம்சராய் பச்சன் என்னும் ஹிந்திமொழியின் மாபெரும் கவியாவார். அவரை நினைவுகூர்ந்த அந்நடிகர், என் தந்தையார் இவ்வாறு கூறுவார் - 'யதி அப்னே மன் கீ பாத் ஹொ தோ அச்சா, யதி அப்னே மன் கீ பாத் ந பீ ஹொ தொ ஔர் பீ அச்சா' என்று 'நாம் நினைத்தபடியே ஏதேனும் நடந்துவிட்டால் அது நன்று; அப்படி நடக்கவில்லையாகில் அது சாலவும் நன்று'.

தன் தந்தையார் கூறுவது அவருக்கு குழப்பத்தை அளித்தது. அதன் உட்பொருளை உணரும் அவாவை அடக்க இயலாமல் தன் தந்தையைப் பார்த்து முதல் வரியை என்னால் நன்கு அறிந்துகொள்ள முடிகிறது. ஆனால் நாம் எதிர்பார்த்தபடி நடக்கவில்லையாகில் அது சாலச்சிறந்ததாக எப்படி அமையும்? என்று வினவ, அவரது தந்தையார் 'இது கடவுளின் விருப்பம். கடவுள் ஒருபொழுதும் நலனற்றதை செய்யமாட்டார்' என்றாராம். இதைக்கேட்ட இந்நூலை எழுதும் ஆசிரியர் தான் குழந்தை பருவத்தில் கேட்ட ஒரு கதையை இங்கு எடுத்துக்கூற விழைகிறார்.

ஒரு நாள் இம்மண்ணில் இருந்த குழந்தை ஒன்று சுவர்க்கத்தில் கடவுள் மானுடர்களுக்கு பழம் கொடுக்கிறார் என்று கேள்விப்பட்டது. அந்த அவாவை அடக்க இயலாத குழந்தை, ஒரு ஆப்பிள் பழத்தை கடவுளிடமிருந்து பெற்றுக் கொண்டுவர சுவர்க்கத்துக்குச் சென்றது. அப்பழத்தைப் பெற ஒரு பெரிய கியூ வரிசை இருந்தது. குழந்தையும் அவ்வரிசையில் சேர்ந்துகொண்டது. அவ்வாறே அதன் முறையும் வந்தது. குழந்தை மிக்க ஆவலுடன் பழத்தைபெற இரண்டு கைகளையும் விரித்து நீட்டியது. கடவுள் ஒரு பெரிய ஆப்பிள் பழத்தைக் கொடுத்தார். ஆனால் குழந்தையின் சிறிய கைகள் அதைப்பெற்றுக்கொள்ள போதுமானதாக இல்லை. அதனால் அப்பழம் நழுவி கீழே விழுந்துவிட்டது. குழந்தை மிகவும் ஏமாற்றமடைந்தது. கடவுளின் பணியாளர்களோ அதற்கு பிறிதொரு பழம் வேண்டுமானால் மீண்டும் கியூவில் நிற்க வேண்டுமென கூறினர். குழந்தையோ காலி கையுடன் திரும்பிச்செல்ல விரும்பாமல் மீண்டும் வரிசையில் சென்று நின்றது.

இப்பொழுது கியூவோ முன்பிருந்ததைவிட அதிக நீளமாக இருந்தது. குழந்தை அங்கு நின்றுகொண்டே மற்றவர்கள் பழத்தைப் பெற்றுக்கொண்டு மிக்க மகிழ்ச்சியுடன் திரும்பிச் செல்வதை

பார்த்துக்கொண்டிருந்தது. அதன் மனம் மற்றவர்களுக்கு பழம் கிடைக்க தனக்கு மாத்திரம் ஏன் கிடைக்கவில்லை என ஏக்கமடைந்து தவித்தது.

கடைசியில் அதனுடைய முறையும் வர கடவுள் அக்குழந்தையின் கையில் ஆப்பிள் பழத்தைக் கொடுத்து கூறினார் - 'குழந்தாய்! முன்னர் நான் உனக்குக் கொடுத்த பழம் அழுகிய பழம் என்பதை கொடுக்கும் சமயம்தான் பார்த்தேன். அழுகிய பழத்தை உனக்குக் கொடுத்ததும் என் மனம் மிகவும் துக்கத்தை அடைந்தது. அதனால் தோட்டத்தில் வளரும் பழங்களில் மிகவும் உயர்ந்ததை உனக்குக் கொடுக்க வேண்டுமென்று நினைத்தேன். பழங்கள் முழுவதும் கனிந்துவர இவ்வளவு நாட்களாயிற்று. அதன் காரணமாகவே இவ்வளவு நாட்களும் உன்னைக் காக்க வைத்தேன். இப்பொழுது உனக்கு நான் கொடுத்த இந்த ஆப்பிள் பழம் தோட்டத்திலேயே மிகவும் சிறந்த பழமாகும். இதைக் கேட்டு குழந்தை கடவுளின் கருணையையும், அன்பையும், பரிவையும் கண்டு மிக்க களிப்படைந்தது. மிக்க மகிழ்ச்சியுடன் பூமிக்கு திரும்பி வந்தது.

மிகவும் மனதிற்கிசையாததும், விருப்பமற்றதுமான சந்தர்ப்பங்களில் உள்ளினுள் ஆழ்ந்த நல்லதொரு நன்மை மறைந்திருக்கலாம் என்பதை அறிந்துகொள்ள வேண்டும். மனிதன் தன் சிற்றறிவினால் அதை அறிந்துகொள்ள இயலுவதில்லை. காலம் கடந்திட அதிலுள்ள நன்மை புலப்படும். அப்பொழுது அது நடக்காததால் எப்பேர்ப்பட்டதொரு சிக்கலிலிருந்து நாம் மீண்டோம் என்பது தெரியவரும். அச்சமயம் அவன் கடவுளிடம் தனது நன்றியை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்வான்.

அவன் நன்றியைத் தெரிவிப்பதற்கு கடவுள் எவ்வளவு நன்மைகள் செய்திருக்கிறார் என்பது தெரியவரும். குரான் பேசுகிறது -

'தான் படைத்த ஜீவராசிகளுக்காகவே இவ்வுலகை சிருஷ்டி செய்துள்ளார் கடவுள். அப்படியிருக்கையில் கடவுளின் எந்த அருளை நீ மறுப்பாய்?' அவரோ நமக்காக பல திறன்களை அளித்துள்ளார். அவைகளில் மிகவும் உயர்ந்தது பகுத்தறியும் திறன் அன்றோ.

நாம் தினந்தோறும் மனநிறைவுடனும் மகிழ்ச்சியுடனும் இருக்க நினைப்பது இயற்கையே. இதன் முதற்படியாக அமைவது ரோன்டா பைர்னே என்பவர் தான் எழுதிய 'தி மேஜிகல் வே ஆஃப்

நெகடிவிடி' என்னும் நூலில் 'தி மஜிக்' என்னும் அத்தியாயத்தில் உடலில் எதிர்மறையான அதிர்வுகளை அறவே நீக்கி நாம் வாழ்க்கையில் அடைந்தவைகளை நினைத்து நன்றி செலுத்துதல் வேண்டும். அவள் கூறுவதாவது, ஒவ்வொரு நாளும், நடந்த சுமார் பத்து சம்பவங்களையாவது சிந்தித்துப்பார்த்து அவைகளை மகிழ்ச்சியுடன் ஏற்று அதற்கு நம் நன்றியைத் தெரிவித்துக்கொள்ள வேண்டும்.

சில நாட்களாகவே ஒருவன் நன்றியறிதலை அனுசரிக்கவில்லையாகில் அவனது மனதில் எதிர்மறையான எண்ணங்கள் ஏற்படுவது திண்ணம். அதுவே நம் வாழ்க்கையில் நடக்க இருக்கும் இந்திரஜால வித்தையை, திருப்பத்தை தடுத்துவிடும். வாழ்க்கையில் நடப்பவைகளை அப்படியே ஏற்றுக்கொண்டுவிடுகிறோம். அதுவே நமக்கு எதிர்மறையான அதிர்வுகள் ஏற்படுதற்கான முதற்காரணமாகும். ஒருவன் எப்பொழுதும் குறைகூறிக்கொண்டே இருந்தால் அவன் எப்படி செய்நன்றியை அறிய இயலும். நீ செய்நன்றி உணர்வுடன் இருந்தாயாகில் எதிர்மறை உணர்வுகள் உன்னிடமிருந்து வெகு தொலைவிலேயே இருந்திடும். ஏனெனில் நீ ஆக்கப்பூர்வமான மனதிடத்துடனும் மகிழ்ச்சியுடனும் இருக்கிறாய்.

புத்தர் கூறுகிறார் - 'நாம் விழித்தெழுந்து நன்றிசெலுத்திடுவோம்... நமக்கு நோய்தான் ஏற்பட்டதே தவிர நாம் இறந்துவிடவில்லையே!' ஒரு சிலர் தனக்குக்கிடைத்த உணவை எப்பொழுதும் குறை கூறிக்கொண்டே இருப்பர். தான் விரும்பிய காய்கள் இல்லை, தனக்கு பிடித்தவிதத்தில் சமைக்கவில்லை, அல்லது பரிமாறுவது சரியில்லை என்று மனத் திருப்தியின்றி முணுமுணுத்துக்கொண்டே இருப்பர். நம் மறைநூல்கள் இப்படிப்பட்டவர்களை மனதில் கொண்டுள்ளது போலும்.

அவை கூறுகின்றன - 'அன்னம் ந நிந்த்யாத்'- உணவை நிந்தனை, தூஷணை செய்யாதே. 'அன்னம் பஹு குர்வீத' - உணவுக்கு மரியாதை, மதிப்பு கொடு. நமக்கு வயிறுநிறையும் வண்ணம் உணவு கிடைக்கிறது. ஆனால் கோடிக்கணக்கானவர்கள் பசியுடன் இரவு உறங்கச் செல்கின்றனர் என்பதை நினைவில் கொள். இவ்வாறு செய்நன்றியறிதல் நமக்கும், ஆன்மீக வாழ்க்கை நடத்தவுமே பயனுள்ளதாக இல்லை. விஞ்ஞான ரீதியிலும் மிக்கப் பயனுள்ளதாக அமைகிறது. நமக்குக் கிடைத்த பாக்கியத்தை நினைத்துப்பார்க்கையில் நமது மனம் ஆக்கப்பூர்வமான திசையில் இழுத்துச் செல்லப்படுகிறது. அப்பொழுது நாம் நம்மிடம் உள்ளவைகளைப் பற்றி நினைத்து நாம்

எவ்வளவு பாக்கியசாலி, நன்வினைப்பயன் பெற்றவர்கள் என்பதில் மனதை ஒருமுகப்படுத்திப் பார்க்கிறோம்.

செய்நன்றியுணர்வுடன் நம்மிடம் உள்ளவைகளை எடுத்துப்பார்த்தோமானால் நாம் எவ்வளவு நேர்த்தியான அழகான வாழ்க்கை வாழ்கிறோம் என்பது புலனாகிறது. இப்படி உள்ளவைகளைக் கண்டும் செய்நன்றி உணர்வு ஏற்படவில்லையாகில் இந்த பொன்மயமான விவேக மொழிகளை மனதில் கொண்டிடல் வேண்டும். 'நமக்கு வேண்டிய பிடித்தமான பொருட்களை அடையவில்லை என்று மனவருத்தம் ஏற்படுகையில் நாம் விரும்பாத எவ்வளவு பொருட்கள் நம்மிடம் இல்லை. அதுவே மேல் அன்றோ'.

ஒரு நன்மைக்கு எதிர் நன்மை செய்தல் வேண்டுமென்பது அழியாத கொள்கையாகும். 'க்ருதே ச ப்ரதிகர்தவ்யம் ஏஷ தர்மஸ் ஸநாதன:' இக்கொள்கையை ஒவ்வொருவரும் பின்பற்றுதல் வேண்டும். இவ்வாறு பிரதி உபகாரம் செய்யும் நிலையில் இல்லாவிடில் குறைந்தபட்சம் வாயினால் மிக்க நன்றி என்று கூறுதல் இன்றியமையாததாகும். அவ்வாறு செய்யாமல் சிறு குற்றம் கண்டிடின் அது அவனை மிகவும் புண்படுத்திடும். அதனால் அவனது நல்ல மன அதிர்வுகள் பயனின்றி போய்விடும்.

'நன்றி' என்று எடுத்துரைப்பது அவனுக்கு இருவிதமான நன்மைகளை விளைவிக்கும். முதலாவதாக அவனது மனதில் ஒரு நல்ல இடம் கிடைப்பதுடன் மேற்கொண்டு பலமுறை பலருக்கு உதவி செய்ய தூண்டிவிடும். இரண்டாவதாக நன்றி கூறாவிடில் நம் மனது பாரமாகி அடுத்து வரும் சந்தர்ப்பங்களில் பிறரது உதவியேற்று, நல்லுபதேசமோ. நல்ல குறிப்புகளோ பெற்று தான் அடைய வேண்டிய இலக்கை அடைவதும் இயலாமலாகிவிடும்.

இந்நூலாசிரியர் இங்கு தன் வாழ்க்கையில் நடந்ததொரு சந்தர்ப்பத்தை தனது டைரியிலிருந்து பகிர்ந்துகொள்ள விரும்புகிறார். 1969-ம் ஆண்டு அவர் வாராணசியில் இருக்கும் 'பனாரஸ் ஹிந்து யுனிவர்சிடியில்' 'ஓரியண்டல் லேர்னிங் அண்டு தியாலஜி' துறையில் பேராசிரியர் பதவிக்கு மனு விண்ணப்பித்திருந்தார். அச்சமயம் அவர் தில்லி பல்கலைக் கழகத்தில் உதவிப் பேராசிரியராக இருந்தார். அங்கு பேராசிரியர் இடம் காலியாக இருந்தது. இந்நூலாசிரியரோ வாராணசிக்கு செல்வதைவிட மேற்கொண்டு தில்லிலேயே தொடர்ந்து பணியில் இருக்க விரும்பினார். ஆனால் தில்லியில் தேர்வை தீர்மானிக்க அதிக காலமெடுத்தது.

வாரணாசியில் அவருக்கு 6 மாத தவணைக் காலம் கிடைத்தது. ஆனால் தில்லியில் தேர்விற்கான அறிகுறியே புலப்படவில்லை.

அதனால் வாரணாசியில் மேலும் ஆறுமாத காலம் காலகெடு நீடிப்பிற்கு அனுமதி கேட்க அதுவும் அளித்துவிட்டது. ஒருநாள் அவரது தகப்பனார் அவரிடம் 'இவ்வாறு பணியில் சேராமல் விடுமுறையை நீட்டிச்செல்வது பல்கலைக் கழகத்திற்கு நல்லதல்ல. அதனால் அப்பதவிக்கு மறுப்பு தெரிவித்துவிடு' என்று கூறினார். அதன்படி கடிதமும் எழுதி தயாராக வைத்துக்கொண்டார்: ஆனால் அன்று இவர் எப்பொழுதும்போல் தில்லி பல்கலைக் கழகத்துக்குச் சென்று ஓய்வு நேரத்தில் தன்னறையில் அமர்ந்திருக்கும் நேரம் 'ஆர்ட்ஸ் பேகல்டி ஆப் தில்லி யுனிவர்சிடி'யில் பேராசிரியராக இருந்த பி.ஜினானந்தா என்பவர் அவரது மனதில் ஏதோ நல்லது நடப்பதற்கான குறிப்புகள் தென்படுவதாகக் கூறி பனாரஸ் பல்கலைக்கழகத்துக்கு ராஜிநாமா கடிதம் அனுப்ப வேண்டாம் என்றும், மேற்கொண்டு விடுமுறை அளித்திட அனுமதிகோரி கடிதம் அனுப்பும்படியும் கூறினார்.

இவரும் தான் எழுதிய கடிதத்தைக் கிழித்தெரிந்துவிட்டு புதிய கடிதம் எழுதி அனுப்பிவிட்டார். வாரணாசி பல்கலைக் கழகமும் கடிதத்தில் கோரியிருந்ததை ஒப்புக்கொண்டு கால நீடிப்பை ஏற்றுக்கொண்டது. இதனிடையில் தில்லி பல்கலைக் கழகத்தில் நடக்கவிருந்த நேர்முகத் தேர்வுக்கு அழைப்பு வந்து பின்னர் அவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஜனானந்தாவின் அறிவுரையை ஏற்றதால் நேர்முகத் தேர்வில் மிக்க மனதிடத்துடன் பதிலளிக்க முடிந்தது. ஏனெனில் இங்கில்லாவிடில் பனாரஸ் பொறுப்பு கையில் இருந்ததன்றோ. இல்லாவிடில் அவர் பனாரஸ் இடத்தையும் ராஜினாமா செய்துவிட்டு இங்கும் தேர்ந்தெடுக்கப்படாமல் இருந்தால் என்ன கதி ஆகியிருக்கும். அதனால் நான் ஜினானந்தாவிற்கு என்றும் கடமைபட்டவனானேன் என்று நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

இந்நூலாசிரியரின் நண்பர் ஒருவர் டாக்டர் சீதாராம் கேசரி என்பவர் கூறினார் - என் தந்தையார் எனக்கு எப்பொழுதும் இதை எடுத்துக் கூறிடுவார் - நமக்கு நம் இலக்கையடைய ஒருவர் நல் வழி காட்டினால் அதை நாம் வாழ்நாள் முழுவதும் நன்றியுடன் மனதில் நினைத்திட வேண்டும். அதுதான் உண்மையான நன்றியுடைமையாகும்.

இந்தியப் பண்பாடோ, செய்நன்றியை ஒருமுறை திருப்பிச் செய்தலினால் முடிவதில்லை என்று கூறுகிறது. பல முறை நன்றியை நினைத்து உதவிசெய்தல் வேண்டும். மகாபாரதம் கூறுவதாவது -

'யாவச்ச குர்யாத் அப்யதிகம் தத: க்ருதம் சதகுணம் குர்யாத் |
இச்சந்தி பஹூளம் ஸந்த: பிரதிகர்தும் மஹத் ப்ரியம்'||*13

இந்நூலில் மேலும் கூறுவதாவது, 'ஒருவன் ஒரு மரத்தின் குளுமையான நிழலை ஒருமுறை அனுபவித்திருந்தாலும், அம்மரம் குளிர்ந்த நிழலளித்து தனக்குச்செய்த உபகாரத்தை நினைத்து அதன் ஒரு இலையைக்கூட அறிந்து பறித்தல் கூடாது.'

யஸ்ய சார்த்ரஸ்ய வ்ருக்ஷஸ்ய சீதச்சாயாம் ஸமாஸ்ரயேத் |
ந தஸ்ய பர்ணம் த்ருஹ்யேத் பூர்வவ்ருத்தம் அனுஸ்மரன் ||*14

## மேற்கோள்கள்


1. *Udyogaparvan* 33.87
2. *ibid* 22.88
3. *Padma-Purana* 39.118
4. *canakyasutraani* 401
5. *Ramayana* 4.27.45
6. *ibid* 4.34.10
7. *ibid* 4.34.12
8. 6.29.13
9. *Satiparvan* 173.20
10. *ibid* 172.24
11. *ibid* 140.20
12. *Padma Purana* 53.103
13. *Udyogaparvan* 60.7
14. *Virataparvan* 16.19

# 12

# அக்ரோத

## கோபங்கொள்ளாமை

'க்ரோத' - கோபம் என்பதற்கு இலக்கணம் 'விக்ஷிப்தசித்ததா' - மனக்கொந்தளிப்பு. 'க்ரோத விக்ஷிப்தசித்ததா' - மனதில் குழப்பம் என்பதாகும். பதஞ்ஜலி மகாபாஷ்யத்தில் இந்நிகழ்வை உடலின் வெளி உறுப்புகளில் காணமுடியும் என்கிறார். அதாவது கண்கள் சிவத்தல் முதலிய வெளியில் தென்படும் அறிகுறிகளினால் அறியலாம். இது ஒருவனின் அகத்தில் சினமாக அமைந்து பின்னர் புறத்தில் கோபமாக வெளிப்படுகிறது.

'கோப ஆந்தரதோ தர்ம: க்ரொதச்சக்ஷுராகாதினா பரித்ருஸ்யோ பாஹ்ய:' அதன்பிறகு அவர் 'க்ரோத' - கோப, கோபம், சினம் என்ற ஒரு பொருளுணர்த்துவதுபோல் அமைந்த இரண்டு சொல்லிற்கும் உள்ள நுணுக்கமான வேற்றுமையை தெளிவாக எடுத்துக்கூறுகிறார். 'ந ஹி அகுபிதோ க்ருத்யதி' - ஒருவன் 'குபித' சினமடையாமல் 'க்ருத்த' கோபமடைவதில்லை. 'க்ரோத' - கோபம் என்பது உடனே ஏற்படக் கூடியது. 'கோப' - சினம் என்பது தாங்கி நிற்பதாகும். அதுவே இவ்விரண்டிற்கும் உள்ள வித்தியாசமாகும்.

'க்ரோத' - கோபம் மனக்கொந்தளிப்பாகும். அதுவே எல்லா பிரச்னைகளுக்கும் மூலகாரணமாகும். மறை நூல்கள் ஒன்றுடன் ஒன்று போட்டியிடுவதுபோல் இதை தன் வசத்தில் வைத்திருக்க வேண்டுமென்று அறிவுறுத்துகின்றன. இதனால் ஏற்படும் முதல் பாதிப்பு பகுத்தறியும் திறனை இழப்பதேயாகும். சாதாரண நேரங்களில் நாம் எவைகளை செய்வது உசிதமல்ல என்று நினைக்கிறோமோ அதையெல்லாம் இச்சமயத்தில் செய்யத் துணிகிறோம். இக்கூற்று கூறுவது என்னவென்றால்

க்ருத்த: பாபம் ந குர்யாத் க: க்ருத்தோ ஹன்யாத் குருன்னபி |
க்ருத்தோ பருஷஸ்ய வாசா நர: ஸாதூன் அதிக்ஷிபேத் ||
வாச்யாவாச்யம் ப்ரகுபிதோ ந விஜானாதி கர்ஹிசித் |
நாகார்யம் அஸ்தி க்ரு த்தஸ்ய நாவாச்யம் வித்யதே க்வசித் ||*1

கோபங்கொண்டவன் எந்த பாபத்தைத்தான் செய்யமாட்டான். அவன் பெரியவர்களைக் கொல்லவும் துணிந்திடுவான். தெய்வபக்தி கொண்டவர்களையும் கொடிய சொற்களினால் வருத்தமடையச் செய்வான்.'

கோபங்கொண்டவன் என்ன பேச வேண்டும் என்ன பேசக்கூடா தென்பதையும் தீர்மானிக்க இயலாதவன். எந்தக் கெடுதலைத்தான் செய்யமாட்டான். எதைப் பேசக்கூடாது என்பதையும் அறியான்.'

கோபத்தினால் ஆட்கொள்ளப்பட்ட மதிஎன்ன செய்யலாம், என்ன செய்யக்கூடாது என்பதை தீமானிக்க இயலாததாகிறது - 'நஹி கோபகலுஷிதமதி: கர்தவ்யம் அகர்தவ்யம் வா விம்ருசதி.'*2 அவனது முழு உடலும் 'பபூல்' மரம் தீயில் எரிவதுபோல் தோற்றமளிக்கிறது. 'ஜ்வலத்பபூலவத்பாதிகாய:ப்ராயோதிகோபின:'*3 கோபம் மன வேதனையை அளிக்கிறது. உலகையே அழிக்கவல்லது. தர்மத்தை வேறுடன் அறுத்திடும். அதனால் ஒருவன் அதை சபதமெடுத்து துறந்திடல் வேண்டும்.

க்ரோதமூலோ மனஸ்தாப: க்ரோத: ஸம்ஸாரசாதனம் |
தர்மக்ஷயகர: க்ரோத: தஸ்மாத் தம் பரிவர்ஜயேத் ||*4

இது உடலுக்கும் உள்ளத்துக்கும் தொந்தரவு செய்யக்கூடியது. பகைமைக்கு மூலகாரணம் அதுவே. வீழ்ச்சிக்கான வழியாகும். அமைதியுடன் அடையும் மகிழ்ச்சிக்கு ஒரு தடங்கலாகும்.'

தத்ரோபதாபக: க்ரோத: க்ரோதோ வைரஸ்ய காரணம் |
துர்கதேர்வர்தனீ க்ரோத: க்ரோத: சமசுகார்கலா||*5

யாரைக்கண்டு கோபிக்கிறானோ அவனுக்கு அது கெடுதியை விளை விக்கும். இது திண்ணமாக தன் வசமில்லாதவனை கெடுத்திடும். ஆதலின் இவ்வாறு கூறப்படுகிறது -

ஆத்மானமேவ நாசயதி அநாத்மவதாம் கோப; |*6

பகுத்தறிந்தாராயும் திறனே, விவேகமே கோபத்தை அடக்கவல்லது. ஒருவன் கோபத்தை அடக்காமல் அதன் வழியே செல்லவிட்டால்

அவனது நிலைமை கடிவாளத்தை தன் வசத்தில் கொள்ளாத குதிரையை ஒத்ததாகும். அவனது குதிரை எந்த நேரத்திலும் சறுக்கி விழுந்திடலாம்.

புத்திவல்கும் ஸமுத்ஸ்ருஜ்ய க்ரோததுர்வாஜிகோ ஹி ய: |
தாவதே பதனம் யஸ்ய சுலபம் ஸ்யாத் பதே பதே|| *7

ஒருவன் மோக்ஷமடைய சாதனமான தவத்தை மேற்கொண்டு பயிற்சி செய்யலாம். அவன் தான் சினமடைந்து கோபத்துக்கு உள்ளானால் இத்தனை நாட்கள் செய்த தவமும் வீணாகி விரும்பிய பலனை அடைய இயலாமல் போகும். வாழ்க்கையின் நான்கு குறிக்கோள்களுக்கும் பகைவனாகும். அது தன்னையும் அழிக்கும் பிறரையும் அழிக்கவல்லது.

மோக்ஷசாதனமபி ஏஷ தபோ தூஷயதி க்ஷணாத்|
சதுர்வர்கரிபு: க்ரோத: க்ரோத: ஸ்வபரனாசக:|| *8

நான்கு வர்கத்தவராலும் கோபத்தை அடக்கி தன் வசத்தில் இருத்தல் மிகமிகக் கடினமானதென ஒப்புக்கொள்ளப்பட்டதே ஆகும். சைதன்யசந்திரோதய இதை மிகவும் விளக்கமாக வருணிக்கிறது. அவர் கூறுவதாவது - 'தனது தீவிர இச்சைகளையெல்லாம் நன்கு அடக்கி, மனதை ஒருமுகப்படுத்தி, மேலான தத்துவத்தையறிய தியானத்திலும் நிஷ்டையிலும் சமாதியிலும் ஈடுபட்டவர்களும், உலகவாழ்க்கையில் எல்லாவிதமான வளங்களையும் வசதிகளையும் பெற்றிருந்தாலும், கடுமையிலும் கடுமையான தவத்தை மேற்கொண் டாலும், பசி, தாகம் இவைகளை அறவே துறந்தவர்களானாலும், தன் புலன்களை வசப்படுத்தி வெல்ல இயலாத காமத்தையும் காமனையும் வென்றிருந்தாலும் அவர்களால் கோபத்தை அடக்க இயலுமா? கோபத்தை வெல்ல முடியுமா?'

உக்ரைர் உக்ரைஸ்தபோபி:ஸமதமனியமைர்தாரணாத்யானயோகை:
யுக்தஸ்சாபரமேஷ்ட்யே த்ரிபுவனவிபவே ஆர்திதானாவபோத:|
கன்தர்பாதீன் அமித்ரான் அபி ஸஹஜதயா துர்ஜயான் எவ ஜித்வா
யேன ஸ்ப்ரஷ்டா நிபேயு: கதய கதம் அஸௌ கேனகோபோ விஜய:|| *9

சினமென்பது காமமென்னும் கொடிய கோளின் பலனாகும். அது மது அருந்துவதற்கு ஒப்பான மயக்கத்தை கொடுக்கும். இது மனவலிமையை இழக்கச்செய்து மனதை குழப்பம் அடையச்செய்யும். ஒருவன் தன்னையே இழந்துவிடுகிறான். உடல் தன்வசத்தை இழக்கிறது. சினம் தருமத்தை அழிக்கும். இது ஒருவனை

ஆட்கொள்ள அவன் தான் பேசக்கூடாதவைகளையும் பேசுகிறான். (ஆதர்ஸசரித)

கோபத்தினால் மனம் மயக்கமடைவதால் ஒருவன் தன் மதியினால் என்ன செய்ய வேண்டும் என்ன செய்யக்கூடாது என்பதை அறிந்திடும் திறன் இழக்கிறான்.

'நஹி கோபகலுஷிதா விம்ருஸதி மதி: கர்தவ்யம் அகர்தவ்யம் வா'*10

அதனால், தூண்டப்பட்டும் கூட ஒருவன் சினமடைதல் கூடாது என்று அறுவுறுத்தப்படுகிறான். வெறுப்பேற்றலை தாங்கும் சக்தியைப்பெற்ற ஒருவன் சினத்தைத் தூண்டும் ஒருவனது தூண்டுதலுக்கு ஆளானால் அவன் அச்சினத்தீயினால் எரிக்கப்படுவது மாத்திரமன்றி, அவனது நற்குணங்களெல்லாம் அவனிடமிருந்து அபகரிக்கப்படுகிறது.

ஆக்ருஷ்யமாணோ நாக்ரோஸன் மன்யுரேவ திதிக்ஷத: |
ஆக்ரோஷ்டாரம் நிர்தஹறதி ஸுக்ருதம் சாஸ்ய விந்ததி ||*11

நூறு வருடங்களுக்கு இடைவிடாமல் ஒவ்வொரு மாதமும் தவறாமல் (சிரமத்தைப் பாராமல்) வேள்வியைக் காப்பவனும் பிறிதொருவன் தன் கோபத்தை ஒருவர் மேலும் காட்டிடாமல் இருப்பவனுமான இருவரையும் ஒப்பிட்டுப் பார்க்கையில் பின்னால் இரண்டாவதாகக் கூறப்பட்டவனே சிறந்தவனாவான்.

யோ யஜேத் அபரிஸ்ராந்தோ மாஸி மாஸி ஸதம் ஸமா: |
ந க்ருத்யேத் யஸ்ச ஸர்வஸ்ய தயோர்ரக்ரோதனோதிக: ||*12

எவன் ஒருவன் கோபத்தை அடக்கிவைக்கிறானோ, தன்னை இகழ்பவர்களையும் இழிந்துபேசாமல் கோபத்தின் சூட்டை அடையாமல் இருக்கிறானோ அவன் விடுதலை பெற்று மோக்ஷமடைவான் என்பது திண்ணம்.

ய: ஸன்தாரயதே மன்யும் யோSதிவாதான் திதிக்ஷதே |
யஸ்ச தப்தோ ந தபதி த்ருடம் ஸோர்தஸ்ய பாஜனம் ||*13

கோபத்தீயினில் எரிந்துகொண்டிருப்பவன் எக்காரணம் கொண்டும் எங்கிருந்தும் அமைதி பெறமாட்டான்.

கோபாக்னிதாஹதக்தஸ்ய க்வாபி ஸாந்திர்ந வித்யதே|*14

தீயைப்போல் கோபம் எழுகையில் முதலில் அது யாரிடமிருந்து எழுகிறதோ அவனை அழித்திடும். பின்னர் பிறரை அழித்தாலும் அழிக்கலாம் அல்லது அழிக்காமல் இருந்தாலும் இருக்கலாம்.

உத்பத்யமானா ஏவ ப்ரதமம் தஹதி ஏவ ஸ்வம் ஆஸ்ரயம் |
க்ரோத: க்ருஸானுவத் பஸ்சாதன்யம் தஹதி வா ன வா ||*15

தன் பகுத்தறியும் திறனை இழப்பதனால் கோபத்தினால் முழுவதும் குருடாகிறான் ஆனால் கண்களை இழந்த குருடனல்ல அவன்.

க்ரோதாந்த: பரமாந்த: ஏவ ஹததீர் நாந்தோ த்ருஸாந்தோ ஜன: |*16

இங்கு பிறிதொரு எடுத்துக்கூறத்தக்க குறிப்பிடத்தக்க விஷயமும் உள்ளது. தன்னடக்கம் கொண்டவர்களிடம் அது உணவுப் பயிர்களின் இலைகளின் மேல் விழும் நீரைப்போல அதிக நேரம் நீடித்திருப்பதில்லை.

வஸீனோ ருஷோ மதிஷு நாஸதே சிரம் ஜலவிப்ருஷஸ்ச
ஸஸ்யஸூசிஷு |*17

யார் தங்களது பகுத்தறியும் திறத்தினால் எழுந்திடும் கோபத்தை கொழுந்துவிட்டு எறியும் தீயை நீர் அணைப்பது போல் அடக்கிவிடுகிறார்களோ அவர்களே கொடுத்துவைத்தவர்கள், மகான்கள், உயர்ந்த மனிதர்கள் ஆவார்கள்.

தன்யாஸ்தே புருஷஸ்ரேஷ்டா யே புத்த்யா கோபமுத்திதம்
நிருந்தந்தி மஹாத்மானோ தீப்தம் அக்னிம் இவாம்பஸா ||*18

கோபம் மிகத்தீயது என்பது மாத்திரமல்ல. அது இதர பல தீயவைகளுக்கு பிறப்பிடமாகவும் உள்ளது. அதற்கு ஒரு கூட்டமான சகாக்கள் இருக்கின்றன. அவை எட்டு என மனுஸ்ம்ருதி கூறுகிறது.

பைஸூன்யம் ஸாஹஸம் த்ரோஹம் ஈர்ஷ்யார்ததூஷணம் |
வாக்தண்டஜம் ச பாருஷ்யம் க்ரோதஜோபி கணோஷ்டக: ||*19

'புகார் கூறுதல். வன்முறை, நம்பிக்கை துரோகம், பொறாமை, அவதூறு, பிறர் சொத்தை அபகரித்தல், கடுமையாக பேசுதல், முரட்டுத்தனமாக தாக்குதல் ஆகிய எட்டு கெட்டகுணங்களும் கோபத்தினின்றும் பிறப்பவைகளாகும்.'*20

இவ்வாறு எடுத்துக் கூறிக்கொண்டே போகலாம், ஆனால் கோபத்தை .வெல்வதென்பது இயலாதது என்பதல்ல. ஆனால்

மிகவும் கடினமானதாகும். யுதிஷ்டிரரைப் பற்றி ஒரு பிரசித்தமான கதை உண்டு. யுதிஷ்டிரரோ பொறுமைக்குப் பெயர் போனவர். அவருக்கு அவரது ஆசானிடமிருந்து கிடைத்த முதல் பாடமே கோபத்தை வெல்வதேயாகும். அவரும், அவரது நலமறியும் அவாவுடன் வந்த அர்ஜுனனை நேருக்கு நேர் காண வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்ட பொழுது ஏற்பட்ட கோபத்தை அடக்க முடியவில்லை.

யுதிஷ்டிரர், கர்ணனை எதிர்க்கவேண்டிய நிலை ஏற்பட்டு மிகவும் மோசமான முறையில் காயப்பட்டு தோல்வியடைந்து தன் கூடாரத்துக்கு வந்து சேர்ந்தார். அச்செய்தி அறிந்து அர்ஜுனன் அவரது நலனறிய கிருஷ்ணனுடன் அவரது கூடாரத்தை வந்தடைந்தான். அவரை அங்கு நலமுடன் கண்டு அர்ஜுனனது முகமோ பொலிவடைந்தது. ஆனால் யுதிஷ்டிரரோ அர்ஜுனன், தன்னை அவமானப்படுத்திய கர்ணனைக் பழிவாங்க கர்ணனையும் சம்சப்தகர்களையும் கொன்று வெற்றியுடன் வந்துள்ளான் என நினைத்து அவனை வெகுவாகப் புகழ்ந்தார்.

உடனேயே அர்ஜூனன்தன் நலமறியவே வந்துள்ளான், கர்ணன் உயிருடனேயே இருக்கிறான் என்ற செய்தியறிந்து யுதிஷ்டிரர் மிக்க கோபமடைந்து வசைமாரி பொழிந்திட இருவருக்குமிடையே பகைமை வளர்த்தது.ஒருவரை ஒருவர் கொல்லவும் தயாராகி அதனால் சமாதானப்படுத்த இயலா பல கெட்ட சம்பவங்கள் நிகழவும் காரணமாக இருந்திருக்கலாம்.

கடும் தவத்திலும் தியானத்திலும் ஈடுபட்ட முனிவர்களும் தவசிகளும் கூட திடீரென வெளிப்படும் கோபத்தை அடக்க இயலாதவர்களாகி விடுகிறார்கள். துருவாசர் முதலிய முனிவர்கள் கோபத்துக்கு பெயர்போனவர்கள். ‘துர்வாசா நாம சுலப கோப மஹரிஷி:’ மற்றுமொரு முனிவர் பரசுராமரது தீவிர கோபமோ அவரை கடும் விரதமேற்கச் செய்தது. இவ்வுலகையே க்ஷத்திரியர்கள் அற்றவர்களாக செய்கிறேன் என்பதான விரதமேற்று இருபத்தொரு முறை பூமண்டலம் முழுவதும் சுற்றி வந்தார்.

இவ்வாறு கடுந்தவமேற்றிடும் முனிவர்களின் நிலையிருந்திட சாதாரண மக்களைப்பற்றி கோபத்தை அகற்றிட வேண்டும் என்பது பற்றி என்ன கூறுவது? இது இயலாத ஒன்றை செய்ய முயல்வதுபோல் தோன்றுகிறது. ஆனாலும் இதை ஒருவன் அகற்றியே ஆக வேண்டும். ஏனென்றால் இது தன்னையே அழித்திடுமன்றோ.

கோபத்தை அகற்றுவது, வெல்வது என்பது அடிப்படை தேவையாகும். எப்படி அதை வெல்வது என்பது மில்லியன் டாலர் கேள்வியாகும்.

ஒரு சமயம் அந்தணர் ஒருவர் புத்தரை அணுகி கேட்டார் - நீங்கள் ஏதையேனும் கொல்வதற்கு அனுமதியளிப்பீர்களா? புத்தரும் அவனைப் பார்த்து பதிலுரைத்தார் - 'ஆம், கோபத்தை கொன்றிட வேண்டும். விவேகிகள் தங்களுடைய பரம விரோதியான கோபத்தை வென்றிடல் வேண்டும்' என்றார். புத்தரின் பதில் அந்த அந்தணரை மிகவும் கவர்ந்தது. அதனால் அவர் அவரது சங்கத்தில் ஒரு பிக்ஷுவாக சேர்ந்துவிட்டார். அவ்வந்தணரின் உடன்பிறந்தோன் இச்செய்தியைக் கேட்டு புத்தரை அணுகி அவரை பலபடி நிந்தித் தான். புத்தரோ புன்முறுவலுடன் அவனைப் பார்த்துக்கொண்டிருந்தார். அதைப்பார்த்து மேலும் சினம்கொண்ட அவர் புத்தரைப் பார்த்து தன் கேள்விக்கு பதிலளிக்கும்படி தூண்டினான். புத்தர் 'ஒருவன் கொடுக்கும் வெகுமதியை ஏற்காவிடில் அது மீண்டும் கொடுத்தவனையே வந்து சேரும்' என்றார். கோபச்சொற்களும் செயல்களும் முதற்கண் ஒருவனை புண்படுத்தும்.

இதன்பிறகு புத்தர் கீழ்க்கூறும் செய்யுளைக் கூறினார்.

'கோபமற்றவனுக்கு கோபம் ஏற்படுவதும் எப்படி?

தன்னை ஆழ்ந்து நோக்கி தன் வசப்படுத்திட்டால்

அவன் அமைதி, விடுதலை, பாதுகாப்புடன் இருக்கிறான்'.

தன்னைக் கோபித்த ஒருவனை திரும்பி கோபிப்பவன் தனக்கும் தீங்கிழைத்துக்கொள்கிறான் பிறருக்கும் தீங்கிழைக்கிறான்.

நீ புண்படுத்தப்பட்டால் பிறரை மீண்டும் புண்படுத்தாதே, அது உண்மையில் உனது வெற்றியாகும்.

உன்னுடைய பயிற்சியும் வெற்றியும் உனக்கு நன்மையைச் செய்யும். நீ உன் கோபத்துக்கு மூலகாரணத்தையும் பிறரது கோபத்துக்கான மூலகாரணத்தையும் அறிந்துகொண்டால் நீ அமைதியையும், மகிழ்ச்சியையும், எளிமையையும் உணர்வாய். தனக்கும் சிகிச்சை செய்துகொண்டு பிறருக்கும் சிகிச்சையளிக்கும் மருத்துவனாக ஆவாய். இதை அறிந்துகொள்ளவில்லையாகில் கோபங்கொள்ளா திருத்தல் முட்டாளின் செயல் என்றே கருதுவாய்.

புத்தபிரானின் கதையைப்போலவே முகமது நபியின் கதையொன்றும் உள்ளது. அவர் நடந்து செல்லுகையில் கிழவி ஒருத்தி அவர் மீது குப்பைகளை வீசி யெறிவாள். அவரோ அதைச்சிறிதும் பொருட் படுத்தாமல் மேற்கொண்டு நடந்திடுவார். இது பல நாட்களுக்கு நடந்துவந்தது. ஒருமுறை அவர் அவ்வீதி வழியே செல்லுகையில் அவர்மேல் குப்பை கூளம் ஒன்றும் வீசி எரியப்படவில்லை. மறுநாளும் அவ்வாறே நடந்தது.

முகமது நபியோ அக்கிழவிக்கு ஏதோ நடந்துள்ளது என்றே நினைத்தார். விசாரித்ததில் அவள் உடல் நலம் குன்றி மிகவும் மோசமான நிலையிலுள்ளாள் என்பதை அறிந்தார். உடனே அவர் அவள் இருப்பிடம் சென்று சேவை செய்து அவளது உடல் மீண்டும் நலமடையும்படி செய்தார். அவரது செயல்கண்டு கிழவி மிகவும் வெட்கமடைந்தாள். அவளோ அவரிடம் தான் இவ்வளவு மோசமாக நடந்துகொண்டபோதிலும் அவரால் எப்படி இவ்வளவு கருணையுடனும் அன்புடனும் இருக்கமுடிகிறது என்று கேட்டாள். நபியாரோ உன்னிடமிருப்பதை நீ கொடுத்தாய், என்னிடமுள்ளதை நான் கொடுக்கிறேன் என்றார்.

கோபமற்றவர் என்றால் அவர்களது மனதில் கோபத்தின் விதைகள் அறவே இருக்கக்கூடாது. நாம் கோபம் கொள்வது எதனால் என்றால் நம் மனதில் கோபத்தின் விதைகள் ஆழமாக பதிந்துள்ளன. அவைகள் நம் பெற்றோர்களிடமிருந்தோ சமுதாயத்தினிடமிருந்தோ நமக்கு தொடர்ந்து வந்திருக்கலாம். ஒரு சிறிய நெருடல் ஏற்பட அதுதானே வெளித் தோன்றுகிறது. இந்த கோபவிதைகள் அற்றவர்கள் எந்த ஒரு நிலைமையிலும், சந்தர்ப்பத்திலும் சிரித்த முகத்துடன் இருத்தல் சாத்தியமாகிறது.

இக்கோபத்தை வெற்றிகொள்வது எப்படி என்பதற்கு ஆத்மமய ராஜா என்னும் சிந்தனையாளர் ஒரு ஆலோசனை கூறுகிறார். அதன்படி எப்பொழுது ஒருவனுக்கு கோபம் வந்தாலும் தன் வாய் திறந்து ஒரு வார்த்தையும் பேசாமல், பேசுவதற்கு முன்னர் தனக்குள்ளேயே 'நான் நாளை கோபம்கொள்வேன்' என்று கூறிக்கொள்ள வேண்டும். காலம் கடத்துவதால் விரும்பத்தகாத பல செயல்களின் வேகமும் தீவிரமும் குறைந்து சிந்திப்பதற்கு ஒரு அரிய வாய்ப்பு கிடைக்கிறது. இக்கருத்தையே ஒத்துக்கொண்டு சுவாமி ஆத்மானந்தா மேற்கொண்டு கூறுகிறார் - ஒரு சந்தர்ப்பத்தை ஏற்று பின்பற்றுவதோ அல்லது அதை மாற்றியமைத்து புதியதொரு

சந்தர்ப்பத்தை அமைத்துக்கொள்வதற்கோ மனிதனிடம் பூரண அதிகாரம் உள்ளது. நம் அதீத தன்னுணர்வின் திறன் சொல்லினால் கூற இயலாது.

எதிர்மறையாக பேசுபவர்களும் தன்னையே நொந்துகொள்பவர்களும் பலர் எங்குமே காணப்படுகின்றனர். அவர்கள் அப்பாவி மனிதர்களை தங்களது கோபத்துக்கு இரையாக்கி சுயநலத்தை பேணுகின்றவர்களாய் எப்பொழுதும் குறைகூறிக்கொண்டிருப்பார்கள்.

எப்பொழுதும் குறைகூறுவதையே தொழிலாகக் கொண்டவர்கள் இடைவிடாது ஏதேனும் வேலை செய்கின்றவர்களாய் தாங்கள் சாதனையாளர்கள் என்று கூறிக்கொள்ள விருப்பம் கொண்டவர்களாய் பலவந்தமாக தாங்களே உயர்ந்தவர்கள் என காட்டிக்கொள்கின்றனர். மற்றவர்கள் தன்னைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதைப்பற்றி அவர்கள் சிறிதும் சிந்திப்பதில்லை. நீ மற்றவர்களிடம் எப்படி இருக்க எண்ணுகிறாய் - மகிழ்ச்சியுடன் இருப்பவராகவா, திறந்த மனதுடையவனாகவா, புதிய சிந்தனைகளை வரவேற்கின்றவனாகவா, எல்லோரும் தன்னை சுற்றி வர வேண்டுமென்ற நினைப்புடையவனாகவா, மனத்தூய்மை கொண்டவனாகவா, கோபம் கொண்டவனாகவா அல்லது தன்னை ஈர்க்கப்படாதவனாகவா'?

இங்கு மிகவும் குறிப்பிட்ட இன்றியமையாதது யாதெனில் கோபமடைந்தவனின் கசப்பான செயல்களிலிருந்து சிறிதும் பாதிக்கப்படாமல் வெளிவருவது எப்படி? இல்லையெனில் அவனுக்கும் உனக்கும் வித்தியாசம் ஏதும் இல்லமல் போய் நீயும் அந்த கோபக்கரனைப்போல் ஆகிவிடுவாய். நீயும் கோபத்துக்காளாகி வெறுப்படைவாய். நீ மற்றவர்களை மாற்றுவது என்பது இயலாத காரியம். ஆனால் உன்னை நீ சீர்திருத்திக்கொள்ளாலாம். மாற்றிக்கொள்ளலாம்.

அன்பு என்று ஒன்றுண்டு. சக்திவாய்ந்த மன உணர்வு. இது நீ கசப்பான கோபம் கொண்டவனிடம் இணைந்து செயல்படுகையில் அவர்களைக் கடந்து செய்ய இயலும். தொடக்கத்தில் இது மிகக் கடினமானதாகத் தோன்றும். ஆனால் எதிர்மறையாகப் பேசுபவர்களுக்கு இணையாக இல்லாமல் இருக்க வேண்டுமென்ற திடமான தீர்மானம் அத்தியாவசியமாகும்.

கோபமென்பது ஒரு சிந்தனை அலை. அதை நாம் உணர்ந்து அறிந்து பதிலளிக்கிறோம். இந்த பலவீன சிந்தனையை அடக்கினோமானால்

அல்லது மாற்றியமைத்தோமேயானால் அதன் பதிலும் அமைதியானதாக மாறி கோபக்கனலை மாற்றியமைக்கும்.

'நாம் நமது இதயத்தில் தோய்ந்திருக்கிறோம். இணையதளத்துக்குள் அல்ல. இது முக்கியமானது. எழுந்து வெளியே வா. இயற்கையை ஆராய்ந்து ஊடுருவிப்பார். மனித நேயத்தை இழந்து விடாதே.'

நமது மறைநூல்களில் கூறியுள்ளபடி கோபமென்பது தீயைப்போல் எல்லாவற்றையும் அழிக்கவல்லதாகும். நீ கோபமடையும் நேரம் உன் உடலிலுள்ள சில சுரப்பிகள் தூண்டப்படுகின்றன. நீ கோபமடைந்ததும் உன் உடலிலுள்ள அட்ரீனல் முதலிய நாளமில்லா சுரப்பிகளும் மற்ற இறுக்கவிசை கொண்ட சுரப்பிகளும் நீரைச் சுரந்திட அவைகளின் பாதிப்பினால் உடலுறுப்புகளில் சில மாறுதல்கள் ஏற்படுகின்றன.

கண்கள் சிவக்கின்றன, ரத்த அழுத்தம் அதிகமாகிறது, குரலின் ஒலி எழும்பி ஓங்குகிறது, சுவாச அழுத்தமும் வேகமடைகிறது, கை கால் தசைகள் இறுகிட, உன்னுடல் பதற்றமடைகிறது. .மொத்தத்தில் கோபம் இதய தமனிகளில் அடைப்பை ஏற்படுத்தி, உயிருக்கு ஆபத்தான பாரிசவாதம், புண்கள், அதிக ரத்த அழுத்தம் முதலிய நோய்களை பரப்புகிறது. அதனால் கோபத்தை அடக்குவதே மேலானதாகும். கோபம் உன்னை எரிப்பதற்குள் நீ கோபத்தை எரித்து விடு.

நீ அமைதியாகவும் மகிழ்ச்சியுடனும் இருக்கையில் உனது உடலில் ஜீரண சுரப்பிகள் சாதாரணமாக சுரக்கின்றன. ஆனால் நீ கோபமடையும் நேரம் இவையெல்லாம் குழப்பத்தை அடைகின்றன. அதனாலேயே உபநிஷத்களும், நம் மருத்துவர்களும் ஒருவன் மனமகிழ்ச்சியுடனும் நல்ல சூழ்நிலையிலும் உணவு உட்கொள்ள வேண்டும் எனக் கூறுகின்றன. 'ப்ரஸன்னமுகோ அன்னானி புஞ்ஜீத' - கோபத்துடனும் எரிச்சலுடனும் உணவு உண்பதை தவிர்க்க வேண்டும். கோபம் உடல் முழுவதையும் பாதிக்கிறது. அது நஞ்சாகிறது.

கோபத்தை கையாள மூன்றுவிதமான வழிகள் உள்ளன. முதலாவதாக வெளியில் எடுத்துக்காட்டுதல். மனநோய் மருத்துவர்கள் கோபத்தை வெளிப்படுத்துவது மிகவும் சிறந்த வழி, ஏனெனில் அதனால் உடனே உன் மனதில் உள்ளதை எடுத்துக்கூறி நிவாரணம் கிடைக்கிறது. அந்த நிவாரணம் தற்காலிகமானதே. சிலசமயம் மேலும்

மேலும் ஏறிட மீண்டும் கோபாவேசத்துக்கு ஆளாவாய். மெதுமெது வாக கோபம் என்பது பழக்கமானதாக ஆகி நீ அதற்கு அடிமையாகி விடுகிறாய். கோபம் உன்னை அடக்கத் துவங்கிவிடும். அது ஒரு கொடுமையான தலைவன். இரண்டாவதாக அதை அடக்குதலாகும். ஆனால் அது ஒரு சிறந்த வழியல்ல. ஏனெனில் அது ஆழ்மனதில் படிந்திருந்து மீண்டும் சேதத்தை விளைவிக்கும்.

அதனால் வெளிப்படுத்துதல், அடக்குதல் ஆகிய இரண்டுமே பரிந்துரைக்க ஏற்றதல்ல. இவை இரண்டுமே கோபத்தை வெல்வதற்கான வழி வகுப்பதல்ல. அதனால் மூன்றாம் வழியே அதாவது மன்னித்தல், பொறுத்தல், தாங்கிக்கொள்ளுதல் ஆகியவையே. அதுவே சிறந்த வழியாகும். மன்னித்து விடுபட்டிரு. ஒவ்வொரு நாளும் படுக்கப்போகும் முன்னர் அன்று நடந்தவைகளை ஒருமுறை நினைவில் கொண்டு பார். யாரேனும் உன்னை ஏமாற்றினார்களா? யாரேனும் உன் மனதை புண்படுத்தினார்களா? வேதனைப்பட வைத்தார்களா? உன்னிடம் மோசமாக நடந்து கொண்டார்களா? அவனை பெயரெடுத்து கூப்பிடு. 'உன்னை மன்னித்துவிட்டேன்' என்று கூறிவிட்டு மன அமைதியுடன் உறங்கச்செல்.

இச்சந்தர்ப்பத்தில் பரஷிய மன்னன் இரண்டாம் ப்ரெடரிக்கின் வாழ்க்கையில் நடந்ததொரு சம்பவத்தை எடுத்துரைத்தல் மிகவும் பொருத்தமானதாக இருக்கும். அவரிடம் வெள்ளியினாலான ஒரு மூக்குப்பொடி டப்பா ஒன்று இருந்தது. ஒருநாள் அவரது பணியாளன் ஒருவன் அந்த டப்பாவிலிருந்த பொடியில் சிறிது கையில் எடுத்துக்கொண்டான்.

இதைக் கண்ணுற்ற மன்னன் மிகவும் சாந்தமாக அப்பணியாளனைக் கண்டு 'உனக்கு இந்த மூக்குப்பொடி டப்பா மிகவும் பிடித்திருக்கிறதா?' என வினவினார். திருட்டுத்தனமாக செய்ததில் பிடிபட்ட அப்பணியாளன் மிகவும் செய்வதறியாமல் வாய் பேசாமல் மௌனமாக இருந்தான்.

மன்னன் மீண்டும் அவனைப்பார்த்து 'உனக்கு அந்த மூக்குப்பொடி டப்பா பிடித்திருக்கிறதா' என வினவினார். அவனும் அவரை ஏறிட்டு பாரத்தவண்ணம் 'ஆமாம் ஐயா! இது மிகவும் அழகான டப்பா இல்லையா?' என்றான்.

'சரி, போகட்டும், நீ இதை எடுத்துக்கொள். ஏனெனில் இச்சிறிய டப்பா; நம்மிருவருக்கும் போதுமானதல்ல' என்றார்.

இங்கு மற்றுமொரு பொருத்தமான சிறுகதை உள்ளது. அதையும் பார்ப்போமே. மிகவும் கோபக்கார பிக்ஷூ ஒருவர் இருந்தார். அவர் ஆசிரமத்தில் இருந்தார். ஆனால் ஆசிரமத்தில் அவரால் ஆசிரமவாசிகள் எல்லோருடனும் கூடி வாழ முடியவில்லை. அதனால் காட்டில் தனிமையில் வசிக்க நிச்சயித்தார். தன்னுடைய கோபத்தை அவ்வாறு வென்றுவிடலாம் என்று நினைத்தார். துவக்கத்தில் அவர் மனம் அமைதியில் ஆழ்ந்தது, தெளிவாகவும் இருந்தது. மிக மகிழ்ச்சியுடன் காலங்கழித்தார்.

ஒருநாள் அவர் அருகிலிருந்த ஒரு ஆற்றுக்கு ஒரு குடம் தண்ணீர் நிரப்பி எடுத்து வரச் சென்றார். அவர் நீரில் குடத்தை அமிழ்த்திட அது கவிழ்ந்தது. அவரும் மீண்டும் குடத்தை எடுத்து அதில் தண்ணீர் நிரப்பிட முயன்றார். மறுமுறையும் அது நீரில் கவிழ்ந்தது. இம்மாதிரி பலமுறை குடத்தை தண்ணீரில் இட அது கவிழ்ந்திட அவரும் பொறுமையை இழந்தார். குடத்தை பொடிப்பொடியாக உடைத்துவிட்டார். பிறகுதான், அது தனது குற்றமே அது என்பதை உணர்ந்தார். அவர் தனக்குள் உணர்ந்து கூறினார் - 'நான் என் கோபத்தை வென்றிடவே ஆசிரமத்தைவிட்டு வெளிவந்தேன். ஆனால் இக்காட்டுக்கு என் கோபமும் என்னைத் தொடர்ந்து வந்ததை நான் உணரவில்லை'.

ஒரு தனிநபரோ அல்லது ஒரு சூழ்நிலையோ கோபத்துக்குக் காரணமல்ல. நீ அதற்கு எவ்வாறு திரும்ப பதிலளிக்கிறாய் என்பதே நீ கோபமடைய காரணமாக அமைகிறது. அதனால் கோபத்தை வென்றிட வேண்டுமென்ற தீவிர அவாவை கொண்டிடு.

ஏதேனும் ஒரு குறை கண்டிடுவோமானால் நமக்கு முதலில் ஏற்படுவது கோபமே. இது பொதுவாக எல்லோரிடமும் இருக்கக்கூடிய தீவிர பிரச்னையாகும். ஒவ்வொருவரும் தாங்கள் கோபப்படுவது நியாயமே என்று நினைக்கின்றனர். விதிமுறைகளை கேட்பதும், ஆக்கப்பூர்வமான பணிகளில் ஈடுபடுதலும் இயற்கையாகவே மிகவும் எளிதானதே. ஆனால் சில சந்தர்ப்பங்களில் சிக்கல்களில் பதிலளிப்பதும், பதில் கொடுக்க போராடும் சந்தர்ப்பங்களிலும் விதிமுறைகளை மனதில் ஏற்பதோ ஆக்கபூர்வமான வழியில் முடிவெடுப்பதோ கடினமாகிறது.

பெரும்பாலும் நாம் எல்லோருமே எதிராளிதான் கோபத்தை தூண்டிவிடுகிறான் என நினைக்கிறோம். நாம் இவ்வாறு பதிலளித்து நம்மை சமாதானம் செய்துகொள்ள முயற்சிக்கிறோம் - நான்

ஒன்றும் சொல்வதற்கில்லை, எதிராளிதான் வேறுவழியின்றி இவ்வாறு செய்யும்படி செய்துவிட்டான். நாம் நம்மையே மிகவும் பகுத்தறிவாளர்களாக நினைத்துக்கொள்கிறோம், ஆனால் நம் சொல்லும் செயலும் நேர்மாறாக பகுத்தறிவற்றதாக உள்ளது.

நான் பதிலளிப்பதா அல்லது வாய்மூடி மௌனமாக இருப்பதா என்பதை தீர்மானம் செய்யும் அதிகாரம் என்னிடம் உள்ளது. இது எனது முன்னுரிமையாகும். ஆனால் அதை செய்து முடிப்பதுதான் மிகவும் கடினமானதாகும். வெற்றியின் இனிப்பான ருசியை விட்டு அகல்வது மிகவும் கடினமானதல்ல. ஆனால் நமக்கு ஏற்பட்ட காயம்பட்ட கௌரவத்தை தாங்கிக்கொள்வதென்பது மிகவும் கடினமானது. அதுவே நம் நண்பர்களிடையும், குடும்பத்தினரிடையும் சச்சரவையும் மனவேதனையையும் ஏற்படுத்தி, சில நேரங்களில் விவரிக்கவொண்ணா அசம்பாவித செயல்களிலும் ஈடுபடவைக்கிறது. இவையாவற்றையும் தவிர்க்க ரகசியமான யுக்தி நம் மனதில்தான் உள்ளது.

ஒருவன் கோபம் தீவிரம் அடையும் பொழுது தன்னைப் பற்றிய விவரங்களையும், மாற்றான் அறிய வேண்டுமென்பது மிகவும் முக்கியமானதே. ஒருவன் இரைந்து ஓலமிடுவதைக் குறைத்து காது கொடுத்து அதிகமாக கேட்க வேண்டும்.

பொதுவாக நாம் மதியிழந்து தகாத சொற்களை கூறியதைக் குறித்து பச்சாதாபப்படுவது யாவரும் அறிந்ததே. அனால் அதற்கு அதிக நேரம் எடுக்கிறது. சில நேரங்களில் மன்னிப்பு கோருவதற்கும் வாய்ப்பு கிட்டாமல் போய்விடுகிறது. நாம் கோபப்படும் நேரம் சிறிது அமைதி காத்து நம் ஆழ்மனதில் எழுவதை செவியுற்றோமே யானால், நாம் நம் மனம் புண்படுவதையும் நீக்கிடலாம், பல இதர அழிவை விளைவிக்கும் செயல்களிலிருந்தும் மீண்டுவிடலாம்.

கோபமின்மையையைப் பற்றி பேசுவதற்கு முன்னர் குல்லூக பட்டர் மனுஸ்மிருதியின் ஒரு செய்யுளில் கூறுகிறார். கோபம் ஏற்படுவதற்கான காரணங்கள் இருந்தும் கோபப்படாமலிருத்தலே கோபத்தை வெல்வதாகும் - 'க்ரோத ஹேதௌ ஸத்யபி க்ரோதானுபத்தி:' கோபம் சமுதாயத்தில் அமைதியுடனும் மக்கள் ஒன்றுகூடி வாழும் நோய் தடுக்கும். இது ஒரு மிகப்பெரிய இழிவான தடங்கலாகும். கோபத்தை எப்பொழுதும் காலியான வெற்றிடமே பின்தொடர்கிறது. கோபம் ஒருவனிடமுள்ள எல்லா நற்பண்புகளையும் அறவே நீக்கி அவனை வெற்று மனிதனாகச் செய்துவிடுகிறது.

சில நேரங்களில் கோபத்தை தன்னைக் காப்பாற்றிக்கொள்வதற்கு ஒரு கருவியாகக் கொள்கின்றனர். இதில் எள்ளளவும் உண்மையில்லை. கோபம் பைத்தியம் பிடிக்க வைக்கிறது. எந்த ஒரு நம்பிக்கையில் இது ஒருவனைக்காக்கும் என்றுரைப்பது. கோபப்பிடியில் ஒருவன் தன் பிடியை இழந்து மெதுமெதுவாக தன் நினைவாற்றலையே இழந்துவிடுகிறான். ஒருவன் தன்னையே இழந்துவிடும்படியான நிலைமையையும் அடையநேரிடுகிறது. தான் யார் என்பதையே மறந்தும்விடுகிறான். பண்பிழந்தவனாகவே மாறிவிடுகிறான்.

எடுத்துக்காட்டாக சாலையில் வழியில் கோபமேற்படுதல். அச்சமயம் சிந்திப்பதே நின்றுவிடுகிறது. ஒருவன் தன் பைத்தியக் காரத்தனமான காரியங்களின் விளைவுகளை சிந்திப்பதே இல்லை. தனது உணர்ச்சி ஆவேசங்களை உணர்ந்து வசப்படுத்தினால் தான் அப்படிப்பட்ட சிக்கலான நொடிகளிலிருந்து நல்லபடியாக வெளிவர இயலும். இவை எல்லாவற்றையும் பேசுவது எளிது. ஆனால் செயல் படுத்துவது எளிதல்ல. இதைக் கடைப்பிடிக்க தீவிர ஆசையும் மனோபலமும் கொண்டால் கடினமானதாக இருக்குமே தவிர இயலாததல்ல.

### மேற்கோள்கள்


1. *Ramayana V 55.4-5*
2. *Harsacarita p.14*
3. *Hingula prakarana 7.3*
4. *Brhannaradiya purana 32-33*
5. *Yoga Sastra 4.9*
6. *Canakya Sutrani 148*
7. *Nitikalpatarun 7.20*
8. *Harivamsa Purana 61.63*
9. *1.33*
10. *harsacarita (p.14)*
11. *Mahabharata Adiparvan 87.7*
12. *ibid 79.6*
13. *ibid 79.5*
14. *Harililakalpataru 4.10.33*
15. *Yoga-Sastra 4.10*
16. *Anandavrndavana campu 15.140*
17. *Navasahasankacarita 10.46*
18. *Valmiki Ramayana 5.55.3*
19. *7.48*
20. *Translation by G.Buhler. 4 The sacred books of the East Vol.25*

# 13

## தூரதர்சிதா

## தொலைநோக்குப் பார்வை

ஒருவன் தான் பணி மேற்கொள்கையில் அதனால் உடனே கிடைக்கும் பலனை மாத்திரம் தன் கருத்தில் கொள்ளாமல் பல நாட்களுக்குப் பிறகும் அது நல்லப் பயனை பயப்பதாக இருக்க வேண்டும் என்பதை கருத்தில் கொள்ளவேண்டும் என்பதை நம் பழம் பெரும் மறை நூல்கள் மீண்டும் மீண்டும் அழுத்தமாகவும் ஆழமாகவும் வற்புறுத்திக் கூறுகின்றன.

நீண்ட காலத்துக்கு பாருங்கள் - 'தீர்கம் பஸ்யத'. குறுகிய காலத்துக்கல்ல - 'மா ஹ்ரஸ்வம்.' ஒரு திட்டத்தை செயல்படுத்தும் நேரம் அதன் பலன் பல நாட்ளுக்குப் பிறகும் பயன் தருபவைகளாக இருக்க வேண்டும். பின்னால் ஏற்படும் தடங்கலுக்கு, அச்சமயம் பார்த்துக்கொள்ளலாமே என்றில்லாமல் முன் கூட்டியே ஆராய்ந்து செயல்படுதல் வேண்டும். தான் நன்றாக வாழ்ந்துகொண்டிருக்கும் நேரமே வருங்காலத்தையும் நினைத்து ஆராய்ந்து அதற்கு தேவையானவைகளை இப்பொழுதே செய்தல் நன்று என்று ராமாயணம் கூறுகிறது - 'அநாகதவிதானம் து கர்தவ்யம் சுபமிச்சதா'"[1]

இதையே மகாபாரதமும் எடுத்துக்கூறுகிறது -

> அநாகதவிதாதா ச ப்ரத்யுத்பன்னமதிஸ்ச ய:
> த்வௌ இமௌ சுகம் ஈததே தீர்கசூத்ரீ வினஸ்யதி ||"[2]

வருங்காலத்துக்கு சேர்த்துவைப்பவனும், செய்யவேண்டியவைகளை உடன் அறிந்து செய்பவனும் வாழ்க்கையில் சுகமாக வாழ்கின்றனர். பணிகளை ஒத்திப்போடுபவன் பயனற்றவனாகிறான்.

தந்த்ரோபாக்கியானமும் இதையே கடைசி அடியை சிறிது மாற்றி யமைத்து கூறுகிறது. 'யத்பவிஷ்யோ வினஸ்யதி'*3 – வருங்காலத்தில் நடப்பவைகளை அப்பொழுது பார்த்துக்கொள்ளலாம் என்பவன் ஒன்றையும் அறிவதில்லை.

இதை மகாபாரதத்தில் பீஷ்மர் ஒரு சிறுகதை மூலம் எடுத்துரைக்கிறார். குளம் ஒன்றில் மேற்கூறிய குணங்களைக் கொண்ட அதாவது நிகழ்ச்சி நிகழ்வதற்கு முன்னரே உபாயம் தேடுதல், நிகழ்ச்சி நேரிடுகையில் உபாயம் தேடுதல், மூன்றாம் வகையிலோ ஒன்றுமே சிறிக்காமல் நடப்பது நடக்கட்டும் என்று செயலொன்றுமின்றி இருத்தல் என்ற மூன்றுவகை மீன்கள் வாழ்ந்துவந்தன.

ஒரு சமயம் மீன் பிடிப்பவர்கள் அக்குளத்திலுள்ள எல்லா மீன்களையும் பிடித்திட தீர்மானித்து குளத்தை நீரின்றி காலி செய்திட நிச்சயித்தனர். இதில் வரும் முன் காக்கும் குணமுடையவைகள் இப்பொழுதே இக்குளத்தை விட்டு நீங்கி வேறு குளத்துக்குச் செல்வதே சிறந்தது என்று நினைத்தன. இரண்டாவது குணமுடையவைகள் அவ்வாறு செய்யவில்லை. நாம் இங்கேயே தங்கியிருப்போம். அப்படி ஏதாவது நடக்கக்கூடாத நிகழ்ச்சி நடந்திடின் அது சமயம் என்ன செய்வதென தீர்மானிப்போமே என்று பேசாமல் எதுவும் செய்யாமல் இருந்துவிட்டன. மூன்றாம் வகையைச் சார்ந்தவைகளோ எதுவும் செய்யாமல் அப்படியே இருந்துவிட்டன.

முதல் வகையைச் சார்ந்த மீன்களோ இக்குளத்தில் போதிய அளவு நீர் இருக்கையிலேயே வேறொரு குளத்திற்கு சென்றுவிட்டன. இரண்டாம் வகையைச் சார்ந்தவைகளோ மீன் பிடிப்பவர்கள் வந்து நீரை முழுவதும் வெளியில் இறைத்துவிட்டு மீன்களையெல்லாம் வலையினில் எடுத்துச்சேர்க்கும் வரை அங்கேயே அப்படியே இருந்தன. ஆனால் வலைக்குள் சிக்கிடாமல் வெளியிலேயே தொங்கி கொண்டே சென்றன. மீன்களை கழுவுவதற்கு முற்பட்டபொழுது தப்பித்துச் சென்றன. மூன்றாம் வகையைச் சேர்ந்தவைகளோ வேறு ஒரு வழியுமின்றி வலையில் மாட்டிக்கொண்டு பிடிபட்டு அழிந்தன.

முன்னோக்குதல் - தொலைநோக்கு என்பது ஒரு குறிப்பிட்ட சிறப்பான குணமாகும். பெரும்பாலும் அது பிறவிக்குணமாக அமைகிறது. பெரிய முனிவர்களும் முன்னோக்காளர்களும் இக்குணத்தைக் கொண்டுள்ளனர். அவர்கள் வெறும் நிகழ்காலத்தைபற்றி மாத்திரம் சிந்திப்பதில்லை. இனி வரவிருக்கும் நிகழ்ச்சிகளையும் மனதிற்கொண்டு செயல்படுகின்றனர்.

ராமர் காட்டில் தனது குடிலில் இருந்தபோது, பதிநாலாயிரம் அரக்கர்களுடன் வந்து கரன் போரிட்டான். அப்போது சீதையை யாரும் நெருங்குவதற்கு அரிதான, சுற்றி அடர்ந்த மரங்களினால் சூழ்ந்த ஒரு மலைக்குகைக்குள் பாதுகாப்பாக இருக்கச் செய்யுமாறு இலக்குவனிடம் ராமன் கூறுகிறார். சிக்கல்கள் நேர்ந்துவிடுமோ என்ற ஐயம் ஏற்பட்டால், விவேகமுள்ளவன், இனி நடக்கவிருக்கும் நிகழ்ச்சிகளை ஆராய்வான். அதிலிருந்து தன்னையும், தன்னைச் சார்ந்தவர்களையும் பாதுகாத்துக்கொள்ள வழிமுறைகளை கையாள வேண்டியது இன்றியமையாததாகும்.

அநாகதவிதானம் து கர்தவ்யம் ஸுபமிச்சதா |
ஆபதம் ஸங்கமானேன புருஷேண விபஸ்சிதா ||

ராமரோ நொடிப்பொழுதில், தன்னையும் இலக்குவனையும் அரக்கர்கள் போரில் முனைந்திருக்கச் செய்து சீதை தனியாக இருக்கும் நேரம்அவளுக்குக் கெடுதலோ அல்லது கவர்ந்தும் செல்வ தற்கான வாய்ப்பு இருப்பதை உணர்ந்தார். அக்காரணத்தினாலேயே, இம்மாதிரியான சிக்கல்களை எதிர்ப்பார்த்தே இலக்குவன், சில ராமாயண பதிப்புகளில், மாரீசனை ராமர் துரத்திச் சென்றபொழுது எழுந்த ராமனின் போலிக்குரலை அனுசரித்து குடிலுக்கு வெளியே ஒரு கோடிட்டு சீதை அதைத் தாண்டி வெளியே வரக்கூடாதென்ற ஆணையும் பிறப்பித்த பின்னரே லக்ஷ்மணன் தன் மூத்த சகோதரன் ராமனைக் காக்கச் சென்றார் என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் பாவம் சீதையோ ஒரு துறவியின் சினத்துக்கு ஆளாக விரும்பாதவளாய் அக்கோட்டினை தாண்டி தனக்கும் தன் கணவனுக்கும் சொல்லொண்ணா துயரங்களுக்கு ஆளாக வேண்டிய நிலைமையை ஏற்படுத்திவிட்டாள்.

பண்டை காலத்தில் சந்திரகுப்த மௌரியன் முன்னோக்காளனாய் இருந்ததால் தனது பரம விரோதியும், நந்தவம்சத்தவர்களுடன் இணைந்திருந்தவனுமான கிரேக்க தளபதியாயிருந்த செலூகசின் மகளை மணந்துகொண்டு திருமணத்தினால் தனது நட்பை வலுப்படுத்திகொண்டான். இதே முறையை பின்பற்றியே மத்திய காலத்தில் அரசாண்ட முகமதிய சக்ரவர்த்திகள் இந்திய ராஜபூத் பெண்களை மணம் செய்துகொண்டு தங்களுடைய விசுவாசத்தையும் போற்றி வளர்த்துக்கொண்டு பெண் மூலம் ராஜ்ஜியத்தையும் அடைந்து, அமைதியையும் காத்தனர்.

தற்காலத்தில் பண்டிட் ஜவாஹர்லால் நேரு அவரது முன்னோக்கும் திறத்தினால் இன்றைய தொழில்மயமான பாரதத்துக்கு

வித்திட்டவரானார். உள்நாட்டு பூசல்கள் இருந்தும் அணிசேரா நாடு என்ற அவரது மந்திரமானது இந்தியாவை தொழில்துறையில் மேலும் மேலும் வளரச் செய்தது. பிரம்மாண்டமான இரும்பு தொழிற்சாலைகளையும், மின்வளத்தைப் பெருக்கவும் அவர் மேற்கொண்ட நதிகளில் பெரிய அணை கட்டும் திட்டங்களும் மிகவும் போற்றத்தக்கதாகும்.

இன்று வர்த்தகமும் பொருளாதாரமும் பெருமளவில் பெருகி வளர்ந்திருப்பதற்கு அன்றைய முன்னோக்காளரான அவருக்கு இந்தியா மிகவும் கடமைப்பட்டிருக்கிறது. அதுபோலவே சர்தார் வல்லபாய் பட்டேல் பெரிய முன்னோக்காளராக, பிறிதொரு துறையில் விளங்கினார். நேருவின் சமகாலத்தவரான பட்டேல் ஐந்நூறு சுதேச தனியரசு மாகாணங்களை ஒன்றிய பாரதத்துடன் இணைத்தது ஒரு சவாலாகும். அவர் அதற்கு மூன்று தேர்ந்தெடுக்கும் உரிமைகள் அளித்தார். பிரிட்டிஷ்காரர்களிடம் சேர்வடைதல், முறைப்படி தானே இந்தியாவுடனோ அல்லது பாகிஸ்தானுடனோ சேருதல், தனித்திருத்தல் ஆகும்.

இரண்டாவது அல்லது மூன்றாவது சலுகையை ஏற்றுக்கொண்டிருந்தால் வளர்ச்சி அடைந்துகொண்டிருக்கிற இந்திய மாநிலங்களுக்கு மிகப்பெரிய தொல்லையாய் இருந்திருக்கும். ஜூனகட் என்னும் சுதேச மாகாணம் இரண்டாவது விருப்பத்தையும் ஹைதராபாத் மூன்றாவது விருப்பத்தையும் ஏற்றுக்கொண்டன. அவைகள் மத்திய யூனியனுடன் திருத்தி இணைக்கப்பட்டன.

மதச்சார்பின்மை கொள்கை, அதாவது மக்களை மதம் மூலமாகவோ சாதி மூலமாகவோ வேறுபடுத்தி பார்க்காதிருத்தல் - வலுக்கட்டாய மாக ஏற்படுத்தியது, நேருவின் முன்னோக்கும் திறனின் நினைவுச் சின்னமாக நிற்கிறது. அம்மகான் முன்னோக்காளர் இம்மாதிரியான விதியை அமைத்தார். அதை அனுசரிக்காமல் இருந்திருந்தால் பல மதங்களும் சாதிகளும் நிறைந்த பாரதம் சின்னாபின்னமாகி பல பிரிவுகளாக பிரிந்திருக்கும். அது ஒரு கற்பனைக்கு அப்பாற்பட்ட சோகமாக இருந்திருக்கும்.

முன்னோக்கு என்பது ஒருவருடைய பற்றையும் ஒருவரது உத்வேக மான துடிப்பையும் ஏற்று செயல்படுவதாகும். அது எதிராளியின் நட்பையும், நல்லியல்பையும் மாத்திரம் கருத்தில் கொள்ளாமல் குறிக்கோள்களையும் நோக்கத்தையும் ஆதரித்தல் சிறந்தது. ஏனெனில் சில நேரங்களில் பின்னர் மனம் மாறி நாமெடுத்த

முடிவை கலைக்கவும் கூடும். குறிப்பிட்ட நேரத்தில் அவர்களது முடிவும் குறிக்கோளும் ஒப்பதாக இருந்திடலாம். ஆனால் காலம் செல்லச்செல்ல மனம் மாறி சிறிதுசிறிதாக எதிர்மாதிரியான செயல்களில் ஈடுபடலாமன்றோ.

இதையே பழம் பெரும் கூற்றான 'விஸ்வஸ்தேபி ந விஸ்வஸேத்' என்று நம்பிக்கைக்கு பாத்திரமானவர்களையும் எப்பொழுதும் நம்பிவிடக்கூடாது. முன்னோக்காளர்கள் தங்களது பார்வையை மிகமிக உன்னதமானதாக உயர்ந்த நிலையில் வைத்துக்கொள்ள வேண்டும். ஏனெனில் அதுவே அவர்களுக்கு வாழ்க்கையில் வெற்றியடையச் செய்யும் திறவுகோலாகும்.

முன்னோக்கு என்னும் இக்குணம் ஒவ்வொரு திட்டமிடுவோர்க்கும், கட்டட நிர்மாணத்திலும், சிற்பிகளிடமும் முக்கியமாக இருக்க வேண்டிய குணமாகும். சாலைகளை அமைக்கும்பொழுது அந்நாட்களில் இருக்கும் போக்குவரத்தை மனதில் வைத்து அமைக்காமல் ஐந்து அல்லது பத்து ஆண்டுகளுக்குப் பிறகு பயன்படும்படியாக அமைத்திடுதல் வேண்டும். இதைப்போலவே பாலங்கள், விமானநிலையங்கள், பொதுமக்களின் வசதிக்காக செய்யப்படும் சாதனங்கள் யாவற்றிற்கும் இது பொருந்துவதாகும்.

இவ்வரிகளை எழுதும் ஆசிரியர் பூரியிலுள்ள ஜகந்நாத் சமஸ்கிருத பல்கலைக் கழகம் துவங்கியபொழுது அங்கிருந்தார். அப்பல்கலைக் கழகத்தின் கட்டிடம் அமைக்கும் திட்டம் அப்பொழுதுதான் அமைந்துகொண்டிருந்தது. அச்சமயம் அவரது ஜெர்மானிய நண்பர் ஒருவர் தன் மனைவியுடன் வந்திருந்தவர் சில நாட்களுக்கு அவரது வீட்டில் தங்கியிருந்தார்.ஒரு நாள் அவருக்கும் அவரது மனைவிக்கும் பல்கலைக்கழக கட்டிட திட்டத்துக்கான வரைபடத்தை காண்பித்தார்.

அவர் ஒவ்வொரு இடத்தையும் வரைபடத்தில் காட்டி விளக்கிக் கொண்டிருந்த நேரம் ஜெர்மனியிலுள்ள ஸ்டர்ட்காட்டிலுள்ள அரசாங்க புத்தகாலயத்தில் முக்கிய நூலகராக பணியாற்றிக்கொண்டிருந்த அந்த ஜெர்மானிய நண்பரின் மனைவி அவ்வரைபடத்தை வாங்கி நன்கு பார்த்து ஆலோசனை செய்து 'இந்நூலகம் இவ்வாறு அமைத்தால் 50,000 முதல் 75,000 வரையிலான புத்தகங்களைத்தான் இதில் வைக்க இயலும். இது ஒரு பல்கலைக் கழகத்துக்கு தேவையான நூல்களை வைத்திட போதுமானதல்ல. மேலும் பல்கலைக் கழகம் நாளுக்கு நாள்

வளர்ந்து வரும் அல்லவா! அதற்குத் தேவையான அமைப்பை இப்பொழுதே திட்டத்தில் அமைத்திடல் வேண்டும்' என்று கூறினாள்.

மறுநாளோ முதலமைச்சர் பல்கலைக்கழக திட்டம் குறித்த ஆலோசனை கூட்டத்தை நிறுவியிருந்தார். இவ்வாசிரியர் அக் கூட்டத்தில் இப்பிரச்சினையை எழுப்பினார். அத்திட்டத்தை பற்றி விவரித்தபொழுது அது கட்டிடக் கலைஞரினால் அமைக்கப்பட்டது என்பதை அறிந்த முதலமைச்சர் மிக வெகுண்டு திட்டத்தை தூக்கியெறிந்துவிட்டு அதை மறுபரிசீலனை செய்து நூலகத்தில் குறைந்தபட்சம் ஐந்து லட்சம் நூல்களாவது வைப்பதற்கான வசதி இருக்க வேண்டுமென கூறினார். அது உண்மையிலேயே சிறந்த முன்னோக்காகும்.

மேற்கோள்கள்

1. *3.24.11*
2. *1.37.1*
3 *Ramayana 3.24.11*

# 14

## த்ருடஸங்கல்ப

## உறுதியான முடிவெடுத்தல்

எந்தவிதமான குறிக்கோளை அடைவதற்கும் உறுதியான முடிவெடுத்தல் இன்றியமையாததாகும். ஒருவன் ஒன்றைச் செய்வதாக முடிவெடுத்துவிட்டால் அதை அகற்றுவதோ அல்லது திருப்பி மாற்றி அமைப்பதோ முற்றிலும் இயலாததாகும். காளிதாசன் நன்கு வெளிப்படையாகவே பார்வதியின் தாயான மேனா பார்வதியின் மனதை மாற்ற முனைந்த சந்தர்ப்பத்தில் எடுத்துரைக்கிறார். பார்வதி சிவனை தன் கணவனாக அடைய அவரை மணம் செய்துகொள்ள தீர்மானித்து அதற்காக தவம் மேற்கொள்ள நிச்சயித்துவிட்டாள். 'க்வ ஈப்ஸிதார்தஸ்திரனிஸ்சயம் மன: பயஸ்ச நிம்னாபிமுகம் ப்ரதீபயேத்'*1 - ஒரு பொருளை அடைய தீர்மானித்த மனதையும் கீழ்நோக்கி ஓடும் நீரையும் எவரால் மாற்றி அமைக்க இயலும்.

இதற்கு திடமான மனது வேண்டும். மனது அலைபாயக்கூடாது. ஒரு முடிவை ஏற்றுவிட்டால் எக்காரணம் கொண்டும் பின்னர் அதிலிருந்து பின்வாங்குதல் கூடாது. இதற்கு மிகவும் சிறந்த எடுத்துக்காட்டை நமது பழம்பெரும் நூலில் நசிகேதன் என்னும் சிறு பாலகனின் கதை விளக்குகிறது. அச்சிறுவனுக்கு பலவிதமான மனதைக் கவரும் பொருட்களைக் கொடுப்பதாக ஆசைகாட்டுகிறான் காலன். நூற்று ஆண்டுகள் நீண்ட ஆயுட்காலமும், நல்ல மகன்களும் மகள்களும், பேரக்குழந்தைகள், பல மிருகங்கள், தங்கம், குதிரைகள், அழகான தேவகன்னிகைகள், ஆடல், பாடல் என பலவற்றை ஆசைகாட்டி அவன் கேட்கும் கேள்வியிலிருந்து மனதை மாற்ற காலன் கடும் முயற்சி மேற்கொள்கிறான்.

ஆனால் அச்சிறுவனோ, இறந்தபிறகு ஒருவன் இருக்கிறானா இல்லையா என்ற கேள்விக்கு பதில் வேண்டும் என்பதில் உறுதியாக

இருந்தான். நசிகேதஸோ அவர் காட்டிய எல்லா பொருட்களையும் சிறிதும் பொருட்படுத்தவில்லை. இந்த வண்டிகள் ஆட்டம் பாட்டம் என்ற இவை யாவற்றையும் நீயே வைத்துக்கொள். 'தவைவ வாஹாஸ்தவ ந்ருத்யகீதே'*2 இந்தக்கேள்விக்கு விடை கிடைக்காமல் எதையும் நான் ஏற்க தயாராக இல்லை. 'நான்யம் தஸ்மான் நசிகேதா வ்ருணீதே'*3 - நசிகேதஸ் வேறு எந்த வரனும் கேட்கமாட்டான். வேறு வழியின்றி காலனுக்கு அவனது கோரிக்கையை நிறைவேற்ற வேண்டியதாயிற்று. அவனும் சிறுவனுக்கு 'ஆத்மா அழிவற்றது. இவ்வுடல் அழிந்த பிறகும் அது தொடர்ந்து இருக்கக்கூடியது.' என்று பல ஆயிரக்கணக்கானவர்களின் கேள்விக்கும் பதில் கிடைக்கக் காரணமாகச் செய்தான்.

சாவித்திரியும் அவ்வாறே விடாமுயற்சியுடன் யமனை விடாமல் பின்தொடர்ந்து சென்று பிரார்த்தித்து பலவிதமான வரங்களை ஒன்றன்பின் ஒன்றாகப் பெற்றாள். அவ்வாறு காலனது வரங்களாகிற சிலந்திக் கூட்டிற்குள் அவனைச் சிக்கவைத்து பலவந்தமாக உயிரிழந்த தன் கணவனது உயிரை மீண்டும் பெறச்செய்து வெற்றிகண்டாள்.

பெரிய பெரிய படைப்பாளர்களும், ஆராய்ச்சியாளர்களும்கூட தங்களுடைய படைப்புகளில் வெற்றிகாண எவ்வளவு பிரச்னை களையும் இன்னல்களையும் எதிர்கொள்ளவேண்டி இருந்தாலும் அவைகளை சிறிதும் பொருட்படுத்தாமல் எடுத்த பணியை வெற்றி யுடன் முடிப்பதில் குறியாக இருந்தனர். மத்தியில் விட்டுவிடவில்லை. அந்த விடாமுயற்சியே அவர்களுக்கு இறுதியில் வெற்றியை அளித்தது.

வனவிலங்குகளுக்கான ஆராய்ச்சி மேற்கொண்டவர்களும், கடலில் தொல்பொருளாராய்ச்சிகள் பல மேற்கொண்டவர்களும், காட்டிலும் அடர்ந்த புதர்களிலும் அலைந்து திரிந்து பல மூலிகைகளையும் பலவிதமான செடிகொடிகளைப் பற்றியும் ஆராய்ச்சி செய்தவர்களும் பல சிக்கல்ளையும் உயிருக்கு ஆபத்தான சிலகஷ்டங்களையும் பெரிதாக நினைக்காமல் உறுதியான மனத்துடன் எடுத்தப் பணியை முடியும் வரை முழு முயற்சியுடன் செய்திடும் திடமான தீர்மானத்துடனும் செய்ததால்தான் தாங்கள் எடுத்துக்கொண்ட பணியில் வெற்றிகண்டனர்.

இப்படிப்பட்ட உறுதியான தீர்மானமும், விடாமுயற்சியும் தான் மாலுமிகளுக்கும், புதிய புதிய இடங்களில் புதிதாக குடியேறியவர் களுக்கும் பொருந்தும். முற்றிலும் புதிய காலியான இடமாக

இல்லாவிடினும் அங்குள்ள பழங்குடி மக்களைக்கண்டு அவர்களது எதிர்ப்புகளை நன்கு சமாளித்து குடியேறி வாழ்ந்தவர்களுக்கும் மன உறுதியும், திடமான தீர்மானமுமே முக்கியமாக அமைந்தன.

இந்தியாவின் பல புதிய படைப்புகளில், கல்வியில் சிறந்த மேதாவி கள் சில வெற்றிகரமான கடினமான செயல்களை அழகாகவும் நேர்த்தியாகவும் தனது உறுதியான தீர்மானத்தினாலும், திடமன தினாலும் வெற்றியுடன் அடைந்தவர்களைப் பற்றி எடுத்துக் கூறுகின்றனர். ஏகலவ்யன், ஒரு வேடுவன். ஆனால் ஒரு ஒப்பற்ற வில்லாளியாக ஆனான். களிமண்ணினால் செய்யப்பட்ட துரோண ரின் சிலையை தன்னெதிரில் வைத்துக்கொண்டு வில்வித்தையைப் பயின்றான். அவரது சிலையை எதிரில் வைத்துக்கொண்டதே அவனுக்கு ஆன்மீக பலம் அளித்தது.ஆனாலும் தான் வில்வித்தையில் முழு தேர்ச்சி பெற வேண்டுமென்ற பேரவா அவனுடையதே. அவன்தான் குரு என்று மனதில் ஏற்றவரிடம் ஒருமுறைகூடச் சென்று பயிற்சி பெறவில்லை. பேரவாவும் அவனது விடாமுயற்சியும் அவனை ஒப்பற்ற மேலான வில்லாளியாக அதுவும் துரோணரது கைதேர்ந்த வில்லாளி சீடன் அர்ஜுனனே கண்டு வியப்படும் அளவிற்கு அவனையும்விட மேலான வில்லாளியாக்கிவிட்டது.

அடுத்ததாக கணிதமேதையும், விண்வெளி ஆராய்ச்சியாளருமான பாஸ்கராச்சாரியரின் மகள் லீலாவதியைப் பற்றியதாகும். சிறு வயதிலேயே மணம் செய்துகொண்ட அவள் சிறிவயதாய் இருக்கும் பொழுதே தன் கணவனை இழந்து சொல்லொண்ணா துயரத்திற்கு ஆளானாள். மனமுடைந்த அவள் நாள் முழுவதும் அழுதுகொண்டே தன் வாழ்நாட்களை கழிக்கத் துவங்கினாள். இதைக் கேள்வியுற்ற அவளது தந்தை பாஸ்கராசாரியர் அவளை புகுந்த வீட்டிலிருந்து பிறந்த வீட்டிற்கு அழைத்து வந்தார். அங்கும் சோகத்தில் ஆழ்ந்தவளாகவே காலங்கழித்தாள்.

ஒருநாள் பாஸ்கராச்சாரியார் அவளைக்கண்டு இவ்வாறு இருப்பது வாழ்க்கையை வீணடிப்பதேயாகும். உனக்கு ஒரு மாறுதல் தேவை. அதனால் நீ கணிதம் கற்றுக்கொள் என்றுகூறி அவரே அவளுக்கு கணித பாடங்களை கற்பித்தார். நாட்கள் கடந்திட அவளுக்கு கணிதத்தில் ஆர்வம் மிகுந்தது. கணிதத்தில் பல சிக்கலான கேள்வி களுக்கு அவளே தீர்வு கண்டாள். தனது தந்தையாரின் ஆராய்ச்சி களில் அவருக்கு உறுதுணையாய் உதவினாள். அவளுடைய ஆர்வத்தையும் திறமையையும் கண்டு வியந்த அவர் தனது ஆராய்ச்சிகளுக்கு அவளது பெயரை இட்டார். பழைய காலத்தில்

லீலாவதி என்னும் கணித நூல் மிகவும் பிரபலமானதாகும். இது அவளுடைய மன உறுதியையும் விடாமுயற்சியையுமே எடுத்துக் காட்டுகிறது. அது அவளை அமரராக்கிவிட்டது.

சாதாரணமான ஒருவன் சாதாரணமான ஒன்றை செய்துமுடித்தாலும் அதிலும் மன உறுதி இருக்கிறதென்பது குறிப்பிடத்தகுந்தது. இங்கு இவ்வாசிரியரின் வாழ்க்கையில் நடந்தவைகளைக் குறிப்பிடுதல் பொருத்தமற்றதாகவும் தனி ஒருவரின் சொந்த குறிப்புகளை குறிப்பிடுவதாக இருந்தபோதிலும் தன்னுடைய வாழ்க்கையில் சிறு வயதில் நடந்த சிலவற்றைக் குறிப்பிட விரும்புகிறார்.

அவர் 'சாஸ்திரி' தேர்வில் வெற்றிபெற்று முடிக்கும்வரை ஆங்கில மொழியை அறியவில்லை. அம்மொழியின் அகரவரிசையைக்கூட அறிந்தாரில்லை. ஆனால் லாகூரிலிருந்த ஓரியண்டல் கல்லூரியிலிருந்து நேராக அவர் டி.ஏ.வி. பள்ளியில் ஒன்பதாம் வகுப்பில் சேர்ந்துவிட்டார். பிறகே அவர் ஆங்கிலம் கற்றுக்கொள்ள துவங்கியவர். தன் உறுதியினாலும் கடும் முயற்சியினாலும் பதினாறு மாதங்களுக்குள் ஆங்கிலத்தைத் தெளிவாகக் கற்று மெட்ரிகுலேஷன் தேர்வில் நன்கு எழுதி வெற்றிபெற்று அரசாங்கத்தின் உபகாரச் சலுகையையும் பெற்றார். இதே திடமான தீர்மானத்துடன் வாராணசியில் அறிந்துகொள்வதற்கு மிகவும் கடினமான இலக்கண நூலையும் கற்றுத்தேர்ந்தார்.

சில இடங்களில் மன உறுதியும் திடமும் உயர்ந்த அறிவாற்றல் கொண்டவர்களையும் வென்று மேல் நோக்கிவர வழிவகுத்திடும். இக்கருத்தை நோக்குகையில் போபதேவரின் சரித்திரம் மிகவும் பொருத்தமானதாக உள்ளது. அவர் அறிவாற்றலில் மிகச்சிறந்தவர் அல்ல. அவரது ஆசிரியர் அவருக்கு பாடங்களை பல முறை எடுத்து ஓதிடுவார். அவரது கிரகிப்புத்தன்மையும் பொதுவாக குறைவாகவே இருந்தது. ஒருநாள் அவர் குருகுலத்தைவிட்டு வெளியே சென்றார். அப்பொழுது பெண்கள் சிலர் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுப்பதைக் கண்டார். அவர்கள் அருகிலிருந்த சிறு குழிக்குள் தங்களது குடங்களை வைத்திருப்பதைக் கண்டார். அந்தக்குழிகள் எப்படி ஏற்பட்டன என்று அவர்களை வினவ அப்பெண்களோ மீண்டும் மீண்டும் அந்த ஒரே இடத்தில் குடத்தை வைப்பதால் குழிகள் ஏற்பட்டன என்பதை எடுத்துரைத்தனர்.

'ஜடமான மண்ணே மீண்டும் மீண்டும் தேய்க்கப்படுவதால் குழி ஏற்படுமாகில் உயிருள்ள என்னுள் இப்பாடங்கள் நுழையாதா' என்று

தனக்குள்ளேயே மீண்டும் மீண்டும் கேள்வியை எழுப்பி ஆராய்ந்தார். உடனேயே திரும்பி தன் குருகுலம் சென்று தன் ஆசிரியர் கூறுவதையெல்லாம் மனதில் நன்கு இருத்திட திடமாக நிச்சயித்து கடும் முயற்சியும் மேற்கொண்டார். இதில் அவருக்கு நல்ல பலன் கிடைத்து அவரது காலத்தில் பின்னர் ஒரு பெரிய இலக்கண மேதையாக பிரகாசித்தார்.

திடமான மன உறுதிக்கு எவ்வளவு சக்தி உள்ளது என்பதை ஒரு சிறு நிகழ்ச்சிக் கதை மூலம் இங்கு காணலாம். பெரிய மாமன்னன் ஒருவன் இருந்தான். அவனுக்கு சந்ததி இல்லை. அதனால் தனக்குப் பிறகு இந்த ராஜ்ஜியத்தை ஏற்று பரிபாலிக்க ஒருவரும் இல்லையே என்ற கவலை அவனை மிகவும் வாட்டியது. அவனுடைய அமைச்சரோ ராஜகுருவை பார்த்து இது பற்றி ஆலோசனை செய்து மன்னனுக்குப் பிறகு அரசை நிர்வகிக்க ஒருவரை நியமிக்கும்படி வேண்டிகொள்ளுங்கள் என்று கூறினான்.

ராஜகுருவோ அரசனை மிகப்பரந்த மைதானமொன்றில் ஒரு கண்காட்சி சாலை அமைக்கும்படி கூறினார். அதில் அரசனும் மாறுவேஷத்தில் தன்னை ஒருவரும் அறியாத வண்ணம் மறைந்திருக்க வேண்டுமென்றும் கூறினார்.அவ்வாறே மன்னனும் ஒரு பெரிய அழகான கண்காட்சி சாலை ஒன்றை அமைத்தான். அதில் பல வகை அழகான அதிசயமான பொருட்கள் நிறைந்த கடைகளும் இருந்தன. கண்காட்சி திறந்த மூன்று மணி நேரத்திற்குள் வருபவர்கள் தங்களுக்கு பிடித்த பொருட்களை இலவசமாக வேண்டிய அளவிற்கு எடுத்துச்செல்லாம் என்றும். அந்நேரத்திற்குப் பிறகு வருபவர்கள் அதே பொருட்களுக்கு அதிகமாக நான்கு மடங்கு விலை கொடுக்கவேண்டி இருக்குமென்றும், அதே கண்காட்சி சாலையில் மறைமுகத்தில் மன்னனும் இருந்திடுவான். அவனைத் தேடிக் கண்டுபிடிப்போருக்கு இந்த அரசை ஆளும்படியான வாய்ப்பு கிட்டிடும் என்று பறைசாற்றினர்.

கண்காட்சி சாலையிலோ மக்கள் திரளாகக் கூடிவிட்டனர். இலவசமாக பொருட்கள் கிடக்கும் இடத்தில் எல்லாம் மக்கள் கூட்டம் கூட்டமாகக் கூடி வேண்டிய அளவிற்கு பொருட்களை எடுத்துச்செல்ல தயாராக இருந்தனர். ஆனால் அங்கு ஒரு வாலிபன் கூட்டத்திலும் கண்காட்சி சாலையிலும் உள்ள பொருட்களைப் பற்றி சிறிதும் பொருட்படுத்தாமல் அரசன் எங்கிருப்பான் என்ற ஒரே குறிக்கோளை மனதில் கொண்டு அவனைத் தேடுவதில்

குறியாக இருந்தான். அவனது ஒருமுகப்பட்ட மனதிற்கு உகந்த பலன் கிட்டியது. மன்னன் ஒரு மூலையிலிருந்த ஒரு குகைகுள் ஒளிந்துகொண்டிருப்பதை கண்டுவிட்டான். முதலில் அறிவித்தபடி அவனை அரியணைக்கு அடுத்த வாரிசாக நியமித்தனர்.

மற்றுமொரு எடுத்துக்காட்டோ ரஷியாவைச் சேர்ந்த விமான ஓட்டுனர் ஆஸ்சேவ் என்பவரது மன உறுதியும் திடத்தையும் எடுத்துக் கூறுவதாகும். அவர் யாவரும் அதிசயிக்கும் வண்ணம் விமான வித்தைகள் செய்துவந்தார். ஒருமுறை அவரது விமானத்தின் மோட்டார் பழுதாகி ஒரு மலைக்குன்றின்மேல் மோதிவிட்டது. அது அவருக்கு மிக்க வேதனையளித்ததுடன் அவருக்கு உடலில் பல இடங்களில் மிகவும் மோசமாகக் காயம் பட்டு அவதிப்பட்டார்.

அவரது கால்கள் இரண்டுமே துண்டிக்கப்பட்டுவிட்டன. அந்நிலையில் அவரை கண்ட அவரது உற்றமும் சுற்றமும் மிகமிக வேதனையடைந்தனர். அவரது ஒரு நண்பர் அவரைப் பார்த்து 'ஆஸ்சேவ்! இனி நீ விமானம் ஓட்டுவதை நாங்கள் பார்க்கமுடியாது' என்று வருத்தத்துடன் கூறினார். ஆனால் ஆஸ்சேவ் மனமுடையவில்லை. அவரோ 'இல்லை, இல்லை, நான் விமானம் ஓட்டுவதை நீ திண்ணமாகக் காணப்போகிறாய்' என்று விடையளித்தார். அவருடைய நண்பரோ தன்னைத் தேற்றிக்கொள்ள அவர் ஏற்கும் எண்ணம் அது' என்றே எண்ணினார். ஆனால் அது உண்மையல்ல.

அவரோ இரண்டு செயற்கை கால்களை வாங்கி அவைகளைப் பொருத்திக்கொண்டு நடக்கத் தொடங்கினார். முதலில் ஒரு தடியை ஊன்றிக்கொண்டு நடந்தார். பின்னர் அதையும் விடுத்து தடியின்றியே நடந்தார். தன் மேல் சந்தேகம் கொண்ட தோமசிச் என்பவரைப் பார்த்து நான் இனி அதிவிரைவிலேயே விமானத்தில் பறக்கப் போகிறேன் என்றார். இவ்வாறு கூறிய அவர் வெகு விரைவிலேயே பழையபடி விமான வித்தைகளைச் செய்து தனது நண்பர்களையெல்லாம் வியப்பில் ஆழ்த்தினார்.

இதுபோன்றே வரலாறு தன் திட உறுதியினால் வெற்றிபெற்ற பல சாதனையாளர்களை நமக்கு எடுத்துக்காட்டுகிறது. பிரபல விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் மிகவும் சாதாரண நிலைமையில் தன் வாழ்க்கையைத் தொடங்கியபோதிலும் விடாமுயற்சியினால் பல அரிய ஆய்வுகளைச் செய்து வெற்றிபெற்று விஞ்ஞான வரலாற்றையே மாற்றி அமைத்துவிட்டாரல்லவா.

ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வறுமை வாட்டும் குடும்பத்தில் பிறந்தவர். அவரது வாழ்க்கையோ ஏமாற்றத்திலும், ஆதரவின்றியும், வறுமையிலும் அமைந்தது. ஆனால் அவரோ தன் மனதில் ஒரு உயர்ந்த குறிக்கோளைக்கொண்டு, தான் நினைத்ததை அடையும் வரையில் சாமர்த்தியமாகவும், கடும் உழைப்பும் கொண்டு தன் லட்சியத்தை அடையும் வரையிலும் விடாமுயற்சியுடன் முனைந்திருந்து வெற்றியும் கண்டார். அவரது உறுதியான தீர்மானமும் நம்பிக்கையும் அவரை உலகமே போற்றிடும் பெரிய விஞ்ஞான மேதையாகச் செய்தது.

திடமான மனவுறுதியும், மனோபலமும் வியக்கத்தக்க மந்திரசக்தி கொண்ட பலன்களைக் கொடுக்கவல்லது. ஒருவன் எந்தவிதமான நிலைமையில் இருந்தாலும் தன்னிடமுள்ள வளமைகளை உணர்ந்து கொண்டு அவைகளை நன்கு பயன்படுத்திக்கொண்டால் துரதிர்ஷ்டத்தை லாபமுள்ள அதிர்ஷ்ட நிலையாக மாற்றியமைத்துக் கொள்ள இயலும். இதற்குப் பொருத்தமான ஒரு எடுத்துக்காட்டை எடுத்துரைப்பது உசிதமாகும்.

கிராமத்தில் ஒரு வயோதிகன் இருந்தான். அவன் தனது நிலத்தை உழுது அதில் உருளைக்கிழங்கு பயிரிடுவது வழக்கம். ஆனால் அதுவோ மிகக்கடினமான வேலையாகும். அவனுக்கு உதவி செய்யக்கூடிய நிலையில் இருந்த ஒரே மகனும் அது சமயம் சிறையில் இருந்தான். அவ்வயோதிகன் தன் மகனுக்கு ஒரு கடிதம் எழுதி அதில் தன் இயலாமையை குறிப்பிட்டிருந்தான்.

'என் அன்பு மகனே! இந்த ஆண்டு நான் எப்பொழுதும் பயிரிடுவதுபோல் உருளைக்கிழங்கை பயிரிட முடியாது என்றே நினைக்கிறேன். உனது அன்னையும் ஒவ்வொரு ஆண்டும் கிழங்குகளை பயிரிடுவதில் மிகவும் ஆவலுடன் இருப்பாள். ஆனால் நானோ கிழவனாகி வருகிறேன். என்னால் நிலத்தைத் தோண்டி உழுது பயன்படுத்தும் அளவிற்கு உடல் வலிமையில்லை. நீ என்னுடன் இங்கு இருந்திருந்தால் எனக்கு எள்ளளவுங் கவலையேயில்லை. நீ நிலத்தை நன்கு பன்படுத்தி உழுதிருப்பாய். எனக்கும் ஒருவிதமான கவலையும் இருந்திருக்காது.'

அதிவிரைவிலேயே சிறையிலிருந்த தன் மகனிடமிருந்து தந்தி ஒன்றை பெற்றான் அக்கிழவன். அதில் 'அப்பா! தயவுசெய்து அந்நிலத்தை நீங்கள் தோண்டவோ உழுதிடவோ வேண்டாம். ஏனெனில் அங்குதான் நான் எனது தோட்டாக்களையெல்லாம் புதைத்து வைத்துள்ளேன்' என்று எழுதியிருந்தது.

மறுநாள் அதிகாலையில் நான்கு மணிக்கே F.B.I. ஆட்களும் அவ்விடத்து காவல் அதிகாரிகளும் வந்து அந்த நிலம் முழுவதையும் தோண்டிப் பார்த்தனர். ஆனால் அங்கோ தோட்டாக்கள் எதுவுமே காணவில்லை. இவைகளைக் கண்ட கிழவன் மிகவும் குழப்பம் அடைந்தவனாய் என்ன நடக்கிறதென்பதை அறிந்துகொள்ள தன் மகனுக்கு மீண்டும் ஒரு கடிதம் எழுதினான். அதற்கு பதிலளித்த அவனது மகன் 'அப்பா! மேற்கொண்டு நீங்கள் பயிரிட விரும்பிய கிழங்குகளை மனவிருப்பப்படி பயிரிடுங்கள். உங்களுக்கு இதுதான் நான் இங்கிருந்துகொண்டு உதவியாகச் செய்ய இயலும்.'

இக்கதையின் கருத்து என்னவென்றால் ஒருவன் எங்கிருந்தாலும் தான் உளமாற ஒரு பணியை செய்ய மன உறுதியுடன் நிச்சயித்தால் அதை செய்வது இயலும் என்பதேயாகும். நாம் எங்கிருந்தாலும் சரி நம் மன எண்ணமே எதற்கும் காரணமாகும்.இருட்டை சாபமிட்டு நிந்திப்பதைவிட ஒரு சிறிய மெழுகுவர்த்தியை எரியவிடுவது மிகச்சிறந்ததாகுமன்றோ?

பிரபல சிந்தனையாளர் மௌலானா வஹீதுத்தீன் கான் 'டைம்ஸ் ஆப் இண்டியா' செய்தித்தாளில் 6.12.2012-ம் தேதியில் எழுதி வெளிவந்த ஒரு கட்டுரை மனஉறுதி திடமான தீர்மானத்தின் அபூர்வ சக்தியை வெளியிடுகிறது. அதில் அவர் எழுதுவதாவது - 'நான் மத்திய ஆப்பிரிக்காவில் இர்வாண்டா என்னும் மாநிலத்தின் தலைநகரான 'கிகலி' என்னும் நகரத்தில் சில நாட்கள் தங்கியிருந்தேன். அந்நாட்களில் நான் அங்கிருக்கும் ஒரு குஜராத்தியைக் கண்டேன். அவன் அங்கு குடியேறியிருந்தான். அவன் நகரத்தில் ஒரு துணிக்கடை வைத்திருந்தான்.

ஒருநாள் அவனது கடைக்குச் சென்றேன். அவன் அங்கு வரும் வாடிக்கையாளர்களிடம் அவர்கள் புரிந்துகொள்ளும் அளவிற்கு ஆங்கிலத்தில் சரளமாக பேசினான். அவன் பேசுவதைக் கேட்கையில் அம்மொழியை ஓரளவிற்கு நன்கு அறிந்திருந்தான் என தெரியவந்தது. அவனது நண்பனொருவன் அவன் ஆங்கிலம் கற்றுக்கொண்டதே ஒரு கதை என்று கூறி அதை எடுத்துரைத்தான். இந்த குஜராத்தி இங்கு வந்து கடை திறந்தபொழுது அவனுக்கு ஆங்கிலமே தெரியாது. ஆனால் அவனிடம் வரும் வாடிக்கையாளர்கள் பலர் ஆங்கிலத்திலேயே பேசினர். அதனால் அவன் ஆங்கிலம் பேச வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது.

ஆரம்ப நாட்களில் அவனது ஆங்கிலம் மிகவும் சுமாராகத்தான் இருந்தது. அவனது நண்பனொருவன் அவனிடம் 'உன்னால் சரியான

தவறில்லாத ஆங்கிலம் பேச இயலாத நிலையில் ஏன் ஆங்கிலத்தி லேயே பேச முற்படுகிறாய்?' என வினவினான். அதற்கு அவன் பதிலளிக்கையில் 'நான் தவறாகப் பேசியே நல்ல தூய ஆங்கில மொழியை கற்றுக்கொள்ள விரும்புகிறேன்' என்றான்.

இவ்வாறு இரண்டு ஆண்டுகள் கடந்திட அவனும் ஆங்கிலம் சரியாகவும் சரளமாகவும் பேசத் துவங்கினான். நான் அவனை சந்தித்தபொழுது அவன் எளிதாகவும் சரளமாகவும் ஒரு கடைக் காரனுக்கு தன் வாடிக்கையாளர்களிடம் பேசுவதற்கு போதுமான தாகவும் தேவையான மொழியை கற்றிருந்தான்.

அதனால் எங்கு திட்பமான விருப்பமுண்டோ அங்கு வழி உண்டு திண்ணம். ஒன்றையடைய திடமான மனப்பூர்வமான விருப்பம் இருந்திடின் அதுவே போதுமானது. அனுபவம் ஒருவனுக்கு உறுதுணையான ஆசான் என்பதைப்போல் அசைக்கமுடியா விருப்பம் வெற்றிக்கு முதற்படியாகும்.

நமது மூளையில் பல சன்னல்கள் இருக்கின்றன என்று ஆராய்ச்சி யாளர்கள் கூறுகின்றனர். அவைகளில் சில திறந்தும் சில மூடியும் உள்ளன. கட்டாயச் சூழ்நிலைகள் அவைகளை திறக்க தேவையா யுள்ளன. ஒருவன் ஒரு அதிச்சியான செய்தியைக் கேட்பானாகில் அது அவனது மூடிய சன்னல்களை தானே திறக்க வழிவகுக்கிறது. இவைகளே சில சமயங்களில் அதிசயங்களை ஏற்படுத்துகின்றன. அதுமுதற்கொண்டு ஒருவன் தான் முன்னர் செய்ய ஆற்றல் இல்லாதவைகளை செய்திடும் ஆற்றலைப்பெறுகிறான்.

இம்முறையே சிறிய பெரிய எல்லாச் செயல்களிலும் பயன்படுகின்றன. அதிர்ச்சிக்குள்ளான நொடியை ஆக்கப்பூர்வமான முறையில் ஏற்றுக்கொண்டால் எவராலும் அதிசயங்களை ஏற்படுத்த இயலும் என்பது வெளிப்படுகிறது.

உளவியலில் சிந்தனை அலசல் கொள்கையில் இப்படிப்பட்ட அசாதாரண நிகழ்ச்சிகள் விவரிக்கப்படுகின்றன. ஒரு அதிர்ச்சி தரும் நிகழ்வு நேர்கையில் மனிதனின் மூளையில் புத்திப்புயல் வீசுகிறது. இப்புத்திப்புயல் உறங்கிக்கொண்டு செயல்படாமல் இருக்கும் உயிரணுக்களை ஊக்கிவித்து செயல்படச் செய்கின்றன. அதனால் ஒருவன் தான் சாதாரணமாக அதுவரைக்கும் செய்ய இயலாமலிருந்த பல செயல்களை வெற்றியுடன் செய்து முடிக்கிறான்.

இதற்கான பல எடுத்துக்காட்டுகள் உள்ளன. உதாரணமாக பீமராவ் அம்பேத்கர். அவரோ வறுமை வாட்டிடும் தீண்டப்படாத குலத்தில் பிறந்தார். குழந்தைப் பருவத்தில் தன் சமூகத்தாராலேயே ஒதுக்கப்பட்டவராக இருந்தார். இச்சூழ்நிலை அவரை மிக்க வருத்தத்தில் ஆழ்த்தியது. ஆனால் அந்நிலைமையை தாண்டி முன்வர தீர்மானித்தார். கடும் முயற்சி செய்து தனது படிப்பை முதலில் முடித்தார். பிறகு இந்திய அரசியல் சாசனத்தை அமைக்கும் ஆழ்ந்த மதிபடைத்தோனாக ஆனார். இந்தியா சுதந்திரம் அடைந்தவுடன் இந்திய அரசியல் சாசனம் எழுதும் குழுவுக்கு தலைவராக நியமிக்கப்பட்டார்.

இங்கு முக்கியமாக கவனத்தில் கொள்ள வேண்டியது என்னவென்றால் அப்படிப்பட்டதொரு சிக்கலான நேரம் வருகையில் நாம் மனம் ஒடிந்து இடிந்து போகாமல் முன்னேறியுள்ள நம் முன்னோர்களை பற்றி அறிந்துகொண்டு தன் திறமையை வெளிக்கொண்டுவர முயற்சி செய்தல் வேண்டும்.

திடமான மன உறுதியுடன் கூடிய தீர்மானம் ஒருவனது உள்ளே மறைந்து புதைந்துகிடக்கும் ஆற்றலை வெளிக்கொண்டுவரும்.

ஒரு சந்தர்ப்பத்தை எதிர்கொள்ளல் என்பது வந்தபிறகு அதற்கு எதிர்வினையாக செயல்புரிவது என்பது மாத்திரமல்ல. அதற்கு முன்கூட்டியே செயல்புரியும் வகையை ஆராய்வதுமாகும். நாம் நமக்கு கொடுக்கப்பட்டுள்ள நம்மாற்றலை மறைக்கும் போர்வைகளை தூக்கியெறிந்துவிட்டு பொறுமை, பற்றின்றிருத்தல், தாங்கும் மனத்திண்மை இவைகளை பயிற்சிசெய்து வளர்த்துக்கொள்ள வேண்டும். சிக்கல்களை எதிர்கொண்டு வெற்றிபெற மன உணர்ச்சி கள், மதி உணர்ச்சிகள், ஆன்மீக உணர்ச்சிகள் என நமக்கு அமைந் துள்ள பல ஆற்றல்களை பெருக்கிக்கொள்வது இன்றியமையாததாகும்.

கற்றோன் அறிவுள்ளோன் என்பதற்கும் முட்டாள் என்பதற்கும் உள்ள வேறுபாடு இதனால் அமைவதேயாகும். அறிவுள்ளோன் நடைமுறைக்கு தேவையானவைகளை அறிந்துகொண்டு அதை மாற்றி அமைத்துக்கொள்கிறான் அனால் முட்டாளோ வாழ்க்கையின் மேலும் கீழுமான அசைவுகளால் பாதிக்கப்பட்டு அவைகளால் அலைக்கழிக்கப்படுகிறான்.

கடவுள் வாக்கில் ஒரு அழகிய நீதிக்கதை உள்ளது. அறிவுள்ள ஒருவன் பாறைகள் நிறைந்த உயர்ந்த இடத்தில் ஒரு வீட்டைக்

கட்டினான். அது மழை, புயல் எல்லாவற்றையும் தாங்கி நின்றது. இதற்கு மாறாக அறிவற்ற ஒருவன் மணலில் வீடு ஒன்று கட்டினான். அதுவோ மழையிலும் புயலிலும் நசித்துப்போவதைக் கண்கூடாகக் கண்டான். அதனால் பொதுவில் ஒருவன் மலை போன்று விபத்துக்களைத் தாங்கும்படியான அசைக்க முடியாத திறன்பெறத் தேவையானவைகளை பொறுக்கி அவைகளை பயிற்சிசெய்து வளர்த்துக்கொள்ள வேண்டும்.

வாழ்க்கை என்பது எப்பொழுதும் ஒருபோல் சீராக அமைவதில்லை. அது மகிழ்ச்சியையும் அளிக்கிறது அதேபோல் துக்கத்தையும் அளிக்கிறது. ஒருவன் உறுதியான உள்ளத்துடன் வாழ்க்கையை ஏற்க வேண்டும். பலவீன மனது ஒருவனது துக்கத்தை மேலும் அதிகரிக்கச் செய்கிறது. தன் மகன் இறந்துவிட்டான் என்கிற செய்தியைக் கேட்டதும் துரோணாசாரியருக்கு என்ன ஆயிற்று? தன் மகனிடத் திலுள்ள அதிகமான பாசத்தினால் சண்டையிடுவதை அப்படியே நிறுத்திவிட்டார். அதனால் இறக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது.

வரலாறு நமக்கு எல்லா கோணங்களிலும் நம் ஆற்றலினால் அடையக்கூடிய பல நிகழ்ச்சிகளை எடுத்துரைக்கிறது. விளையாட்டுத் துறையும் இதற்கு விதிவிலக்கானதல்ல.

நலிவுற்று மெலிந்த ஒரு பெண் தன் வகுப்பறையில் எழுந்து நின்று ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டிகளில் விளையாடும் தகுதியைப் பற்றி கேள்வியெழுப்ப அது வகுப்பிலுள்ள யாவரையும் ஏளனம் செய்யத் தூண்டியது. அவளது ஆசிரியரும் அக்கேள்வியை கவனத்துடன் கேட்காமல், இவ்வளவு மெலிந்து எழுந்து நிற்பதற்கான வலிவும் பலமுமற்ற அப்பெண் என்ன விளையாடப்போகிறாள் என்றே நினைத்தாள். இதைக்கண்டு மனமுடைந்த அப்பெண் பதிலெதுவும் கூறவில்லை.

மறுநாள் அவளுக்கு வகுப்பில் ஒதுக்கமாக தனிமையில் உட்கார இடம் அளித்தனர். அவள் ஒரு நொடி மௌனமாக இருந்தாள். பின்னர் எழுந்து தன் ஊன்றுகோல்களை எடுத்துக்கொண்டு ஆசிரியரிடம் - 'பாருங்கள். தீவிர அவாவும் கடும் முயற்சியும் மேற்கொண்டால் வெற்றி கிட்டுவது திண்ணம்' என்று கூறிவிட்டு, தன்னையே சுட்டிக்காட்டி 'இவள் ஒரு நாள் காற்றில் பறந்திடுவாள். இது திண்ணம்' என்று கூறினாள். அங்கிருந்த யாவரும் அவளைக் கேலி செய்தனர்.

அதே பெண் மெதுவாக தன் நடையின் வேகத்தை அதிகரித்திட பயின்றாள். நாட்கள் செல்ல மெதுவாக ஓடவும் தொடங்கினாள். பின்னரோ சிறிது சிறிதாக வேகத்தை அதிகரித்தாள். இவ்வாறு ஓட்டத்தில் தன் வேகத்தை அதிகரித்துக்கொண்டாள். பின்னர் சிறிய சிறிய ஓட்டப்பந்தயங்களில் பங்கேற்றாள். அவள் அவ்வளவு வேகமாக ஓடுவதைக் கண்டு வியப்பில் ஆழ்ந்தனர். பின்னர் 1960-ம் ஆண்டு அவள் ஒலிம்பிக் பந்தயத்தில் பங்கேற்று தங்கப்பதக்கம் பெற்றாள். அவள் பெயர் வில்மா ருடால்ப் ஆகும்.

மற்றுமொரு எடுத்துக்காட்டு ஆப்ரகாம் லிங்கனை குறித்ததாகும். அவர் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்தவர். அவர் தன் சிறுவயதிலேயே வாய்ப்புகள் ஒன்றும் இல்லாதபோதிலும் பெரிய பிரத்யேகமான காரியங்களைச் சாதிக்கும் விருப்பத்தைக் கொண்டிருந்தார். அவர் சட்டப் படிப்பு மாணவராக இருந்தார். அவர் யார்மூலமாகவோ கிராமத்தின் அருகிலிருந்த ஆற்றைக் கடந்த அக்கரையில் ஓய்வுபெற்ற நீதிபதி ஒருவர் இருப்பதாகக் கேள்விப்பட்டார். அவரிடம் சட்டப் படிப்பிற்குத் தேவையான முக்கியமான புத்தகங்கள் இருப்பதாகவும் அறிந்தார்.

அவரைக்கண்டு அவரிடமிருந்து புத்தகங்களை கடனாக பெற்றிடவும் தீர்மானம் செய்தார். அப்பொழுது நல்ல கடுங்குளிர்காலம். அவரோ தானே ஒரு படகை எடுத்துக்கொண்டு ஆற்றை கடந்திட முயற்சி செய்தார். நடு வழியில் அப்படகு மலை போன்றதொரு பெரிய பனிக்கட்டியில் மோதி இரண்டாக பிளந்துவிட்டது. அதைச் சிறிதும் பொருட்படுத்தாமலே அவர் அக்குளிர்ந்த நீரில் நீந்திச்சென்று நீதிபதியின் வீட்டை அடைந்தார்.

ஆப்ரகாம் அங்கு வந்திருப்பதைக் கண்டு நீதிபதி அவரது கண்களையே நம்பமுடியவில்லை. அவருடைய கண்களில் பொங்கும் தீர்மானத் துகளை அவரால் காணமுடிந்தது. அங்கு ஒரு சில நாட்கள் தங்கியிருந்து அவரது வீட்டுப் பணிகளில் உதவிசெய்தால் அவரது சட்ட புத்தகங்களை பார்த்து படிக்கலாம் என்று அனுமதியும் வழங்கினார். அவருடைய பணியாளனோ விடுமுறையில் சென்றிருந்தான். அவரும் அதற்கிணங்கி விறகு எடுத்துவருதல் முதலிய பணிகளைச் செய்து அவருக்கு உதவியாய் இருந்து வந்தார். பணிகள் முடிவடைந்த பின்னர் எஞ்சிய நேரத்தில் புத்தகக் குவியலில் தன் நேரத்தை கழித்தார். அதைக் கண்டு மனத்திருப்தி அடைந்த நீதிபதி அவருக்கு சில புத்தகங்களை வெகுமதியாக

அளித்தார். அவரே அமெரிக்காவின் ஜனாதிபதியாக இருந்த ஆப்ரகாம் லிங்கன் ஆவார்.

கோபம், துக்கம், பொறாமை, அகங்காரம், பயம், தாழ்வு மனப் பான்மை போன்ற சில ஒருவனுக்கு வாழ்க்கையில் தடங்கல்களாக இருந்து தன் தன்னம்பிக்கையை இழக்கச் செய்கிறது. பல சிக்கல் களுக்கு இடையிலும் சிலர் தங்களது மனவலிமையை இழக்காமல் சீராகக் கொண்டுள்ளனர். சர்தார் வல்லபாய் படேல் நீதிமன்றத்தில் வழக்காடிக் கொண்டிருக்கையில் அவரது மனைவி உயிரிழந்த செய்தி அவருக்குக் கிடைத்தது. அவரோ சிறிதும் கலக்கமடையாமல் வழக்காடுவதை தொடர்ந்து நடத்தி வழக்கில் வெற்றியும் பெற்றார். கட்சிக்காரரும் மனம் மகிழ்ந்தார். அதன் பிறகே அவர் தன் மனைவி உயிரிழந்த் செய்தியை வெளிப்படுத்தினார்.

இது ஒரு ஆரோக்கியமான புத்தியின் அடையாளமாகும். அப்படிப் பட்டவர்கள் பெரும் சிக்கல்களிலும் தங்களது தன் மானத்தை தன்னம்பிக்கையை இழப்பதில்லை. இவ்வாறு ஒருவன் தன்னம் பிக்கையையும், மன வலிமையையும் வளர்த்துக்கொண்டால் வரும் சிக்கல்கள் யாவும் தானே கரைந்துவிடும்.

சுவாமி விவேகானந்தர் கூறுகிறார் - 'நண்பா! எது உன்னை மனம் கலங்கச் செய்கிறது? உனக்குள்ளேயே எல்லா சக்தியும் உள்ளனவே?' இவ்வாறு மனவலிமையை பெற்றுவிட்டால், இந்த பிரபஞ்சத்தில் ஏற்படும் எந்த ஒரு சிக்கலையும் எதிர்கொண்டு வெற்றியும் பெறுவது திண்ணம்.

## மேற்கோள்கள்


1. *Kumarasambhavam 5.5*
2. *kathopanisad 1.26*
3. *ibid 1.29*

# 15

## ஶ்ரம

## கடும் முயற்சி

தொன்றுதொட்டு கடும் முயற்சியின் அவசியம் நமது முன்னோர் களால் மீண்டும் மீண்டும் வற்புறுத்தி எடுத்துரைக்கப்பட்டுள்ளது. ருக் வேதத்தில் 'ந ருதே ச்ராந்தஸ்ய ஸக்யாய தேவ:'*[1] என்று கடும் முயற்சி ஏற்காதவனிடம் தெய்வமும் நட்பு கொள்வதில்ல என்று கூறப்பட்டுள்ளது. ஐதரேய பிராம்மணமோ கடும் முயற்சி மேற்கொள்ளாதவனுக்கு செல்வமும், வளமையும் கிடைப்பதில்லை*[2] என்கிறது. அவன் வாழ்க்கையில் செழிப்படைவதில்லை. வாழ்க்கை யில் செழுமையடையவும், சுபிட்சமடையவும் திறவுகோலாய் இருப்பது கடும் முயற்சியேயாகும்.

செழுமையையும் சுபிட்சத்தையும் அடைய ஒருவன் முயற்சி அதுவும் கடும் முயற்சி செய்திடல் வேண்டும். சிங்கம் தூங்கிக்கொண்டிருந்தால் அதன் வாயில் மான்கள் (மிருகங்கள்) தானே வந்து நுழையமாட்டா. சிங்கம்தானே வேட்டையாடி முயற்சிசெய்து மிருகங்களை பிடிக்க வேண்டும் - 'ந ஹி சுப்தஸ்ய ம்ருகஸ்ய முகே ப்ரவிஸந்தி ம்ருகா:'*[3]

இவ்வாறு கடும் முயற்சி செய்தேராமர் காட்டில் திக்கற்றவராய், கலக்கமடைந்து திரிந்தபோதிலும் அரக்கர்களுடன் போரிட்டு வெற்றி கொள்ளும் திறன் கொண்டவர்களுடன் நட்புகொண்டு பணியில் வெற்றிகொண்டார்.

கடும் முயற்சியினால் வெற்றிகிட்டி அதன் பலன் வெகுகாலம் நீடித்திருக்கப்போகிறது என்பது மக்களுக்கு பெரும் மகிழ்ச்சியை கொடுக்கவல்லது.

'பலம் ஆயதௌ சுசிரவர்தி கல்பயன் |
பவதி சிரமோபி ஹி ஸுகாய தேஹினாம் ||*[4]

இக்கருத்தையே மிகப்பழமையான ஒரு செய்யுள் எடுத்துரைக்கிறது. 'க்லெச: பலேன ஹி புனர்நவதாம் விதத்தே'*5 சுபாஷிதம் ஒன்றும் இக்கருத்தையே எடுத்துரைக்கிறது. கடினமான உழைப்புடன் செய்த செயலின் பலனோ தானே பாத்திகட்டி, விதை விதைத்து, நீரூற்றி, வளர்த்த செடியில் உண்டான பழங்களைப் போன்றதாகும்.

யத் ஸாதிதம் குருதரை: விவிதை: ப்ரயத்னை:
தத்ரோசதே ஹி பரமம் புருஷஸ்ய லக்ஷ்யம் |
ஆதாரபன்தஜலஷேசனை: கராப்யாம்
ஸம்வர்திதஸ்ய ஹி தரோ: ப்ரஸவோதிருச்ய:||*6

இங்கு கடும் முயற்சி என்றால் உடலால் களைத்துப் போகும்படி அதிகமாக உழைத்தல் என்பதல்ல. ஒரு குறிப்பிட்ட இலக்கை அடைய முயற்சி செய்யத் தூண்டும் காரணியும் அவர்களை செயலில் துரிதப்படுத்தும். இது பொதுவில் ஒருவனின் உள்ள உணர்வில் தான் அமைகிறது.

ஒருமுறை மகாத்மா காந்தி அவர்கள் இளம்பெண் ஒருத்தி குழந்தையை தூக்கிக்கொண்டு மலைமேல் ஏறுவதைப் பார்த்தார். அதைக்கண்ட அவர் அவளைப் பார்த்து 'இவ்வளவு பாரத்தை சுமந்து செல்கிறாயே' என்று கேட்டதுதான் தாமதம் உடனே அவள். 'இது ஒன்றும் சுமையல்லவே. இவன் எனது உடன் பிறந்த சகோதரன்' என்றாளாம். அதனால் அது அவளது சகோதரனானதால் பாரமற்றதாகிவிட்டது. இதுபோல் நம் உணர்ச்சிகள் நம்மை பாதிக்கின்றன.

'ஒவ்வொரு காலையும் மனிதனை ஒரு சோதனையில் ஆழ்த்துகிறது. ஒவ்வொது மாலையும் தீர்வு காணப்படுகிறது' என்கிறார் ராய்.எல். ஸ்மித் என்பவர். இது எவ்வளவு பொருத்தமானது. நம்மில் எவ்வளவு பேர் இது போன்ற வாழ்க்கையின் தேர்வை அறிந்துகொண்டு செயல்படுகிறோம். இந்த உண்மையை அறியாதவர்கள் அபரிமிதமான சிக்கல்களால் சூழ்ந்தே வாழ்கின்றனர். வாழ் நாட்கள் முழுவதுமே கழிந்துவிட்டன என்பதை அறிந்துகொள்ளாமலே கடந்துவிடுகின்றன.

காலை விடியலில் வாழ்க்கையின் உண்மையை அறிய பல சிக்கல்கள் தென்படுகின்றன. அவைகளை புரிந்துகொண்டு தீர்வு காண முயற்சிசெய்து சரியான திட்டமிட்டு கடும் முயற்சிசெய்து வெற்றி கண்டோமேயானால் அந்நாள் அழகானதாகவும் பயனுடையதாகவும் கழிந்ததாக நினைத்து ஒருவன் மன திருப்தி அடைகிறான். இவ்வாறு

இல்லையாகில் நாள் முழுவதுமே வீணாகக் கழிந்து மாலையில் நாம் எதிர்பார்த்த தீர்வு காண இயலாமல் போகிறது.

கடும் உழைப்பு வெறும் உபயோகமின்றி செய்வதில் பயன் ஏதும் இல்லை. வீணான உழைப்பை அறவே நீக்கிட வேண்டும். மடையனைப்போல் காட்டுவாத்தை துரத்திச் செல்வதில் பொருளொன்றும் இல்லை. அது வீணேயாகும். ஒருவனை சோர்வடையச் செய்யும். ஒரு செயலை செய்ய முற்படும்முன் அதனால் ஏற்படும் விளைவுகள் என்னென்ன என்று முன்னும் பின்னும் ஆலோசித்து செயலை மேற்கொள்ள வேண்டும். சொற்களை அறியும் முன்னர் அவைகளை எந்த சந்தர்ப்பத்தில் எப்படி பயன்படுத்த வேண்டுமென்று அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். தலையில் முடியில்லா மொட்டையன் ஒருவன் வாடிய மலர்களை அணிவதற்கு தேடிச் செல்வதற்கு ஒப்பாகும்.

சந்தர்பசக்திஹீனானாம் சப்தாப்யாசோ வ்ருதா ஸ்ரம: |
முக்தானி லப்த்வா புஷ்பாணி முண்டித: கிம் கரிஷ்யேத் ||*7

இங்கு கூறப்படுவது என்னவென்றால் ஒருவன் ஒரு செயலை வெற்றிகரமாக முடிக்க வேண்டுமென்று நினைத்துத் துவங்கினால் அம்முயற்சியை ஏனோதானோ என்றில்லாமல் முறையாக செய்தல் வேண்டும். அதைப்போலவே தவறாமல் சீராக முயற்சியில் ஈடுபடுதலும் இன்றியமையாததாகும். துவங்கியபின் இடையில் சோர்வடைந்தோ, களைப்பினாலோ அதை கைவிடுதலும் கூடாது.

யோ யம் அர்தம் ப்ரார்தயதே ததர்தம் சேஷ்டதே க்ரமாத் |
ஸோவஸ்யம் தத் அவாப்னோதி ந சேச்ச்ரான்தோ நிவர்ததே ||

உழைப்பை அறிவுபூர்வமான முடிவுடன் ஏற்றிடல் வேண்டும். செயலை பாதிக்கும் மேல் முயற்சி எடுத்து செய்கையில் திடீரென மனம் மாறி வெற்றி கிட்டாமல் போய்விடுமோ என்ற எண்ணத்தில் செயலை கைவிடுதல் பாசன் கூறுவது போல் ‘சமூலம் வ்ருக்ஷம் உத்பாட்ய சாகாச்சேத்தும் குதோ ஸ்ரம:’- மரத்தை வேறுடன் பிடுங்கிய பின்னர் அதன் கிளைகளை வெட்டுவதில் என்ன முயற்சி தேவை? என்பதாகும்.

முயற்சி செய்தல் என்று பேசுகையில் அதை பொதுவாக இரண்டு விதமாக பிரித்துக் கூறலாம். உடலால் செய்யும் முயற்சி, புத்தியினால் செய்யும் முயற்சியாகும். சில நேரங்களில் இருண்டுமே ஒருபோல் ஒன்றோடொன்று வெகு நெருக்கமாக அமையலாம்.

மரக்கட்டைகளை வெட்டுதல், இரும்பினால் ஆனவைகளை வெட்டுதல், சுமைகளை தாங்கிச் செல்லுதல் முதலியவைகளில் உடலினால் செய்யும் உழைப்பு அதிகமாக இருக்கும். அதே பாடம் படிப்பித்தல், விஞ்ஞான ஆராய்ச்சி செய்தல், திட்டங்கள் வகுத்தல் முதலிய செயல்களில் புத்தியினால் செய்யும் உழைப்பு அதிகமாக இருக்கும். ஒன்றை புதிதாக அமைத்தல், ஆராய்ச்சியினால் புதுப் பொருட்களை கண்டுபிடித்தல் போன்றவற்றில் இரண்டுவகை உழைப்பும் சரிசமமாக தேவையாகவும் இருக்கலாம்.

உழைப்பு என்பது வெறும் கற்பனை சிந்தனையாக இருத்தல் கூடாது. அது ஒரு முக்கிய காரணத்திற்கு பயன்படுவதாக இருத்தல் வேண்டும். அதுவும் ஒரு நேர்மையான் சரியான செயலுக்கு உழைத்தல் வேண்டும். அது தனிமனிதனுக்கும் நல்லது சமுதாயத் திற்கும் நன்மை. பயப்பதாகும். இதற்கு விரோதமான கருத்துடன் கூடிய உழைப்போ இருசாராருக்குமே கெடுதலை விளைவிப்பதாகும்.

திருடன், வழிப்பறிக் கொள்ளையன், தீவிரவாதி இவர்களுடைய உழைப்போ தவறான பாதையில் இட்டுச் செல்வதாகும். ஒருவன் தன் பகுத்தறியும் திறனைக்கொண்டு ஆராய்ந்தறிந்து அவ்வழியில் உழைத்து பலனடைதல் சிறந்ததாகும்.

### மேற்கோள்கள்


1. *4.33.11*
2. *7.95*
3. *Sahityaratnakara 4.22*
4. *suktikuktavali 16*
5. *kumarasambhava 5.86*
6. *sabharanjanasataka 13*
7. *pratijnayaugandharayanah 4.20*

# 16

# ஸௌர்ய, பராக்ரம

## பராக்கிரமம்

ஸௌர்ய என்ற சொல் மனத்துணிச்சல், வலிமை, பராக்கிரமம் என்ற பொருள்பட பயன்படுத்தப்படுகிறது. பழம் பெரும் சமஸ்கிருத நூல்களில் இதை பலவிதங்களில் விவ்ரமாக எடுத்துக் கூறப் பட்டுள்ளன. சாகித்யதர்பணத்தில் இதை ஒரு சவாலான செயலை ஏற்கையில் ஏற்படும் ஆளுமை உணர்வென கூறப்பட்டுள்ளது. கார்யாரம்பேஷு சம்ரம்ப: ஸ்தேயான் உத்ஸாக உச்யதே'*1 ரசகங்காதரரின் கருத்துப்படி பராக்கிரமம் மூலம் நமது மேலெழுந்திடும் சக்தி மேலும் வளர்த்திடுவது என்பதாகும். அப்பராக்கிரமம் நம்முடைய தருமமாகவும் இருக்கலாம் அல்லது பிறரது பராக்கிரமத்தினாலும் இருக்கலாம். 'பர பராக்ரம தானாதிஸ்ம்ருதிஜன்மா ஔன்னத்யாக்யா உத்ஸாஹ:'

ஒருவன் வெற்றியடைய வேண்டுமானால் பராக்கிரமம் அத்தியா வசியமாக இருக்க வேண்டியதாகும். அதுவன்றி வெற்றி கிட்டாது. 'ந ஸௌர்யேண வினா ஜய:' இம்மூவுலகிலேயுமே இதைவிடச் சிறந்ததென்பது ஒன்றுமில்லை என்று சுக்ரநீதி கூறுகிறது - 'நஹி ஸௌர்யாத் பரம் கிஞ்சித் த்ரிஷு லோகேஷு வித்யதே.'*2 பராக்கிரம மின்றி ஒருவன் வெற்றி அடைய முடியாது.

மேற்கோள்கள்

1. *3.178*
2. *10.314*

# 17

## க்ஷமா

## மன்னித்தல்

இச்சொல் 'க்ஷம்' - சகித்துக்கொள்ளுதல்'என்னும் வேர்ச்சொல்லி லிருந்து அமைவதாகும். 'க்ஷமா ஸஹனே' 'க்ஷமா' என்றால் சகித்துக்கொள்ளுதல் என்பது நேர் பொருளாகும். சகித்துக்கொள்ளுதல் என்பதிலிருந்து மன்னித்தல் என்பது விஸ்தரிக்கப்பட்ட பொருள் என்று கொள்ளலாகும். மகாபாரதம் இச்சொல்லை இருதலை, ஒன்றுக்கொன்று முரண்பாடான இரு வேறுபட்ட நிலைமைகளை பொறுத்துக் கொள்வதாகும் என்று கூறுகிறது - 'க்ஷமா துவன்த்வஸஹிஷ்ணுத்வம்.'"*1

இரண்டு முரண்பாடான நிலைகளைப் பொறுத்தல் 'க்ஷமா' - சகித்துக்கொள்வதாகும். இதையே இதன் இலக்கணமாகக் கொள்ளலாம். பொறுத்தல், சகித்தல் என்பது இங்கு நடுநிலை தாங்குதலாகக் கொள்ளலாம். எதிரிடையான விரோதமான நிலைமைகளிலும் அமைதிகாத்து சாந்தமாக இருப்பது 'க்ஷமா' எனப்படும்.

பிறரால் செய்யப்படும் வசைமாரி, நிந்தனை, புண்படுத்தல் இவை களுக்கு பதிலடி கொடுக்காமல் ஏட்டிக்குப் போட்டியாக நடந்து கொள்ளாமல் இருப்பது, மேலும் தனக்கு அவ்வாறு செய்வது பொருத்தமன்று என்றறிந்தும்கூட சாந்தமாய் இருப்பதே மன்னித் தலாகும். சாதாரண மக்கள் இப்படிப்பட்ட நிலைமைகளில் வெகு வாக பாதிக்கப்படுவார்கள். ஏட்டிக்குப் போட்டி போடாமலிருப்பது மிகவும் கடினமானதே. இதற்கு நீதிமுறைக்குக்கட்டுப்பட்ட வலிமை அத்தியாவசியமானதாகும்.

இக்குணம் கொண்டவர்கள் பிறரிடமிருந்து முற்றிலும் வேறுபட்டவர் களாவர். தனக்கு ஏட்டிக்குப் போட்டியிடும் ஒரு உசிதனமான

சந்தர்ப்பத்திலும் அவ்வாறு செய்யாமல் மன்னித்தல் அவருடைய தலையில் வைக்கப்பட்ட சிறந்ததொரு மணிமலராகும் –'சக்தானாம் பூஷணம் க்ஷமா'*2. வலிவற்றவர்களுக்கு இது ஒரு குணமாக அமைகிறது. 'க்ஷமா குணோ ஹி அஸக்தானாம்'*3 அவர்களுக்கு அக்குணம் தங்களது பலவீனத்தை மறைக்கும் ஒரு கருவியாகும். ஆனால் க்ஷமா என்பது ஒரு மந்திரமாகும். அதனால் உலகையே வென்றுவிடலாம். 'க்ஷமா வஸீக்ருதிர்லோகே'*4 அதனால் அடைய இயலாதது ஒன்றுமேயில்லை எனலாம். 'க்ஷமயா கிம் ன ஸாத்யதே'.

மகாபாரத்ததிற்குப் பிறகு க்ஷமா என்பதற்கு பொருத்தமான எளிதான இலக்கணம் 'தத்வார்தசாரா' என்னும் ஜைனர்களின் நூலில் இடம்பெறுகிறது.

> 'க்ரோதோத்பத்தி நிமித்தானாம் அத்யந்தம் ஸதி ஸம்பவே |
> ஆக்ரோஷதாடனாதீனாம் அகாலுஷ்யோ பரம: க்ஷமா' ||*5

'கோபத்தை எழுப்பிடும் தகாத சொற்களைக்கொண்டு சாடுதல், அடித்தல் முதலிய குணங்கள் அறவே இல்லாமலிருத்தல் என்பதே க்ஷமா அல்லது மன்னித்தலாகும்'.

பிறிதொரு ஜைனர்களின் நூலில், சர்வார்தசித்தியில் இவ்வாறு இலக்கணம் கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால் அந்நூலோ துறவிகளுக்காக என்றே எழுதப்பட்டதாகும். அதில் கூறப்பட்டபடி மனதிலேயே கெட்ட எண்ணம் இருத்தல் கூடாது. ஏனெனில் யாசித்து உண்ணும் இத்துறவிகள் உயிர் வாழ்ந்திட வீடு வீடாக பிக்ஷைக்குச் செல்வார்கள். அங்கு வசை, திட்டு, ஏளனம், அவமானம் இன்னும் சில நேரங்களில் உடலுக்கு கெடுதியும் ஏற்பட வாய்ப்பு உள்ளது.

'சரீரஸ்திதிஹேதுமார்கணார்தம்பரகுலான்யுபகச்சதோர்பிக்ஷோர்துஷ்டஜனாக்ரோசப்ரஹஸனாவஜ்ஞானதாடனசரீரவ்யாபாதீனாம்ஸன்னிதானே காலுஷ்யானுத்பத்தி: க்ஷமா'*6

பவிஷ்ய புராணத்தில் சொல், மனது, உடல் முதலியவைகளினால் ஏற்படும் துக்கத்தையும் பொருட்படுத்தாமல் கோபம் அற்றிருத்தல் க்ஷமா ஆகும்

> 'வாசா மனஸா காயே ச துக்கேனோத்பாதிதேன ச |
> ந குப்யதி ந சாப்ரீதி: ஸா க்ஷமா பரிகீர்த்திதா' ||*7

'பிரும்மாண்ட புராணத்தின் கருத்து'படி,

'ஆக்ருஷ்டோ நிஹதோ வாபி நாக்ரோசேத் யொ ன ஹன்தி ச
வாங்மன:கர்மபி: வேத்தி திதிக்ஷுவ க்ஷமா ஸ்ம்ருதா' ||*8

ஒருவன் சாடப்பட்டாலும், பாதிக்கப்பட்டாலும் சொல், எண்ணம், அல்லது செயல் இவைகளினால் பிறரைச் சாடியோ, பிறரை பாதிக்கும் வகையிலோ நடந்துகொள்ளாமல் மன்னித்து பொறுத்துக் கொள்ளுதல் க்ஷமா ஆகும்.

பிரும்ம நாரதீய புராணத்தின் கருத்துப்படி 'க்ஷமா' பொறுப்பதைக் காட்டிலும் சிறந்த உயர்ந்த புகழ் வேறு எதுவுமில்லை.

'நாஸ்தி க்ஷமாஸமா க்யாதி:' *9

ஸ்கந்த புராணத்தின் கருத்துப்படி 'கோபம் பாபத்தை ஏற்படுத்தும். கருணை மகிழ்ச்சி தந்திடும். கருணையுடன் மன்னித்து எழும்பிவரும் கோபத்தை அடக்குபவன் இவ்வுலகிலும் சரி மறு உலகிலும் சரி பெரும் மகிழ்ச்சி அடைகிறான். மன்னிக்கும் திறன் கொண்டவர்கள் சிறந்த அதிர்ஷ்டம் பெற்ற பாக்கியவான் ஆவார்கள்.

'க்ரோதென பாதகம் பூயாத் தயயா ப்ராப்யதே சுகம் |
ய: ஸமுத்திதம் க்ரோதம் க்ஷமயைவ நிரஸ்யதி ||
இஹ லோகே பரத்ராஸௌ அத்யந்தம் சுகம் அச்னுதே |
க்ஷமாயுக்தா ஹி புருஷா லபந்தே ஸ்ரேய உத்தமம்' ||*10

நாகாபரணர் ஒவ்வொரு குணமாகக் கண்டு வரிசைக்கிரமப் படுத்திடுகையில் க்ஷமா என்னும் பொறுமையை மேலுள்ள உச்ச படியில் இருத்திடுகிறார். அதன்படி 'தோற்றம், உருவம் ஒரு மனிதனின் நகையாகும். தகுதி, ஆற்றல் உருவத்தின், தோற்றத்தின் நகையாகும். அறிவு ஆற்றலின், தகுதியின் நகையாகும். மன்னித்தல் அறிவின், ஆற்றலின் நகையாகும்.'

'நரஸ்யாபரணம் ரூபம் ரூபஸ்யாபரணம் குண: |
குணஸ்யாபரணம் ஞானம் ஞானஸ்யாபரணம் க்ஷமா' ||*11

க்ஷமா - பொறுத்தல், மன்னித்தல் என்பது பல குறிக்கோள்களை கொண்டதாகும். ஒருவன் தன்னைவிட உயர்ந்தவனாக இருந்தால் (செல்வத்தினாலோ, உடல் வலிமையினாலோ, அதிகாரத்தினாலோ) அவனிடமுள்ள பயத்தினால் மன்னிக்கலாம். தனக்கு இணையானவனாக இருந்தால் பொதுமக்களின் நிந்தனைக்கு அஞ்சி மன்னிக்கலாம். தனக்குக் கீழ் இருப்பவனை மன்னிக்கும் ஒருவனை ஒரு பெரும் துறவிக்கு இணையாகக் கருதலாம்.

சிரேஷ்டம் து பயாத் ஸமம் து லோகாபவாதபயாத் |
ஹீனம் யஸ்து ஸ மஹர்ஷி ஸமோ நரோ ஞேய: ||*12

க்ஷமா - பொறுத்தல், மன்னித்தல் என்பது நம் முன்னோர்களான பெரிய ஆசான்களினால் முழுமையான புகழைப் பெற்றுள்ளது. இதுவே எல்லாவிதமான விரதங்களுக்கும், தவங்களுக்கும் வேராகும். 'க்ஷமா ஹி மூலம் ஸர்வதபஸாம்.'

வால்மீகி ராமாயணம் இதையே ஈகை, உண்மை, வேள்வி, புகழ், நேர்மை, உலகத்தைக் காக்கவல்லது என்று பறைசாற்றுகிறது

க்ஷமா தானம் க்ஷமா ஸத்யம் க்ஷமா யஞ்யஸ்ச புத்ரிகா: |
க்ஷமா யச: க்ஷமா தர்ம: க்ஷமயாதிஷ்டிதம் ஜகத் ||*13

மகாபாரதத்திலும் இதே கூறப்பட்டுள்ளது.இதை உண்மை, ஈகை, நேர்மை, தவம், என்று கூறுவதுடன் மன்னிப்பவர்கள் இவ்வுலகிலும் மேலுலகிலும் ஆக இரு உலகங்களிலும் நன்கு வாழ்கின்றனர்.

க்ஷமா் ஸத்யம் க்ஷமாதானம் க்ஷமா தர்ம: க்ஷமா தப: |
க்ஷமாவதாம் அயம் லோக: பரலோக: க்ஷமாவதாம் ||*14

மேலும் அது கூறுவதாவது - பொறுத்து மன்னிப்பதே புகழ், ஈகை, தியாகம், தன்னடக்கம், அகிம்சை, நேர்மை, புலனடக்கம், கருணையுமாகும்.

க்ஷமா யச: க்ஷமா தானம் க்ஷமா யஞ: க்ஷமா தம: |
க்ஷமாஹிம்ஸா க்ஷமாதர்ம: க்ஷமாசேந்த்ரியனிக்ரஹ: ||
க்ஷமா தயா க்ஷமா யஞ:*15

ராமாயணத்தைப் போலவே இதுவும் பொறுமை உலகைக் காக்கவல்லது என்கிறது - 'க்ஷமயேதம்: க்ஷமயைவ த்ருதம் ஜகத்'*16 பூமியைப்போல் பொறுப்பவர்கள் இல்லையாகில் மனிதர்களுக்குள் ஒருவருக்கொருவர் உறவே இருக்க இயலாது. முரண்பாடோ கோபத்தை வேறாகக் கொண்டது.

யதி ந ஸ்யு: மனுஷ்யேஷு க்ஷமிண: ப்ருதிவீ ஸம: |
ந ஸ்யாத் ஸந்தி மனுஷ்யாணாம் க்ரோதமூலோ ஹி விக்ரஹ: ||*17

பொறுத்து மன்னிப்பவன் சுவர்கத்தையும், புகழையும், மோக்ஷத்தையும், அடைகிறான்.அதன் காரணமாகவே இது மிகச்சிறந்ததாகக் கருதப்படுகிறது.

க்ஷமாவான் ப்ராப்னுயாத் ஸ்வர்கம் க்ஷமாவான் ஆப்னுயாத் யஸ: |
க்ஷமாவான் ப்ராப்னுயாத் மோக்ஷம் தஸ்மாத் ஸாது; ஸ உச்யதே ||*18

அதோடு மாத்திரமின்றி, அவன் தனது மானத்தையோ அவமானத்தையோ, புகழையோ, நிந்தனையையோ, தன்னை தவறாக புரிந்துக் கொண்டு திட்டினாலும் அச்சுறுத்தினாலும் அவைகளை பொருட்படுத்தாமல் மன்னிப்பதால் அவன் புண்ணிய தீர்த்தமாகிறான்.

மானிதோமானிதோவாபி பூஜிதோபூஜிதோபி வா |
ஆக்ருஷ்டஸ்தர்ஜிதோ வா க்ஷமாவான் தீர்தம் உச்யதே ||*19

மகாபாரதம் அத்துடன் நிற்காமல் அவனை கடவுளுக்கு நிகரானவனாகவும் கூறுகிறது.

'யதா ஹி க்ஷமதே ஸர்வான் ப்ர்ஹ்ம ஸம்பத்யதே ததா' |

தனக்கு தீங்கிழைத்தவனை பொறுத்து மன்னிக்க வேண்டுமாகில் அதற்கு மிக்க மனவலிமை தேவையாகும். அதனாலேயே மன்னிப்பவன் மற்றவர்களைக் காட்டிலும் அதிக மனவலிமை படைத்தவன் என்று கூறப்படுகிறான். அவனிடம் ஏதோ சிறப்பான ஒரு அம்சம் அமைந்துள்ளது அதுவே அவனை பிறரிடமிருந்து வேறுபட்டவனாக எடுத்துக்காட்டுகிறது.

இந்தியப் பண்பாட்டுக்கதைகளில் ராமனும் சீதையும் இரு முக்கியமான பாத்திரங்களாவார்கள். அவர்கள் மிகச்சிறப்பு வாய்ந்த பாத்திரங்களாகக் கருதப்படுவதற்கு வீரத்தனம், உறவு முறையிலிருந்த ஈடுபட்ட பக்தி, உறுதியான கொள்கைகள், வாய்மையை கடைப் பிடித்தல் முதலிய அவர்களது குணங்களுடன் பொறுத்து மன்னித்தல் என்ற குணமும் குறிப்பிடத்தக்கதாகும். ராவணனைக் கொன்றபின்னர் அனுமன், ராமன் லக்ஷ்மணன் ஆகிய இருவரின் நலனையும், ராவணனைக்கொன்ற செய்தியையும், சீதைக்கு தெரிவிக்கும் பொருட்டு வருகையில் அங்கு அவளைச் சூழ்ந்துகொண்டு அவளைப் பலமுறை அதட்டியும் மிரட்டியும் அச்சுறுத்திய அரக்கிகளைக் கண்டதும் அவர்களை கொல்ல மனம்கொள்கிறான்.

அதற்கு சீதையின் அனுமதியை நாடுகிறான். 'யதி த்வம் அனுமன்யஸே'*20 அவர்களைக் கொல்ல விரும்புகிறேன் என்கிறான் 'ஹன்துமிச்சாமி'. 'அவர்களால் முன்பு அவள் மிகவும் துன்புறுத்தப்பட்டவள் அன்றோ' - 'யாபி: த்வம் தர்ஜிதா புரா'. ஆனால் சீதை அதை ஒப்புக்கொள்ளவில்லை.

அவர்களை மன்னித்துவிடக் கோருகிறாள். 'தாசீனாம் ராவணஸ்யாஹம் மர்ஷயாமீஹ துர்பலா:'*[21]

அவர்களிடம் இரக்கமும் கருணையும் காட்டுகிறாள். 'தீனவத்ஸலா' அவர்கள் அரசனது ஏவல்காரிகள். அவனிட்ட பணியை செய்தவர்கள் -'ராஜஸம்ஸ்ரய வஸ்யானாம் குர்வதீனாம் பராஞ்யயா'.*[22] அவள் தான் அனுபவித்த கஷ்டங்களுக்கெல்லாம் தனது இழிஊழை கூறி தன்னையே நிந்தித்துக்கொள்கிறாள் - 'பாக்ய வைஷம்ய தோஷேன'.*[23] அதன் பிறகு அவள் வரிசையாக சில செய்யுள்களை எடுத்துரைக்கிறாள். இவை சுலோகங்கள் என்று அழைக்கப்படுகின்றன. அது புராணங்களில் கூறப்பட்டுள்ளன.

கரடி ஒன்று சிங்கத்தைப் பார்த்து கூறுவதாக அமைந்துள்ளது. அதில் முழுவதும் மதக்கோட்பாடுகள் நிறைந்துள்ளன. அக்கிரமமான தீய செயல்புரிந்தவர்கள் எவருமே தான் அச்செயல் செய்ததாக ஏற்றுக் கொள்ளவே மாட்டார்கள். தெய்வபக்தியும் பண்பட்ட குணங்களைக் கொண்டவர்களே நல்வழிக்கான விதிமுறைகளை அனுசரிப்பார்கள் என்றே தோன்றுகிறது. கொல்லும்படியான தண்டனை கொடுக்கத்தக்க கொடுஞ்செயலை செய்தவர்களிடமும் கருணை காட்ட வேண்டும். எவர்தான் குற்றம் புரிவதில்லை? குற்றம் புரிந்த வர்களிடமும், கொடுமையாக நடந்துகொள்பவர்களிடமும், பாபி களிடமும், மனிதர்களை கொல்வதில் விருப்பம் கொண்டவர் களிடமும்கூட கொடுமையாக நடந்துகொள்ளுதல் கூடாது என்கிறாள். அவளல்லவோ சீதை, மன்னிப்பே உருவாயினாள்!

சீதையைப் போன்றவனே ராமனும் ஆவான். ராவணனுடன் மிக்க விரோதத்துடன் போரிட்டு கொன்றான். பிறகு அவனது சகோத ரனைப் பார்த்து அவனது இறுதிச் சடங்குகளைச் செய்யும்படி ஆணையிடுகிறான் - 'க்ரியதாமஸ்யஸம்ஸ்கார:'*[24] அத்துடன் அதை நிறைவு செய்யவில்லை. அவன் விபீஷணனிடம் எவ்வளவு அன்பு கொண்டுள்ளானோ அவ்வளவு அன்பு அவனிடம் கொண்டுள்ளதாகக் கூறுகிறான். விரோதமும், பகைமையும் இறக்கும் நேரம் வரையேயாகும் - 'மரணாந்தானி வைராணி'.

தன் குறிக்கோளை அடைந்தபின்னர் (சீதையை அபகரித்துச் சென்றதற்கான கொடிய செயலுக்கு பழிவாங்கிய பிறகு) - 'நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜனம்' வெறுப்போ விரோதமோ கிடையாது. மிகக் கொடுமையான பகைவன்கூட நட்புக்குப் பாத்திரமாகிறான். ஏனெனில் அவனிடமுள்ள பல நற்குணங்களை எண்ணிப் பார்க்கவேயில்லையே.

தனக்கு ஒருகாலத்திலும் ஒருவராலும் தவறு செய்யப்படவில்லை என்றோ தான் ஒருவருக்கும் தவறு செய்யவில்லை என்றோ ஒருவராலும் கூறவே முடியாது. அதனால் அவரிடம் வாழ்நாட்கள் முழுவதும் பகைமை காட்டிக்கொண்டிருப்பது தேவையானதா? அவ்வாறு செய்வோமேயானால் நாம் அவர்கள் நம்மை துன்புறுத்த அனுமதிப்பது போலாவதுடன்கூட அவர்கள் நம்மை ஒவ்வொரு நொடியும் அவர்களது அதிகாரத்தின் கீழ் அடக்கிவைக்கவும் வழிவகுக்கிறோம். பழிவாங்கும் எண்ணமும் மனக்குழப்பமும் நமது மர்மஸ்தானங்களில் உட்புகுந்து நம் வாழ்க்கையையே விழுங்கிவிடும்.

'நம்முடைய மனநிலைமையும், ஆன்மீக வளர்ச்சியையும் நன்கு வளர்த்துக்கொள்ள வேண்டுமானால் நாம் நம்மிடமுள்ள குறைபாடுகளை சிந்தித்துப்பார்த்து மனதில் கொண்டு பிறர் செய்திடும் தவறுகளை மன்னிக்கும் மனப்பாங்கை வளர்த்துக்கொள்ள வேண்டும்.

நம்மிடமுள்ள குறைகளை நாம் அறிந்துகொள்வது கடினமாகும். அதனால் பிறர் எடுத்துக் கூறுகையில் அவைகளை கவனத்துடன் செவிமடுத்து அவர்களுக்கு நன்றி செலுத்த கடமைப்பட்டுள்ளோம். பிறரிடமுள்ள குறைகளை காண்பதில் ஆவல் கொண்டவர்களாக இருத்தலும் கூடாது. பைபிள் கூறுவது என்னவென்றால், 'உன் உடன்பிறந்தோனின் கண்களிலுள்ள ஒரு சிறிய மரத்துகளின் தூசியை பார்க்கிறாய், ஆனால் உனது கண்களிலோ ஒரு மரத்துண்டே உள்ளதே அதை நீ பார்ப்பதில்லையே!'

சில நேரங்களில் மக்கள் பொறாமையினாலும், ஆக்கபூர்வமற்ற உணர்வுகளாலும் நம்மிடம் குறை கண்டிடுவர். அதை மனதில் இருத்திக்கொண்டிருந்தால், நமது சுய மரியாதையும் குறைந்துவிடும். அதே சமயத்தில் வாழ்க்கையின் சிக்கல்களுக்கு தீர்வு காணும் திறனும் நெகிழ்ந்து குறைந்துவிடும். நமக்கு ஒரு ஊனமோ அல்லது மனக்கோளாறோ இருந்திடுமாகில் நம்மிடமுள்ள குறையை ஒத்துக்கொண்டு மருத்துவரிடம் சென்று அதற்கு தீர்வு காண வேண்டுமே தவிர அது இல்லை என்பதாக வாதாடுவது உசிதமல்ல.

நமக்கு நம் குடும்பத்தாரிடமிருந்தோ, சக ஊழியர்களிடமிருந்தோ தவறு ஏற்பட்டுவிட்டால் அதை எடுத்துக்கூறி தீர்வு காணுவதில் ஆர்வம் கொண்டிருத்தல் சரியல்ல. பெரும்பாலும் நாம் அவர்களை புரிந்துகொள்வதில்லை. அவர்களும் நம்மைப் புரிந்து கொள்ளவில்லை என்பதாகும். நம் குடும்பத்தின் அங்கத்தினர் ஒருவர் மிகக்

கோபக்காரராக இருந்திடின், கோபத்துடன் அவர் பேசுகையில் நாம் மௌனமாக இருப்பதே சிறந்ததாகும். பின்னர் அவரது நல்ல கெட்ட குணாதிசயங்களைப் பற்றி நாம் அறிந்துகொள்ளாலாம்.

டாக்டர் ஜெனெட் ரைன்வாட்டர் என்பவர் சிறந்த எழுத்தாளரும், மருத்துவ சேவை செய்யும் மனோதத்துவ நிபுணரும் ஆவார்.அவர் மன்னிப்பதன் அழகைக்கண்டு கூறுவதாவது - 'மன்னிப்பதென்பது தான் செய்யும் ஒரு செயலைக் குறிக்கும் குணம் என்பதல்ல. அது தன்னை புண்படுத்துபவரின் பலவீனத்தையும் குறைகளையும் அறிந்துகொள்வதாகும். அதை அறிந்துகொள்வதென்பது தானும் அப்படிப்பட்ட செயலை செய்யும் தகுதி பெற்றுள்ளோம் என்பதாகும்'.

மனிதனிடம் உள்ளதொரு சிறந்த படைப்புத்திறன் யாதெனில் கடந்தகால காயங்களை குணப்படுத்துவதேயாகும். அதுவே மன்னிக்கும் சக்தியாகும். அது நம்மை நாமே குணப்படுத்திக்கொள்ள கடவுளால் கொடுக்கப்பட்ட ஒரு வரப்பிரசாதமாகும். அது பிரபஞ்சத்தின் திட்டத்துக்கு இணயாக நேர் வரிசைபடுத்தி நிற்பதால் அதைக்கொண்டு வாழ்க்கையில் நமக்கு நடக்கும் நிகழ்ச்சிகளின் போக்கை நாம் அறிந்துகொள்ள இயலுகிறது. மன்னித்தல் என்பது ஆன்மீகத்தின் சாரமாகும். ஏனெனில் அது நமது வேதனைகளையும் அல்லல்களையும் நீக்குகிறது.

சீக்கியர்களின் மதநூலான குருகிரந்த நூலில் மன்னித்தலின் தேவையையும் அவசியத்தையும் பலமுறை வலிபுறுத்திக் கூறப்பட்டுள்ளது. 'ப்யூரே தே பலா மானா, குஸ்ஸா மன் ன வாஸா' - உனக்கு கெடுதல் செய்தவனிடம் நேர்த்தியாக இரு.கோபம் உன் மனதை ஆட்கொள்ள இடம் கொடுக்காதே.

சில நேரங்களில் நாம் மன்னித்தல் என்பது தப்பிச் செல்வதற்கும், செயலின்றி சோம்பேறித்தனமாக இருப்பதற்கும், கோழைத்தனத்துக்கும் ஒரு சாக்குபோக்காக இருக்குமென்றும், எதிர்த்து நின்று போராட திறனற்றவர்களே மன்னிப்பவர்கள் என்றும் நினைக்கிறோம். அது சரியல்ல. மன்னிக்கும் குணம் ஒருவனை கோழையாக மாற்றிவிடாது. பைபிளில் மன்னிப்பதென்பது ஒரு பிரத்யேகமான சிறந்த ஆற்றல் எனக் கூறப்பட்டுள்ளது.

மன்னித்தல் என்றால் நம் நம்பிக்கையை இழந்த அவர்களிடம் ஒன்றுசேர வேண்டுமென்பதல்ல. அல்லது நாம் அவரது நடத்தையை

ஏற்றுக்கொண்டுவிட்டோம் என்பதுமல்ல. இதனால் என்ன அமைகிறதென்றால் துவேஷத்தை நாம் நம் மனதிலிருந்து அறவே அழித்து நீக்கிவிட்டோம் என்பதாகும். மன்னித்தல் என்பது நம் எதிராளியிடம் நமக்குள்ள பகைமை, தொந்தரவு முதலியவைகளை அடியோடு அழித்துவிடுகிது. மன்னிக்காவிடில் அது நம்மை தொடர்ந்து வரும் பணிகளில் பாதிப்பை ஏற்படுத்தும்.

நம்மிடம் நடந்த மனதாபத்தை மனதில் கொண்டிருந்தால் அது எதிராளியையும் பாதிக்கும். நாம் நம்மையே மனவேதனை கொண்டவர்களாகச் செய்துவிடுகிறோம் என்பதை உணர்வதே மன்னித்தல் என்பதன் முதற்படியாகும்.

உண்மை என்னவென்றால் கடந்த காலத்தில் நடந்த கசப்பான நிகழ்ச்சிகளை மனதில் கொண்டிருந்தால் அது எதிராளியை பாதிப்பதில்லை. நமது எண்ணங்களை எதிர்மறையான தாக்கங்களால் உணர்ச்சிவசப்படச் செய்து நம் நன்னடத்தையை வெகுவாக பாதிக்கிறது. 'மன்னிப்பதென்பது தூய்மையான மகிழ்ச்சியாகும்' என்கிறார் மார்டின் லூதர்.

புத்தர் பெருமான் கூறுவதாவது - 'முழுமையான பழிவாங்குதலும் இல்லை, முழுவதுமான மன்னிப்பும் இல்லை.' இது ஒரு குறிக்கோளான கொள்கையுமல்ல. இது ஒருவனின் அமைதியைக் காத்திட இன்றியமையாதது. குறைபாடுகளை வளர்த்துக்கொண்டே போவது என்ற பழக்கம் மனிதனின் ஆரோக்கியத்துக்கு கேடு விளைவிப்பதாகும்.

மன்னித்தல் என்பது ஆண்டவனால் கொடுக்கப்பட்ட ஒரு வெகுமதியாகும். இது மனிதனின் ஆழ்மனதிலிருந்து வெளிவருவதாகும். மன்னிப்பதால் பழிவாங்கும் நஞ்சு உலர்ந்துவிடுகிறது. மன்னிப்பவர் அன்பு, மகிழ்ச்சி, பணிவு, மனத்திருப்தி ஆகியவைகளின் உறைவிடமாகிறார்.

மார்க் II 25-ல் உள்ள ஏசுநாதரின் சொற்கள் கலங்கரை விளக்கொப்ப அமைகிறது. 'நீ எப்பொழுதும் பிரார்த்தனை செய்யும்பொழுது, உனக்கு யாரேனும் கெடுதல் செய்திருந்தால் அவர்களை உடன் மன்னித்துவிடு. அப்படிச்செய்தால் கடவுளும் உன் குறைகளை மன்னித்துவிடுவார்.' மேலும் 'நீ மன்னிக்காவிடில் நீயும் மன்னிக்கப்படமாட்டாய். செய்த தவறு உன்னை அவ்வளவு பாதித்திருந்தால் அது வெளிசெல்வதற்கு வேறு வழியே கிடையாது.'

மன்னிக்கும் குணமே உன்னை மீண்டும் பழிவாங்கச் செல்ல விடாது. ஏனெனில் மன்னித்தல், பழிவாங்கல் என்ற இவ்விரண்டுமே இணைந்திருக்க முடியாது. நாம் அன்பெனும் விதையை விதைத்தோமாகில் அன்பு மரமே வளர்ந்து கருணையாம் பூக்கள் நிறைய பூத்துக் குலுங்கிடும்.

ஒருக்கால் அச்சத்தினாலோ பழிவாங்கும் எண்ணத்தாலோ நாம் முட்செடியின் விதைகளை விதைத்தோமானால் நாம் கொத்து கொத்தான திராட்சைகளை அவ்விடத்திலிருந்து பெறமுடியாது. அதுபோலவே பட்டு அல்லது கம்பளித் துணிகளை ரேயானிலிருந்து அடையமுடியாது.

மறத்தல், மன்னித்தல் என்பது நமது மகான்களினுடையவும் அதை அனுசரிப்பவர்களினுடையவும் பண்பட்ட உரிமைக் குணமாகும். அகந்தையே மன்னிப்பதை தடை செய்வதாகும். அகந்தைத் தீ, அவ்வகந்தை கொண்டவனையே முதலில் எரித்திடும்.

மன்னிக்கும் குணம் கொண்டவன் தன்னை நல்லவன் என்று கூறிக்கொள்வதில்லை. தன்னை நல்லவன் என்று கருதிவிட்டால் நல்லவனாவதற்கான குணங்கள் அவனை அணுகுவதேயில்லை. மறத்தலையும் மன்னிப்பதையும் கொண்டவன் மிக்க பலம் கொண்டவனாகிறான்.

நம் வாழ்நாட்களோ மிகக் குறைந்தவை. அதில் யார் என்ன கெடுதல் செய்தார்கள் என்று பட்டியல் எடுத்து பார்ப்பதற்கு நேரமேது? மேற்கொண்டு நாம் சென்றுகொண்டிருப்பதே நாம் ஏற்கவேண்டிய வழியாகும்.

நாணயத்துக்கு இரு பக்கங்கள் இருப்பது போல் மன்னித்தலுக்கும் இரு பக்கங்கள் உள்ளன. குற்றவாளி தவறுதலாக மன்னித்தலை பலவீனமாக எடுத்துக்கொள்ளும் வாய்ப்பும் உள்ளது. நமது புராதன மகான்கள் இதன் விளைவுகளை முதலிலேயே உணர்ந்துள்ளனர். மன்னித்தல் என்பது சில நேரங்களில் தகுந்த பலன் தரும், எப்பொழுதுமல்ல என்று மகாபாரதத்தில் 'ந நித்யம் ஸிரேயசி க்ஷமா'*25 கூறப்பட்டுள்ளது.

பிருத்விராஜ் சௌகான், முகமத் கோரியை இருபத்தொரு முறை மன்னித்திருக்கிறான். ஆனாலும் கோரியின் மனம் மாறவில்லை. இருபத்திரண்டாம் முறை கோரி, பிருத்விராஜை கைப்பற்றிவிட்டான். அவனது கண்களின் ஜொலிப்பை காண வேண்டுமே. மன்னிப்பை

சிந்தித்து பொறுக்கியெடுத்து அளித்திடல் வேண்டும். அதுதான் வாழ்க்கையில் நடைமுறையில் காண்பதாகும். மன்னித்துக்கொண்டே போகிறவன் பல சங்கடங்களை எதிர்கொள்ளவேண்டியுள்ளது. அவன் தனது பணியாளர்களிடமும், பகைவர்களிடமும், தன்னை ஏற்காதவர்களிடமும் நிந்தனைபட வேண்டியதாகிறது. மற்றவர்களோ வெறுப்புடன்கூட அவனது மனைவியையே பார்க்கத் தொடங்குகின்றனர். அவளும் செய்வதறியாமல் தன் மனம் போன போக்கில் சென்றிடுவாள்.

அதாஸ்ய தாரான் இச்சந்தி பரிபூய க்ஷமாவத: |
தாராஸ்ச சாஸ்ய ப்ரவர்தந்தே யதாகாமம் அசேதஸ: ||*26

மன்னித்தல் ஒருவனுக்கு மன அமைதியைக் கொடுப்பதாகும். தான் மன்னிப்பதால் எதிராளி மனம் மாறிவிடுவான் என்று நினைப்பது முற்றிலும் முட்டாள்தனமான சிந்தனையாகும். லட்சத்தில் ஒருவனுக்கு இவ்வாறு மனம் மாறிடலாம். இது பலவீனத்தை வெளிப்படுத்துவதாக நினைக்கும் எதிராளி மேலும் மேலும் தொடர்ந்து அவனை துன்புறுத்தலாம். தீவிரவாதி ஒருவனை மன்னித்தல், அவனை சிறையிலிருந்து வெளிக்கொணர்தல் முதலியவை மேற்கொண்டு பல கொடிய குற்றங்களை செய்ய காரணமாக அமைந்திடும்.

மனசாட்சியை முற்றிலும் இழக்காத ஒருவனுக்கு மன்னித்தல் ஒரு சீர்திருத்தும் கருவியாக அமையலாம். ஏனையோருக்கு அது மேற் கொண்டு விடுபட்ட பல கொடிய செயல்களை மேற்கொள்வதற்கு ஒரு கைப்பிடியாக அமைந்திடலாம். அரசியலில் இது தோல்வியையே கொடுக்கும்.

இறுதியில் மன்னித்தலை ஆராய்ந்து பார்த்தோமானால் பலமான மனதுடன் அளிக்க வேண்டும். எதிராளி தன்னை மன்னித்ததனால் தான் செய்தகுற்றங்கள் எல்லாமே அழிந்துவிட்டதென்று நினைக்காத வண்ணம் மன்னிப்பு அளித்திடல் வேண்டும்.

## மேற்கோள்கள்


1. *Vanaparva 313.88*
2. *ibid 33.49*
3. *ibid*
4. *ibid 33.40*
5. *6.14*

6. 6.9
7. 1.2.159
8. *Purva Adhyaya* 32.49
9. 2.32
10 *Vai.Kha.Va.Ma.* 11.18-19
11. (2)
12. *Nitidvisastikaa* 64
13. 1.33.8-9
14. *Virataparvan* 16.12
15. *Aswamedhikaparvan* 92, *Southern Edition XIX II*
16. *Virataparvan* 29.37
17. *Vanaparvan* 29.25
18. *Aswamedhikaparvan* 82
19. *ibid* 82, *Southern Edition XIX II*
20. *Ramayana* 6.113.28
21. *ibid* 6.113.39
22. *ibid* 6.113.36
23. *ibid* 6.113.37
24. *ibid* 6.111.101
25. *vanaparvan* 28.6
26. *ibid* 28.14

# 18

## விவேக

## பகுத்தறிதல்

மனிதனின் பண்புகளில் உடல், புத்தி, அறிவாற்றல், ஆன்மீகம் என பாகுபடுத்திக் கூறிடலாம். அறிவாற்றலில், பகுத்தறிதல் - 'விவேக' அமைகிறது. அது நல்லது கெட்டது, பிடித்தது பிடிக்காதது, பயனுள்ளது பயனற்றது, பலனுள்ளது பலனற்றது என்று பாகுபடுத்தி ாரக்கும்இயற்கை தூண்டுதலினால் அமையும். ஆற்றல் ஆகும். பகுத்தறிந்தாராய்தல் வாழ்க்கையில் எந்நேரமும் எல்லாச் செயல்களிலும் செய்ய வேண்டிய ஒன்றாகும்.

இதில் தளர்ச்சி ஏற்படுதல் எல்லா ஆபத்துகளுக்கும் அடிப்படை வேராக அமைகிறது - 'அவிவேக: பரமாபதாம் பதம்.'*1 பாரவி கிரார்தார்ஜுனீயத்தில் உரைத்தபடி திரௌபதி யுதிஷ்டிரருக்கு மற்றவைகளைப் பற்றி பேசுகையில் இடையில் நன்கு சிந்தித்து காரியத்தை செய்ய முடிவெடுப்பவனிடம் பொறாமை கொள்ளும் வெற்றியும் வளமையும் தானாகவே அவனை தன்னிருப்பிடமாகக் தேர்ந்தெடுக்கின்றன என்று கூறுகிறாள். 'விம்ருச்ய காரிணம்'*2. 'வ்ருணு தே ஹி'... 'குணலுப்தா: ஸ்வயமேவ ஸம்பத.'*3 ஆனால் இப்படிப்பட்ட ஆற்றல் படைத்திருந்தால் மாத்திரம் போதாது அதை சரியான இடத்தில் சரியான நேரத்தில் தான் அடைவதற்கென குறிப்பிட்ட இலக்கை அடைவதற்கு பயன்படுத்த வேண்டும்.

அதாவது தன் பகுத்தறியும் ஆற்றலை பயன்படுத்திட சரியான வழியில் புத்தியைச் செலுத்தி, மற்ற வேண்டாத இதர விஷயங்களில் மனதை சிதற அடிக்காமல் பேரவா, பட்சபாதம் இவைகளால் பாதிக்கப்படாமல் இருக்கவேண்டும். விவேகத்துடன் கலந்த காரியகாரண ஆய்வு, அத்துடன் அறிவுபூர்வமான நோக்குடன் அணுகுதல் வெற்றிபெறுவதற்கும் தோல்வி அடையாமல் இருப்பதற்கும் மிகவும் அத்தியாவசியமான தேவையாகும்.

கடவுளும் இதையே வற்புறுத்திக் கூறுகிறார். அர்ஜுனனுக்குக் கொடுத்த நீண்டதொரு உபதேசத்துக்குப் பின்னர் பகவான் அவனிடம் கூறுகிறார் - 'விம்ருஸ்ய ஏதத் அஸேஷேண யதேச்சஸி ததா குரு'.*4 - நான் எடுத்துக் கூறியதெல்லாம் நன்கு ஆராய்ந்து பார்த்து உனக்கு எது சரியென்று தோன்றுகிறதோ அதை நீ அனுசரித்திடு என்கிறார்.

தான் அவ்வளவு நீண்ட உபதேசம் கொடுத்த பின்னர் அர்ஜுனனை தன் சிந்தனைக்கேற்ற முடிவை எடுத்துக்கொள் என்று தாராள மனப்பான்மையுடன் கூறுகிறார். கடவுள் கூறியிருக்கிறார் என்று நினைத்து அதையே முடிவாக ஏற்கவேண்டியதில்லை. அதை நன்கு அசைபோட்டு, முன்னும் பின்னும் என்ன ஏற்படும் என்பதைச் சிந்தித்து அதை ஏற்றுக்கொள்வது சரியென்று தோன்றினால் ஏற்றுக்கொள் இல்லாவிடில் ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை என்கிறார்.

நாம் ஒவ்வொருவரும் அந்த அணுகுமுறையை பின்பற்ற வேண்டும். பிறர் கூறுவதற்காக அவ்வழியை ஏற்கக்கூடாது. ஒருவர் கூறிய ஒவ்வொன்றையும் நன்கு ஆழமாகவும் அறிவுபூர்வமாகவும் சிந்தித்து எவ்வளவு உயர்ந்ததாகவும் முதலில் கேட்டதும் உசிதமானதாவும தோன்றிடினும் நன்கு ஆலோசித்து பின்னர் சீரான முடிவெடுக்க வேண்டும். இங்கு தான் அந்த விவேகம் - பகுத்தாராயும் தன்மை வெளிப்படுகிறது.

நல்லறிவு படைத்த ஒருவனுக்கு, ஒரு நல்ல மனிதனுக்கு இது சிரமமானதல்ல. ஐயத்தினால் தாக்கப்பட்டபோது மூளையின் பகுத்தறியும் உருப்பு என்ன செய்ய வேண்டும் என்பதை எடுத் துரைக்கும். அதுவே இறுதியான முடிவாகும். அதில் மாற்றம் வேறு ஏதும் இல்லை. 'ஸதாம் ஸந்தேகபதேஷு வஸ்துஷு ப்ரமாணம் அந்த:கரணப்ரவ்ருத்தய:'*5

ராமாயணத்தில் ராமர் இவ்வாறு விவேகத்துடன் சிந்தித்ததால் பல சிக்கலான சந்தர்ப்பங்களை கடந்து தன்னையும் அச்சிக்கல்களில் இருந்து மீட்டுக்கொண்டார். ராமரை மீண்டும் அயோத்திக்கு அழைத்துச் செல்ல விரும்பி பரதன் தன் பரிவாரங்களுடன் சித்திரகூடத்துக்கு வருகிறான். லக்ஷ்மணனோ ராஜ்ஜியத்தை அடைந்த பரதன் தன் அண்ணனை மீண்டும் ராஜ்ஜியமடைவதிலிருந்து முழுவதுமாக அகற்றிட விரும்பியே வந்துள்ளான் என்று கூறினான். ஆனால் ராமரோ அவ்விதம். சிந்திக்கவில்லை.

கோபத்தினால் குருடான லக்ஷ்மணனோ. ராமரை கொல்வதற்காகவே பரதன் அங்கு வருகிறான் என்று தீர்மானமே செய்துவிட்டான். ஆனால் ராமரோ, லக்ஷ்மணனைப் பார்த்து தன் உடன் பிறந்தவன் அவ்விதம் செய்யமாட்டான். என்னைக் கொல்வதற்காக அவன் அங்கு வந்திருக்கமாட்டான் என்பதை வலியுறுத்தினார். அண்ணனைக் கொல்வதென்பது தன் தந்தையைக் கொல்வதற்கு இணையாகுமன்றோ. ராமரின் நடுநிலைதாங்கும் குணமே இவ்வாறு சிந்திக்க வைத்தது. இதுவே பல கொடிய முடிவுகளை தவிர்த்து சந்தர்ப்பத்தை காத்துக்கொடுத்தது.

இதுபோன்ற நடுநிலை தாங்கும் குணத்தினாலேயே விபீஷணனையும் காக்கிறார். அனுமனைத் தவிர எஞ்சியுள்ள யாவருமே விபீஷணனை ஏற்றுக்கொள்ளக்கூடாது என்று கூறினார்கள். ஏனெனில் அவன் பகைவனிடமிருந்து வந்துள்ளானன்றோ? அவனது பலத்தை அறிந்த ராமர் இந்த அரிய சந்தர்ப்பத்தை நழுவவிட விரும்பவில்லை. அவர் அவனுக்கு காட்டிலிருந்துகொண்டே அரசுரிமையை அளித்தார். அவனை தன் நெருங்கிய நண்பனாக ஏற்க அவனும் ராவணனுடன் போர் முடியும் வரை நன்றி விசுவாசத்துடன் அவருக்கு வேண்டிய உதவிகளைச் செய்தான்.

ராமர் இவ்வாறு தன் விவேகத்தையும் பகுத்தறிந்தாராயும் திறனையும் பயன்படுத்திட அவரது மனைவியோ மிகவும் சிக்கலான சந்தர்ப்பத்திலும் தன் பகுத்தறியும் திறனை பயன்படுத்தாத காரணத்தினால் சொல்லொண்ணா துக்கங்களுக்கும் அல்லல்களுக்கும் ஆளானாள்.

மாரீசன், ராமனது பாணத்தினால் அடித்துக் கொல்லப்பட்ட சமயம் ராமரது குரலில் மாரீசன் 'ஆ, லக்ஷ்மணா' என்று கூவி அழைத்த நேரம் சீதை மனங்கலங்கி லக்ஷ்மணனை வற்புறுத்தி வலுக்கட்டாயப் படுத்தி ராமனைக் காக்க அனுப்பி வைக்கிறாள். அவளது ஆவேச உணர்ச்சி பகுத்தறியும் திறனை விஞ்சிவிட்டது. அதுவே அவளை அல்லல் வலையில் சிக்கவைத்தது.

அவள் லக்ஷ்மணனது அறிவுரையை அவமதித்து புறக்கணித்தது மாத்திரமின்றி, அவனை பரதனின் ரகசிய தூதனென்றும், சரியான சமயத்தை எதிர்பார்த்தே இருந்தானன்றும் கோபாவேசத்தில் பலபடி பேசி லக்ஷ்மணனின் மனதை புண்படுத்தி அவனை பலவந்தமாக அனுப்பி வைத்தாள். அவன் எவ்வளவோ நல்லுரைகளை எடுத்துச் சொல்லியும் அவையெல்லாம் பயனற்றதாக ஆயிற்று. ராமனும்

லக்ஷ்மணனும் குடிலில் இல்லாத சமயம் ராவணனுக்கு அவளை அபகரித்துச் செல்வது எளிதாக ஆயிற்று. பிறகு நடந்தவைகள் எல்லோரும் அறிந்தவைகளாகும்.

இதுபோன்றே முன்னரும் அவள் நடந்துகொண்டாள். மாரீசன் பொன்மானாக குடிலின் அருகாமையில் துள்ளிக்குதித்து விளையாடுகையில் அதனால் மனம் மிகவும் கவரப்பட்டாள். அவளது கணவன் இது உண்மையான மானல்ல. இது அரக்கர்களின் மாயையாக இருக்கும். அரக்கர்கள் இது போன்ற மாயைகளில் உருவம் மாறி மயக்குவது இயற்கையே. தங்க மான் உலகில் இருப்பதில்லையே, கேள்வியும் பட்டதில்லையே என்று கூறி தடுக்கிறார்.

ஆனால் அவளது பிடிவாதம் முன்னின்றது. தனக்கு ஒரு அழகான மான் மனங்களித்து விளையாடத் தேவையென்றும், வனவாசம் முடிந்து அயோத்திக்கு மீண்டும் திரும்பிச் செல்லுகையில் தன் தாய்மார்களுக்கு அது சிறந்த வெகுமதியாக இருக்குமென்றும் பிடிவாதம் பிடித்து கேட்டிட, அது அவளது அல்லல்களுக்கெல்லாம் பெரியதொரு காரணமாக மாறிவிட்டதே. உண்மையிலேயே 'பரம் ஆபதாம் பதம்' என்று எல்லா விபத்துக்களுக்கும் காரணமாக ஆயிற்று.

அறிவுள்ள ஒருவன் திண்ணமாக செயலின் முன்னும் பின்னும் என்ன நடக்கும் என்பதை நன்கு ஆராய்ந்து சிந்தித்து செயல் பட வேண்டும் என்பது கூறப்படுகிறது.

அவசரமாக தீர ஆலோசிக்காமல் செய்யப்படும் செயல்கள் கூர்மையான பாணம் மார்பில் தைத்து புண்ணில் குத்தியதுபொல் செயல் முடிவடையும் வரை துளைத்து வேதனைப்படுத்திடுவது திண்ணம்.

குணவத் அகுணவத் வா குர்வதா கார்யஜாதம்
பரிணதிரவதார்ய யத்னத: பண்டிதேன |
அதிரபஸக்ருதானாம் கர்மணாம் ஆ விபத்தே:
பவதி ஹ்ருதயதாஹி ஸல்யதுல்யோ விபாக: ||[*6]

மேற்கூறியது சீதைக்கு மாத்திரமன்றி திரௌபதிக்கும் பொருந்துவதாகும். அவளது சுயம்வரம் நடக்கையில் சிறிதும் நாநயமின்றி அவள் கர்ணனை குறித்து 'நான் ஒரு தேரோட்டியின் மகனை மணக்க விரும்பவில்லை' என்று அவமதித்துக் கூறிய சொற்கள்

அவனை மிகவும் பாதித்தது. அவளை அடையவும் முடியாதபடி செய்துவிட்டது. அது அவனை அவளுடைய பெரும் விரோதியாகச் செய்துவிட்டது.

நீதி நூல்களும்கூட இக்கருத்தை எடுத்துரைக்கின்றன. எவன் ஒருவன் ஒரு செயலின் அனுகூல, பிரதிகூலங்களை சரியாக ஆராய்ந்து பார்க்கும் திறன் அற்றவனாக இருந்து அச்செயலை தொடங்கிவிட்டானாகில் அதன் விளைவு என்ன என்பதை எளிதாகவே கூற இயலும்.

குருலாகவம் அர்தானாம் ஆரம்பே கர்மணாம் பலம் |
தோஷம் யோ ன விஜானாதி ஸ பால இதி ஹோச்யதே ||*7

மேலும் எவனொருவன் செயலினால் ஏற்படும் பலனை சிறிதும் சிந்திக்காமல் பணியை அவசரமாக செய்ய துணிந்துவிடுகிறானோ அது கிம்சுக மரத்தின் பழங்களை தேடிச் செல்வதற்கு ஒப்பாகும். (கிம்சுக மரத்தில் பழமே ஏற்படாது).

அவிஞாய பலம் யோ ஹி கர்ம து ஏவானுதாவதி |
ஸ ஸோசேத் பலவேலாயாம் யதா கிம்சுகசேவக: ||*8

சரியான முறையில் பாகுபடுத்திப் பார்ப்பதற்கு முதலில் அத்தியாவசியமாக தேவையாயிருப்பது தெளிவான புத்தியாகும்.

காமந்தக நீதிசாரத்தில் 'புத்த்யா ப்ரஸன்னயா'*9 என்று கூறப்பட்டுள்ளது. புத்தியானது கோபத்தினாலோ, தவறான அபிப்பிராயம் கொண்டிருந்தாலோ, பொறாமையாலோ, பகைமையினாலோ அல்லது ஒன்றிலேயே தோய்ந்து இருந்தாலோ, வழிதவறி துன்பத்தை அனுபவிக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. இறுதியில் கூறிய காரணத்துக்கு எடுத்துக்காட்டு யுதிஷ்டிரர் ஆவார்.

ஐந்து பாண்டவ சகோதரர்களுக்குள் மிக புத்திசாலி. ஆனால் சூதாட்டம் ஆடுவதில் மனது தோய்ந்துவிட்டதால் சூதாட்டத்தில் தன் சகோதரர்களை இழந்தது மாத்திரமல்ல, மனைவியை மாத்திரமுமல்ல தன்னையே இழக்கும்படியான நிலை ஏற்பட்டது. திருதராஷ்டிரனால் இழந்த எல்லா பொருட்களையும் மீட்கப்பட்ட பிறகும் மீண்டும் சூதாட்டத்தில் மனதை ஈடுபடுத்தினார். அதன் விளைவு அவர் மட்டுமே இன்னல்களுக்கு ஆளாகாமல் அவரது சகோதரர்களையும் பாதித்ததோடு மனைவியையும் வெகுவாக பாதித்தது.

அவள் கௌரவர்கள் சபையில் ஆடை உருவப்படும்படியான துக்கத்தையும் ஏற்கும்படியாயிற்று. அவர் ஒரு நிமிடம் சற்றே பொறுத்திருந்து தனது நற்புத்தியினால் சிறிது சிந்தித்துப் பார்த்திருந்தால் எல்லோரையும் இன்னல்களிலிருந்து பாதுகாத்து அவமரியாதையையும் தவிர்த்திருக்கலாம். ஒவ்வொரு சந்தர்ப்பத்தில் புத்தியில் மிகச்சிறந்தவர், மனசமநிலையே உருவெடுத்தவர் போன்ற யுதிஷ்டிரர், தன் மனக்கட்டுப்பாட்டை இழந்து பாண்டவர்களையே முற்றிலும் வேரோடு அழித்துவிடவல்லதொரு நிலைமையை ஏற்படுத்திவிட்டார்.**

இங்கு கிருஷ்ணரின் விவேகமே அச்சூழலை காப்பாற்றியது. அவரது அனுபவ விவேகம் இல்லையாகில் மகாபாரத போரில், துரியோதனன் எளிதாகவே வெற்றியடைந்திருப்பான்.

மேற்கூறிய எடுத்துக்காட்டு கோபம் மனஎழுச்சி இவைகளால் பார்வை மறைக்கப்பட்டதால் ஏற்பட்ட விளைவுகளாகும். இவ்விதம் ஒருமுறை இழக்கநேரிட்டால் மேலும் மேலும் ஒருவன் வீழ்ச்சியையே அடைவான்

'விவேகப்ரஷ்டானாம் பவதி விநிபாத: ஸதமுக:'*10

அதனால் ஒருவன் பேசுவதற்கு முற்படுகையில் தான் பயன்படுத்தும் சொற்களை ஆராய்ந்து பார்த்து பயன்படுத்துதல் வேண்டும். சிந்திக்காமல் சொற்களை பயன்படுத்தினால் இது பல தவறான முடிவுகளை ஏற்படுத்தி பல காலம் அழியாமலிருந்து பாதித்துவிடும்.

ஸுசிந்த்ய சோக்தம் ஸுவிசார்ய யத் க்ருதம் |
ஸுதீர்ககாலேபி ன யாதி விக்ரியாம் ||*11

அபிப்பிராயம் கேட்டதும் உடனேயே ஒருவன் தீர்மானத்துக்கு வரக்கூடாது என்று கூறுவது நன்றே. ஒருவன் ஒரு சில நொடிகள் பொறுத்திருந்து ஆராய்ந்தறிந்து, பல கோணங்களில் அதை சிந்தித்துப் பார்த்து பிறகு ஒரு முடிவுக்கு வர வேண்டும். தீவிர ஆசை அடங்குகையில் தெளிவான சிந்தனை எழுந்திடும். அதனால் ஒருவன் செய்த செயலைக் குறித்து அல்லது செய்ய இருக்கும் செயலைக் குறித்து மனம் வருந்திடுவான். ஒரு சில நொடிகள் சிந்தித்துப் பார்த்தால் பிறகு பச்சாதாபப்பட வேண்டிய நிலைமை ஏற்படாது.

---

(** இந்நிகழ்ச்சியைப் பற்றிய விவரங்களுக்கு 52 - 56 பக்கங்களை பார்க்கவும்)

ஒருவன் ஒரு முடிவை தீர்மானிக்கும் முன்னர் பிறரிடம் ஆலோசனை கேட்பது சிறந்ததாகும். தானே யோசித்து முடிவெடுப்பது சரியாக அமையாது - 'நைகஸ்சார்தான்விசின்தயேத்.' பிறருடன் ஆலோசிப்பதால் தன் மனதில் எழாத பல கோணங்களில் சிந்திக்கும் வழிகள் மனதில் தோன்றுகின்றன. இதன் நோக்கம் இதனால் பிறர் கூறிடும் ஆலோசனையையே ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதல்ல. ஆனால் அவர்களது ஆலோசனைகளைக் கேட்பது நன்று.சில நேரங்களில் அந்த ஆலோசனைகள் நமக்கு நல்ல வழிகளை வகுக்காததாகவும் இருக்கலாம். அதனாலேயே இவ்வாறு கூறப்படுகிறது - 'மூடா: பரப்ரத்யயநேயபுத்தி:'*12

புத்திசாலியானவர்கள் பிறரது ஆலோசனை கேட்டு பின்னர் எல்லாவற்றையும் நன்கு ஆலோசித்து சிறந்த கருத்தை ஏற்றிடுவார்கள். 'ஸந்த: பரீக்ஷ்யாந்யதராத் பஜன்தே'. 'சிறந்த விமர்சகர்கள் நன்கு சிந்தித்த பிறகு பொறுக்கி நல்ல முடிவை எடுப்பர்'. முட்டாள்களோ பிறருடைய கருத்துகளை ஏற்று நிச்சயித்திடுவர் என்று க்ஷீரஸ்வாமி முதலிய பலர் குறிப்பிடுகின்றனர்.

விவேகம் என்பது வாழ்க்கையில் எல்லா செயல்களிலும் அடிப்படையாக அமைய வேண்டும். அமரகோசம் இதை 'ப்ருதகாத்மதா'*13 என்கிறது. இதன் விளக்கம் கொடுக்கையில் க்ஷீரஸ்வாமி 'பிரகிருதியும் புருஷனும் வேறுபடுத்துதல்' என்றும் மற்றவர்களோ பொருள்களின் மாறுபட்ட நிலைகள் - 'பாவானாம் ப்ருதக்ஸ்வரூபத்வம்' என்றும் கூறுகின்றனர். தரணி அமரத்தைப் போன்ற பொருள் அளிக்கிறார். ஆனால் சொல்லும் முறையில்தான் வேறு உள்ளது. அவரது கருத்துப்படி 'ப்ருதக்பாவ' - வேறுபாடு, பிரித்தல், மனது, பகுத்தறிவினால் பிரித்துப் பார்த்தல். மனுவும் இதை உருவகப்படுத்தி இவ்விதம் கூறுகிறார் - 'ஸத்யபூதாம் வதேத் வாசம் மன:பூதாம் ஸமாசரேத்' - ஒருவன் வாய்மையினால் பரிசுத்த மடைந்த பேச்சை பேச வேண்டும் மனதினால் தூய்மையாக்கப் பட்ட நடத்தையை மேற்கொள்ள வேண்டும்.

வேர்ச்சொல்லிலிருந்து சொல் உருவாக்கப்பட்ட முறையிலும் 'ப்ருதக்பாவ' என்னும் பொருளே கூறப்பட்டுள்ளது. இச்சொல் 'விச்' என்னும் வேர்ச்சொல்லிலிருந்து 'விச் ப்ருதக்பாவ' என்னும் தாதுவுடன் 'வி' என்னும் முன்னொட்டை இணைத்து 'விவேக' என்றால் 'விஸேஷேண வேக:' - மிக்க கவனத்துடன் பாகுபடுத்திப் பார்த்தல் என்கிறது. அதாவது நல்லது கெட்டது, பண்பற்றது பண்புடையது, மனதுக்கு வந்தது மனதுக்கொவ்வாதது, ஏற்றுக்கொள்ளத் தகுந்தது

ஏற்றுக்கொள்ளத் தகாதது என சுருங்கக்கூறிடின் ஆழ்ந்து அலசிப் பார்க்கும் அணுகுமுறையாகும்.

இந்த அணுகுமுறையைத்தான் சாஸ்திரங்களும் கூறுகின்றன. சரகர் கூறுகிறார் - 'பரீக்ஷ்யகாரிணோ குஸலா பவந்தி'*14 - ஒன்றை பரீட்சித்து பார்ப்பதனால் திறமை வளர்கிறது. இதை அவர் நோயாளிகளைக் குறித்துக் கூறுகிறார். நோயாளிகளை முதலில் நிர முழுவதும் நன்கு பரீட்சை செய்து பார்க்க வேண்டும். நோயாளியை பரீட்சை செய்து பார்க்காவிடில் மருத்துவர் நோயாளிக்கு உண்மையாக சிகிச்சை செய்பவரல்ல - 'நாபரீக்ஷிதம் அபினிவேஸேதஸம்யக்ப்ரயோகனிமித்தா ஹி ஸர்வகர்மணாம் ஸித்திரிஷ் டாவ்யாபச்சாஸம்யக்ப்ரயோகனிமித்தா.'

சரகர் மருத்துவர்களைக் குறித்துக் கூறியது அவர்களுக்கு மாத்திரம் பொருந்துவதில்லை. மற்ற எல்லோருக்குமே பொதுவாக பொருந்துவதாகும். ஒவ்வொரு மனிதனும் 'பரீக்ஷ்யகாரீ'யாக இருக்க வேண்டும். அப்பொழுதுதான் காரியசித்தி - வெற்றி கிட்டிடும். இவ்வாறு நன்கு பரீட்சை செய்து காரியத்தை செய்வதே 'பரீகக்ஷ்யகாரிதா' - விவேகம் எனப்படும்.

இந்த விவேகத்தையே காளிதாசன் வற்புறுத்திக் கூறுகிறான். துஷ்யந்தனால் சகுந்தலை கைவிடப்பட்டபொழுது அவளை அழைத்துச் சென்ற சார்ங்கரவன் என்னும் முனிகுமரன் தனிமையில் ஒருவரும் அறியாமல் ஒரு முன்பின் அறியாத புதிய மனிதருடன் காதல் கொண்டதைக் குறித்துக் கூறுகையில் இவ்விதம் கூறுகிறான்.

அத: பரீக்ஷ்ய கர்தவ்யம் விஸேஷாத் ஸங்கதம் ரஹ: |
அஜ்ஞாதஹ்ருதயேஷு ஏவம் வைரீபவதி ஸௌஹ்ருதம் ||*15

'இப்படிப்பட்ட முரட்டுத்தனமான செயல் தன்னையே சுட்டுவிடுகிறது' -'இத்தம் ஆத்மக்ருதம் சாபலம் தஹதி'.*16 அதனால் ஒருவனுடன் புணருகையில் அதுவம் முன்பின் அறியா புதிய மனிதருடன் தனிமையில் சேர்ந்திடுகையில் நன்கு ஆலோசித்து சிந்தித்த பின்னரே செயல்பட வேண்டும். உள்ளங்களை முழுவதும் அறியாததால் நட்பு பகைமையில் மாறிவிடுகிறது.

காளிதாசனின் இவ்வறிவுரை அன்றைக்கு பொருத்தமானதுபோல் இன்றைக்கும் பொருத்தமானதாக இருக்கிறது. இன்றைய இளம் தலையினர் இதை நன்கு கவனத்தில் கொள்ள வேண்டும். காப்பவர்களின் எண்ணத்தை அறியாமல், அவர்களுடைய

விருப்பத்துக்கு மாறாக அவர்களுக்கு தெரியாமல் காதலிப்பதால் பல இடையூறுகளையும் இன்னல்களையும் எதிர்க்கவேண்டி உள்ளது. இவைகளை தவிர்க்கலாம்.

விவேகத்துக்கு தெளிவான புத்தி அத்தியாவசியமானதாகும். தானியத்தை தவிட்டிலிருந்து பிரித்து எடுக்குபடியான ஆழமான பரந்த சிந்திக்கும் திறன் வேண்டும். இந்நூலாசிரியர் இங்கு தன் குழந்தை பருவத்தில் படித்த ஒரு கதையை நினைவு கூறுகிறார். அக்கதையின் தலைப்பு 'ஐந்து அரிசிகள்'.

ராஜ்கரில் தான்ய என்னும் பெயர்கொண்ட வியாபாரி ஒருவன் இருந்தான். அவனுக்கு உஜ்ஜிகா, போகவதி, ரக்ஷிகா, ரோகிணி என் நான்கு மருமகள்கள் இருந்தனர். ஒருமுறை அவன் மனதில் தனக்கு ஏதோ அசம்பாவிதமாக ஒன்று நேரிடப்போகிறது என்றும் அதனால் அவர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டும் என்ற எண்ணம் தலை தூக்கியது. அவன் ஒரு விருந்தோம்பலுக்கு எல்லோரையும் அழைத்தான். யாவரும் அவன் அழைப்பிற்கிணங்கி வந்து சேர்ந்தனர்.

அவர்கள் எல்லோரும் உணவருந்திய பிறகு தன் நான்கு மருமகள்களையும் அழைத்து ஒவ்வொருவரிடமும் ஐந்து நெல்லைக் கொடுத்து அதை வெகு ஜாக்கிரதையாக பாதுகாக்க வேண்டுமென்றும் பிறகு அவன் கேட்கும் நேரம் அதை திருப்பிக்கொடுக்க வேண்டுமென்றும் கூறினான். முதல் மருமகளோ எனது மாமனாரிடம் தானியக் குவியலே நிறைந்து கிடக்கிறது. நான் எதற்காக இந்த ஐந்து நெல்லை பாதுகாக்க வேண்டும். அவர் திருப்பிக் கொடுக்கும்படி கேட்கும் நேரம் அவரது தானிய பண்டாரத்திலிருந்து ஐந்து நெல்களை கொணர்ந்து கொடுத்தால் போகிறது என்று அசிரத்தையாக தூக்கி எறிந்துவிட்டாள்.

இரண்டாமவளுக்கும் அதே எண்ணம் தோன்றிட அவள் அத்தானியத்தை வாயிலிட்டு கடித்து விழுங்கிவிட்டாள். மூன்றாமவளோ தனது மாமனார் கொடுத்ததால் அதில் ஏதோ சிறப்பான சங்கதி இருக்கும் என்றெண்ணியவளாய் மிக்க கருத்துடன் அவைகளை ஜாக்கிரதையாக தனது நகைப்பெட்டியில் வைத்து விட்டாள். அவர் வந்து கேட்டால் திரும்பக் கொடுத்துவிடலாமென்று எண்ணினாள். நான்காமவளும் அது போலவே நினைத்தாள். ஆனால் அவள் அவைகளை ஜாக்கிரதையாக நகைப்பெட்டியில் வைக்காமல் அவைகளை மண்பெட்டியில் விதைத்து விட்டாள்.

தண்ணீர் பாய்ச்சிட அவைகள் நன்கு வளர்ந்தது. அவளும் அதில் வந்த நெல்லை அறுவடை செய்து மீண்டும் நெல்லை பயிரிட்டாள். இவ்வாறு மீண்டும் மீண்டும் பயிரிட அவளிடம் ஏராளமாக தானியம் குவிந்துவிட்டது.

சில வருடங்களுக்குப் பிறகு அவ்வியாபாரி தான் கொடுத்த தானியங்களை திரும்பக் கொடுக்கும்படி கேட்டான். முதல் இரு மருமகள்களிடம் அந்த தானியமே இல்லை. மூன்றாமவளிடம் அவன் கொடுத்த அதே நெல் தானியம் இருந்தது. நான்காம் மருமகளிடமோ தான் கொடுத்த தானியம் பலமடங்கு பெருகியதாக இருந்தது. வியாபாரியும் நல்ல பாடம் புகட்டினான் - நல்லதொரு அறுவடையை அடைந்திட உன் விவேகத்தை பயன்படுத்திடு என்பது பாடமாகும்.

நமது வாழ்க்கையை வெற்றிகரமாக நன்கு நடத்திட மாத்திரம் விவேகம் வேண்டுமென்பதில்லை. ஆன்மீக வளர்ச்சிக்கும் விவேகம் தேவையானதே. விவேகத்தினால் இவ்வுலக வாழ்க்கையில் மூழ்கிடாமல் விவேகமுள்ளவன் இருந்திடுவான் - 'கிம் வா விமோஹாய விவேகினாம் ஸ்யாத்.'*17

பார்க்க இன்பமாகத் தோன்றுவதெல்லாம் உண்மையில் துக்கமே என்பதை அவர்கள் நன்கு உணர்ந்திருந்தனர் - 'ஸாஸ்த்ரசிஷ்டானாம் விவேகினாம் ஸுகமாத்ரம் துக்கமேவேதி விநிஸ்சய:'*18 ஏனெனில் உலகியல் சம்பந்தப்பட்ட செயல்கள் எல்லாமே பார்ப்பதற்கு மகிழ்ச்சி அளிப்பதுபோல் இருந்திடினும் உண்மையில் மகிழ்ச்சி அளிப்பவையல்ல. அவை மனிதனை மீண்டும் நல்லதோ கெட்டதோவான பல செயல்களில் ஈடுபடுத்தி அதன் பலனாக மீண்டும் பிறப்பு இறப்புச் சுழலில் சிக்கவைக்கிறது. அவர்கள் சுவர்கத்தில் வசிப்பதையும் விரும்புவதில்லை. அவர்களது குறிக்கோளோ விடுதலை பெற்று மோக்ஷமடைவதே யாகும். அதனால் அதையே அடைய விரும்பிடுவர். அவர்கள் சுவர்கத்தை விஸ்தரிக்கப்பட்ட பாம்பின் பிறிதொரு படமாகவே எண்ணிடுவர் - 'விவேகினஸ்து ஆயதிம் ஆலோசயந்த: ஸ்வர்கம் அபி குபிதபணீபணமண்டலசாயாப்ரதிம இதி அபஜஹதி'*19

பகுத்தறிபவர்கள் பலருடைய யோசனைகளை ஏற்று அவைகளை எல்லாம் நன்கு ஆலோசித்து பின்னர் செயல் படுவதால் 'நாநார்தாவமர்ஸனம் விமர்ஸ:'*20 அவர்கள் மாற்றிட இயலாத கடும் திடபுத்தி .படைத்தவர்களாய் இருந்திட இயலாது. அவரது திறந்த

பரந்த மனப்பான்மை அவர்களை மென்மையானவர்களாகச் செய்திடும். 'அக்ஷிபத்ரகல்ப ஹி தே*21 (விவேகின:) அவர்கள் கண்ணின் இமை போன்றவர்கள்.'

வித்யாபரிணயரின் கருத்துப்படி விவேகம் என்பது பரம்பொருளை அடைவதற்கான ஒரு சாதனமாகும்.

வித்யுத்தாண்டவடம்பரம் ஜகதிதம் ம்ருத்யோர்முகான் நிர்கதம்
ஸத்யஞானஸுகைகரூபம் அமலம் ப்ர்ஹ்மைவ தத் சாஸ்வதம் |
தத் ப்ராப்தௌ அயம் அப்யுபாய இதி ச ப்ரஞானானுஸம்ஸீலநாத்
அந்தஸ்தோஷவிகாஸிவக்த்ரகமல: ஸோऽயம் விவேக: ஸுதீ: ||*22

'இவ்வுலகம் நொடியில் பளிச்சிட்டு மறையும் மின்னலைப்போல காலனின் வாய்க்குள் அகப்பட்டுக்கொண்டுள்ளது. பரம்பொருளே உண்மை, அறிவு, ஆனந்தம் ஆக உருவெடுத்துள்ளது. அதுவே தூய்மையானது. சாஸ்வதமாக என்றுமிருப்பது. இந்த பகுத்தறியும் விவேகமே நம்முள் ஆழ்ந்து கிடக்கும் பெரும் மகிழ்ச்சியினால் மலர்ந்திடும் ஆன்ம மலர். தாமரை முகத்துடன் தன்னையே அறிவதற்காக அறிவுடன் தொடர்ந்து செயல்படுகிறது.'

விவேகம் இவ்வுலகில் பல சிக்கலான சந்தர்ப்பங்களிலிருந்து காப்பாற்றிட சிறந்ததொரு சாதனமாகும். இதுவே பரம்பொருளை அடைவதற்கும் ஒரு சாதனமாக அமைகிறது.

## மேற்கோள்கள்

1. 2.30
2. ibid
3. ibid
4. Bhagavadgita 18.63
5. Abhijnanasakuntalam 1.20
6. Nitisataka 91
7. Ramayana 2.63.7
8. ibid, 2.63.9
9. 12.11
10 Nitisataka 10
11. Hitopadesa 1.22
12. 1.2
13. 6.46
14. Pancatrantra Aparikshitakaraka 93

15. *Abhijnanasakuntalam V 24*
16. *ibid V 24*
17. *Dharmasarmabhyudaya 4.61*
18. *Nyayavartikatatparyatika p.594*
19. *ibid p.8*
20. *Nyayavartika p.87*
21. *Nyayavartikatatparyatika p.594*
22. *6.16*

# 19

## பரோபகார

## பிறருக்கு உதவுதல்

மனிதப் படைப்பில் சிறப்பாக அமைவது என்னவென்றால் ஒருவன் தனக்காக மட்டுமே வாழ்வதில்லை என்பதாகும். அப்படி தனக்காக மட்டுமே வாழ்ந்தால் அது விலங்குகளின் வாழ்க்கைக்கு ஒப்பதாகும். மனிதன் தன்னைக் காட்டிலும் உயர்ந்தெழுந்து பிறரையும் அணுகி அவர்களுக்கு உதவி செய்பவனாக இருத்தல் வேண்டும். அவர் களுக்குத் தேவையான உதவிகளைச் செய்தல் வேண்டும். இதுவே வாழும் முறையாகும். அதுவே அவனை மனதினாலும் ஆன்மீகத் தாலும் உயர்ந்தவனாகச் செய்து பரந்த உலக நோக்கை ஏற்படுத்தி அவனை சிந்தனையை நீட்டிப்பெருக்கி இவ்வுலகமே தன்னுடன் இணைந்ததாகக் காணச் செய்திடும்.

அதுவே அவன் தான் பிறவிபயன் பெற்றதாக சிந்திக்கச் செய்திடும் - 'பரஹிதஸம்பாதனம் ச ஜன்மபலம்'*[1] மகான்களுக்கு இக்குணம் தானாகவே முன்னின்று செயல்படும். 'ஸந்த: ஸ்வயம் பரஹிதே விஹிதாபியோகா:'*[2] உண்மையில் இதுவே மிகவும் உயர்ந்த குணமாகும். இதுவே நற்குணத்தை அளந்திடும் அளவுகோலுமாகும். இதுவே மேன்மக்களை செல்வத்தினால் செருக்கடையாமல் இருக்கச் செய்கிறது - 'அனுத்ததா: ஸத்புருஷா: ஸம்ருத்திபி:' பிறருக்கு நன்மை செய்தல் அவர்களுக்கு இயற்கை குணமாக ஆகிவிடுகிறது - 'ஸ்வபாவ ஏவைஷ பரோபகாரிணாம்'*[3]

ஒருவன் கற்றவனாக இருந்தால் அவனது கல்வியறிவு பிறருக்கு பயன்படுவதாக இருக்க வேண்டும் - 'ஸா வித்துஷீ பலம் யஸ்யா: ந பரோபக்ருதே பரம்.'*[4] விஞ்ஞானத்தின் புதிய படைப்புகளிலும் தொழில்நுட்ப ஆய்வுகளிலும் இதை எளிதில் காணலாம். மருத்துவத்

துறையில் உள்ளோர் இரவும் பகலும் கடினமாக உழைத்து பல புதிய புதிய நோய்களுக்கு மருந்தும், வலி வேதனைகளை நீக்கிடவோ குறைத்திடவோ பல புதிய மருந்துகளை கண்டுபிடிக்கின்றனர். இவைகள் எல்லாம் அவர்கள் பொருட்டல்ல. அவர்களது கடின உழைப்பெல்லாம் பொதுவாக மனித இனத்துக்கேயாகும். இது போன்றே வெகு நேரம் மணிக்கணக்காய் பரிசோதனைச் சாலைகளில் நின்றுகொண்டு பல சோதனைகள் செய்து பொதுமக்களின் வாழ்க்கையை சௌகரியமாகவும், எளியதாகவும் செய்வதில் முனைந்திருக்கும் விஞ்ஞானிகளுக்கும் இது பொருந்துவதாகும்.

பிறருக்குதவும் சிந்தனை ஏற்பட அத்தியாவசியமாக தேவைப்படுவது முதலில் நாமே 'சத்புருஷ்'- நல்லவர்களாக இருத்தல் வேண்டும். நல்லவர்களே மற்றவர்களுக்கு உதவிசெய்ய எப்பொழுதும் தயாராக உள்ளனர். இப்படிப்பட்டவர்களைப் பார்த்தே அவர்களது செல்வம் மற்றவர்களுக்காகவே என்று கூறப்படுகிறது. இவர்களை தங்களது நீரை தாங்களே சிறிதும் அருந்தாத ஆறுகளுக்கு ஒப்பிடுகின்றனர், தான் காய்த்து பழுத்த பழங்களை ஒருபொழுதும் தானே உண்ணாத மரங்களுக்கு ஒப்பிடுகின்றனர். மேலும் மேகங்களுக்கு ஒப்பிடுகின்றனர். ஏனெனில் மேகங்கள் தன் நீரினால் வளர்ந்த தானியத்தை ஒருமுறைகூட உண்ண முயற்சித்ததில்லை.

> பிபந்தி நத்யா: ஸ்வயமேவ நாம்ப: காதந்தி ந பலானி வ்ருக்ஷா: |
> பயோதரா ஸஸ்யம் அதன்தி நைவ பரோபகாராய ஸதாம் விபூதய:||*5

அதனால் பிறருக்கு உதவும் நல்ல குணத்தை நாம் பழக்கிக்கொள்ள வேண்டும். இதையே ஒவ்வொரு பண்புடையவர்களும் அடைய விரும்புகின்றனர். புராணங்கள் பதினெட்டுள்ளன. அவை யாவற்றினுடையவும் சாராம்சம் என்னவென்ற கேள்வி எழுகையில் ஒரே ஒரு வரியில் அவைகளை சுருக்கமாகக் கூற வேண்டுமானால் 'பிறருக்கு உதவுவது நன்று. மேலும் பிறருக்கு துன்பம் இழைத்தல் கெடுதல் பாபம் ஆகும் - 'பரோபகார: புண்யாய பாபாய பரபீடனம்'

பிறருக்கு நன்மை செய்திட திடமான மனம் தேவை. குறுகிய மனப்பான்மை கொண்டவனால் பிறருக்கு உதவவே இயலாது. அவன் தன்னைப் பற்றியே தான் சிந்தித்துக்கொண்டிருப்பான். தன்னை விட்டு வெளியில் உள்ளவர்களுக்கு உதவிட திடமான தீர்மானம், எண்ணம் தேவை.

அவ்வாறு பிறருக்கு உதவுகையில் ஒருவனுக்கு சில சிக்கல்களையோ, தன்னுயிருக்கே ஆபத்தையோ எதிர்கொள்ள நேரிடலாம். வறுமை

ஏற்படலாம், சில வேதனைகளும் ஏற்படலாம். இவை யாவற்றையும் சமாளித்து ஒருவன் விடாமுயற்சியுடன் தொடர்வது அவனது திடமான மன உறுதியை எடுத்துக்காட்டுகிறது. ஆனால் ஒருக்கால் இவ்வாறு நிலைமைகளை சமாளிக்கையில் அவனுக்கு மற்றவர் தொடங்கிய பணியை கைவிடும்படி செய்ய நேரிடலாம். அதனால் அவனுக்கொரு கெடுதல் ஏற்பட்டாலும் ஏற்படலாம். அதற்காக கொடிய சொற்களையும் கூற வேண்டிய நிர்ப்பந்தம் அமையலாம். ஆனால் இவைகளைக் கண்டு மனம் மாறிவிடக்கூடாது.

தீரா: ஸதா ரசயதே ஹி பரோபகாரம்
வாக்யம் கடோரம் அபி தஸ்ய தயார்த்ரகர்பம்
நிர்வாந்த தோயனிவஹைர் ஜலதைர் விஸ்ருஷ்டா
வர்ஷோபலா ததாதி ஸீதலவாரிகர்பம் ||*6

'திடமான உறுதியான உள்ளம் படைத்தவன் எப்பொழுதும் பிறருக்கு நன்மைகளைச் செய்வான். அவன் பயன்படுத்தும் கொடிய சொற்களிலும் கருணை தோய்ந்திருக்கும். மேகங்கள் ஆலங்கட்டி மழையைப் பெய்தாலும் தன்னிடமுள்ள நீரை முழுவதும் பெய்த பின்னரும் அவைகளில் குளுமையான நீரே இருந்திடுமன்றோ'.

பண்புள்ளவர்களிடம் இன்றியமையாததாக அமைவது பிறருக்கு உதவும் குணமேயாகும். தன்னையும் மீறி பிறருக்கு உதவிட தன் செல்வங்களை பகிர்ந்துகொள்வான். இவ்வாறு நிலையான புகழை அடைந்திடுவான். சந்திரன் தன் கலைகளை தேவர்களிடம் ஒவ்வொன்றாக இழப்பதையே அவர்களிடமிருந்து ஒவ்வொன்றாகப் பெறுவதைக் காட்டிலும் மிகவும் அதிகமாக விரும்புகிறான் என்பதை காளிதாசன் தெளிவாக எடுத்துரைக்கிறான் - 'பர்யாயபீதஸ்ய ஸுரைர்ஹிமாம்ஸோ: கலாக்ஷய: ஸ்லாக்யதரோ ஹி வ்ருத்தே:'*7

உண்மையிலேயே உத்தம மகான்களாயிருந்தால், தான் செய்த நற்பணிகளையும் உதவிகளையும் வெளியில் எடுத்துரைக்கவும் மாட்டார்கள். அவ்வாறு வெளியில் கூறுவது அவரது சுயமரியாதையையே பாதிப்பதாகும். அவர்கள் பின்னணியில் இருந்துகொண்டு நன்மையை செய்வதிலேயே கருத்துடன் இருந்து விடுவார்கள். இங்கு ஒரு சுவாரசியமான நிகழ்ச்சியை எடுத்துக்கூறுதல் பொருத்தமாக இருந்திடும். அந்நிகழ்ச்சியோ மிகவும் பிரபலமான மகான் ஈஸ்வர்சந்திர வித்யாசாகரின் வாழ்க்கையில் நடந்த ஒன்றாகும்.

அவர் தினசரி காலையில் நடக்கச்செல்வது வழக்கம். ஒரு நாள் அவர் நடக்கச் சென்றபொழுது வழியில் ஒருவன் அமர்ந்துகொண்டு புலம்பி அழுதுகொண்டிருந்தான். வித்யாசாகர் அவனை அணுகி 'உனக்கு என்ன ஆயிற்று?நீ எதற்காக இப்படி வருத்தப்பட்டு அழுகிறாய்? என்று கேட்டார்.அந்த மனிதனோ அவரை சிறிதும் மதிக்காமல் அவரை ஒதுக்கிவிட்டுக்கொண்டே 'நீ யார்? உன் வேலையை பார்த்துக்கொண்டு செல். என்னை தனித்திருக்க விடு' என்று கூறினான். அவரும் அவனை மீண்டும் சிறிது வற்புறுத்திஎன்ன ஆயிற்றென்று கேட்டார். அவனும் சிறிது சினம் மேலிட 'எனக்கு உதவி செய்திட உன்னிடம் ஏதாகிலும் இருக்கிறதா? என் விதிப்படி என்னை இருக்க விடு' என்று பதிலளித்து விட்டான்.

ஆனால் மேலும் மேலும் வித்யாசாகர் வற்புறுத்தி அவனைக் கேட்டிட அவனும் தான் அழுவதற்கான காரணத்தை எடுத்துரைத் தான். 'நான் என் மகள் திருமணத்திற்காக எனது வீட்டை அடகு வைத்து வந்த பணத்தினால் திருமணத்தை செய்து முடித்தேன். அதற்கு தவணை முறையாக பணம் செலுத்த வேண்டுமே. ஆனால் என்னால் சரியாக தவணை பணத்தை செலுத்த இயலாத காரணத்தினால் என் வீட்டை ஜப்தி செய்திவிட்டனர். நீதிமன்றமோ அதை ஏலத்தில் இட ஆணையிட்டது. நாளை காலை என் வீட்டை ஏலத்தில் விடுவார்கள். நான் என்ன செய்வதென்றறியாமல் பணத்தைக் கட்ட வழியின்றி இருக்கிறேன்' என்று கூறினான். மறுநாள் முன்கூறியபடி நீதிமன்ற ஊழியர்கள் குறிப்பிட்ட நேரத்தில் அவனது வீட்டை அடைந்தனர். ஆனால் அவனுக்கு வியப்பூட்டும் வகையில் வீட்டை ஜப்தி செய்யாமல் அவனிடம் யாரோ ஒருவர் வந்து பணம் கட்டியுள்ள சேதியை தெரிவிக்க அவனும் அப்படியே அசைவற்று திகைத்து நின்றான். அவனால் யார் பணத்தை கட்டியிருப்பார்கள் என்று ஊகிக்க முடிந்தது.

தன்னை முதல் நாள் காலையில் சந்தித்துப் பேசிய மகான்தான் இப்படி செய்திருக்கிறார் என்று நினைக்க அவன் மனம் நெகிழ்ந்தது. அவரிடம் தான் கடிந்து பேசியதை நினத்து மனம் மிக வருந்தினான்.

பரோபகாரம் - பிறருக்கு உதவுதல் என்றால் உண்மையில் இதுதான் ஆகும்.

ஒருவன் தான் பிறர் என்று நினைக்காமல் எல்லோரையும் தன்னைச் சார்ந்தவன் என்று நினைத்தால் தான் இவ்வாறு பிறருக்கு உதவி செய்தல். இயலும். ஒருவன் தான் தன்னைச் சேர்ந்தவர்கள் என்ற

குறுகிய கோணத்தில் சிந்திப்பானேயாகில் அவனது பார்வையும் குறுகியதாகவே அமையும். அப்படிப்பட்ட குறுகிய மனப்பான்மையுடன் பிறருக்கு உதவுதல் என்பது இயலாததே ஆகும். ஒருவன் தன் மனம் திறந்து எல்லோரும் நாம் ஒன்றே என்று நினைக்கையில் தான் எந்தவிதமான தடையையும் கடந்து, எல்லோருடைய மன விருப்பங்களையும் பூர்த்தி செய்தல் சாத்தியமாகும். இதனால் எல்லோரும் இன்புற்றிருந்திடுவார்கள்.

ஸர்வஸ்தரது துர்காணி ஸர்வோ பத்ராணி பஸ்யது |
ஸர்வ: காமான் அவாப்னோது ஸர்வ: ஸர்வத்ர நந்தது ||*8

## மேற்கோள்கள்


1. *Kuttinimala* 724
2. *Vikramarkacarita* 11
3. *Nitisataka* 71
4. *Srikanthacarita* 25.115
5. *Nitisataka* 66
6. *Suktimuktavali* 125
7. *Raghuvamsa* V 16
8. *Vikramorvasiya* V.25

# 20

## திதிக்ஷா

## பொறுமை

பரோபகார என்ற பிறருக்கு உதவும் மனிதப் பண்புடன் இணைந்து வரும் பிறிதொரு பண்பு, 'திதிக்ஷா' - பொறுமை ஆகும். அதன் இலக்கணம் கூற வேண்டுமானால் பிறர் செய்யும் ஒரு கெடுதலையோ அல்லது தீங்கையோ ஒருவன் பொறுத்துக்கொள்ளுதலாகும். இதற்கு மிகவும் திடமான மன உறுதியும் தருமத்தில் நம்பிக்கையும் தேவையாகும். பொதுவாக இதற்கு பதிலடி கொடுப்பதே எல்லோரும் செய்வதாகும். அவ்வாறில்லாமல் மாறுபட்டிருப்பது மேலான நற்குணமாகும். இதுவே பல லாபகரமான செயல்களை செய்திடும் இல்லாவிடில் அச்செயல்களை செய்வது இயலாததாகும்.

செயல்களை செவ்வனே செய்வதற்கு இதைப் போன்றதொரு சாதனம் கிடையாது - 'ந திதிக்ஷா ஸமமஸ்தி ஸாதனம்'*1 ஒருவன் செய்த தகாத செயலுக்கு பதிலடி கொடுக்கும் திறன் இருந்தபோதிலும், அவனுக்கு தண்டனை கொடுக்கும் அதிகாரமிருந்தும் அவனுக்கு பதிலடி கொடுக்காமலும் தண்டனை அளிகாமலும் இருந்தால் அதனால் ஏற்படும் மதிப்பும் கீர்த்தியும் நற்பெயரும் ஈடு இணையற்றது. மேலும் எதிராளியையும் வென்று மனம் மாற்றிடச்செய்வான். பொருத்தமாகவே இவ்வாறு கூறப்படுகிறது. 'திதிக்ஷாகவசேனைவ ஸர்வம் ஜயதி ஸம்வ்ருத:'*2 - 'திதிக்ஷா' - பொறுமை என்னும் கவசம் அணிவதால் எதையும் வெற்றிகொண்டு விடலாம். எதையும் என்பதில் எதிராளியின் பகைமையை மாத்திரம் வென்றுவிடுவதென்பதல்ல. தானும் பழி வாங்குவதெப்படிஎன்று சிந்தித்தல் அதனால் ஏற்படும் பிற மனகிலேசங்கள், வேதனையும்கூட அகன்றுவிடுகின்றன. அவைகளையும் வென்றுவிடுகிறான்.

ஒருவன் தான் அடைந்த அவமதிப்புகளுக்கும், துஷ்பிரயோகத்துக்கும், மனதுக்கும், உடலுக்கும் ஏற்பட்ட உபாதைகளுக்கும் திருப்பி பதிலடி கொடுக்கும் வல்லமை பெற்றிருந்தும் அவ்வாறு செய்யாமல் பொறுமையுடன் இருப்பது என்பது அவனது பொறுமைக்கு ஓர் அளவுகோலாகும். இங்கு ஒரு சிறுகதை நிகழ்ச்சியை எடுத்துக் கூறிடலாம்.

மகாராஷ்டிரத்தில் துகாராம் என்னும் ஆன்மீக ஆசான் இருந்தார். அவர் மிகவும் பிரபலமானவர். ஒருமுறை அவரது மனைவி அவர் மீது சினங்கொண்டு கரும்புத்தடியால் அவரை அடித்தாள். ஆனால் ஆசானோ அக்கரும்பு தடியை எடுத்து இரண்டு துண்டுகளாக்கி அதில் ஒன்றை அவளுக்குக் கொடுத்துவிட்டு பிறிதொன்றை தான் கடிக்கத் தொடங்கினார். அவளோ அதைக்கண்டு நாணம் மேலிட வெட்கி தான் செய்த தகாத செயலைக் குறித்து மனம் வருந்தி பச்சாத்தாபம் கொண்டாள்.

நாம் ஆங்கிலேயர்களின் ஆதிக்கத்தில் இருந்த பொழுது மகாத்மாகாந்திக்கு ஆங்கிலேயர்கள் மேல் எந்தவிதமான பகைமையும் வெறுப்பும் இல்லை. பொறுமை என்ற இக்குணம் 'ஸம' - தெளிவு, 'தம' - தன்னடக்கம், 'உபரதி' - பற்றின்றி ஒதுங்கியிருத்தல் முதலிய ஆத்மஞானம் அடைவதற்கு தேவையான குணங்களுடன் இரட்டை குணங்களாக இணைந்திருப்பவைகளாகும்.

'தஸ்மாதேவம்விச்சான்தோதாந்த உபரதஸ்திதிக்ஷு: ஸமரதிர்பூத்வா ஆத்மனி ஏவாத்மானம் பஸ்யதி'

'க்ஷமா' - மன்னித்தல் என்பதற்கு 'திதிக்ஷா' - பொறுத்தல் என்று மற்றொரு சொல்லும் உண்டு. வால்மீகி ராமாயணம்*3 இதை எல்லா வெகுமதிகளிலும் உயர்ந்த வெகுமதியாகக் குறிப்பிடுகிறது.

## மேற்கோள்கள்

1. *Kiratarjuniya 2.43*
2. *Subhashitanivi 7.6*
3. *5.55.6*

# 21

## உத்யோக; உத்யம

### முயற்சி

அறிவுக்கு அதைப் பின்பற்ற உறுதியான திட மனம் வேண்டும். உறுதியான திட மனம் கொண்ட ஒருவன் தனது உணர்ச்சிகளை கட்டுப்பாட்டுக்குள் வைத்துக்கொள்ள வேண்டுமென்று உணர்ந்தாலும் நடைமுறையில் அது இயலாததாக ஆகிவிடுகிறது. திண்ணமான விடாமுயற்சி இதற்கு இன்றியமையாததாக ஆகிறது.

மனிதனின் எந்த செயலுக்கும் முயற்சியும் ஊக்கமும் அஸ்திவாரமாக அமைகின்றன. இயற்கை மனிதனை ஒரு நொடிகூட செயலற்றிருக்க செய்வதில்லை. எப்பொழுதும் ஏதாவது செயலில் ஈடுபட்டே இருப்பான் - 'ந ஜாது திஷ்டதி அகர்மக்ருத்.'*[1] அவன் பலவந்தமாக ஏதாவதொரு செயலில் ஈடுபடுத்தப்படுகிறான் - 'கார்யதே ஹி அவச: கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜை: குணை:'*[2]

இதுபோல் தானே இயங்கிச்செய்திடும் செயல்கள், உண்ணல், குடித்தல், பேசுதல், நடத்தல், உறங்குதல் முதலியவை ஒருவகையான செயல்களாகும். ஆனால் அதேபோல் தானே தெரிந்து தேர்ந்தெடுத்து செய்யும் செயல்கள், அதாவது ஆக்கப்பூர்வமாக செயல்களை செய்வது வேறுவிதமான செயலாகும். இப்படிப்பட்ட செயல்கள் சமஸ்கிருத காவியங்களில் வெகுவாக போற்றப்படுகின்றன.

உத்யோக, உத்யம, அபியோக - முயற்சி என்று அழைக்கப்படும் இச் செயல்களில் ஈடுபட்டவர்களுக்கு அதுவே எல்லா வளங்களையும் செழிப்பையும் கொடுக்கின்றன - 'உத்யோகினம் புருஷஸிம்ஹம் உபைதி லக்ஷ்மீ:'*[3] இதனால்தான் ஒருவன் வெற்றியடைகிறானே தவிர வெறும் திடமான மன விருப்பத்தினால் மாத்திரமே அல்ல - 'உத்யமேன ஹிஸித்யந்திகார்யாணி ந மனோரதை:' மிருகங்கள்

உறங்கிக்கொண்டிருக்கும் சிங்கத்தின் வாய்க்குள் தானே வந்து விழுவதில்லை - 'நஹி ஸுப்தஸ்ய ஸிம்ஹஸ்ய ப்ரவிஸந்தி முகே ம்ருகா;'*[4]

இங்கு முயற்சி. முனைப்புடன் தொடங்குதல், நடைமுறையில் செயல்படுத்தல் முதலியவைகள் அழுத்தமாக வற்புறுத்திக் கூறப்படுவது இன்றல்ல, வேதகாலம் தொடங்கியே வேத நூல்களிலேயே கூறப்பட்டுள்ளது.*[5] அவை நல்ல தெளிவான சொற்களுடன் 'கடும் முயற்சி செய்யாதவனை தேவதைகள் விரும்புவதில்லை' என்று எடுத்துக் கூறுகின்றன - 'ந ம்ருஷா ஸ்ராந்தம் யத் அவந்தி தேவா:'*[6]

முயற்சி செய்யாதவனிடம் வளமைகள் வருவதில்லை. ஏனோதானோ என்று முயற்சி ஒருமுறை செய்பவனிடம் வளமையும் வெற்றியும் வருவதில்லை. தொடர்ந்து செய்திடும் விடாமுற்சிதான் -'நைரந்தர்ய' வெற்றியை தேடிக்கொடுக்கும். அவ்விடாமுயற்சி சாதிக்க இயலாத செயல்களையும் வெற்றியுடன் சாதிக்கவைக்கும். கல்லும் மேன்மேலும் தண்ணீர் விழுந்துகொண்டே இருந்தால் தன் கடினத்தன்மையை இழக்கும்.

துர்லபானி அபி ஸித்யந்தி கார்யாணி ப்ரோத்யமேன ஹி |
ஸிலாபி தனுதாம் யாதி ப்ரபாதேனார்ணஸோ முஹு: ||*[7]

இதை ஒரு பழங்கதைக் குறிப்பிலிருந்து எடுத்துக்காட்டாகக் கூறலாம். வங்காளத்தில் ஒரு அந்தணர் வசித்து வந்தார். அவரது பெயர் போபதேவனாகும். வகுப்பில் கற்றுக்கொடுக்கும் பாடங்களை திரும்பத் திரும்ப கற்றுக்கொடுத்தும் அவரால் கிரகிக்க இயலவில்லை. அதனால் ஆசிரியரின் கோபத்திற்கு ஆளானார். ஆசிரியரோ அவரை வகுப்பறையிலிருந்து வெளிச்செல்லும்படி கூறிவிட்டார். இவ்வாறு அவர் வெளியில் சென்றுகொண்டிருக்கையில் கிணறு ஒன்றைக்கண்டார்.

அங்கு கிராமத்து பெண்கள் எல்லோரும் கூடி தண்ணீர் எடுத்துக்கொண்டிருந்தனர். அவர்கள் தங்கள் குடங்களை வைத்த இடம் குழிவாக இருந்தது. அதனால் அவர்கள் குடத்தை ஆடாதபடி அங்கு வைத்து தண்ணீர் நிரப்பினர். அதைப்பற்றி கேட்டபொழுது, குடத்தை மீண்டும் மீண்டும் ஒரே இடத்தில் வைத்ததால் அக்குழி ஏற்பட்டது என்றறிந்தார். 'உயிரில்லா ஜடப்பொருளே இவ்வாறு தேய்ந்து போகுமானால் எனக்கு ஏன் இவ்வாறு ஆகக்கூடாது' என்ற எண்ணம் ஏற்பட்டது. அதுவே அவருடைய வாழ்க்கையில் திருப்புமுனையாக ஆயிற்று.

அவர் மீண்டும் வகுப்பறைக்குச் சென்றார். விடாமுயற்சியுடன் பாடங்களை கவனமாகக் கேட்டு கற்றறிந்து ஆசிரியரது நம்பிக் கையை பெற்றார். இவ்வாறு உழைப்பினால் நன்கு கற்றுத் தேர்ந்து அவரது காலத்தில் ஒரு பெரிய கல்விமானானார். இடைவிடாது முனைந்து ஒரு பணியில் ஈடுபட்டால் வெற்றி திண்ணமே.

அசுவகோஷரின் ஒரு எடுத்துக்காட்டு மேலே கொடுக்கப்பட்டது. அதுபோலவே தினசரி வாழ்க்கையில் நடந்திடும் ஒரு நிகழ்ச்சியை பிறிதொரு இடத்தில் கொடுக்கிறார். அரணிக்கட்டையை தேய்த்தால் நெருப்பு ஏற்படும். ஆனால் அதை இடை விடாமல் தேய்ப்பவன்தான், மத்தியில் விட்டுவிடாமல் தேய்ப்பவன் தான் நெருப்பை அடைவான். அதைபோலவே ஆன்மீக வழியில் ஈடுபட்ட வர்களும் சித்தியடைய அவ்வாறே இடைவிடா முயற்சி செய்தல் வேண்டும்.

அரணிமந்தனே ஜாது யோ விரந்தும் ந சேஷ்டதே |
ஸ ஏவ லபதே வஹ்னிம் ஏவம் ஸித்தேரபி ஸ்திதி: ||*8

மிகவும் பலவீனமாக இருப்பவனும் விடாமுயற்சியினால் காரியத்தில் வெற்றி காணலாம். ஒரு பழைய காலத்து ஸுபாஷிதத்தில் நல்ல கூற்றுகளில் ஒன்று இவ்வாறு கூறுகிறது. சிறிய எறும்பாக இருந் திடினும் ஊர்ந்து சென்றுகொண்டே இருந்தால் நூறு யோஜனை தூரத்தையும் கடந்துவிடும். (யோஜனை என்பது தூரத்தை அளக்கும் கோல்). கருடன் சோம்பலுடன் ஒரே இடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தால் மேலே ஒரு அடிகூட செல்ல முடியாது.

யோஜனானாம் ஸஹஸ்ராணி யாதி கச்சன் பிபீலிகா |
அகச்சன் வைனதேயோபி பதம் ஏகம் ந கச்சதி ||*9

காரியத்தில் ஈடுபடும் தூண்டுதல் இல்லாவிடினும் முயற்சிசெய்து ஒருக்கால் வெற்றி கிட்டவில்லையாயினும், 'இது தான் விதி' என்று நினைக்கும் அணுகுமுறை முற்றிலும் உகந்ததல்ல. 'எனக்கு என்று விதிக்கப்பட்டதை நான் தாங்கிக் கொண்டாக வேண்டும்' என்று சிந்திப்பவர்கள் எதையும் சாதிப்பது இயலாததாகும். விதி அல்லது விதியற்றதோ ஒருவன் முயற்சி செய்துகொண்டே இருக்க வேண்டும். முயற்சி செய்து உழைத்து எள்ளை கசக்கி பிழியாமல் எண்ணெய் எடுப்பதும் எப்படி?

ந தைவமபி ஸஞ்சிந்த்ய த்யஜேத்துத்யோகம் ஆத்மன: |
அநுத்யோகேன தைலானி திலேப்யோ நாப்துமர்ஹதி ||*10

எவனொருவன் எல்லா செல்வங்களையும் முயற்சிசெய்து அடைய முயல்கிறானோ அவன் தவளை - குட்டையைப்போலும், பறவைகள் - ஏரியிலுள்ள எல்லா நீரையும் குடிக்க நினைப்பதொக்கும்.

நிபானமிவ மண்டூக: ஸர: பூர்ணம் இவாண்டஜா: |
ஸோத்யோகம் நரம் ஆயாந்தி விவஸ: ஸர்வஸம்பத: ||*11

அதனால் முயற்சி செய்வதை தன் நண்பனாகவும் புறக்கணிப்பதை தன் எதிரியாகவும் ஏற்க வேண்டும். இதுவே வெற்றிகாணும் வழியாகும்.

உத்யமோ மித்ரவத் க்ராஹ்ய: ப்ரமாதம் ஸத்ருவத் த்யஜேத் |
உத்யமேன பரா ஸித்தி:..............*12

ஒருவன் ஒரு பணியில் வெற்றிகாண, முயற்சி செய்தால் மாத்திரம் போதாது. விரைவில் முயற்சி செய்தல் வேண்டும். (காலத்தை வீணக்காமல் உடனே உரிய காலத்தில் செய்தல் வேண்டும்).

கார்யெஷு அவஸ்யகார்யேஷு ஸித்தயே க்ஷிப்ரகாரிதா ||*13

## மேற்கோள்கள்


1. *Gita 3.5*
2. *ibid*
3. *Pancatantra 2.137*
4. *Kavitamrutakupa 57*
5. *Rgveda 4.33.11*
6. *ibid 1.179.3*
7. *Buddhacarita 26.63*
8. *ibid 26.64*
9. *Markandeyapurana 18.39*
10. *Hitopadesa Prastasvana 32*
11. *Hitopadesa 167*
12. *Buddhacarita 26.73*
13. *Kumarasambhava 10.25*

# 22

## சந்தோஷ

## மனத்திருப்தி

சந்தோஷ என்றால் மனத்திருப்தியாகும். இதன்மூலம் ஒருவன் பேராசையை வென்றிடுகிறான். தன்னிடம் உள்ளவைகளைக் கொண்டு மனநிறைவு கொள்கிறான். இதன்மூலம் விலைமதிப்பற்ற மன அமைதியை அடைகிறான்.

ஸதா ஸந்துஷ்டமனஸ: ஸர்வா: ஸுகமயா திஸ: |
ஸர்கராகண்டகாதிப்யோ யத்ரோபாநத்பதம் ஸிவம் ||*1

மனத்திருப்தி கொண்ட ஒருவனுக்கு திசைகள் யாவையும் எப்பொழுதும் எந்நிலையிலும் மகிழ்ச்சியை கொடுக்கின்றன. காலில் நல்ல காலணிகளை அணிந்துகொண்டவனை கல்லிலிருந்தும் முள்ளிலிருந்தும் காப்பதுபோலே ஆகும்.

ஒருவன் மிகப்பெரிய செல்வந்தனாக இருந்திடலாம். ஆனால் இழிந்தவனாக தன் செல்வத்தை பிறருடன் பகிர்ந்துகொள்ளமாட்டான். தனக்காகவும்கூட செலவு செய்துகொள்ளமாட்டான். உண்மையான செல்வந்தன் என்றால் பரந்த மனதுடையவனாக இருக்க வேண்டும். அதன் மதிப்பை இவ்வளவென்று கூறுவதும் இயலாது.

ஆட்யத்வம் நாம தத் இதம்
ந தத்தநவத்த்வம் யத் அகிஞ்சன ஸமம் மதம் ||*2

'சந்தோஷ'- மனத்திருப்தி என்பது ஒரு பெரிய நிதியாகும். அது ஒன்றே மனிதனுக்கு மேலான செல்வமாகும் - 'பரம் நிதானம்'. அதைப்போன்ற செல்வங்கள் ஓரிரண்டு இருக்கலாம். ஆனால் அவை நொடிப்பொழுதில் மாறுவதாகும் - 'க்ஷயாந்தா:' எனப்படும். அவை வரும் போகும். ஆனால் மனத்திருப்தி என்பது அப்படிப்பட்டதல்ல. அது ஆரோக்கியமான மனநிலையைப் பிரதி

பலிக்கிறது. அது இருந்துவிட்டால் ஒருவன் உலகியலிலுள்ள வேறு எதையும் நோக்கி அடைய அவாகொள்ள வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில் அவை உண்மையான மனமகிழ்ச்சியை கொடுப்ப தில்லை. ஆனால் அமைதியில் வரும் மகிழ்ச்சி மனத்திருப்தியுடன் இணைந்துசெல்லும். பத்ம புராணம் பொருத்தமாகவே கூறுகிறது

ஸந்தோஷாம்ருதத்ருப்தானாம் யத் ஸுகம் ஸாந்தசேதஸாம் |
குதஸ்தத் தனலுப்தானாம் இதஸ்சேதஸ்ச தாவதாம்||[3]

'செல்வத்தை நோக்கி பாய்ந்தோடுபவர்கள் மனத்திருப்தி அடைவதும் தான் எப்படி? சாந்தமனதுடன் போதுமென்ற மனதுடையவர்களின் அமிர்தம் போன்ற திருப்தியை அவர்கள் அடையவும் முடியுமோ?'

கட்டாயமாக செய்ய வேண்டியதென விதிக்கப்பட்ட விதிமுறைகளான நியமங்களில், பிறிதொரு விதிகளான நியமங்களிலிருந்து, வேறுபட்ட முறைகளில் சந்தோஷ என்பதற்கு தன்னால் இயன்றதைக் காட்டிலும் அதிகமானவைகளை அடைய ஆசைகொள்ளுதல் என்ற பொருள்பட விளக்கப்பட்டுள்ளது - 'ஸந்நிஹித ஸாதநாத் அதிகஸ்யானுபாதித்ஸா'.

இது ஒரு மனநிலைமையாகும். அது பிறவிக் குணமாகவும் இருக்கலாம். 'ஸஹஜ' அல்லது நல்லோர்களின் சேர்க்கையினாலும் அடையலாம். எப்படியிருப்பனும் இது விருப்பங்களை அடியோடு களைவதென்பதில்லை. அவைகளை நம் சக்திக்கும் கட்டுக்குள்ளும் வைக்க வேண்டும் என்பதாகும். அதாவது தனது சக்திக்குள் அடங்கியவைகளைக் கொண்டு மனத்திருப்தியுடன் அதையே வளம்மிக்கதாக எண்ணி இருப்பதாகும்.

இவ்வெண்ணத்துடன் இருப்பதால் அவசியமற்ற படாடோபமான வாழ்க்கை நடத்துபவர்களைக் கண்டு பொறாமை ஏற்படாது. தன் நடுநிலைமையும் இழக்க வேண்டிய நிலைமையும் ஏற்படாது.ஒரு பெரிய அறிவாளி கூறுகிறார் - 'விதி நமக்கு ஏதேனும் மகுடமோ கிரீடமோ தர நினைத்தால் அதில் உண்மையான கிரீடம் மனத் திருப்திதான். ஒரு பொருளை அடைய ஏங்கி தவிக்கும் ஒருவனுக்கு நூற்றுக்கணக்கான மைல் தூரமும் ஒரு பொருட்டாகாது. இதுபோல மனத்திருப்தி கொண்ட ஒருவனுக்கு ஒரு பொருள் தன் கைக்கே வந்து கிடைத்தாலும் அது ஒரு பொருட்டாகாது.

ந யோஜனஸதம் தூரம் பாத்யமானஸ்ய த்ருஷ்ணயா |
ஸந்துஷ்டஸ்ய கரப்ராப்தே அபி அர்தே பவதி நாதர: ||[4]

நாம் வாழ்க்கை நடத்திட எவ்வளவு தேவையோ (தன் வயிறு வளர்த்திட) அதையே தன்னுடையது என்று ஒருவன்

கூறிக்கொள்ளலாம். அதைக்காட்டிலும் அதிகமாக ஏற்பவனை திருடன் என்றே கூறிடலாம். அவன் தண்டனைக்கு உரியவனாவான்.

யாவத் ப்ரியதே ஜடரார்தம் தாவத் ஸ்வத்வம் ஹி தேஹினாம் |
அதிகம் யோபிமன்யதே ஸ ஸ்தேன தண்டம் அர்ஹதி ||*5

இயற்கை மக்களுக்கு தேவையான யாவற்றையும் அளவுக்கும் அதிகமாகவே கொடுத்துள்ளது. எவனொருவன் தன் தேவைக்கும் மிஞ்சி அதிகமாக சேர்த்து வைத்துக்கொள்கிறானோ அவன் மற்றவர்களுக்கு அந்த அளவு கிடைக்க இயலாமல் செய்துவிடுகிறான். அதுதான் கிடைக்காமல் போவதற்கும், துக்கத்துக்கும் வேதனைக்கும் காரணமாகும்.

அதனால் தன்னிடம் அளவுக்கு மீறி அதிகமாக உள்ளதை ஏழ்மையான தனது உடன்பிறந்தவர்களுடன் அவர்களது பங்கான அதை பிரித்துக் கொடுக்க வேண்டுமென அறிவுறுத்தப்படுகிறார்கள். அப்படிச் செய்பவன் மனதில் அளவிடமுடியா ஆனந்தம் பொங்கிடும் - 'ஸௌக்யம் அதுலம்' கவலை இல்லை - 'ந துக்கம்', பகைவனும் இல்லை - 'ந ச ரிபு:'*6

இப்பொழுது நாம் விவரித்துக்கொண்டிருக்கும் 'சந்தோஷ' என்பதற்கு இலக்கணம் சமஸ்கிருத நூலில் வெகு அரிதாக கிடைக்கும் ஜாபால யோகா என்பதிலிருந்து எடுத்துக்கூறலாம்.

யத்ருச்சாலாபதோ நித்யம் ப்ரீதிர்யா ஜாயதே ந்ருணாம் |
தத் ஸந்தோஷம் விது:ப்ரஞா: பரிஞானைக தத்பர: ||*7

'தனக்கென்று உள்ளவைகளை அடையும்பொழுது எந்த ஒரு மகிழ்ச்சி மனதில் ஏற்படுகிறதோ அதுவே உண்மையான சந்தோஷம் என்கின்றனர். பேரறிவை அடைய முயற்சிசெய்யும் மகான்கள் இதையே சந்தோஷம் என்று அறிந்திடுகிறார்கள்.'

## மேற்கோள்கள்


1. *Srimadbhagavatapurana* 7.15.7
2. *Nitikaqlpataru* 74.8
3. 5.19.260
4. *Hitopadesa* 1.148
5. *Srimadbhagavatapurana* 8.14.8
6. *Manoduta* 87
7. 2.5

# 23

## சௌச

## தூய்மை

'சௌச' - தூய்மை என்பது அத்ரியினால் பத்து நியமங்களில் ஒன்றாகக் கூறப்பட்டுள்ளது.

ஸௌசம் இஜ்யா தபோ தானம் ஸ்வாத்யாயோபஸ்தானனிக்ரஹ:|
வ்ரதமௌனோபவாஸம் ச ஸ்னானம் ச நியமா தஸ ||*1

அதற்கு இலக்கணமோ - சில உணவு வகைகளை உண்பதை தவிர்த்தல், கெட்டவர்களுடன் சேர்க்கையின்றி இருத்தல், நன்னடத்தையை மேற்கொள்ளல் என்பதாகும்.

அபக்ஷ்யபரிஹாரஸ்ச ஸம்ஸர்கஸ்சாபி அநிந்திதை:
ஆசாரே ச வ்யவஸ்தானாம் ஸௌசம் ஏதத் ப்ரகீர்திதம் ||*2

சாணக்கிய ராஜநீதி சாஸ்திரத்தில் இதை ஐந்து வகையாகப் பாகுபடுத்திக் கூறப்பட்டுள்ளது. எல்லா உயிரினங்களிடமும் கருணையோடு இருத்தல், புலன்களை அடக்குதல், உண்மை பேசுதல், மனத்தூய்மை, ஐந்தாவது தண்ணீரினால் தூய்மையடைதல்.

ஸர்வபூததயா ஸௌசம் ஸௌசம் இந்திரியநிக்ரஹ: |
ஸத்யம் ஸௌசம் மன: ஸௌசம் ஜலஸூத்திஸ்து பஞ்சமம் ||*3

இன்னமும் சுருக்கமாகக் கூறினால் அதை மூன்று பாகமாகப் பிரிக்கின்றனர், உடல், உள்ளம், அறிவாற்றல் (பகுத்தறிதல்).

ஸ்வதேஹமலநிர்மோக்ஷோ ம்ருஜ்ஜலாப்யாம் மஹாமுனே |
அஹம் ஸூத்தம் இதி ஞானம் ஸௌசம் ஆஹு: மனீஷிண: ||*4

மதிநுட்பம் உடையோர்கள், ஓ! மாமுனிவரே! உடலின் மாசுகளை மண்ணாலும் தண்ணீரினாலும் களைவது புறத்தூய்மையாகும்

என்றும் ஆழ்ந்த சிந்தனை மனத்தூய்மை என்றும், நான் தூய்மையாய் இருக்கிறேன் என்றறிதல் அறிவுத்தூய்மையுமாகும் என்கின்றனர்.

இவைகளிலும் அறிவுத்தூய்மையே முதலிடத்தைப் பெறுகிறது. இதைப்பெற விடாமுயற்சியுடன் முயற்சிக்க வேண்டும். புறத்தூய்மை அடைய வேண்டியதுதான். ஆனால் அதற்கு முன்னர் அகத்தூய்மையை அனுசரிக்க வேண்டும்.

பாஹ்யஸௌசென யுக்த: ஸம்ஸ்ததா வாப்யந்தரம் சரேத் |*5

'ஒருவன் நீராடுதல் முதலியவைகளால் புறத்தூய்மை அடைந்த பிறகு அகத்தூய்மையும் பெற வேண்டும்.'

மேலே கூறியுள்ளதில் புறத்தூய்மை இன்றியமையாததாகவும் முதலிடத்தையும் பெறுகிறது. பாகுபாட்டில் தாழ்ந்த படியில் இருந்தபோதிலும் எந்த சுத்தத்திலும் அது முதன்மையானதாக அமைகிறது. இந்தியக் கலாசாரத்தில் நீராடுதலுக்கு முக்கிய இடம் தரப்பட்டுள்ளது. இதுவே புறத்தூய்மைக்கு முதற் காரணமாகும். ஏனெனில் நீராடுதல் இரவு உறக்கத்துக்குப்பிறகும், மதிய உறக்கத்துக்குப் பின்னரும், நாள் முழுவதும் ஓயாமல் உழைத்ததற்குப் பின்னரும், அதுவும் இந்தியாவைப்போல் நல்ல கோடைபருவம் கொண்டிருக்க மேலும் ஈரப்பதமும் அதிகமாய் இருந்திட, உடல் வியர்வையால் நாற்றமெடுத்திட, புது மலர்ச்சியைக் கொடுக்கிறது.

பீச்சுக்குழாயிலோ, ஷவரிலோ, நீச்சல் குளத்தில் அல்லது ஆற்றில் நீந்துவதோ, களைப்பை உடனே போக்கிடும். இதனால் ஒருவன் சுறுசுறுப்பையும், நல்ல விழிப்புணர்ச்சியையும் பெறுகிறான். அதனாலேயே ஒருவன் ஆயிரக்கணக்கான பணிகளை விடுத்தாகிலும் நீராடுதல் வேண்டும்' - ('ஸதம் விஹாய போக்தவ்யம்') 'ஸஹஸ்ரம் ஸ்நானம் ஆசரேத்'.

நீராடுதல் என்னும் சொல்லின் தோற்றத்தை ஆராய்ந்திடின் அது பலவகை உபயோகத்தின்படி ஆற்றிலோ, அதன் கரைகளிலோ, ஊற்றுகளிலோ என பலபடியாக பகட்டாகத் தோன்றும் வகையில் பெயர்கள் அமைந்துள்ளன. ஸ்நாதக, அபிஷேக, பாராவார, பாரீண, அனுகூல, ப்ரதிகூல, அனூப, ப்ரதீப முதலியவைகளாகும். ஆனாலும் எந்த வகையை சார்ந்ததாக இருந்தாலும் நீராடுவது நீரினால்தான். அதனால் ஏற்படுவது வெளிஉடல் சுத்தமேயாகும்.

உடல் தூய்மையினால் அதாவது புறத்தூய்மை அடைந்து சுறுசுறுப்பும் உற்சாகமும் பெற்ற பிறகு அடுத்தபடியாக அமைவது

மனத்தூய்மையாகும். மனத்தூய்மையினால் அறிவு பிரகாசமடைய தன்னுடைய உண்மையான தரத்தையும் திறனையும் அறிகிறான். பழைய பெரிய நூல்களெல்லாம் இவ்வாறு மிகவும் அத்தியாவசிய மாகக் கருதப்படும் உடலைத் தூய்மையாக வைத்துக்கொள்வதுடன் நிறுத்திவிடாமல் அடுத்து மேற்கொண்டு கூறியுள்ளவைகளையும் வாழ்க்கையின் இறுதிவரை இடைவிடாமல் கடைப்பிடிக்க வேண்டும் என்று கூறுகின்றன. ஒருவன் அறிவைத் தூய்மையாகக் கொள்ளும்வரை இதைக் கடைப்பிடித்தல் வேண்டுமென ஜாபாலயோகர் கூறுகிறார்.

ஞானஸௌசம் பரித்யஜ்ய பாஹ்யே யோ ரமதே நர: |
ஸ மூட: காஞ்சனம் லோஷ்டம் க்ருஹ்ணாதி ஸுவ்ரத ||*6

'ஓ! ஸுவ்ரத! எவனொருவன் அறிவுத்தூய்மையை காட்டிலும் புறத்தூய்மைக்கே முக்கியத்துவம் கொடுத்து அதை மகிழ்ச்சியுடன் செய்து ஆனந்தமடைகிறானோ அம்முட்டாள் பொன்னை விடுத்து மண்ணை அள்ளி எடுத்துக்கொள்கிறான் என்றே கூற வேண்டும்.'

ஒருவன் தூய்மையற்றவனாக இருந்தால் அவனது சிந்தனைகளும் கெட்டதாக இருந்திட வாய்ப்பு அதிகம் உள்ளது. கீழ்த்தரமான எண்ணங்கள் வளர்ந்திட அவன் பல ஆரோக்கிய நியதிகளை அனுசரித்தாலும்கூட அவனது உடல் தூய்மைக்கு ஒருபொருளும் அற்றதாக ஆகிவிடுகிறது.

இக்கருத்தைத்தான் லிங்க புராணம் எடுத்துரைக்கிறது. 'தினசரி நீராடுவதாலேயே ஒருவன் உயர்ந்த அந்தணனாக ஆகிவிட இயலுமா? அதனால் கூறிய முறைப்படி அகத்தூய்மையையும் கருத்தில் கொண்டு ஏற்றிடல் வேண்டும்.'

ஸதாவகாஹ்ய ஸலிலே விஸுத்த: கிம் த்விஜோத்தம: |
தஸ்மாத் ஆப்யந்தரம் ஸௌசம் ஸதா கார்யம் விதாநத: ||*7

அகத்தூய்மை இவ்வாறு விவரிக்கப்பட்டுள்ளது.

ஸௌமுக்யாதபிஸம்ப்ரீதிரர்தினாம் தர்ஸனே ஸதா |
ஸத்க்ருதிஸ்சானஸூயா ச ததா ஸுத்திரிதி ஸ்ம்ருத: ||*8

'யாசகர்களை எப்பொழுதும் அவர்களைப் பார்க்கும்பொழுது மலர்ந்த முகத்துடன் இருக்க வேண்டும். அவர்களுக்கு மரியாதை செய்ய வேண்டும். அவர்களை நிந்திக்கக்கூடாது.'

போதாயன தருமசாஸ்திரம் எந்த செயலினால் தூய்மையானவை எவை என்பதை எடுத்துரைக்கிறது.

அத்பி: ஸுத்யந்தி காத்ராணி புத்திர்ஞானேன ஸுத்யேத் |
அஹிம்ஸயா ச பூதாத்மா மன: ஸத்யேன ஸுத்யதி ||*9

'உடல் அங்கங்கள் தண்ணீரினாலும், (பகுத்தறியும் ஆற்றல்) அறிவாற்றல் ஞானத்தினாலும், ஆன்மா அகிம்சையினாலும் (ஆனால் மனு ஸ்மிருதியின்படி அறிவினாலும், தவங்களாலும் வித்யாதபோப்யாம்) மனம் வாய்மையாலும் தூய்மை அடைகின்றன.

அவரவர்கள் தாங்கள் செய்ய வேண்டிய கடமைகளை செய்துவந்தால் தூய்மை என்பது தானாகவே அந்தந்த பொருள்களுடன் இணைந்தே செல்கின்றன. பூமியின் அடியிலுள்ள நீர், ஒரு கற்புப்பெண், தன் குடிமக்களின் நலனைப் பேணிடும் அரசன், மனநிறைவு பெற்ற அந்தணன் இவர்களெல்லாம் தூய்மையானவையாகும்.

ஸுசி பூமிகதம் தோயம் ஸுசிர் நாரீ பதிவ்ரதா |
ஸுசிர்க்ஷேமங்கரோ ராஜா ஸந்தோஷீ ப்ரஹ்மண: விது: ||*10

இந்நாட்களில் லஞ்ச ஊழல் புகார்களெல்லாம் வெகுவாகப் பேசப்படுகின்றன. இந்தியாவில் நம் முன்னோர்கள் பணவிஷயத்தில் மிகவும் தூய்மையாக இருந்தவர்களை மிகவும் போற்றிப் புகழ்ந் தார்கள். பண விவகாரங்களில் எவன் தூய்மையாய் இருக்கிறானோ அவனே தூயவனாவான் - 'ருத்தே ஸுசி: ஸ ஸுசி:'*11

### மேற்கோள்கள்


1. *Atrisanhitaa* 49
2. *Bhavishyapurana* 1.2.160
3. 2.40
4. *Jabalayoga* 1.22
5. *Lingapurana* 8.32
6. 1.22
7. 8.35
8. *Skandapurana Ma Kau* 4.6
9. 1.5.1
10. *canakyaniti* 2.37
11. *Manusmrti* 5.106

# 24

## சீல

## நற்பண்பு

இந்தியர்களின் பண்பாடு 'பரோபகார' - பிறருக்கு உதவுதல். 'திதிக்ஷா' - பொறுமை, 'க்ஷமா' - மன்னித்தல், 'தம' - அடக்கம், இந்த்ரியநிக்ரஹம் -புலனடக்கம், 'த்ருதி' - மனதிடம், 'தைர்யம்' - தைரியம், 'ஸௌச' -தூய்மை, 'ம்ருதுபாஷித' - மென்மையான பேச்சு போன்ற சில பண்புகளை நாம் வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்துகிறது. இவை யாவையும் இணைந்து சேர்ந்ததே நற்பண்பு எனப்படும் சீல. இது எல்லா நல்ல குணங்களுக்கும் குடை போன்றது.

பொருளை விளக்கக் கடினமான 'சீல' என்னும் சொல்லை நன்கு புரிந்துகொள்ள வேண்டுமானால் பர்த்ருஹரி இயற்றிய நீதிசதகத்தில் தெளிவாகக் கூறியிருப்பதை காணலாம்.

ஐஸ்வர்ஸ்ய விபூஷணம் ஸுஜனதா ஸௌர்யஸ்ய வாக்ஸம்யமோ
ஞானஸ்யோபஸம: ஸ்ருதஸ்ய வினயோ வித்தஸ்ய பாத்ரே வ்யய:
அக்ரோதஸ்தபஸ: க்ஷமா ப்ரபவிதுர் தர்மஸ்ய நிர்வ்யாஜதா
ஸர்வேஷாம் அபி ஸர்வகாரணமிதம் ஸீலம் பரம் பூஷணம் ||*1

நற்குணம் சுபிட்சத்தின் நகையாகும். வீரத்துக்கு பேச்சில் நயமும், அறிவுக்கு தெளிவும், கற்றறிதலுக்கு விநயமும், செல்வத்துக்கு நல்ல பாத்திரங்களுக்கு வழங்குதலும், தவத்திற்கு நகை கோபமின்மையும், பலம் கொண்டவர்க்கு மன்னித்தலும், தருமத்துக்கு நகை எடுத்துக்கூறாமை. இவை எல்லாக் குணங்களும் சேர்ந்திருப்பது சீல -நற்பண்பாகும். அதனாலே அதை உயர்ந்த நகைக்கெல்லாம் நகையாகக் கருதுகிறோம்.

இக்கருத்தையே மேலும் வற்புறுத்தி நற்பண்பைக் காட்டிலும் அதற்கு இணையானதொரு அல்லது அதற்கும் மேலானதொரு வேறு நகையே இல்லை என்று கூறப்படுகிறது - 'விபூஷணம் ஸீலஸமம் ன சான்யத்'*2

இந்தியப் பண்பாட்டிலும் இக்காரணம் கொண்டே அது விண்ணிலும் உயர்ந்ததாகப் போற்றப்படுகிறது. நற்பண்புடன் வாழ்பவனே உண்மையில் வாழ்பவனாகிறான் - 'ஸீலஸ்ய பாலனம், குர்வன் யோ ஜீவதி ஸ ஜீவதி'.*3 இது அடர்ந்த காட்டில் சென்றிட சிறந்த வழிகாட்டியாகும் - 'ஸீலம் ஹி ஸரணம் ஸௌம்ய காந்தார இவ தேஸிக:'*4

நற்பண்பு குடும்பத்திலுள்ள இழுக்கை அகற்றிவிடும். பாபங்களின் மலத்தை அகற்றிவிடும். இது திறமையை சேர்க்கும், புகழை பரப்பிடும், தடைகளின் கூட்டத்தையே அறவே நீக்கிடும், சுவர்க்கத்துக்கு வழிகாட்டிடும், மோக்ஷத்தையும் எளிதில் அளித்திடும்.

நற்பண்பு பிறரிடம் மனம், வாக்கு, செய்கை, மூலம் பகைமை அற்றது. கருணை, இரக்கம், வாரி வழங்கும் குணமுடையது.

> அத்ரோஹம் ஸர்வபூதேஷு கர்மணா மனஸா கிரா |
> அனுக்ரஹஸ்ச தானம் ச ஸீலம் ஏதத் ப்ரஸஸ்யதே ||*5

எவனொருவன் நற்பண்பற்றவனாக இருக்கிறானோ அவனுக்கு அறிவு, கல்வி, விரததவங்கள், செல்வங்கள், மேலான புகழ் இவை யாவையும் யானையை குளிப்பாட்டுவது போலாகும்.

> வித்யா ஸ்ருதம் தபோ வாபி ஐஸ்வர்யம் வா யஸப்ரஹர்ஷோ வா |
> ஸீலாரஹிதஸ்ய பும்ஸோ த்விரதஸ்னானோபமம் பவதி ||*6

இவ்விடத்தில் சற்று இடைநிறுத்தி சிந்திப்போமாக. இவ்வளவு உயர்ந்ததாகப் புகழ்ந்து பேசப்படும் சீல - நற்பண்பு என்பது என்ன? அமரகோசம் இதை இரண்டு இடங்களில் விவரிக்கிறது. ஒரு இடத்தில் அது தூய்மையான நடத்தையைக் குறிக்கிறது - 'ஸுசௌது சரிதே ஸீலம்'*7. பிறிதொரு இடத்திலோ இயற்கையாகவே சுபாவத்திலேயே நல்ல நடத்தை - 'ஸீலம் ஸ்வபாவே ஸத்வ்ருத்தி:'

இவைகளிலிருந்து சீல என்பது வெறும் நன்னடத்தையைவிட மேலானதொன்று என்று வெளிப்படுகிறது. இது மனிதனுக்கு சுபாவமாக அமைந்த குணம். நற்குணங்களின் இருப்பிடம் மனிதன். இதிலிருந்து ஏற்படும் நடத்தையின் பலம் சீலமாகிறது. இதற்கு

இலக்கணம் வகுப்பதோ அல்லது மொழிபெயர்ப்பதோ எளிதல்ல. ஒருவனின் மனதிலுள்ள உயர்ந்த குணத்தை எடுத்துக்காட்டுவது. அதை விவரிப்பது இயலாததாகும்.

சரியான நடத்தை என்றோ அல்லது நல்ல நடத்தை என்றோ அதைக் கூறுவது முழுமையான பொருளை உணர்த்துவதல்ல. அதைக்காட்டிலும் பன்மடங்கு அதிகமான பொருள் அதில் புதைந்துள்ளது. இக்குணமே ஒருவனை எளிதில் அணுகும்படி செய்கிறது - 'அபிகம்ய'. அதே நேரத்தில் மிக அருகில் நெருங்குவதும் இயலுவதில்லை - 'அத்ருஸ்ய.'*8

பல எண்ணிலடங்கா நற்குணங்களின் சேர்க்கையேநல்ல சரியான வழியில் போகவைத்து தவறான வழியை விட்டு விலகவைக்கிறது. இந்த குணக்கலவையே உள்ளத்தில் சமநிலையை ஏற்படுத்துகிறது. இதுவே ஒருவனுக்கு அரிதான மிகவும் எதிபாராத முற்றிலும் முரண்பாடான சந்தர்ப்பங்களிலும் பிரத்யேகமான மன சமநிலையைக் கொடுத்து தாங்கும் சக்தியைக் கொடுக்கிறது. நல்ல அதிர்ஷ்டமான நிலைமை ஏற்பட்டாலும் அல்லது ஆபத்தான நிலைமை ஏற்பட்டாலும் மேன்மக்கள் சமநிலையை விட்டு அகலாமல் அமைதி காப்பார்கள் -'சம்பத்தௌ வா விபத்தௌ வா மஹதாம் ஏகரூபதா'.*9

ஆதவனைப்போல - உதிக்கும் நேரமும் சிவப்பாக இருப்பான், அஸ்தமனம் ஆகும் பொழுதும் சிவப்பாகவே இருப்பான் - 'உதயம் ஸவிதா ரக்த: ரக்த ஏவாஸ்தமேதி ச'. ராமர் முதலில் அரசு முடி தரிக்க வேண்டும் என்று கூறியபொழுதும் முகபாவத்தில் மாற்றம் எதுவுமில்லை. உடனேயே சிறிது நேரத்தில் கானகம் செல்ல வேண்டுமென்று கூறியபொழுதும் முகபாவத்தில் எந்தவித மாற்றமும் ஏற்படவில்லை 'நாலக்ஷ்யத ராமஸ்ய கஞ்சித் ஆகாரம் ஆனனே' (ஆகார என்றால் பாவம்). ராஜ்ஜியம் ஆளும் அரசுரிமையைத் துறந்துவிட்டு காட்டுக்கு செல்லத் தயாரானபொழுது அவரது மனதில் எந்தவிதமான குழப்பமும் இல்லை. ஏதோ எல்லோரையும்விட ஒரு வித்தியாசமானவராகக் காட்சியளித்தார்.

'ந வனம் கன்துகாமஸ்ய த்யஜதஸ்ச வஸுந்தராம் |
ஸர்வலோகாதிகஸ்யேவ லக்ஷ்யதே சித்தவிக்ரியா ||*10

இக்குணமே ஒருவரை மற்ற சாதாரணமானவர்களிடம் இருந்து பிரித்து வேறுபட்டவராகக் காட்டுகிறது. எங்கு பிசாசுகளுக்கும்

அரக்கர்களுக்கும்கூட போக தைரியமில்லையோ அங்கு தேவதைகள் எளிதாகவே சென்றடைந்து விடுகின்றனர்.

மகாபாரதத்திலும் யுதிஷ்டிரர் பீஷ்மரைப் பார்த்து தர்மத்தை எடுத்துரைப்பவர்கள் யாவருமே முதன்முதலாக சீலத்தைப் பற்றியே எடுத்துரைக்கின்றனரே. சீலமென்றால் என்ன? அது ஏன் முதலில் பேசப்படுகிறது? என்று ஒரு கேள்வி எழுப்பினார். அதற்கு பதிலளிக்கையில் பீஷ்மரோ, இதே கேள்வியைத்தான் திருதராஷ்டிரனிடம் துரியோதனனும் கேட்டான்.

யுதிஷ்டிரர் முன்னால் இந்திரபிரஸ்தத்தை அரசாண்டபொழுது அவரது வளமையையும் செல்வத்தையும் கண்டு பொறாமை மிகுந்தவனாய் துரியோதனன் இதைக் கேட்டான். திருதராஷ்டிரனோ அவனிடம் சீலத்தினால் எல்லா உலகங்களையும் வெற்றிகொள்ள இயலும் என்று கூறினார். சீலத்தின் இன்றியமையாமையை அவர் கீழ்க்கண்டவாறு வெளிப்படுத்தினார்.

> ஸீலேன ஹி த்ரயோ லோகா: ஸக்யா ஜேதும் ந ஸம்சய: |
> நஹி கிஞ்சிதஸாத்யம் வை லோகே ஸீலவதாம் பவேத் ||*11

'சீலத்தினால் மூவுலகையும் வெற்றிகொள்ள முடியும் என்பதில் ஐயமேதும் இல்லை. சீலமுடையோர்க்கு இவ்வுலகில் அசாத்தியம் என்றோ வெல்ல முடியாததென்றோ எதுவும் இல்லை'.

அங்கு மேற்கொண்டு அவர் இந்திரனுக்கும் பிரகலாதனுக்கும் இடையே நடந்த கதையை எடுத்துக்கூறுகிறார். சீலத்தைக்கொண்டே பிரகலாதன் இந்திரலோகத்தையும் இந்திரனையும் வெற்றிகொண்டான். அதனால் இந்திரன் பிரகஸ்பதியிடம் சென்று வேண்டிக்கொள்ள அவர் அவனுக்கு மன அமைதி ஏற்படும் வண்ணம் வேண்டியதைச் செய்து கொடுத்தார். ஆனால் இந்திரன் அதற்கும் மேலாக எல்லாவற்றையும் அடைய விரும்பினான். அப்பொழுது பிரஹஸ்பதி அவனை சுக்கிராசாரியரை அணுகும்படி கூறினார்.

அவனும் அவரை அணுகிட அவர் பிரகலாதனை அழைத்து அவனது சீலத்தையெல்லாம் இந்திரனிடம் கொடுத்துவிடும்படி கூறினார். ஒவ்வொரு குணமாக 'சத்ய' - வாய்மை, 'தேஜஸ்'' - ஒளி, சக்தி, 'பல' -பலம் என்று எல்லாம் வெளிவந்து ஒவ்வொன்றாக இந்திரனுள் புகுந்தன. சீல இவ்வாறு வெளிச்சென்றதும் அரசமுக ஒளியும், ராஜ்யஸ்ரீயும் பிரகலாதனை விட்டு அகலத் தொடங்கினாள். அவள் ஏன் அவனை விட்டுச் செல்கிறாள் என்று கேட்டதற்கு அவள் கூறினாள் -

ஸீலேன ஹி த்ரயோ லோகாஸ்த்வயா தர்மஞ நிர்ஜிதா: |
தத்விஞாய ஸுரேந்த்ரேண தவ ஸீலம் ஹ்ருதம் ப்ரபோ ||*12

'ஓ, தருமம் அறிந்தவரே! நீங்கள் சீலத்தினாலேயே மூவுலகையும் வெற்றிகொண்டீர்கள். அதைக் கேள்வியுற்ற இந்திரன் உங்களிடமிருந்து சீலத்தைப் பறித்துச் சென்றான்'.

சீலமே உயர்ந்த நகை என்பதற்கு ஒருவிதமான ஐயமுமில்லை. உலகத்தின் கண் காணும் ஆபரணங்களை எல்லாம் விட்டுவிடுங்கள். ஏனெனில் அவை மறைந்து அழியக்கூடியவைகளாகும். ஆனால் சீலம் அப்படிப்பட்ட நகையல்லவே. சீலம் என்றும் அழியாமலிருப்பதாகும். மற்ற பல உயர்ந்த குணங்கள் இருக்கின்றனவே, அவைகளும் சீலத்துக்கு முன் நிற்கத் தகுந்தவையல்ல. அவை எல்லாம் எல்லாக் குணங்களும் சேர்ந்த கலவைக்குணமே, அதற்கும் மேற்பட்டதே சீலமாகும்.

சீலம் என்பதை பெரும்பாலும் 'வ்ருத்த'- நடத்தை என்ற சொல்லுக்கு இணையாகக் கூறுகின்றனர். அதனால் அதற்கு தேவைக்கும் அதிகமான முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. ஒருவன் வ்ருத்த - நடத்தையை திண்ணமாக காத்திட வேண்டும் ஆனால் அதே 'வித்த' - செல்வம் எனப்படும் சொல் சொல்லியலில் ஓரெழுத்தே வேறுபாடானதாக இருந்திடினும் இரண்டுக்கும் உள்ள பொருள் வித்தியாசம் சொல்லினால் விவரிக்க இயலாததாகும்.

'வித்தம்' - செல்வம் வரும் போகும். அது போனாலும் ஒன்றும் இழப்பதில்லை. ஆனால் 'வ்ருத்த' என்ற நடத்தையை இழந்தாலோ எல்லாமே இழந்ததாகிடுமே.

வ்ருத்தம் யத்னேன ஸம்ரக்ஷணீயம் வித்தம் ஆயாதி யாதி ச |
அக்ஷீணோ வித்தத: க்ஷீணோ வ்ருத்ததஸ்து ஹதோ ஹத: ||*13

முன் கூறியதுபோல் சீலம் என்பதற்கு ஒரு வரியில் இன்னது பொருளென்று இலக்கணம் வகுக்க இயலாது. சீலம் என்பது சீலத்தை போன்றதே. கடல் கடலை போன்றதென்றும் ஆகாயத்தை ஆகாயம் போன்றதென்றும் கூறுவது போலாகிடும் - 'ககனம் ககனாகாரம் ஸாகர: ஸாகரோபம:'

சீலமுடையவர்களின் சேர்க்கை கிட்டுவது மிக அரிதேயாகும். இவ்வாறு கூறுவதும் மிகவும் பொருந்துவதாகும்.

கிம் மதுனா கிம் விதுனா கிம் ஸுதயா கிம் ச வஸுதயா |
யதி ஹ்ருதயஹாரிசரித: புருஷ: புன: புன: ஏதி நயனரோரயனம் ||*14

குணக்கடலாய் இருக்கும் நற்குணம் பொருந்திய ஒருவன் பார்க்க கிடைக்கையில் அதுவே போதுமானது. 'தேனால் என் செய்வது? மதி, அமிர்தம். மற்றும் இவ்வுலகமுழுவதும் இருந்தும் என் செய்வது?

### மேற்கோள்கள்


1. *verse 80*
2. *Pancatantra 2.155*
3. *Padma purana 46.95*
4. *saundarananda 34.47*
5. *Mahabharata Santiparva 124.66*
6. *Nitidvisastika 33*
7. *1.6.26*
8. *ibid 3.3.202*
9. *Naraabharana 26*
10 *Ramayana 2.19.36*
11. *Santiparvan 12.4.15*
12. *ibid 124.61*
13. *Udyogaparvan 66.10 vokramaarkacarita 17.1*
14. *A Popular Subhashita*

# 25

## அஸ்தேய

## களவாடாமை

மனு ஸ்மிருதிக்கு உரை எழுதிய குல்லுகபட்டரால் தர்மத்துக்கு பத்து இன்றியமையாத அடையாளங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அதில் சரியில்லாத, தவறான முறையில் செல்வம் சேர்த்தல் முதலிய குணங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன - 'அந்யாயேனபரதனாதிக்ரஹணம் ஸ்தேயம் ததபாவோஸ்தேயம்'*1 இதற்கான இலக்கணம் பிற இலக்கியங்களிலும் ஏறக்குறைய இவ்வாறே கொடுக்கப்பட்டிருக்கிறது.

லிங்க புராணம் கொடுக்கும் இலக்கணப்படி தான் மிகவும் துர திருஷ்ட நிலையிலிருந்தாலும்கூட பிறருக்கு சொந்தமான பொருளில் மனதில் நினைவுகூட ஏற்படக்கூடாது. இவ்வாறு மனது, செயல், பேச்சு இவைகளில் கடைப்பிடிப்பது 'அஸ்தேயம்' - களவாடாமை எனப்படுகிறது.

அநாதானம் பரஸ்வானாம் ஆபதி அபி விசாரத: |
மனஸா கர்மணா வாசா தத் அஸ்தேயம் ஸமாஸத: ||*2

ஜாபாலயோகத்தில் மனதை பிறருடைய புல்லோ, நகையோ, பொன்னோ, முத்தோ இவைகளிலிருந்து வெளியே எடுத்துச்செல்வதே களவாடாமையாகும் எனப்படுகிறது.

அந்யதீயே த்ருணே ரத்னே காஞ்சனே மௌக்திகேபி வா |
மனஸோ வினிவ்ருத்தி: யா தத் அஸ்தேயம் விதுர்புதா: ||*3

அந்நூலே ஆன்மீக விளக்கமாக பின்னர் விளக்குகிறது

ஆத்மனி ஆத்மபாவேன வ்யவஹாரவிவர்ஜிதம் |
யத் தத் அஸ்தேயம் இதி உக்தம் ஆத்மவித்பி: ||

'ஓ, நன்மதியுடையோனே! ஆன்மஞானிகள் கூறுவதாவது நம்முள் உறையும் ஆன்மாவை எழுப்பி இது நானல்ல என்று நினைத்து அவ்வழியில் தொடர்ந்து செல்வது 'அஸ்தேயம்' - களவாடாமை ஆகும்'.

'யோக சாஸ்திரத்தின்படி நமக்கு கிடைக்காத பொருட்கள் மீது ஏற்றுக்கொள்ளாமையை ஏற்று, களவாடாமையில் திடமாக இருத்தலாகும். செல்வங்கள் வெளியில் தோன்றுவன. செல்வத்தை களவாடிச் செல்பவனை உடனே கொன்றுவிட வேண்டும்.'

அனாதானம் அதத்தாஸ்யாஸ்தேயவ்ரதம் உதீரிதம் |
பாஹ்யா: ப்ராணா ந்ருணாம் அர்தோ ஹரத தம் ஹதா ஹி தே ||*4

'அதே நூல் பின் ஒரு பகுதியில் நல்ல மனிதனாகில் எவனொருவ னாலாவது அறியாமல் தவறி விடப்பட்ட பொருளையோ, ஒருவன் மறந்து விட்டுச்சென்ற பொருளையோ, வைக்கப்பட்டதையோ, அவனால் நமக்கு கொடுக்கப்படாததால் அது பிறருடையது நம்முடையதல்ல என்ற எண்ணத்துடன் எடுக்கக்கூடாது.'

'ஒருவன் பிறரது பொருளை களவாடினால் அவனது பொருட்களும் களவாடப்படும். இவ்வுலகிலும் சரி, மற்றைய உலகிலும் சரி அதாவது தர்மம், பொறுமை, பாக்கியங்கள், அறிவு முதலியவைகளும் களவாடப்படும்'

அயம் லோக: பரலோகோ தர்மோ தைர்யம் த்ருதிர்மதி: |
முஷ்ணதா பரகீயஸ்வம் முஷிதம் ஸர்வமபி அத: ||*5

தூய்மையான மனது உடையவர்கள், பிறரது பொருட்களை எடுப்ப தில்லை என்ற பயிற்சியை மேற்கொள்பவர்களிடம் செல்வங்களே அவர்களைத் தேடி பொறுக்கியெடுத்து தாங்கள் இருப்பதற்கான இடமாகக் கொள்கின்றன. ஆபத்துகளும் விபத்துகளும் அவர்களை விட்டு ஓடிச்செல்கின்றன. அவர்களது கீர்த்தியும் புகழும் எங்கும் பரவுகிறது. களவாடாமையை அனுசரிப்பவர்களை சுவர்க்கத்துக்கு இணையான எல்லா மகிழ்ச்சிகளும் அணுகுகின்றன.

பரார்தக்ரஹணே யேஷாம் 'நியம: சுத்தசேதஸாம் |
அப்யாயாந்தி ஸ்ரீயஸ்தேஷாம் அவயம் ஏவ ஸ்வயம்வர: ||
அநர்தா தூரதோ யாந்தி ஸாதுவாதா: ப்ரவர்ததே |
ஸ்வர்கஸௌக்யானி டௌகந்தே ஸ்புடம் அஸ்தேயசாரிணாம் ||*6

அகிம்சையை இடைவிடாமல் கடைப்பிடிப்பவர்கள் மனது, வாக்கு, உடல் ஆகிய மூன்றுவிதமான களவுகளிலிருந்தும் விடுபட வேண்டும்.

ஹேயம் ஸ்தேயம் த்ரிதா ராத்தம் அஹிம்ஸாவிஷ்டசேதஸாம்|*7

ஒருவன் புல்லளவு பொருள்கூட திருடுதல் கூடாது என்றொரு திட்டவட்டமான விதியுள்ளது - 'பலாலமாத்ரம் அபி பரத்ரவ்யம் ன ஹர்தவ்யம்'.*8 தாய் தந்தையர் பல குறைகளும் தவறுகளும் செய்யும் பிள்ளையை ஏற்றுக்கொள்வார்கள் ஆனால் திருடுதல் என்னும் கருமையினால் தன் முகத்தை பூசிக்கொண்டிருப்பவனை ஒருபொழுதும் ஏற்கமாட்டார்கள்.

தோஷாந்தரஜுஷாம் ஜாது மாதாபித்ராதயோ நரம் |
ஸம்க்ருஹ்ணந்தி ந து ஸ்தேயமஸீக்ருஷ்ணமுகம் நரம் ||*9

இப்பிறவியில் செய்த களவும் திருட்டும் இழிவான மறுபிறவி எடுக்கவும் படுகொலை முதலிய பல கொடிய இன்னல்களுக்கும் துயரங்களுக்கும் காரணமாய் அமைகின்றன.

வதாதி குருதே ஜன்மனி அஸ்மின் ஸ்தேயம் அனுஷ்டிதம் |
கர்து: பரத்ர துக்கானி விவிதானி குயோனிஷு ||*10

களவாடுதல் ஏன் அவ்வளவு கெடுதலாகக் கருதப்படுகிறது? ஏனெனில் ஒருவன் கொலை செய்யப்பட்டால் அவன் அந்த ஒரு நொடியே அவதிப்படுவான். ஆனால் ஒருவன் திருடனாக இருந்தால் அவனது நல்ல மகன்களும் பேரக்குழந்தைகளும் அவர்களது வாழ்நாட்கள் முழுவதும் (அப்படிப்பட்டதொரு குடும்பத்தில் பிறந்ததற்காக) வருந்தி வேதனைப்பட்டுக்கொண்டே இருப்பார்கள்.

ஏகஸ்யைகக்ஷணம் துக்கம் மார்யமாணஸ்ய ஜாயதே |
ஸுபுத்ரபௌத்ரஸ்ய புனர் யாவஜ்ஜீவம் ஹ்ருதே தனே ||*11

இந்தியாவின் நீண்ட கால உண்மையாக நடந்த வரலாற்றில் அரசர்கள் பலர் அவர்களது ஆட்சிக்காலத்தில் ராஜ்ஜியத்தில் திருடர்களே இல்லை என்று பிரகடனம் செய்துள்ளார்கள் - 'ந மே ஸ்தேனோ ஜனபதே'. இது ஒரு சவாலான பிரகடனமே. சாந்தோக்கிய உபநிஷதத்தில்*12 ஒரு கதை உள்ளது.கேகய நாட்டில் அசுவபதி என்னும் மன்னன் இருந்தான். உத்தாலகன் முதலிய முனிவர்களுடன் பரம்பொருளின் ரகசியத்தை அறிவதற்கான அமைந்துள்ள

வைஸ்வாநர என்னும் வித்தையை கற்றுக்கொள்ள அவரிடம் வந்தார்கள். அதற்கான தக்ஷிணையாகக் கொடுக்கப்படும் தூய்மை யான பணத்தை அங்கீகரிக்க வேண்டும் என்றும் கூறினார்கள். (அதை அவர்கள் வேள்விக்கு உதவி செய்பவர்களுக்கு கொடுப்பதாகவும் கூறினார்கள்).

அப்பொழுது மன்னன் கூறினான் அவரது குடிமக்களில் ஒருவரும் திருடுவதில்லை என்றும் ஒருவரும் கருமியாக இருப்பதில்லை என்றும், மதுபானம் அருந்துவதில்லை, தீயை கும்பிடாதவர்களும் இல்லை, கற்பில்லாத ஆண்களே இல்லை என்று கூறும்பொழுது பெண்களைப் பற்றி கூறவும் வேண்டுமோ? இது தான் அக்காலத்தில் இருந்த நமது இந்தியநாடாகும்.

சீனாவிலிருந்து நம் நாட்டிற்கு யாத்திரீகனாக வந்த பாஹியான் எழுதிய குறிப்பில் கொள்ளைக்காரரர்களும் திருடர்களும் முற்றிலும் இல்லாத இடமாகும் இந்நாடு. இங்கு நாடு முழுவதும் சுற்றிப்பார்த்த அவன் இந்தவிதமான தகாத செயலை ஒரு முறைகூட காணவில்லையாம். அவர் தனது நினைவிலிருந்து கூறுகிறார் இங்கு மக்கள் கதவுகளை தாளிடுவதே இல்லையாம்.

களவாடுதல் என்பது அங்குள்ள மக்களுக்கு அருவருப்பூட்டும் வெறுப்பூட்டும் செயலாக இருந்ததால் அதற்கென்று அமைந்த 'தஸ்கர' என்னும் சொல்லும் 'சோர' என்னும் சொல்லும் ஒருபொருள் குறிக்கும் சொற்களாக அமைந்துள்ளன. வேர்ச்சொல்லிலிருந்து ஆராய்ந்து பார்த்தால் 'தஸ்கர' என்னும் சொல்லுக்கு 'அதை செய்பவன்' என்பது பொருளாகும். 'தத் கரோதி இதி தஸ்கர:' 'தத்' என்றால் அது என்பது பொருளாகும். களவு என்ற சொல்லை கூறுவதற்கும் அவர்களுக்கு அருவறுப்பாய் இருந்ததால் 'தத்' என்று குறிப்பிட்டுள்ளார்கள் போலும்.

காலம் மாறிவிட்டது. உபநிஷத் காலத்திலிருந்தது போலவோ அசுவபதி இருந்த காலம் போலவோ பாஹியான் வந்திருந்த காலம் போலவோ இப்பொழுது இந்தியா இல்லை. களவும் திருட்டும் நிறைந்திருக்கிறது. வீட்டை உடைத்து உள் நுழைவது சாதாரணமாகி விட்டது. இன்னமும் கூறப்போனால் கொள்ளையும் வீட்டை இடித்து உட்புகுதலும் ஒரு கலையாகவே மாறிவிட்டது போலுள்ளது.

மிருச்சகடிகம் இதற்கு ஒரு எடுத்துக்காட்டாக உள்ளது. இதில் கொள்ளை அடித்தலையே படிப்படியாக நடித்துக் காட்டியுள்ளனர்.

நாடகத்தின் நாயகனான சாருதத்தனின் வீட்டுத் தோட்டத்தின் சுற்றியுள்ள வேலிச்சுவரில் சர்விலக என்னும் திருடன் கன்னம் வைத்து ஓட்டை போடுகிறான். அதன் வழியாக உள்ளே நுழைந்து உள்ளே உள்ள நாற்கோணத்தில் நுழைந்து அங்கிருந்து பாதடி சப்தம் கேட்காதபடி நடந்துசெல்ல ஒரு வழி கண்டுபிடித்தாக வேண்டும்.

அவன் நாற்கோணத்தில் வந்து கதவை திறக்க முயலுகையில் அங்கு கிரீச் என்ற ஒலி ஏற்படுகிறது. அவன் வெளியிலேயே நின்றுகொண்டு உள்ளே எட்டிப்பார்க்கையில் அங்கு இருவர் உறங்கிக்கொண்டிருப்பதைக் கண்டான். அவர்கள் உண்மையிலேயே உறங்குகிறார்களா என்று பார்க்கிறான். முதலில் அவன் ஒன்றுக்கும் உதவாத ஒரு மனிதனை உள்ளே அனுப்புகிறான். அவனோ நாற்கோணத்தில் சில வாத்திய கருவிகளே உள்ளன. அதனால் அவர்கள் செல்வந்தர்களாக இருக்க முடியாது என்று கூறுகிறான். தான் நினைத்தது சரியானதா என்று தெரிந்துகொள்ள சில மாய விதைகளை தூவுகிறான். அவர்கள் அசைவில்லாமல் இருப்பதைக் கண்டு அவர்கள் உண்மையாகவே ஏழைகளே என்று தெரிந்துகொள்கிறான். இந்த இக்கட்டான நேரத்தில் தூக்கத்தில் ஜோக்கரின் பிதற்றலில் உறங்கிக்கொண்டிருக்கும் சாருதத்தனை நகைக்குவியலை எடுத்துக்கொள்ளும்படி கூறுகிறான்.

இதிலும் பிரத்தியேகமான செய்தி என்னவென்றால், இதற்கான தேவதைகள் குமார கார்த்திகேய போன்ற கடவுளர் இருக்கின்றனர். இப்பணியில் வெற்றிபெற அவர்கள் பிரார்த்தனையும் செய்கின்றனர். திருடர்களுக்கென தலைவர்கள் ஆச்சாரியர்களும் உள்ளனர். அவர்கள் கனகசக்தி என்னும் அக்கலையில் தேர்ச்சி பெற்றுள்ளார்கள். இதில் நான்கு விதமான பிரிவுகள் - 'ஸந்திபேத' உள்ளன.

இதை பாஸ்கராநந்தின், யோகாசாரியர் என்ற இரு தலைவர்கள் குறிப்பிடப்பட்டுள்ளார்கள். இதில் யோகாசாரியர் திருடர்களின் தலைவனாவார். அவர் ஒரு பசையைக் கொடுத்து அது அவனை காணமுடியாமல் மறைத்துவிடும் என்றும் காவல்காரர்கள் அவனைக் காணமுடியாது என்றும் அவனை எந்தவிதமான ஆயுதங்களாலும் அடிக்கவோ குத்தவோ இயலாதென்றும் கூறுகிறார். திருடுவதிலும் சில விதிமுறைகள் இருந்தன. திருடன் அந்தணர்களின் உடைமைகளில் கை வைக்கமாட்டான்.

பிறகு ஏற்பட்ட திருடர்களைப் பற்றி கேட்கவே வேண்டாம். ஆனால் வித்யாதானம் என்பது திருடர்களால் அபகரிக்க முடியாது. அரசனாலும் அபகரிக்க முடியாது என்று கூறப்படுகிறது - 'ந

ஸௌர்யஹார்யம் ந ச ராஜஹார்யம்'. அதனாலேயே செல்வங்களுக்குள் அது தலையாய செல்வமாக உயர்ந்ததாகக் கருதப்படுகிறது - 'வித்யாதானம் ஸர்வதானப்ரதானம்.'

கொள்ளையடிப்பதும் திருடுவதும் போன்ற பல கெட்ட செயல்கள் சமுதாயத்தில் உட்புகுந்திருந்தாலும் அதிலிருந்து நீங்கி வெளியில் இருக்க வேண்டுமென்றே முழுவதும் எல்லா இடங்களிலும் எடுத்துரைக்கப்படுகிறது. களவாடாமை தர்மத்தின் பத்து பிரிவுகளில் ஒன்றாகக் கூறப்பட்டுள்ளது என்று முதலிலேயே பார்த்தோம். சமுதாய அமைப்புக்கு தருமமே கல்லாலான படுக்கையாகும். அதை விட்டுவிடாமல் எல்லோரும் அனுசரிக்க வேண்டியது இன்றி யமையாததாகும்.

### மேற்கோள்கள்

1. *Under Manu* 10.63
2. 8.15
3. 1.11
4. 1.22
5. *Yogasastra* 2.67
6. *ibid* 2.74-75
7. *Dharmamruta* 4.49
8. *Canakyasutrani* 268
9. *Dharmamruta* 4.560
10. *Padma Purana* 14.189
11. *Yogasastra* 2.68
12. 5.15.5

# 26

## மாத்ரு பித்ரு பக்தி

## தாய் தந்தையரிடம் பக்தி

இந்தியப் பண்புகள் என்பதில் பிரத்யேகமாக குறிப்பிடத்தக்கதொரு பண்பு, பெற்றொர்களுக்கு மரியாதை கொடுப்பதாகும். அது வழிபாட்டுக்கு ஒப்பாகும். உபநிஷத்தோ 'மாத்ரு தேவோ பவ, பித்ரு தேவோபவ' என்று அன்னையை தெய்வமாகக் கருது, தந்தையை தெய்வமாகக் கருது என்கிறது. ஆலயத்திலுள்ள கடவுளின் சிலைகளை வலம் வருவதுபோல அவர்களையும் வலம் வருதல் வேண்டும். அன்னையையும் பிதாவையும் வலம் வருதல் ஏழு கண்டங்களும் அதனுள் அடக்கமான இந்த பூமி முழுவதையும் வலம் வருவதற்கு ஒப்பாகும் என்று ஒரு புராதன செய்யுள் கூறுகிறது.

மாதரம் பிதரம் சாபி யோ ஹி குர்யாத் ப்ரதக்ஷிணம் |
ப்ரதக்ஷிணீக்ருத்ய தேன ஸப்தத்வீபா வஸுந்தரா ||

இதிலிருந்து பெற்றோரைச் சுற்றி வருபவர் எல்லா புண்ணிய தலங்களையும் சுற்றி வந்ததாகக் கருதப்படுகிறது .பரமசிவன் குமாரர்களான விநாயகக் கடவுளுக்கும் கார்த்திகேயக் கடவுளுக்கும் இடையே உலகத்தை யார் முதலில் முழுவதும் சுற்றி வந்திடுவார்கள் என்றதொரு போட்டி ஏற்பட்டது. கார்த்திகேயன் உடனேயே உலகை சுற்றிவரக் கிளம்பிவிட்டார். விநாயகர், ஞானக்கடவுள் அல்லவா? தன் தாய் தந்தையரான பார்வதியையும் சிவனையும் வலம் வந்தார். அவர்கள் இருவரையும் சுற்றி வருவது உலகையே சுற்றியதல்லவா? தாய் தந்தையரை சுற்றுவது திண்ணமாக சிறிது நேரமே எடுக்கும். அதுவும் உலகையே சுற்றி வரச்சென்ற கார்த்திகேயனைக் காட்டிலும் அவனுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் வெகு சிறிது நேரமே எடுத்தது. விநாயகர் வென்றார்.

பெற்றோர்களிடம் பக்தி என்று கூறும்பொழுதே உடனே நினைவுக்கு வருபவர் சிரவண குமாரனே. அவனது கதை இந்திய மண்ணில் ஒவ்வொரு வீட்டிலும் விளங்கும் கதையாகும். அவன் தனது தாய் தந்தையரை தோளில் இருபக்கங்களிலும் இருகூடைகளில் இருத்தி எடுத்துச்செல்வான் என்பது பிரசித்தி பெற்ற கதையாகும். ஆனால் இப்படிப்பட்டதொரு குறிப்பு ராமாயணக் கதையில் காணக் கிடைப்பதில்லை. இக்கதையின் முதற் குறிப்போ அயோத்தியை ஆண்ட தசரத மன்னனின் வாழ்க்கை வரலாற்றில் நடந்த நிகழ்ச்சியாகும்.

தன் உயிருக்கு உயிரான ராமனை காட்டுக்கு அனுப்பியதும் இந்நிகழ்ச்சியை தசரதன் தன் மூத்த மனைவியான கௌசல்யைக்கு எடுத்துரைக்கிறார். இப்பொழுது நடந்திருக்கும் துன்பமான நிகழ்ச்சிக்கு காரணம் தான் முன் செய்த தவறான வினையின் பலனேயாகும் என்கிறார். ஒருவன் செய்த வினையின் பயனை அவன் அனுபவித்திட வேண்டும். நல்லதோ கெட்டதோ இதிலிருந்து தப்பிக்க இயலாது.

தசரதன் வாலிபப்பருவத்தில் இருக்கும்பொழுது காட்டுக்கு வேட்டையாடச் சென்றான். சிறு வயதிலேயே அவன் சத்ததைக் கேட்டே இலக்கை அடிப்பதில் நல்ல தேர்ச்சி பெற்றவன் என்னும் பெயர் பெற்றிருந்தான். ஒரு நாள் அதிகாலையில் இருள் சூழ்ந்திருந்த நேரத்திலேயே ஒருவருக்கும் தெரியாமல் அவன் வேட்டைக்குக் கிளம்பிச் சென்றான். குடம் ஒன்றில் நீர் நிரப்பிடும் சத்தம் அவனது காதில் வீழ்ந்தது. அவனோ அது யானை நீர் குடிக்கும் ஒலியென தவறாகப் புரிந்துகொண்டு சத்தம் வந்த அந்த திசை நோக்கி அம்பொன்றை விட்டான்.

அம்பு தைத்ததும் மனிதக் குரலில் ஹா ஹா என்ற சத்தம் எழுந்தது அவன் காதில் வீழ்ந்தது. அத்துடன் துறவி ஒருவன் காட்டில் கிடைப்பதை உண்டு, சடை தரித்து, மரவுரி உடுத்திக்கொண்டு எவரிடமும் பகைமைகொள்ளாமல் இருப்பவனை இவ்வாறு அடிப்பதும் ஏனோ? என்ற சொற்களும் காதில் வீழ்ந்தது. அப்பொழுதுதான், தான் ஏதோ பெரிய தவறு செய்துவிட்டதாக உணர்ந்தான். மனம் முழுவதும் வெந்திட அவ்விடத்துக்கு போய்ச் சேர்ந்தான். அங்கோ ஒரு சிறுவன் ரத்தத்தில் தோய்ந்து கிடப்பதை கண்டான். அவன் மேல் அம்பு தைத்திருப்பதையும் கண்டான். வலியில் துடித்துக்கொண்டிருந்தான்.

கண்களற்றவர்களும் வேறு உதவியற்றவர்களுமான தன் தாய் தந்தையரைக் குறித்து மிகவும் புலம்பிக்கொண்டிருந்தான். அவர்கள்

இவனை தண்ணீர் கொண்டுவரச் சொல்லிவிட்டு அருகிலுள்ள குடிலில் இருப்பதையும் கூறினான். அக்குடிலுக்குச் செல்லும் ஒரு குறுகிய பாதையை அவனுக்குக் காண்பித்தான். அம்பு தைத்த வலி தாங்கமுடியாமல் இருந்ததால் அந்த அம்பை வெளியில் பிடுங்கி எடுத்துவிடும்படி கூறினான். அம்பை எடுத்தாலோ அவன் உயிர் பிரிந்துவிடும் என்பதையும் அறிந்திருந்தான்.

தசரதனோ அச்சிறுவனது பெற்றோர்களுக்கு அச்செய்தியை மெதுவாக எடுத்துரைத்தான். அப்பிரிவை தாங்கமுடியாமல் அப்பெரியவர் கோபத்துடன் தசரதனையும் சபித்தார். தான் மகனை இழந்து புலம்பி உயிர் விடுவதுபோல் அவனும் மகனின் பிரிவால் உயிர் இழக்க வேண்டுமென்ற சாபத்தை கொடுத்தார். மேலும் அவனை சிதையை மூட்டி அதில் அப்பையனை இருத்தி பிறகு தாய் தந்தையர் இருவரையும் இடும்படியும் கூறினார். தசரதன் தான் வாழ்நாட்கள் பூராவும் அச்சாபத்தை ஏற்றுக்கொண்டிருந்தேன் என்று கௌசல்யாவிடம் கூறினார். அச்சாபமே இப்பொழுது பலிக்கிறது என்றான்.

இதுபோன்ற ஒரு சிறப்பான தந்தையிடம் காட்டிய பக்திக்கு எடுத்துக்காட்டாக இருப்பது ராமனின் கதையாகும். அவன் தன் இளைய தாயாரிடம் தான் உடனேயே காட்டுக்கு போவதாக வாக்களிக்கிறான்.*1 அவன் முன்பொரு சமயம் தேவாசுர யுத்தத்தில் தசரதனுக்கு அவள் செய்த உதவிக்காக தன் தந்தை கொடுத்த வாக்கை மனதில் நினைவில் கொண்டு தான் காட்டிற்கு போவதென தீர்மானித்ததை எடுத்துக்கூறுகிறான்.

நஹி அதோ தர்மாசரணம் கிஞ்சித் அஸ்தி மஹத்தரம் |
யதா பிதரி ஶுஶ்ரூஷா தஸ்ய வா வசனக்ரியா ||*2

'தன் தந்தைக்கு சேவை செய்வதைக் காட்டிலும் அவரது வாக்கை ஏற்று நடப்பதைக் காட்டிலும் உயரிய நற்குணம் வேறேதுமில்லை'

ஆழ்ந்த சோகத்தில் ஆழ்ந்த தசரதனோ தன்னை கைதியாக்கி ராஜ்ஜியத்தை அவன் உடனே ஏற்றுக்கொள்ளட்டும் என்று ராமனிடம் கூறுகிறார். ஆனால் ராமன் அதற்கு இணங்கவில்லை. அந்த நேரத்திலேயே காட்டுக்கு போவதற்கு திடமான தீர்மானத்துடன் தயாராக இருப்பதை கண்ட தசரதன் அன்று இரவு ஒருநாள் அங்கு தங்கிவிட்டு மறுநாள் அங்கிருந்து கிளம்பிப் போகும்படி கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறான். அந்த ஒருநாளாவது தான் ராமனுடன் கழிக்க இயலுமே என்று நினைத்தான். ஆனால் ராமரோ அதில் ஒன்றும் பயனிருப்பதாகக் காணவில்லை.

நான் இன்று போவதால் நல்லதென்று என்னைக் குறித்து யார் கூறப் போகிறார்கள் என்று கூறிவிட்டு என்றும் அழியாமல் இருக்கக்கூடிய இவ்வார்த்தைகளைக் கூறுகிறார் -

பிதா ஹி தைவதம் தாத தேவதானாம் அபி ஸ்ம்ருதம் |
தஸ்மாத் தைவதம் இத்யேவ கரிஷ்யாமி பிதுர்வச: ||*3

'தந்தையே கடவுள் ஆவார். தேவர்களும் இதையே கூறுகின்றனர். அதனால் அவரை தெய்வம் என்று கருதியே அவரது சொற்களை ஏற்றுச் செல்கிறேன்'.

பிரம்மாண்ட புராணத்தின் கருத்துப்படி தந்தையை கடவுளாகக் கருதி வழிபடுபவன் வேள்விகளைக் காத்த பலனையும், வேதங்களை யும், தான் விரும்பிய பொருட்களையும், பல விரதங்களை அனுசரித்த பலனையும், நீண்ட ஆயுளையும் அடைகிறான் என்பதில் ஒரு சந்தேகமும் இல்லை என்பதாகும்.

யஞ்ஞான் வேதான் ததா காமான் ஸ்தபாம்ஸி விவிதானி ச |
ப்ராப்னோதி ஆயு: தபஸ்சைவ பித்ருபக்தோ ந ஸம்சய: ||*4

இங்கு ஒரு பொருத்தமான கேள்வி எழுகிறது. தாய் தந்தை இருவருமே கடவுளுக்கு சமமானவர்கள் என்றால் இருவரையும் சமமாகவே கருதுதல் வேண்டுமா? சில சமயங்களில் குழந்தை இரு வேறுபட்ட அறிவுரைகளை இருவர்களிடமிருந்தும் பெறலாம். அச்சமயத்தில் யாருடைய அறிவுரையை அனுசரிக்க வேண்டியது சிறந்தது? அந்நேரங்களில் பழைய மறை நூல்களை எடுத்துப் பார்க்க வேண்டியது தான் சிறந்ததாகும். இதற்கு பதில் தெளிவாகக் கொடுத்துள்ளார்கள்.

தாய், தந்தையைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு உயர்ந்தவளாவாள் - 'ஸஹஸ்ரம் ஹி பிது: மாதா கௌரவேணாதிரிச்யதே'.*5 தாயின் ஸ்பரிசமானது, தாகத்தின்போது கிடைக்கும் நீரைப் போன்றது -'ஹஸ்தஸ்பர்ஸோ ஹி மாத்ரூணாம் அஜலஸ்ய ஜலாஞ்ஜலி:'.*6 குழந்தையை வளர்ப்பதற்கு தாய் எடுத்துக்கொள்ளும் உழைப்பை தந்தையின் உழைப்புடன் ஒப்பிட்டுப் பார்க்கவே இயலாது. அவர் தேவையானவைகளை ஏற்பாடு செய்வதோடு சரி. தாய் குழந்தையை பெற்றெடுக்கிறாள், அவளது ஒரு அம்சமாகவே ஆகிறது. இங்கு கந்தபுராணம் தாயைப் பற்றி கூறுவது மிகப்பொருத்தமானதே ஆகும். 'தாயைப் போன்ற வேறு நிழல் இல்லை, வேறு புகலிடம் இல்லை. வேறு பாதுகாப்பு இல்லை. தாயைப் போன்ற நீர்தாரை வேறு இல்லையே'.

நாஸ்தி மாத்ருஸமா சாயா நாஸ்தி மாத்ருஸமா கதி: |
நாஸ்தி மாத்ருஸமம் த்ராணம் நாஸ்தி மாத்ருஸமா ப்ரபா ||*7

தாய் தந்தையரை கௌரவிக்கும் இந்த கருத்துரையை நிறைவு செய்யும் முன்னர், இவ்வுடலைப் பெற்றெடுத்த தாய் தந்தையரைத் தவிர வேறு சிலரும் பெற்றோராகக் கருதப்படுகின்றனர். அவர்களையும் குறிப்பிடுவது பொருந்துவதாகும். அவர்கள் யார் யார் என்ற கேள்விக்கு பதில் கீழ்க்காணும் செய்யுளில் கூறப்பட்டுள்ளது.

குருபத்னீ ராஜபத்னீ ஜ்யெஷ்டபத்னீ ததைவ ச |
பத்னீ மாதா ஸ்வமாதா ச பஞ்சைதே மாதர: ஸ்ம்ருதா:' ||*8
ஜனகஸ்சோபனேதா ச யஸ்ச வித்யாம் ப்ரயச்சதி |
அன்னதாதா பயத்ராதா பஞ்சைதே பிதர; ஸ்ம்ருதா: ||*9

ஆசிரியரின் மனைவி, அரசனின் மனைவி, பெரிய சகோதரனின் மனைவி, மனைவியின் தாய் அதாவது மாமியார், தன்னை ஈன்றெடுத்த தாய் - என இந்த ஐவரும் ஒருவனுக்குத் தாய் ஆவார்கள்.

தனக்கு பிறப்பளித்தவரும், தனக்கு உபநயனம் செய்து வைத்தவரும், அறிவளிப்பவரும், உண்ண உணவளிப்பவரும், அச்சத்திலிருந்து தன்னை விடுவிப்பவனும் ஆக இந்த ஐவரும் தந்தையாவார்கள்.

இந்திய சமுதாயப் பண்பின் அடிப்படை கூற்றின்படி தாய், பூமியைக் காட்டிலும் உயர்ந்தவள். தந்தை விண்ணைக் காட்டிலும் உயர்ந்தவராவார் - 'மாதா குருதரோ பூம: காத் பிதோச்சதரஸ்ததா'*10

பிள்ளைகள் தாயிடம் தவறு செய்திடலாம் ஆனால் தாய் மகனிடம் அல்ல - 'மாதரி பவந்தி ஸுதானாம் மன்தவ: கில ஸுதேஷு ந மாது:'*11

தாய் தன் குழந்தைகளை பார்த்துக்கொள்ளும் வழியே அலாதியானது. இதற்கொரு ருசிகரமான கதை உண்டு. குழந்தை தொட்டிலிலிருந்து கொண்டு இரைந்து கத்துகிறது. தாய் சமயலறையிலிருந்து ஓடி வருகிறாள். பால் புட்டியை அதன் வாயில் வைக்கிறாள். குழந்தை அழுவதை நிறுத்தியது. தாய் தன் குழந்தை வளர்கிறது என்று மன மகிழ்ந்தாள். குழந்தை தனக்கு வேண்டிய ஆகாரம் முதலியவைகளை வெளிப்படுத்த தெரிந்துகொண்டுவிட்டது என்றே நினைத்தாள். இரவு நேரம் வந்தது. குழந்தை மீண்டும் அழுதது. தாய் அதன் படுக்கை விரிப்பு ஈரமாக உள்ளதை உணர்ந்தாள். தாயோ தன் குழந்தை படுக்கை ஈரமாகிவிட்டதை உணரத் தொடங்கிவிட்டதென்று

நினைத்தாள். உடனே விரிப்பை மாற்றி காய்ந்த இடத்தில் படுக்க வைத்தாள்.

குழந்தை தவழ ஆரம்பித்ததும் அவளது கைப்பையை சன்னல் வழியே வெளியே எரிந்துவிட்டது. தாய் கோபப்படவில்லை. அதைத் திட்டவும் இல்லை. மாறாக குழந்தையின் அறிவு வளர்ந்து வருகிறதென்றும் செயல்களை செய்வதில் ஈடுபடுகிறதென்றும் அறிந்து மகிழ்ச்சி அடைந்தாள். ஒருநாள் மின்னல் அடித்திட குழந்தை பயந்து ஓடி வந்து தாயை இறுகக் கட்டிக்கொண்டது. தாயோ குழந்தை ஏதோ தவறுதல், கெடுதல் நடக்கப்போகிறதென்று உணர்ந்ததை குறித்து பெருமிதம் அடைந்தாள். பகுத்தறியும் திறன் வளரத் துவங்கியதை உணர்ந்து மகிழ்ச்சி அடைந்தாள். குழந்தையின் ஒவ்வொரு செயலையும் ஆக்கப்பூர்வமான கோணத்தில் சிந்தித்து அறிந்துகொண்டாள். அவள் தாய்!

ராமர் வனவாசம் முடிந்தபின்னர் அரசு முடி தரித்து அரசாண்டு வந்தார். அச்சமயம் ராஜ்ஜியத்தில் என்ன நடக்கிறதென்று அறிய ஆவல் கொண்டு ஒற்றர்களை பல இடங்களுக்கும் அனுப்பிவைத்தார். அவர்களை மக்களுடன் இணைந்து வாழ்ந்து உண்மையான செய்தி களை சேகரித்து வரும்படி அனுப்பிவைத்தார். அதில் ஒருநாள் ஒரு ஒற்றன் ஒரு தாயைப் பார்த்தான். அவளோ தன் குழந்தைக்கு தன் முலைப்பாலைக் கொடுக்க முயற்சித்தாள். ஆனால் குழந்தையோ அதை ஏற்கவேயில்லை. வேண்டாமென வேறுபக்கம் தள்ளி ஓடியது.

அச்சமயம் தாய் தன் குழந்தையைப் பார்த்து கூறுகிறாள். 'குழந்தாய் நாம் எல்லோரும் இப்பொழுது ராமரது ராஜ்ஜியத்தில் பிறந்துள்ளோம். ராமர் ராஜ்ஜியம் ஆளும்பொழுது இருந்தவர்களுக்கு மறு பிறவியே கிடையாது. அதனால் இனி நான் இப்புவியில் மீண்டும் பிறக்கப் போவதில்லை. அதனால் எனக்கு இனி முலைப்பாலூட்டும் வாய்ப்பே கிடைக்கப்போவதில்லை. அதனால் இப்பிறவியில் நான் தாயாகிவிட்டேன் என்பதற்கு அடையாளமான என் முலைப்பாலை நீ மறுக்காதே. 'தாயின் இவ்வார்த்தைகளைக் கேட்ட ஒற்றனது கண்களில் கண்ணீர் பெருகியது. அது தாய்!

தன் குழந்தைகளிடம் காட்டிடும் தாயின் இப்பரிவும் அன்பும் மனித குலத்துக்கு மாத்திரம் அமைந்த ஒன்றல்ல. மிருகங்களும் அதற்கு விதிவிலக்கல்ல. அதற்கொரு அருமையான கதை உள்ளது. வியாபாரி ஒருவன் ஒரு சமயம் இரு பசுக்களை விலை கொடுத்து வாங்கினான்.

இரண்டும் பார்ப்பதற்கு ஒருபோலவே இருந்தது. ஒரே கலர், ஒரே அங்க வளர்த்தி அவயவ அமைப்பு. அதனால் அவ்விரண்டில் எது தாய்ப்பசு எது கன்றுப்பசு என்று அவனால் ஊகிக்க முடியவில்லை.

அதனால் அவன் அதை மன்னனிடம் எடுத்துச் சென்றான். ஆனால் மன்னனாலும் அதை அறிய முடியவில்லை. பின்னர் தனது அமைச்சரை கூப்பிட்டு அக்கேள்விக்கு பதிலளிக்கும்படி கூற அவனா லும் பதில் தர முடியவில்லை. அவன் தனக்கு சிறிது அவகாசம் கொடுக்குபடி கூறிவிட்டு தனது வீட்டுக்குச் சென்றான். அவனது மனைவி அவனது மன உளைச்சலுக்கு காரணம் என்ன என்று அறிந்துகொண்டாள். அவளோ அது ஒன்றும் கடினமானதில்லையே என்றுரைத்தாள். மறுநாள் அவள் அமைச்சருடன் அரசவைக்கு வந்தாள். தாய் சேய் இரு பசுக்களும் அங்கு கொண்டுவரப்பட்டன.

அமைச்சரின் மனைவி இரண்டிற்கும் ஒரேயளவு ஒரே தீனி இரு தனித்தனி கலத்தில் வைத்தாள். கன்றுப்பசுவோ தனக்குக் கொடுத்த தீனியை வேகமாக உண்டுவிட்டு தன் தாய்ப்பசுவின் கலத்திலிருந்து மேலும் உண்ணத் துவங்கியது. தாய்ப்பசுவோ அமைதியுடன் தன் சேயை உண்ண அனுமதித்து நின்றது. தன் பாகத்திலிருந்து எடுத்து உண்ண அனுமதித்து அன்புப் பார்வையுடன் பார்த்துக்கொண்டிருந்தது தாய் பசு. மற்றது சேய் பசு. இது அவர்களது கேள்விக்கு பதிலளித்து விட்டது. அது தாயாகும்.

இப்படிப்படட காரணங்கள் இருப்பதாலன்றோ தாயும், தாய் நாடும் சுவர்க்கத்தைக் காட்டிலும் உயர்ந்தவர்கள் என்று போற்றப்படுகிறார்கள் - 'ஜனனீ ஜன்மபூமிஸ்ச ஸ்வர்காதபி கரீயாஸீ'

## மேற்கோள்கள்


1. *Ramayana Ayodhyakanda canto 63*
2. *ibid Ayodhyakanda 19.22*
3. *ibid Ayodhyakanda34.52*
4. *3.19.68*
5. *Balaramayana 4.30*
6. *Pratimaanataka 3.13*
7. *Ma Kau 6.103-104*
8. *Narabharana 2.8*
9. *Nitisataka 80*
10. *mahabharata vanaparvan 313.60*
11. *caitaṇyacandrodaya 1.61*

# 27

## குருபக்தி

## ஆசிரியரிடம் பக்தி

பெற்றோர்களைப் பற்றி கூறியது போன்றதே குரு, ஆசிரியரிடத்திலும் ஆகும். அவருக்கும் மேலான மரியாதை அளித்திடல் வேண்டும். தெய்வத்தைப்போல் தொழுதிட வேண்டும் - 'ஆசார்ய தேவோ பவ'

குருர்ப்ரஹ்மா குருர்விஷ்ணு: குருர்தேவோ மஹேஸ்வர:
குரு: ஸாக்ஷாத் பரப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீ குரவே நம: ||*1

இந்தியாவில் ஆசிரியருக்கும் மாணவனுக்கும் உள்ள உறவே பிரத்யேகமான சிறப்பு வாய்ந்தது. ஆசானே தன் சிஷ்யனுக்கு, மாணாக்கனுக்கு பூணூல் அணிவித்து கல்வி கற்கத் தொடக்கவிழாவில் அவர் அவனை தன் ஆன்மாக்குள்ளேயே அடக்கம் செய்துகொள்கிறார். குழந்தையைத் தன் கருவில் வளர்ப்பதுபோல் அவனை தன்னுள் அடக்கம் செய்துகொள்கிறார் - 'ஆசார்ய உபனயமானோ ப்ரஹ்மசாரிணாம் க்ருணுதே கர்பம் அந்த:'*2

இங்கு கொடுத்துள்ள உவமை சிறப்பு வாய்ந்ததாகும். கருவில் வளரும் குழந்தை தாயிடமிருந்து போஷாக்குகளைப் பெறுவதுபோல் மாணாக்கனும் உடல், மனம், ஆன்மீக போஷாக்கை தன் ஆசானிட மிருந்து பெறுகிறான். அதனால் அச்சமயத்திலிருந்து அதாவது உப நயனத் தொடக்கத்திலிருந்து, அவனது கல்வி கற்கும் தொடக்கத்தி லிருந்து அவனைப் போஷிப்பது ஆசானின் பொறுப்பாகும்.

அவனது ஆசிரியனின் ஆசிரமம் குருகுலம் என்றழைக்கப்படும். அவனுக்கு பல துறைகளில் அறிமுகப்படுத்தி அவன் திறமையை அடைவதுடன் பல திறன்களையும் கலைகளையும் அவன் கற்றுத் தேர்ந்திடத் தேவையான ஒழுக்கமுறைகளையும் கற்றுக்கொடுப்பதுடன்

அவன் உடல் வளர்ச்சிக்குத் தேவையான போஷாக்கையும் இதர பொருட்களையும் கொடுக்க வேண்டியது அவரது பொறுப்பாகும்.

அவன் சிஷ்யனாக மாணாக்கனாக இருப்பதால் ஒழுக்கம் இன்றியமையாததென அதையும் கற்றுக்கொடுப்பது அவரது முதற் கடமையாகிறது. சிஷ்ய என்னும் சொல் 'ஸாஸ் + ய = அனுஸிஷ்டி' அனுஸிஷ்டி' என்றால் ஒழுக்கம், அதையும் நல்ல முறையில் கற்றுத் தர வேண்டும். நன்னடத்தை, நல்லொழுக்கம் முதலியவைகளையும் கற்றுத் தர வேண்டும். மாணாக்கன் சிஷ்யன் என்பதற்கு பிறிதொரு சமஸ்கிருத சொல் 'விநய' என்றால் நன்னடத்தை என்பது பொருள். ஆசானின் பங்கு எல்லாக் கோணங்களையும் தழுவி இணைத்து நடப்பதாகும்.

அதனால் மாணாக்கன் மனதில் எப்பொழுதும் ஆசானிடம் பிரத்யேகமான மரியாதையும் பரிவும் கொண்டிருத்தல் வேண்டும். குருபூர்ணிமா என்ற ஒரு பிரத்யேகமான நாளன்று எல்லா மாணாக்கர்களும் பழைய மாணவர்களும் தற்சமயம் கல்வி கற்கும் மாணவர்களும் ஆக எல்லோரும் அன்றைய தினம் ஆசானை தரிசித்து அவருக்கு நன்றி செலுத்தி மரியாதையுடன் வணங்கி அவரது ஆசிகளை பெறுகிறார்கள். இது இந்தியர்களுக்கே உரித்தானதென கருத வேண்டாம். இச்செய்தி வியப்பளிப்பதாகவும் இருக்கலாம்.

இந்தியாவின் வெளியிலுள்ள நாடுகளிலும் இந்தியப் பண்பாட்டினால் பாதிக்கப்பட்ட நாடுகளிலும் இம்முறையைக் காணலாம். இச்சந்தர்ப்பத்தில் தாய்லாந்து நாட்டில் இந்நூலின் ஆசிரியர், ஆசிரியராக பணியாற்றிட ஒரு அவகாசம் கிடைத்தபோது இந்த குருபூஜா நடந்ததை கண்கூடாகக் கண்டார். இப்பூஜை 1978-ம் ஆண்டு ஜூலை மாதம் 13-ம் நாளன்று பாங்காக்கிலுள்ள சில்பகோன் பல்கலைக் கழகத்தில் நடந்தது. அன்று காலை 8 மணிக்கு அந்நிகழ்ச்சி துவங்கியது. முதலாவதாக பௌத்த பிக்ஷுக்கள், துறவிகள் பாலி மொழியில் பிரார்த்தனை நடத்தி பிறகு கூடியிருந்தோரை ஆசீர்வதித்தனர். அவர்களுக்கு பிக்ஷை கொடுத்து அனுப்பிவைத்தனர். 9 மணி சுமாருக்கு எல்லோரும் அங்கு ஒன்றுகூடி மிகவும் ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர்.

காரணம் பின்னர்தான் தெரியவந்தது. அவர்கள் எல்லோரும் அரசகுமாரியின் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். அவள் 9.30 மணிக்கு அங்கு வந்து சேர்ந்தாள். முதல் வரிசையில் உள்ள

இருக்கையில் அமர்ந்துகொண்டாள். உடனே மாணாக்கர்கள் சிலர் குருவின் மேல் அமைந்த சில பாடல்களை இணைந்து பாடினார்கள். குருஸ்துதி சமஸ்கிருத மொழியில் அழகாக பாடினார்கள்.

அவர்களது மென்மையான குரலும், தவறுமற்ற சமஸ்கிருத உச்சரிப்பும் கேட்போரின். உள்ளங்களைக் கவர்ந்தன. இரு கண்களையும் மூடிக்கொண்டு கைகளைக் கூப்பியவண்ணம் அவர்கள் பாடிய குருஸ்துதி, இந்தியாவில் இருப்பது போன்றதொரு எண்ணத்தையே ஏற்படுத்தியது.. ஒருபுறம் மாணவர்களும் ஒருபுறம் வயது முதிர்ந்த மூன்று ஆசிரியர்களும் முதல் வரிசையில் அமர்ந்திருந்தனர். அம்மூவரிலும் ஒருவர் மிகவும் வயது முதிந்தவராக இருந்தார். அவர் அச்சமயம் மன்னனாக இருந்தவரின் தந்தைக்கு பாடம் கற்பித்திருந்தார்.

குருவந்தன பாடல்களுக்குப் பிறகு அதே தாயீ மொழியில் அமைந்த, இதுபோன்ற குருவந்தனப் பாடல்களை அவரவது ஆசிரியர்களுக்கு அளித்தனர். இங்கு. குறிப்பிடத்தக்கது என்னவென்றால் அவர்களது மொழியிலும் 'குரு' 'ஆசார்யா' என்ற சொற்கள் 'க்ரூ' என்றும் 'ஆசார்ன்' என்றும் கூறப்படுகிறது.

ஒவ்வொரு ஆசானிடமும் மாணாக்கர்கள் வந்து அவர்களுக்கு மலர்க்கொத்தைக் கூடையில் வைத்து அத்துடன் மெழுகுவர்த்தி களையும் அளித்தனர். அம்மூன்று ஆசான்களில் ஒருவர் அவைகளை ஏற்றுக்கொண்டதாக அவைகளை தொட்டு அவர்களது நெற்றியில் முக்கோண வடிவில் திலகம் இடுகிறார். ஆசீர்வதிக்கிறார்.

இம்முக்கோணாகாரத் திலகம் பிரும்மா, விஷ்ணு, சிவன் என்ற மும்மூர்த்திகளையும் குறிப்பிடுவதாக ஐதிகம். அதன் பின்னர் இம்மாணவன் இரண்டாவது ஆசானை அணுகிட அவரோ நாம் ரக்ஷாபந்தனில் பாதுகாக்கும் நூலாக கையில் கட்டுவதுபோல் அவனது கையில் வெண்மை நிற நூலொன்றை கட்டுகிறார். அடுத்து அம்மாணவன் மூன்றாம் ஆசானை அணுகிட அவரோ அவனுக்கு வேகவைத்த முட்டை ஒன்றை கொடுக்கிறார். இவ்வாறு ஒவ்வொரு மாணவனுக்கும் கொடுத்து முடித்த பின்னர் அந்நிகழ்ச்சி நிறைவு பெறுகிறது.

இம்மாதிரி இந்தியாவுக்கு வெளியிலுள்ள ஒரு நாட்டில் சிறிது வித்தியாசமாக நடப்பதைப் பார்ப்பது ஒருபிரத்யேக அனுபவமாகும்.

ஆசிரியர் நல்ல தூண்டுதலாக இருக்கிறார். நம் உத்வேகத்தை தூண்டுபவராகவும் இருக்கிறார். அவரை பார்த்ததுமே நல்ல திறன்களை கற்று நம் ஆற்றலை அதிகரிக்க தூண்டுபவராக உள்ளார். மகாபாரதத்தில்*3 உள்ள ஏகலவ்யன் கதை இதற்கொரு எடுத்துக்காட்டாகும்.

ஏகலவ்யன் ஒரு வேடர் தலைவனின் மகனாவான். அவன் துரோணரின் வில்வித்தையிலுள்ள ஆற்றலை அறிந்து அவ்வித்தையை கற்க அவரிடம் வர, அவரோ வேடர் மகனாக இருப்பதால் கீழ்சாதியைச் சேர்ந்தவன் என்றும், அவனது உற்சாகத்தைப் பார்த்து ஒருவேளை அவன் தன் சீடர்களான பாண்டவர்களையும் கௌரவர்களையும் வில்வித்தையில் தோற்கடிப்பானோ என்றும் நினைத்து சீடனாக ஏற்க மறுத்துவிட்டார்.

அவனோ மீண்டும் காட்டிற்குச் சென்று துரோணரைப் போன்றதொரு சிலையை உருவாக்கி அவரையே தன் குருவாக மனதில் ஏற்று வில்வித்தையை தீவிரமாகப் பயிற்சி செய்யத் தொடங்கினான். ஒரு சமயம், கௌரவர்களும் பாண்டவர்களும் வேட்டையாட துரோண ரது அனுமதியுடன் காட்டுக்குச் சென்றனர். அங்கு தன்னிச்சைப்படி செல்லும் ஒருவன் வேட்டை ஆயுதங்களுடன் தன் நாயுடனும்கூட போய்க்கொண்டிருந்தான். அவனைப் பின் தொடர்ந்த அவர்கள் வேடுவனின் மகன் வில்வித்தை பயின்றுகொண்டிருக்கும் இடத்தை அடைந்ததும் அந்நாய் குரைக்கத் தொடங்கியது. அதை அமைதியடையச் செய்ய அவ்வேடுவன் ஏழு அம்புகளை ஒரே நேரத்தில் தொடுத்துவிட்டான். அந்த நாய் அங்கிருந்து வருகையில் பாண்டவ சகோதரர்கள் அதைக் கண்டனர். அப்படியே வியப்பில் ஆழ்ந்தனர். இவ்வாறு ஏழு அம்புகளை தொடுத்துவிட்டது யார் என்றறிய விரும்பினர்.

மேலும் அவ்வழியே சென்ற அவர்கள் வேடன் மகன் வில்வித்தை பயிற்சி செய்வதைக் கண்டனர். அவனை அணுகி விசாரித்ததில் அவன் தன்னை துரோணரின் சீடன் எனக் கூறினான். இது குறிப்பாக அர்சுனனை மிகவும் வேதனைக்குள்ளாக்கியது. ஏனெனில் துரோணரோ அர்சுனனைக் காட்டிலும் வில்வித்தையில் சிறந்த சீடன் ஒருவனும் தனக்கில்லை என்ற பெருமிதத்துடன் கூறியிருந்தார். இப்பொழுதோ அர்சுனன் ஒரு வேடுவன் அவரது சீடன் தன்னைக் காட்டிலும் சிறந்த வில்லாளியாக இருக்கிறானே என்று துரோணரிடம் கூறிட அவர் வியப்பிலாழ்ந்தார்.

ஏனெனில் அவர் வேடுவனுக்கு வில்வித்தை கற்றுக்கொடுத்ததே இல்லை. அர்சுனனை முன்னிட்டுக்கொண்டு அங்கு சென்று பார்த்தபொழுது அவன் வில்வித்தை பயிற்சியில் ஈடுபட்டிருப்பதைக் கண்டார். அச்சிறுவனோ அவர்களைக் கண்டதும் ஓடிவந்து துரோணரின் கால்களில் வீழ்ந்து வணங்கி தான் அவரது சீடன் எனப்பகர்ந்தான்.

'அவ்வாறெனில் எனக்குரிய குருதக்ஷிணை கொடு' என்று கேட்டார். மிக்க மகிழ்ச்சி அடைந்த வேடுவன் என்ன குருதக்ஷிணையாக வேண்டுமோ அதை தருவதாகக் கூறினான். உடனே துரோணர் அவனது வலது கட்டைவிரலை குருதக்ஷிணையாகக் கேட்டார். இது அவனை வியப்பிலாழ்த்தியது. ஆனால் அவனோ சிறிதும் தயக்கப்படவில்லை. உடனேயே தனது கட்டைவிரலை வெட்டி அவருக்குக் கொடுத்துவிட்டான். அதனால் அது முதல் அவன் வில்லையும் அம்பையும் பயன்படுத்த முடியவில்லை.

துரோணரும் அர்சுனனுக்குக் கொடுத்த வாக்கு அதாவது ஒருவரும் அர்சுனனைக் காட்டிலும் வில்வித்தையில் தேர்ச்சி பெற இயலாது என்பதும் உண்மையாயிற்று. இது ஆசிரியருக்கு மாணவன் காட்டும் மதிப்புக்கும் மரியாதைக்கும் ஓர் உயர்ந்த எடுத்துக்காட்டாகும்.

இதற்கிணையானதொரு காட்சியை மனித வரலாற்றிலேயே காண்பது அரிதாகும். குருபக்தி என்பதற்கு ஏகலவ்யன் ஒரு பாவைச் சின்னமாவான் என்னும் என்றும் அழியா புகழைப் பெற்றான்.

மாணாக்கனுக்கு ஆசிரியரிடம் உள்ள மதிப்பும் மரியாதையும் அவ்வளவு அதிகமாக இருந்ததால் பெரிய பெரிய அறிவாளிகளும் பல அறிவுத் துறைகளுக்கு உறைவிடமாக உள்ளவர்களும் தங்களுடைய நூல்களில் உள்ள நல்ல மேன்மையான கருத்துகள் எல்லாம் குருவைச் சார்ந்ததென்றும் அதற்கு மாறாக உள்ளவைகள் அவர்களுக்கே உரியதாகும் எனவும் குறிப்பிடுகின்றனர்.

யத்யத்ர ஸௌஷ்டவம் கிஞ்சித் தத் குரோரேவ மே நஹீ |
யத் அத்ராஸௌஷ்டவம் கிஞ்சித் தன்மமைவ குரோர்நஹீ ||

பெரிய இலக்கண மேதையும் மெய்யியல் தத்துவ நிபுணருமான பர்த்ருஹரி தான் இயற்றிய நூலை தன் ஆசானிடமுள்ள கௌரவத்தினாலும் மரியாதையினாலும் அவருடையதாகவே அவர் பெயரில் வெளியிட்டார்.

ந்யாயப்ரஸ்தாநமார்காஸ்தான் அப்யஸ்ய ஸ்வம் ச தர்ஸனம் |
ப்ரணீதோ குருணாSஸ்மாகம் அயம் ஆகமஸங்க்ரஹ: ||*4

ஆசிரியனின் சொல்லுக்கு சிறிதும் பிசகாத எதிர் பதிலளிக்காத பல சீடர்களின் பெயர்களை சமஸ்கிருத இலக்கியத்தில் காணலாம். அவைகளில் ஒன்று மகாபாரதத்தில் அமைந்துள்ள இக்கதையாகும். 'அபோட தௌம்ய' என்றொரு முனிவர் இருந்தார். அவருக்கு உபமன்யு, ஆருணி, வேதன் என மூன்று சீடர்கள் இருந்தனர். ஆருணி பாஞ்சால தேசத்தைச் சேர்ந்தவன். அவனை வயலில் உள்ள நீரோட்டத்தில் உடைப்பு ஏற்பட்டதால் அதை தடுத்து நிறுத்தும்படி கூறினார்.

ஆருணி அங்கு சென்று சாதாரணமாக செயல்படும் வழிமுறைகள் நீரை தடுக்க இயலாததாக இருப்பதைக் கண்டான். அதனால் அவனே வரப்பு உடைந்து நீர் வெளிவரும் இடத்திற்கு நீரில் இறங்கி அங்கு படுத்திருந்து நீரைத்தடுத்தான். இவ்வாறு நீரின் வேகம் தடுக்கப்பட்டது. பின்னர் அபோட தௌம்யர் இதர சீடர்களைப் பார்த்து ஆருணி எங்குள்ளான் அவனை வரப்பு நீரில் உடைப்பு ஏற்பட்டதை தடுத்து நிறுத்த அனுப்பினேனே இன்னமும் அவனைக் காணவில்லையே என் வினவினார்.

அவர் அவ்விடத்தை அடைந்து கூப்பிட்டார் - அப்பா! குழந்தாய் நீ எங்கிருக்கிறாய்? ஆருணி தான் இருந்த இடத்திலேயே இருந்துகொண்டு, உடைப்பின் நீரை தடுத்து நிறுத்த இயலாமல் போனதால்தான் உடைப்பு ஏற்பட்ட இடத்திலேயே இறங்கி படுத்துக்கொண்டுள்ளதாகக் கூறினான். ஆசிரியர் அவன் நீரை தடுத்து அதன் பாய்ச்சலை மாற்றியமைத்தால் அன்றைய தினத்திலிருந்து அவன் உத்தாலகன் என்னும் பெயர் கொள்வான் என்றும் ஆசிரியரின் கட்டளைகளை முழுவதும் அனுசரித்ததால் அவனுக்கு நல்ல செல்வங்கள் கிட்டிடும் என்றும், அவன் வேதம், தருமசாஸ்திரம் முதலியவைகளில் கரைகண்டவனாகி பெரும்பேறும் புகழும் பெற்றிடுவான் என்றும் வாழ்த்துக்கூறினார்.

அடுத்து மற்றொரு சீடன் உபமன்யுவை பசுக்களை காக்கும்படி ஆணையிட்டார். நாள் முழுவதும் பசுக்களை மேய்த்த பின் மாலையில் அவன் குருகுலம் வந்து சேர்ந்தான். அவன் சிறிதும் களைப்பின்றி சுறுசுறுப்பாக இருப்பதைக் கண்ட ஆசிரியர் நீ என்ன சாப்பிடுகிறாய்? என வினவினார். 'நான் பிக்ஷை எடுத்து உண்கிறேன்' என்றான். ஆசிரியர் அவனைப்பார்த்து 'அது நல்லதல்ல. பிக்ஷையை குருவினிடம் ஒப்படைக்காமல் தானே உண்பது சரியல்ல' என்றார்.

மறுநாள் மீண்டும் பசுக்களை மேய்க்கச்சென்ற உபமன்யு மாலை மீண்டும் உற்சாகத்துடன் ஆரோக்கியமாக வந்து சேர்ந்தான். மீண்டும் ஆசிரியர் முன் போன்ற கேள்வியே கேட்க உபமன்யுவோ நான் இரண்டாம் முறையாகச் சென்று பிக்ஷை எடுத்து உண்கிறேன் என்றான். அதை கேள்வியுற்ற ஆசிரியர் இவ்வாறு நீ செய்வது சரியல்ல. நீ இரண்டாம் முறை பிக்ஷை எடுப்பதால் பிற மாணவர்களுக்கு உண்ண உணவு கிடக்காமல் போகும். அது உனது பேராசையையே குறிக்கிறது, நீ செய்வது சரியல்ல என்றார்.

மறுநாள் மீண்டும் பசுக்களை மேய்க்க அழைத்துச்சென்று மாலை நேரம் குருகுலம் வந்து சேர்ந்தான். 'அன்றும் ஆரோக்கியமாகவும் உற்சாகத்துடனும் இருப்பதைக் கண்டு குரு அவனை என்ன உணவு உண்டாய்? என்று கேட்டதற்கு பசுவின் பாலை குடித்தேன் என்று பதிலளித்தான். அதைக்கேட்ட ஆசிரியர் தனது அனுமதியில்லாமல் பசுவின் பாலை குடித்தது சரியல்ல என்றார். மறுநாள் மீண்டும் பசுக்களை ஒட்டிச்சென்று மாலை திரும்பிய உபமன்யுவை இன்று என்ன ஆகாரம் உண்டாய் என்று வினவ அவனோ கன்று குட்டி பால் குடிக்கும் பொழுது வழியும் நுரையை உண்டதாகக் கூறினான். ஆசிரியரோ அதுவும் அவன் செய்வது சரியல்ல என்றும் கன்றுகளை இவ்வாறு முழு வயிறும் நிரப்பாமல் பசியுடன் விடுவது நியாயமானதல்ல என்றும் கூறினார்.

அடுத்த நாள் அவன் பசி தாங்கமுடியாமல் போகவே எருக்கம் செடியின் இலைகளை உண்டான். அதனால் அவன் இரு கண்களின் பார்வையையும் இழந்தான். கண் தெரியாமல் சுற்றி அலைந்து கொண்டிருந்தவன் பள்ளமொன்றில் விழுந்துவிட்டான். மாலை சாய்ந்தது. உபமன்யு வீடு திரும்பவில்லை. ஆசிரியர் இதர சிடர்களுடன் காட்டுக்குச்சென்று அவனை தேடலானார். அவர் அவனை இரைந்து கூப்பிட உபமன்யு பள்ளத்தில் இருந்தபடியே பதிலளித்தான். தனக்கு நேர்ந்த விவரங்கள் எல்லாவற்றையும் விவரமாக எடுத்துரைத்தான்.

குரு தெய்வீக மருத்துவர்களான அச்வினீ குமாரர்களைக் குறித்த ஒரு பாடலை பாடச்சொல்ல அவர்களும் மிக்க மகிழ்ச்சி அடைந்த வர்களாய் அங்கு வந்து அவனுக்கு அப்பம் ஒன்றைக்கொடுத்து அதை உண்ணும் படி கூறினார்கள்.உபமன்யுவோ அதை முதலில் குருவுக்குக் கொடுத்துவிட்டு பிறகே அவரது அனுமதி பெற்ற பிறகே உண்ண வேண்டும் என்று கூறிட அவர்களும் அவனை மிகவும் மெச்சி அவனுக்கு கண் பார்வையை மீண்டும் அளித்ததுடன்

கறுப்பாக இருந்த அவனது பற்களை பொன்னாலானதாகச் செய்தனர். குருவும் ஆரணியை ஆசீர்வதித்தது போல் இவனுக்கும் பல ஆசிகளை வழங்கினார்.

அடுத்ததாக மூன்றாம் சிடனின் முறையாகும். வேதா என்னும் அவனை குரு தன் வீட்டிலேயே இருந்துகொண்டு தனக்கு வேண்டிய சேவைகளை செய்யும்படி கூறினார். அவனும் அவரது சேவைகளை சூடு, குளிர், பசி, தாகம் முதலியவைகளை பொறுத்துக்கொண்டு ஒருவிதமான புலம்பலுமின்றி மாடு ஒன்று தன் தலைவனுக்கு உழைப்பதுபோல் சேவை செய்து குருவின் ஆசிகளை பரிபூரணமாகப் பெற்று நற்பயன்களையும் நல்ல பேரறிவையும் பெற்றான்.

குரு சிஷ்யனின் நற்சேவையையும் அதன் பலனையும் அறிந்துகொள்ள சிறந்ததாய் இருப்பது பிரபாகரமிச்ராவும் குமாரிலபட்டர் என்பவர்களாகும். இருவருமே மீமாம்சா சாஸ்திரத்தில் மிக்க தேர்ச்சி பெற்றவர்களாவார்கள். குமாரிலபட்டர் தன் குருவின் பல கொள்கைகளை மறுத்து வாதாடியிருக்கிறார். முடிவில் தனது ஆசானை மறுத்து வாதாடியது அவரது மனதை உறுத்திட உமியைக் குவித்து அதில் நெருப்பை பற்ற வைத்து தன் உடலை உயிருடன் இருக்கையிலேயே அதில் இட்டார். அவர் அறிவாற்றலில் சிறந்திருந்ததால் தன் குரு கூறியவைகளை மறுத்துக்கூறினார்.

ஆனாலும் தான் கற்ற கொள்கைகள் எல்லாம் அக்குருவினிடமிருந்து தானே அறிந்தோம் என்ற உணர்வும் அவரை வாட்டியது. மறுபக்கம் தன் குருவுடன் வாதாடியதால் அவரது மனசாட்சியே அவரை குற்ற உணர்வை ஏற்படுத்தியது. வேறு எந்த பண்பாட்டிலாவது இப்படிப்பட்டதொரு ஆசான் மாணாக்கன் உறவையும் ஆதரவும் மரியாதையையும் காண இயலுமா? இப்படிப்பட்டதொரு பண்பாடு, பண்பு இந்தியக் கலாசாரத்தில்தான் உள்ளது.

இச்சந்தர்ப்பத்தில் இந்நூலின் ஆசிரியர் தனது சொந்த அனுபவத்தை வாசகர்களிடம் பகிர்ந்து கொள்ள விரும்புகிறார். பனாரஸ் ஹிந்து பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்ட ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்த அவர் வாக்கியபதீயத்தில் உள்ள காலமும் இடமும் என்னும் கொள்கையில் ஆராய்ச்சி செய்துகொண்டிருந்தார். இப்பணியில் அவருக்கு வாக்கியபதீயத்தை நன்கு கற்றறிய வேண்டிய அவசியம் இருந்தது. ஏனெனில் அது அறிந்துகொள்ள இயலாத இலக்கணமும் தத்துவமும் இணைந்ததொரு நூல் ஆகும்.

அதைக் கற்றுக்கொடுக்கும் திறன் கொண்ட ஒரே ஒருவர் தான் வாராணசியில் இருந்தார். அவர் பெயர் பண்டிட் ரகுநாத் சர்மா பாண்டே ஆகும். பிற்காலத்தில் அவர் அந்நூலுக்கு 'அம்பகர்த்ரி' என்னும் உரை எழுதி மிகவும் பிரசித்தி பெற்றார். அவர் 'கபீர்சௌரா' என்னுமிடத்தில் ஒரு மடத்தில் தங்கியிருந்தார். இந்நூலாசிரியரோ 'டே ஹாஸ்டலில்' அந்த பல்கலைக் கழகத்தின் கடைசியில் அமைந்திருந்த விடுதியில் பல மைல் கணக்கான நிலப்பரப்பு கொண்ட பிரம்மாண்டமான வளாகத்தில் தங்கியிருந்தார்.

போக்குவரத்துக்கு ஒரே சாதனம் இரண்டு சக்கர சைக்கிள் வண்டிதான் இருந்தது. அதுவும் அவருக்குக் கிடைத்த உதவித்தொகையிலிருந்து மீதம் வைத்து வாங்கிய ஒரு பொருளாகும். இந்த பதினைந்து கிலோமீட்டர் தூரத்தையும் சைக்கிளில் கடந்துசென்று ஒருநாள் மதியம் அவரை அவர் வீட்டில் சந்தித்து வாக்யபதீயம் கற்றுக்கொடுக்கும்படி வேண்டிக்கொள்ள அவரும் அங்கிகரித்து மறுநாள் சரியாக பகல் 2 மணிக்கு வரும்படி கூறினார்.

அவரும் அவரது சொற்கிணங்கி மறுநாள் அவர் குறிப்பிட்ட நேரத்துக்கு அங்கு வந்து சேர்ந்தார். ஆசிரியரோ உறங்கிக்கொண்டிருந்தார். விழித்தெழுந்ததும் சுமார் நான்கு மணியாகிவிட்டதை அறிந்து அவர் இன்றைக்கு பாடம் கற்பித்தல் இயலாது. அதனால் மறுநாள் பகல் இரண்டு மணிக்கு வரச்சொல்லிவிட்டு உடனே உள்ளே சென்றுவிட்டார். மறுநாள் இவர் மீண்டும் அவரது இல்லம் சென்றிட அவரோ சமையல் செய்துகொண்டிருந்தார். இவரைப் பார்த்ததும் 'இதோ பார். நான் இப்பொழுதுதான் சமையல் செய்துகொண்டிருக்கிறேன். பின்னர் நான் மதிய உணவை உண்டு பின்னர் சிறிது இளைப்பார வேண்டும். அதனால் இன்று இயலாது. நாளை வா என்றார்.

அவர் முகத்தில் ஒருவிதமான பச்சாத்தாபமோ இரக்க உணர்வோ எதுவுமே இல்லை. மறுநாள் செல்லுகையில் வழிநடுவில் அவரை சந்தித்தார். ஆசிரியரோ இப்பொழுதுதான் நான் வெளியில் சென்றுகொண்டிருக்கிறேன். அதனால் மறுநாள் வரும்படி கூறினார். இவரும் மறுநாள் அயராது சென்றார். அவர் தேகநிலை சரியாக இல்லாததால் அன்றும் படிப்பு தொடங்க இயலவில்லை.

ஆனால் அவரது முகத்தில் இவ்வாறு இருபது இருபத்தைந்து மைல்கள் சைக்கிள் ஓட்டி வருகிறானே பாவம் என்றோ அல்லது இரக்கமோ இருப்பதாக தோன்றவேயில்லை. இப்படி ஐந்து நாட்கள்

கடந்துவிட்டன. மறுநாள் அவர் ஆசிரியர் வீட்டிற்கு சென்றபொழுது அவரோ அவரது வருகைக்காக காத்துக்கொண்டிருந்தார். அன்று இரண்டு மணிக்குத் தொடங்கிய பாடம் இரவு ஏழு மணிவரைக்கும் தொடர்ந்தது. அவர் மாணாக்கன் களைப்படைந்தாரே ஒழிய ஆசிரியரோ இன்னும் சுறுசுறுப்பாகவே இருந்தார். இருளும் சூழ்ந்துவிட்டது. ஹரிகேன் விளக்கை ஏற்றி வைத்து பாடம் தொடர்ந்தது.

உடனே இவர் ஆசிரியரைப் பார்த்து 'நீங்கள் மிகவும் களைத்தி ருப்பீர்கள். (அவரோ மிக்க விநயத்துடன் கூற வேண்டும். தான் களைப்படைந்திருப்பதாக எப்படி கூற முடியும்) பாடத்தை நிறுத்திக்கொள்ளலாமா? என்றார். 'இல்லை, நான் சோர்வடைய வில்லை, மேலே தொடர்ந்து படிப்போம்' என்றார். பிறகு சற்று பொறுத்து மாணவன் சிறு பையன். வாக்யபதீயமோ மிக்க கடினமானதொரு நூல் அதனால் அவனுக்கு மிகவும் கடினமாக இருக்கலாம் என்று நினைத்தார் போலும். 'சரி இன்றைக்கு இது போதும். நிறுத்திக்கொள்ளலாம்' என்றார்.

அன்று முதற்கொண்டு தினசரி அவருக்காக எதிர்பார்த்துக்கொண்டி ருப்பார். இவ்வாறு பலமுறை ஒத்திப்போட்டு அவனது கற்கும் அவாவைச் சோதித்தார். ஆனால் மாணாக்கன் திடமாகவே கற்பதில் உறுதியுடன் இருக்கிறான் என்றெண்ணிய பிறகு அவரை எதுவும் தடை செய்வதற்கில்லை. அவரது அறிவுப் பொக்கிஷத்தின் கதவு களை முழுவதுமாக திறந்துவைத்தார். இந்நிகழ்ச்சியை நினைவில் கொள்ளும் பொழுது அவரது கண்களின் கண்ணீர் நிறைந்துவிட்டது.

பண்டைக்கால ஆசிரியர்கள் தங்களது அறிவை உண்மையான மாணாக்கர்களை தேர்ந்தெடுத்து என்றும் நிலைத்திருக்கும்படி செய்தனர் - 'பாத்ரப்ரதிகதா வித்யா'. ஒருக்கால் இபபடிப்பட்ட நல்லதொரு மாணாக்கனை பெறவில்லையாயின் தங்களது அறிவை எவரிடமும் பகிர்ந்துகொள்ளமாட்டார்கள். அது அவர்களுடனே மறைந்துவிடும். இதுவும் இந்தியாவின் அறிவுக்களஞ்சியம் சுருங்குவதற்கொரு ஒரு காரணமாக இருந்திருக்கலாம்.

சமஸ்கிருதத்தில் ஆசிரியர் என்பதற்கு குரு, ஆசார்யா, உபாத்யாய, சிக்ஷக என்ற நான்கு சொற்கள் உள்ளன. குரு, ஆசார்யா என்ற இரு சொற்களை மேலே முழுவதும் விவரமாக எடுத்துக்கூறியுள்ளோம். இப்பொழுது உபாத்யாய, சிக்ஷக என்ற இரு சொற்களையும் எடுத்துக்கொள்வோம். எவரை அணுகி அறிவை பெற்றுக்கொள்கிறோமோ

அவர் உபாத்யாயர் எனப்படுகிறார். 'உபேத்யாதீயதே இதி உபாத்த்யாய:' இதுவே அச்சொல்லின் தோற்றுவாயாகும். 'சிக்ஷக' என்பது 'சிக்ஷ வித்யாப்யாஸ' என்ற வேர்ச்சொல்லிலிருந்து வந்ததாகும். சிக்ஷக என்றால் அறிவை அளிப்பவர் என்பது பொருளாகும். மகாகவி காளிதாசன் சிறந்த ஆசிரியன் என்பதற்கு ஒரு அளவுகோல் வகுத்துள்ளார்.

க்லிஷ்டா க்ரியா கஸ்யசிதாத்மஸம்ஸ்தா
ஸங்க்ராதைரன்யஸ்ய விஸேஷயுக்தா
யஸ்யோபயம் ஸாது ஸ ஸிக்ஷகாணாம்
துரி ப்ரதிஷ்டாபயிதவ்ய ஏவ ||*5

'ஒருவன் செய்கையில் மிக்க ஆற்றல் மிகுந்தவனாக இருந்திடலாம். ஒருவன் கற்றுக்கொடுப்பதில் சிறந்த ஆற்றல் கொண்டவனாக இருந்திடலாம். ஆனால் இரண்டிலும் சிறந்தவன் ஆசிரியர்களின் தலைவனாக தகுதி பெற்றவனாவான்.'

மாணாக்கர்கள் ஆசிரியரிடம் கீழ்ப்படிந்திருக்க வேண்டும் என்பதுபோல் ஆசிரியனும் மாணாக்கனிடம் அவனது தேவைகளைப் பூர்த்தி செய்பவராய் அவனிடம் பரிவு கொண்டவராக இருக்க வேண்டும். ஆசிரியருக்கும் மாணவனுக்கும் இடையே பிரத்யேக மானதொரு உறவு இருந்து வருகிறது. பிரம்மசாரி (இச்சொல் முதலில் மதச்சார்பு கொண்ட மாணாக்கனுக்கென அமைந்ததானாலும் பின்னர் மாணாக்கன் என பொதுப்படையாக குறிப்பதாக ஆகிவிட்டது) அவரது கருவில் இருப்பவனாகிறான் - 'ப்ரம்ஹசாரிணம் க்ருணுதே கர்பம் அந்த:' என்று ஒரு குழந்தையாக உருவகப்படுத்தி பிறவி எடுக்கும் வரை அன்னையிடமிருந்து அது போஷாக்கை பெறுவதுபோல ஆசிரியனும் மாணாக்கன் எல்லா விதத்திலும் தெய்வீக சக்தியைப்பெற உதவிடுவார் என்பதாகும் - 'ஆ மே யாந்து ப்ரஹ்மசாரிண:'

ஆசிரியர் மேலே கூறியுள்ளபடி பல கடினத்துள்ளும் கடினமான பல சோதனைக்குள்ளாகி ஒருவனை உண்மையான ஆர்வங்கொண்டவனா எனத் தெரிந்துகொண்ட பின்னரே அவரை மாணவனாக ஏற்றுக்கொள்கிறார். ஆனால் ஒரு முறை ஏற்றுக்கொண்டு விட்டால் பின்னர் பின்வாங்குவதில்லை. அவர் தனது வெள்ளம் போன்ற அறிவு ஊற்றை அப்படியே திறந்து அளித்திடுகிறார். அவன் உண்மையிலேயே கல்வியில் நல்ல தேர்ச்சி பெறுவான் என்ற நம்பிக்கை அவருக்கு உண்டு.

அவரது உண்மையான விருப்பமே மாணாக்கன் எல்லாவற்றிலும் சிறப்படைய வேண்டும் என்பதே ஆகும் - 'ஸர்வதோ ஜயம் அன்விச்ய ஸிஷ்யாதிச்சேத் பராஜயம்' 'ஒருவன் எல்லோரையும் வென்றிட விரும்பிடுவான் ஆனால் மாணாக்கனிடமிருந்து தனக்கு தோல்வியை விரும்புவான்.'

மற்றொரு பாடமும் உள்ளது அதன்படி 'புத்ராத் ஸிஷ்யாத் பராஜயம்' என்று இங்கு புத்ராத் என்பது தந்தையைக் குறிக்கும். தந்தை தன் பிள்ளையிடமிருந்து தோல்வியை விரும்புவான். அதுவே அவனது புகழும் கீர்த்தியுமாகும். மாணாக்கன் தன்னைவிடச் சிறந்தவனானால் அது அவனுக்கு புகழைக் கொடுக்கும் - 'ஸிஷ்யப்ரகர்ஷோ யஸஸே குரூணாம்'

அறிவை அடைந்திட சாஸ்திரங்கள் மூன்று வழிகளை குறிப்பிடு கின்றன. முதலாவது ஆசிரியருக்கு சேவை செய்தல், இரண்டாவது நல்ல செல்வம், மூன்றாவதோ ஒரு அறிவை கொடுத்து அதற்கு பதிலாக மற்றொரு அறிவைப் பெறுதலாகும்.

குருஸுஸ்ரூஷா வித்யா புஷ்கலேன தனேன வா |
அதவா வித்யயா வித்யா சதுர்தோ நைவ வித்யதே ||*6

இந்த மூன்று வழிகளைத் தவிர வேறு நான்காவது வழி அறிவை யடைய இல்லை.

இம்மூன்று வழிகளிலும் ஆசிரியருக்கு சேவை செய்தல் மிகவும் இன்றியமையாததாகும். மற்ற இரு முறைகளும் வகுப்பறைக்கும் பிறிதொருவிதமான கூட்டத்துக்கும் உகந்ததாகும். அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் தனியாக ஆசிரியரை ஏற்பாடு செய்து அதிகமான செல்வம் அளித்து அவர்களது குழந்தைகளுக்கு கல்வி புகட்டிடச் செய்வர். இவர்களை ராஜபண்டிதர் என்றழைக்கின்றனர்.

பொதுவாக மற்றவர்களுக்கு நன்கு கல்வியில் தேர்ச்சி பெற்றவர்களும், கட்டுக்குள் அமைந்த எதிர்பார்ப்பைக் கொண்டவர்களும் மூன்று 'ஆர்' என்று கூறிடும் படித்தல், எழுதுதல், கணிதம் மற்றும் பிற பல ஆறிவையும் புகட்டுகின்றனர். சமுதாயமே அவர்களுக்கு தேவை யானவைகளை ஏற்பாடு செய்து கொடுப்பதால் மாணாக்கர்களிடமிருந்து எதையும் எதிர்பார்க்க வேண்டிய அவசியம் இல்லை.

அதனால் சேவையே அவர் புகட்டிடும் அறிவுக்கு பிரதிபலனாக எதிர்பார்க்கப்படுகிறது. 'ஸுஸ்ரூஷா' என்னும் சொல் 'குருஸுஸ்ரூஷயா'

என்னும் சொல்லிலிருந்து வந்தது. அதை சிறிது ஆராய்வது சிறந்ததாகும். 'ஸுஸ்ரூஷா' என்றால் 'கேட்பதற்கு விருப்பமுள்ள' என்பது பொருளாகும். இச்சொல் 'ஸ்ரூ' கேட்டல் என்னும் வேர்ச்சொல்லிலிருந்து வருவதாகும். அத்துடன் விருப்பத்தைக் குறிக்கும் ஒட்டுடன் 'ஸ' சேர்ந்து வருவது. அந்த விருப்பம் சேவையினாலேயே பூர்த்தி செய்யப்பட வேண்டும். அதனால் சேவை எனக் குறிப்பிடப்படுகிறது. மூன்றாவதாக மாற்றாக அறிவு பெறுதல் என்பதில் தனது அறிவு ஆற்றலை பிற துறைகளிலும் பெருக்கிக்கொள்ளுதல் என்பதாகும்

## மேற்கோள்கள்


1. *Gurugita verse* 25
2. *Atharvaveda* 11.7
3. *Mahabharata Adiparvan, adhyaaya* 132
4. *II* 484
5. *Visnu-smrti* 73.12
6. *Subhaasitaratnabhandagara Samanyaniti* 1.65.257

28

# இந்த்ரியனிக்ரஹ

## புலனடக்கம்

இந்திய மரபு வழி புலனடக்கத்தை மிகவும் வற்புறுத்தி மீண்டும் மீண்டும் எடுத்துரைக்கிறது. இது நியாயமானதே. பகவத் கீதையில் பகவான் கூறியுள்ளபடி இந்திரியங்கள் உத்வேகம் கொண்டவை - 'ப்ரமாதீனி.' அதனால் மனதையும் புத்தியையும் பலவந்தமாக 'ப்ரஸபம்' இழுத்துச்செல்லும் சக்திவாய்ந்தவையாகும். ஒருவன் எவ்வளவுதான் ஜாக்கிரதையாக கஷ்டப்பட்டு முயற்சி செய்தாலும் 'விபஸ்சித:' அவனையும் இழுத்துச்செல்லும் வலிமை பெற்றதாகும். கடவுள் மேலும் கூறுகிறார், தனது புலன்களை அடக்கியவன் தனது பகுத்தறியும் திறனையும் பலப்படுத்தி சமமானதாக வைக்கிறான் - 'தஸ்ய ப்ரஞா ப்ரதிஷ்டிதா' என்கிறார். தன்னை அடக்குதல் என்பது அறிவுத்திறனால் செய்யப்படுவதல்ல. தன்னுள் உணர்வினாலும் திடமான மன உறுதியினாலும் அடையப்படுவதாகும்.

புலனடக்கம் என்பது தர்மத்தின் பத்து பிரிவுகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது. அதிலும் முக்கியமாக நான்கு வருணத்தவர்களாலும் நன்னடத்தைக்கு அனுசரிக்க வேண்டிய, கட்டாயமாக பின்பற்ற வேண்டிய பிரிவுகளில் ஒன்றாகும். மனு ஸ்ம்ருதியின் உரையாசிரிய ரான குல்லுகபட்டர் இதற்கு இலக்கணம் இவ்வாறு அளிக்கிறார். 'விஸேஷேப்ய: சக்ஷுராதிவாரணம் இந்த்ரியனிக்ரஹணம்'- குறிப்பாக கண் முதலிய புலன்களால் உணரப்படும் பொருட்களிலிருந்து அவைகளை அறவே நீக்கிடுதலாகும்.

இது திடமான உறுதியான முடிவினால்தான் அனுசரிக்க இயலும். சில நேரங்களில் இது முழுவதும் பலனளிப்பதாக இல்லை. பெரிய துறவிகள்கூட பலவருடங்கள் கடுமையான தவங்கள் செய்தபிறகும் இதிலிருந்து தப்ப முடியவில்லை. இந்த நழுவுதலை அறிந்த

பர்த்ருஹரி, சிருங்கார ஸதகத்தில் விவரமாகவும் தெளிவாகவும் எடுத்துக் கூறுகிறார் -

விஸ்வாமித்ரபராசரப்ரப்ருதயோ வாதாம்புபர்ணாஸனா
தேபி ஸ்த்ரீமுகபங்கஜம் ஸுலலிதம் த்ருஷ்ட்வைவ மோஹம் கதா: |
ஸால்யான்னம் ஸக்ருதம் பயோததியுதம் புஞ்ஜந்தி யே மானவா:
தேஷாம் இந்த்ரியநிக்ரஹோ யதி பவேத் விந்த்யஸ்தரேத் ஸாகரே ||*1

'விசுவாமித்திரர், பராசரர் முதலிய துறவிகள் காற்றையும், நீரையும், இலைகளையுமே உணவாக உண்டனர். அப்படிப்பட்ட அவர்களே அழகான தாமரை முகங்கொண்ட பெண்களைக் கண்டதும் தங்களது மனக் கட்டுப்பாட்டை இழந்துவிட்டனர். அவ்வாறிருக்கையில் சாதாரணமான அரிசியை பால், தயிர் நெய் இவைகளுடன் உண்டு ஜீவிக்கும் மக்கள் புலன்களை எப்படி அடக்க இயலும். அது விந்தியமலை நீரில் மிதப்பதற்கு ஒப்பாகும்.'

ஒருவன் பகைவனிடமிருந்தோ எதிரியிடமிருந்தோ உபத்திரவத்தை அடையலாம் அடையாமலும் இருந்திடலாம். ஆனால் புலன்களின் ஏற்படும் தொந்தரவை எங்கும் எப்பொழுதும் அனுபவிக்கிறான் என்று அசுவகோஷர் கூறுவது முற்றிலும் உண்மையேயாகும்.

த்விஷட்பி: ஸத்ருபி: கஸ்சித் கதாசித் பீட்யதே ன வா |
இந்த்ரியைர்பாத்யதே ஸர்வ: ஸர்வத்ர ச ஸதைவ ச ||*2

புலன்கள் கட்டுப்படுத்த முடியாமல் தான்தோன்றித்தனமாய் சுற்றித் திரிவதால்தான் ஒருவன் தன் தாயிடமோ, சகோதரியிடமோ, தன் மகளிடமும்கூட தனிமையில் இருக்கக்கூடாது என்று அறிவுறுத்தப்படுகிறான்.

மாத்ரா ஸ்வஸ்ரா துஹித்ரா வா ன விவிக்தாஸனோ பவேத் |
பலவான் இந்த்ரியக்ராமோ வித்வாம்ஸம் அபி கர்ஷதி ||*3

புலன்கள் மிகவும் சக்திவாய்ந்ததாக இருப்பதால் அவை நல்ல விவேகமுள்ளவனையும் புலன் நுகரும் பொருட்களை நோக்கி இழுத்துச்செல்கின்றன.

அதனால் புலன்களை அடக்க வேண்டியது என்பது நன்றே. ஆனால் அவைகளை அடக்குவதும்தான் எப்படி? இதற்கு பதில் மிகவும் எளிதானதே. மனமே காரணம். பகவத்கீதையில் பகவான் புலன்களை குதிரைகள் என்றும் மனதை கடிவாளத்துக்கும்

ஒப்பிட்டுக் கூறுகிறார். 'இன்த்ரியாணி ஹயான் ஆஹு: மன:ப்ரக்ரஹம் ஏவ ச' - மனதுதான் கடிவாளத்தை புலன்களை இறுக கட்டிப் பிடித்திருக்க வேண்டும். ஏனெனில் புலன்கள் பிரிந்து செல்லும் தன்மையதே.

ஆனால் மனதுக்கும் ஒரு கட்டுப்பாடு தேவையானதே. அது தன்னிச்சைபடி ஒரு வழியில் வேலை செய்யும். அதன் இயற்கை சுபாவமோ 'ப்ரமாதீ'- ஆவேசம் கொண்டது, 'பலவத்' - பலம் கொண்டது, 'த்ருடம்' - திடமானது. காற்றின் வேகத்தை தடுப்பதைப்போல் மனதை கட்டுப்படுத்துவதும் கடினமானதே - 'தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்'.

அதைக் கட்டுப்படுத்துவதென்பது கடினமானதே, ஆனால் இயலாதததல்ல. அதை பயிற்சியினால் இடைவிடாமல் தொடர்ந்து பயிற்சியினாலும் 'அப்யாஸ' - பற்றின்றி இருப்பதாலும், 'வைராக்ய' - கட்டுக்குள் கொண்டுவரலாம். இங்குதான் பகுத்தறியும் திறன் வருகிறது. அத்திறனே கட்டுப்பாடற்ற மனதை எவ்வழியில் செல்ல வேண்டுமென்று எடுத்துரைக்கிறது.

பகுத்தறியும் விவேகம் தாவிச் செல்வதாகவும் இருக்கலாம். ஆனால் பகுத்தறியும் திறன் மாறி மாறி செயல்பட முடியாது. அது ஒருமுகப்பட்டதாக இருந்திட வேண்டும். ஒரு பொருளிலிருந்து மற்றொரு பொருளுக்கு தாவிக் குதித்துச் செல்லும் சுபாவமுடைய மனதை கட்டுப்படுத்திட திடமான முயற்சி செய்யும் தீர்மானம் தேவை. இது செய்யப்பட வேண்டும் இங்கு தான் அப்யாச பயிற்சி தேவைப்படுகிறது.

மாறி மாறித்தள்ளாடும் மனதால் எதையும் தெளிவாகத் தீர்மானிக்க இயலாது. ஒரு செயலில் மனதை ஒருமுகப்படுத்தவும் இயலாது. விஞ்ஞானிகள், எந்த செயலையும் திறன்பட செய்ய இயலாது. விஞ்ஞானிகள், புதிய படைப்புகளை கண்டுபிடிப்போர்கள், சிந்தனையாளர்கள் புதிய புதிய படைப்புகளை படைப்பவர்கள் புலன்களை முற்றிலும் கட்டுப்படுத்தியவர்கள். தனது செயலில் ஒருமுகப்பட்ட மனதை கொண்டவர்கள். சிக்கலுக்கு ஒரு நல்ல தீர்வை காண்பதில் முற்றிலும் ஈடுபட்டிருப்பார்கள்.

மிக்க திறன் கொண்டவர்கள்கூட வெற்றிக்கான அறிகுறிகளான முற்றிலும் முனைதல், ஆழ்ந்த ஈடுபாடு இவற்றை ஒரு சிலரே பெற்றுள்ளனர். இத்திறனையே கடவுள் கிருஷ்ணன் பகவத் கீதையில்

'வ்யவஸாயாத்மிகா புத்தி:'*4 என்று குறிப்பிடுகிறார். இதனால் புத்தி நேர்மையான நல்ல வழியில் வேலை செய்யும், புலன்களும் நேர் வழியில் தங்களது குறிப்பிட்ட வேலைகளை புத்தி கட்டளையிடுவதுபோல் செய்யும். ஒருவன் ஒரு செயலில் முழுவதும் ஒருமுகப்பட்ட முனைப்புடன் ஈடுபட்டிருந்தால் பசி தாகம் இவைகளைக்கூட அறியமாட்டான் அவனை அவைகள் பாதிக்காது என்பதை நாம் கண்கூடாக காண்கிறோம். இது வாழ்வில் ஒரு பயன் உள்ளது என்பதை எடுத்துக்காட்டி அதை வெற்றியுடன் அடையச் செய்யும்.

புலன்கள், புத்தி, இவைகளைக் கட்டுப்படுத்துதல் என்பது எளிதல்ல. இருந்தாலும் அதற்கு முயற்சி செய்வதில் தவறொன்றும் இல்லையே. ஏனென்றால் முடிவோ அமைதியை அடைவதேயாகும். அமைதியே மகிழ்ச்சிக்கான முதற்காரணமாகும். இவ்வாறு புலன்களை கட்டுப்பாட்டில் வைத்துக்கொண்டவன் எங்கிருந்தாலும் அவ்விடம் குருக்ஷேத்திரமாகவோ நைமிசாரண்யமாகவோ இருந்திடும். அவன் உலகம் முழுவதையுமே வெற்றிகொண்டவனாவான்.

**மேற்கோள்கள்**

1. *Verse 65*
2. *Saundarananda 13.32*
3. *Manusmruti 2.215*
4. *2.41*

# 29

# அதிதி சத்காரம்

## விருந்தோம்பல்

இந்திய கலாசார மரபு, விருந்தினர்களை - 'அதிதி' உபசரிப்பதற்கு மேலான மரியாதை கொடுக்கிறது. மாணவன் தன் படிப்பை முடித்ததும் தன் ஆசானால் விருந்தினர்களை தெய்வமாகக் கருது என்று உபதேசிக்கப்படுகிறான். 'அதிதி தேவோ பவ' என இது தைதரீய உபநிஷத்தில் சிக்ஷாவல்லியில் இடம் பெறுகிறது. இதையே நமது சுற்றுலா அமைச்சகம் நமது சமுதாய பண்பின் அடிப்படை கூறான இதை பொன்மொழிக் கொள்கையாகக் கொண்டுள்ளது.

இவ்வாறு விருந்தினர்களாக வருபவர்கள் விருந்தளிப்பவர்களுக்கு அறிமுகமானவர்களாகவும் தகுதிபெற்றவர்களாகவும் இருத்தல் வேண்டுமென்ற அவசியமில்லை. நாரத புராணத்தில் பிற கிராமங்களிலிருந்து ஒருவிதமான முன்னறிவிப்புமின்றி வருபவர்கள் குடும்பம், பெயர் முதலியன தெரியாமல் வருபவர்களையும் விருந்தினர் என்றும் அவர்களுக்கு விருந்தோம்பல் அளித்திட வேண்டும் என்றும் அவ்விருந்தினர் திருமாலுக்கு இணையானவர்கள் என்றும் கூறுகிறது.

> அஞாதகோத்ரனாமானாம் அன்யக்ராமாதுபகதம் |
> விபஸ்சிதோதிதிம் ப்ராஹு: விஷ்ணுவத் தம் ப்ரபூஜயேத் ||[*1]

நாம் உண்ணும் உணவை முதலில் விருந்தினருக்கு அளித்த பின்னரே ஏற்க வேண்டுமென்பது கட்டாயமாகும். அவருக்கு கொடுத்த பின்னரே ஒருவன் உண்ண வேண்டும். அவ்வாறின்றி விருந்தளிப்பவர் முதலில் உண்டால் பெயரையும் புகழையும் இழக்கின்றனர்.

> கீர்த்திம் ச வா ஏஷ யஸஸ்ச க்ருஹாணாம் அஸ்னாதி |
> ய: பூர்வோதிதிரஸ்னாதி.[*2]

அதர்வவேத மந்திரத்திலும் அதே கருத்தைக்காண முடிகிறது.

'அஸிதவதி அதிதௌ அஸ்னீயாத்'*3

விருந்தினர்களுக்கு உணவளித்த பின்னரே ஒருவன் தான் உண்ண வேண்டும்.

விருந்தினர்களுக்கு உணவளிப்பதால் அவர்கள் உண்டு ஜீரணமாக, உணவு படைத்தவனின் பாபங்கள் நசித்துப்போகின்றன என்ற திட நம்பிக்கை வாழ்க்கையில் ஊர்ஜிதமாகிவிட்டது.

'ஸர்வோ வா ஏஷ ஜக்தபாப்மா யஸ்யான்னம் அஸ்னாதி'*4

க்ருஹஸ்தன் - 'குடும்பத்தோன் வீட்டில் ஒருவரும் உண்ண உணவின்றி இருத்தல் கூடாது' என்று தைத்தரீய உபநிஷத் கூறுகிறது.

'நாஸ்ய ப்ரஹ்மணோஸ்னாஸ்வான் க்ருஹே வஸேத்'*5

யமன், காலன் கூட தன் வீட்டிற்கு விருந்தாளியாக வந்த அந்தணன் உணவின்றி மூன்று இரவுகளுக்கு மேல் இருக்க்கூடாது என்றும் அதற்காக, அந்த மரபு வழியை மீறிவிட்டதற்கு பிராயச்சித்தமாக மூன்று வரங்களை கொடுக்கும் நிர்ப்பந்தத்துக்கு ஆளாகிவிட்டான்

திஸ்ரோ ராத்ரீர் யத் அவாத்ஸீர் க்ருஹே மே
னஸ்னந் ப்ரஹ்மன் அதிதி னமஸ்ய: |
ஸ்வஸ்தி மேஸ்து
தஸ்மாத் ப்ரதி த்ரீன் வரான் வ்ருணீஷ்வ*6

- இது கடோபநிஷத்தில் கூறப்பட்ட கதையாகும்.

வாஜஸ்ரவஸ் என்னும் முனிவர் சுவர்க்கலோகமடைய விரும்பியவராக தன்னிடமிருந்த எல்லா உடைமைகளையும் தானம் செய்துவிட்டார். அவருக்கு நசிகேதஸ் என்னும் மகன் இருந்தான். இருந்த பொருட்களையெல்லாம் இவ்வாறு தானம் செய்வதைப் பார்த்த சிறுவனாய் இருந்த மகன் மனதில் ஒரு விசித்திரமான கவலை ஏற்பட்டது.பயனற்ற கறவா மாடுகளை தானமாகக் கொடுப்பதைக் கண்டான். இம்மாதிரி ஒரு பயனுமற்ற பொருட்களை தானம் செய்பவர்களுக்கு சுவர்க்கத்தில் என்ன சுகம் ஏற்படப்போகிறது என்ற எண்ணம் மனதில் எழுந்தது.

தன்னை தந்தையின் உடைமையாகக் கருதிய அவன் தன்னை எவருக்கு தானமாக கொடுக்கப்போகிறார் என்று கேட்டான். தந்தை

மௌனமாக இருந்திட அவன் மீண்டும் மீண்டும் அதே கேள்வியை மறுபடியும் கேட்டான். அதனால் கோபமடைந்த தந்தை 'காலனுக்கு வெகுமதியாகக் கொடுக்கப்போகிறேன்' என்றார். இவ்வார்த்தைகள் ஒரு முனிவரின் வாக்கிலிருந்து வெளிவந்ததால் அது உண்மையான வாக்காக இருந்திட வேண்டும். அப்பையன் யமனின் - காலனின் இருப்பிடத்தை அடைந்தான். யமன் அங்கில்லை. அதனால் அச்சிறுவன் அங்கேயே மூன்று இரவுகள் உணவின்றி கழித்தான்.

அவனை அந்நிலையில் கண்ட யமன் மிகவும் வருத்தமடைந்தான். அவன் இவ்வாறான கஷ்டங்களையெல்லாம் அனுபவித்ததற்கு பரிகாரமாக அவனுக்கு மூன்று வரங்கள் கொடுப்பதாக வாக்களித்தான். ஏனெனில் விருந்தாளியாக வீட்டிற்கு வந்த ஒரு பிராம்மணனை உணவில்லாமல் வீட்டில் இருக்கச் செய்தால் அது அவனது நம்பிக்கை, எதிர்ப்பார்ப்புகள், நல்லோரின் சேர்க்கை, மகன்கள், மிருகங்களையும் எல்லாம் அழிந்துவிடும்.

அந்தப் பையன் மூன்று வரங்களைக் கேட்டான். அவன் என்ன வரம் கேட்டான் காலன் அவனுக்கு எப்படி அவைகளைக் கொடுத்தான். காலனிடம் வாழ்க்கையின் அடிப்படையாக அமைந்த கேள்விகளான இறந்த பின்பு இவ்வுடலுக்கு என்ன ஆகிறது. ஏதேனும் எஞ்சி இருக்குமா? எல்லாமே பிறிதொரு பொருளாக மாறிவிடுமா? என்ற கேள்விகளை எழுப்பினான். இங்கு நாம் இக்கதையை எடுத்துக்கூறியது எதற்கென்றால் காலனுக்குக்கூட விருந்தோம்பல் என்பது விருந்தினருக்கு மரியாதை கொடுத்தல், அதிலும் பிராம்மண வர்கத்தை சேர்ந்தவர்க்கென்றால் சிறப்பான விருந்தோம்பல் செய்ய வேண்டுமென்ற சாதாரண மக்களுக்கமைந்த விதிமுறைகள் விதிவிலக்கல்ல என்பதேயாகும்.

விருந்தோம்பலைப் பற்றி பேசுகையில் மகாபாரதத்தில் கூறப்பட்டுள்ள முத்கல முனிவரின் கதையை எடுத்துரைப்பது உசிதமாகும். அம்முனிவரோ தேவையான அளவுக்கான பொருட்களையே கொண்டவராக இருந்தார். அவர் குருக்ஷேத்திரத்தில் வசித்து வந்தார். நெய், அன்னம் முதலிய பொருட்களை தீயில் ஆஹுதியாகக் கொடுத்து யாகங்களையும் ஹோமங்களும் செய்து காலம் கடத்திவந்தார். அவர் மாதம் இருமுறை த்ரோண அளவு அதாவது சுமார் 32 அல்லது 64 சேர் அரிசி சேகரித்து அதில் தேவதைகளுக்கும் விருந்தினர்களுக்கும் அளித்த பின்பு எஞ்சியிருப்பதை தனக்கும் தன் குடும்பத்தாருக்கும் பயன்படுத்தி வந்தார்.

இந்த அரிசியில் சுமார் நூற்றுக்கும் மேலான பிராம்மணர்களுக்கு உணவளிக்க முடிந்ததால் அவர் விருந்தோம்பலில் மிகவும் புகழ்பெற்றவராக ஆனார். முத்கலரின் விருந்தோம்பலின் புகழோ எங்கும் வியாபித்து பரந்திட அது துர்வாச முனிவரது காதை எட்டியது. ஒருசமயம் துர்வாசர் அவரை தரிசிக்க வந்தார். முத்கல முனிவர் அவரை முறைப்படி வரவேற்று தகுந்த மரியாதைகள் செய்திட, துர்வாஸரோ அவரிடமிருந்த உணவுப் பொருட்கள் முழுவதையும் ஒருவரே உண்டுவிட்டார். இவ்வாறு ஐந்து ஆறு முறை செய்தார்.

ஆனால் முத்கலரோ அதற்கு ஒருவிதமான பாதிப்பும் கொள்ளாமல் அமைதியாக தனது துடிக்கும் பசியையும் சிறிதும் பொருட்படுத்தாமல் சிரித்த முகத்துடன் அவருக்கு மரியாதைகளைச் செய்தார். இதைக்கண்டு துர்வாசர் மிக்க மனங்களித்தார். அவர் இப்பூத உடலுடனேயே சுவர்க்கம் செல்ல வேண்டும் என்ற ஆசிகளையும் வழங்கினார். அவரோ புலனடக்கம் கொண்டவர், புலன்களை அடக்கியதோடு செல்வம், தன்னடக்கம், அமைதி, இரக்கம், வாய்மை முதலிய எல்லா தர்ம குணங்களையும் பெற்றிருந்தார்.

இவ்வாறு ஆசிகளை பெற்றதுமே அவரை தேவலோகம் அழைத்துச் செல்ல காற்றில் பறந்து செல்லும் விமானம் ஒன்று தேவதூதனுடன் அங்கு வந்து சேர்ந்தது. பிறகு அத்தேவதூதனுக்கும் முத்கல முனிவருக்குமிடையே பேச்சுவார்த்தைகள் நடந்தன. ஆனால் முத்கலரோ சுவர்க்கத்துக்கு செல்லும் முன் அங்குள்ள நன்மை தீமைகளை அறிய விம்பினார். தேவதூதனோ அங்கு எல்லாமே நல்லதாக இருப்பதாகக் கூறினான். அங்கு எல்லா நன்மைகளும் மகிழ்ச்சிகளுக்கு உரியவைகளும் உண்டு. அதில் ஒரே ஒரு கெட்டது உண்டு. அதாவது அவரவர்களது நல்வினைப்பயன் முடிவடைந்ததும் அவர்கள் மீண்டும் இப்பூமிக்கே திரும்பி வந்துவிடுகின்றனர்.

முத்கலர் அப்படிப்பட்ட சுவர்க்கவாசத்தை விரும்பவில்லை. அவரோ எங்கிருந்து மீண்டும் திரும்பி வர வேண்டிய அவசியமில்லையோ அவ்விடத்திற்கே செல்ல விரும்பினார். தேவதூதனோ அது விஷ்ணுலோகம் என்றுரைத்தான். முத்கலர் அங்கு செல்ல விரும்பினார். அவர் சுவர்க்கம் செல்லவில்லை. அதனால் மீண்டும் இவ்விடத்திலேயே இருந்துகொண்டு எப்பொழுதும்போல் தூயமனதுடன் புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் சிறிதும் பொருட்படுத்தாமல், மண்ணோ, கல்லோ, பொன்னோ, பொருளோ

முத்தோ எலாவற்றையும் சமமாக பாவித்து சேவைகொண்டிருந்து பின்னர் இறுதியில் நிர்வாணம் என்னும் விடுதலையைப் பெற்றார்.

விருந்தினர்களுக்கும் குறிப்பிட்ட விதிமுறைகள் உள்ளன. தெரிந்தோ தெரியாமலோ முன்னறிவிப்பின்றி ஒருவரது வீட்டில் சட்டென நுழைதல் கூடாது. அவர்கள் முன்னரே அறிவித்து சரியான நேரத்தில் வரவேண்டும். அபிஞான சாகுந்தலத்தில் துர்வாசரது வருகை சரியானதல்ல என்பது இதற்கொரு ஒரு எடுத்துக்காட்டாகும். அவர் கண்வரது ஆசிரமத்திற்கு வந்த பிறகு 'இதோ நான் வந்திருக்கிறேன்' -'அயம் அஹம் போ:'*7 என்று கூறுகிறார்.

இவ்வார்த்தைகளை கேட்ட பிறகு சகுந்தலையின் தோழி 'யாரோ விருந்தினர் வந்திருப்பதுபோல் தோன்றுகிறது' - 'அதிதீனாமிவ நிவேதிதம்' என்கிறாள். இந்த எச்சரிப்புக் குரலே விருந்தாளியை போதிய மரியாதைகளுடன் அதாவது அர்க்கியம் - கைகழுவ நீர் கொடுத்தல், பாத்யம் - கால் கழுவ நீர் கொடுத்தல், ஆசமனீயம் - வாய் கழுவிக்கொள்ள நீர் கொடுத்தல், ஆசனம் - அமர ஒரிருக்கை கொடுத்தல் - 'அர்க்யபாத்ய ஆசமனீய க்ருதைர்போதயாதிதிம்'*8 ஆகும்.

அவரிடம் இனிமையாகப் பேச வேண்டும். வரும் விருந்தாளியை உரிய மரியாதைகளுடன் வரவேற்று உபசரிப்பது விருந்தளிப்பவனின் முதற்கடமையாகும். கண்வர் தான் சோமதீர்த்தத்திற்கு யாத்திரைக்குச் செல்லும் முன் இந்த கடமையை தன் மகளான சகுந்தலையிடம் கொடுத்துவிட்டுச் சென்றார் - 'துஹிதரம் ஸகுந்தலாம் அதிதிஸத்காராய னியுஜ்ய.... ஸோமதீர்த்தம் கத:' *9 அவர் கூறிய கடமைகளை சரிவர செய்யாதது பெருங்குற்றமாகும். துஷ்யந்தனின் சிந்தனையில் மூழ்கியிருந்த சகுந்தலை இக்கடமையிலிருந்து நழுவிவிட்டாள். இதுவே அவளது சாபத்திற்கான முதற்காரணமாயிற்று, துர்வாசர் கடுங்கோபம் கொண்டதற்கும் இதுவே காரணமாகி அது அவளது வாழ்க்கையையே முழுவதும் மாற்றிவிட்டது.

ஒரு விருந்தினர் வந்தால் அவரை அப்படியே திருப்பி அனுப்பி விடக்கூடாது - 'ந கஸ்சன வஸதௌ ப்ரத்யாசக்ஷீத.' இது ஒரு விரதமாகும் - 'தத் வ்ரதம்.' அதை எப்படி செய்தாலும் சரி. வந்தவருக்கு போதுமான அளவு அன்னம் அளிக்கப்பட வேண்டும் - 'தஸ்மாத் யயா ச விதயா அன்னம் ப்ராப்னுயாத்.' எந்த சாப்பாடு தயாரிக்கப்பட்டதோ அது விருந்தாளிக்காகவே தயாரிக்கப்பட்டதாகும் - 'ஆராத்யஸ்மா அன்னம் இதி ஆசக்ஷதே'*10

சமஸ்கிருதத்தில் விருந்தினருக்கு அதிதி, அப்யாகத என்ற இரண்டு சொற்கள் உள்ளன. இரு சொற்களுமே விருந்தினரைக் குறிப்பதாக இருந்தாலும் இவ்விரு சொல்லிலும் நுட்பமான வேறுபாடு உள்ளது. அது விருந்தினர் எப்படிப்பட்டவர் என்பதைக் குறித்திடும். அதிதி என்றால் விருந்தளிப்பவனுக்கு முன்பின் அறியாதவராவார், முற்றிலும் புதிதானவர். அப்யாகத என்றால் முன்னம் அறிந்தவராவர். இதையே வீரராகவன், விஸ்வநாதன், சுகதேவர் முதலிய உரையாசிரியர்கள் பாகவதத்தின் உரைநடை பகுதியில் அளிக்கின்றனர் - 'யஸ்து இஹ அதிதின் அப்யாகதான் வா'*[11]

இந்தியன் சமுதாய வாழ்க்கையில் ஹோட்டல்கள், உண்டு தங்குமிடம், விடுதிகள், இவைகள் முற்றிலும் அறவே இல்லாதவை களாகும். அதனால் சமஸ்கிருதத்தில் அதற்கான சொற்களே கிடையாது. மக்கள் பிற இடங்களுக்கு பயணம் செய்யவில்லை என்பதல்ல. புண்ணியதல தரிசனம் வழிபாடுகளில் முக்கிய இடம் வகிக்கின்றது. இத்தலங்கள் தேசத்தின் ஒரு மூலையினின்றும் மறு மூலையில் எட்டி கோடியில் அமைந்துள்ளன. புராதன காலத்திலும் இடைக்காலத்திலும் மக்கள் இதை ஒரு இன்றியமையாத கடமையாகவே கருதினர். இன்றும் தற்காலத்திலும் இந்துக்கள் இப்பயணத்தை இன்றியமையாததாக கருதுகின்றனர்.

கிழக்கில் பூரி, மேற்கில் துவாரகா, வடக்கே பத்ரிநாத், தெற்கில் ராமேஸ்வரம். மேலும் அயோத்தியா, மதுரா, மாயா, காசி, காஞ்சி;அவந்திகா, துவாரவதி (துவாரகா) முதலிய ஏழு நகரங்களும் போய் பார்ப்பதால் மோக்ஷம் கிடைக்கும் தலங்கள் என கருதி பயணம் மேற்கொள்கின்றனர். புனித யாத்திரைகள் தவிர வியாபார சம்பந்தமாகவும் வியாபாரிகள் பயணம் செய்தவண்ணம் இருந்தனர்.

இந்தியிலும் உருதுவிலும் உள்ள சொல் 'சராய்' என்பது நமது இந்தியன் சொற்களஞ்சியத்தில் புகுந்ததே இடைக்காலத்தில்தான். அதற்கு முன்னர் எல்லாம் சமுதாய அங்கத்தினர்களே அவர்களை கவனித்துக்கொண்டனர். சூரியன் மாலையில் சாயும் நேரம் ஒரு பயணி ஒருவரை அணுகி தங்குவதற்கும், உணவு உண்பதற்கும் உதவிகேட்டு அதை அவன் மறுத்துவிட்டால் அவனது நற்பயன்கள் யாவும் வந்த விருந்தாளியுடன் சென்றுவிடும் என்றே கருதி வந்தனர்.

சமஸ்கிருதத்தில் கூற்று ஒன்று உண்டு. 'அதி ஸர்வத்ர வர்ஜயேத்' -'ஒருவன் எதையுமே அளவுக்கு மீறி அதிகமாக செய்தல் கூடாது' என்பதே ஆகும். (தமிழிலுள்ள ஒரு பழமொழி 'அளவிற்கு மீறினால்

அமிர்தமும் விஷம், இதற்கு பொருந்துவதாகும்). முன்பின் அறியாதவர்களுக்கு அதிகமான மரியாதையும் பரிவும் காட்டுதல் சில நேரங்களில் விருந்தோம்பலை விபரீதமான எண்ணங்களுடன் தீய செயல்களில் பயன்படுத்திடலாம். அதனாலேயே இவ்வாறு எச்சரிக்கப்படுகின்றனர். 'அஜ்ஞாதகுலஸீலஸ்ய வாஸோ தேயோ ன.'*[12]

'ஒருவனது குலம், குடும்பம், சுபாவம் இவைகளைப் பற்றி அறியாத பொழுது அவர்களை வீட்டில் அனுமதித்தல் கூடாது.' இவ்வளவு விருந்தினர்களைப் பற்றி கூறியதுடன் எச்சரிக்கைகளும் பல உள்ளன. பண்டை காலத்திலிருந்தே விருந்தினர் நல்லவராக இருத்தல் வேண்டுமென்றும் கூறப்பட்டுள்ளது. 'ய: ஸ்ரேஷ்டதாமஸ்னுதே ஸ ஏவ அதிதிர்பவதி'*[13] நற்குணமற்றவனை அசத் விருந்தினராக மதித்து மரியாதை செய்தல் கூடாது. 'ந வா அஸந்தம் ஆதித்யாயாத்ரியன்தே'.*[14]

இந்திய நாடே விருந்தினர்களை உபசரிப்பதில் அவர்களின் குறிக்கோள் என்ன என்பதை அறியாமல் அதிக அக்கறைகொண்டதால் பலவிதங்களில் பல இன்னல்களுக்கு ஆளாகவேண்டியதாயிற்று. 'நமது கலாசாரத்தை கடைப்பிடிப்பதில் ஆர்வம் கொண்டு தாராளமான விருந்தோம்பல் செய்தல் வேண்டும் என்ற கருத்தினால் அவர்களுக்கு இந்த எச்சரிக்கை மிகவும் இன்றியமையாததாகும்.

## மேற்கோள்கள்


1. *1.1.26.63*
2. *Atharvaveda 2.6.8.25*
3. *ibid 9.6.8.38*
4. *ibid 9.6.7.24*
5. *Taittariya Brahmana1.1.4*
6. *kathopanisad 1.9*
7. *Aci IV beginning*
8. *Taittariya Brahmana 1.1.1*
9. *Abhijnanasakuntala Act 1 after verse 13*
10. *Taittariyopanisad 1.10*
11 *V 26.45*
12. *Hitopadesa 1.56*
13. *Aitareya Aranyaka 1.1.1*
14. *ibid*

# 30

## ப்ராயஸ்சித்த

## பிராயச்சித்தம்

ஒருவன் பாபமோ அல்லது ஒரு குற்றமோ செய்துவிட்டால் அதிலிருந்து விடுபட இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று அரசாங்கம் அவனுக்கு தண்டனை அளிக்கலாம் அல்லது அவனே தனக்குரிய தண்டனையை தானே அளித்துக்கொள்ளலாம். இரண்டாம் வழியாக நாம் மேலே கூறியுள்ளதே பிராயச்சித்தம் என்பதாகும். இச்சொல் இரண்டு சொற்களால் ஆனதாகும். 'பிராய' என்பது ஒரு சொல் 'சித்த' என்பது இரண்டாவது சொல்லாகும். பண்டைகால சொல் பொருளாக்க வல்லுநர் ஹிமாத்ரி என்பவர் ஒவ்வொரு சொல்லாக எடுத்து தெளிவாக வர்ணிக்கிறார். அவரது கருத்துப்படி 'பிராய' என்றால் தவம் என்பது பொருளாகும். அதாவது மதக்கோட்பாடாகும். அது உடலை வருத்திக்கொள்ளுதல், 'சித்த' என்றால் நிச்சயம், தீர்மானம், உறுதியான தீர்மானமாகும்.

ப்ராயோ நாம தப: ப்ரோக்தம் சித்தம் நிஸ்சய உச்யதே |
தபோநிஸ்சயஸம்ஸர்காத் ப்ராயஸ்சித்தம் இதீர்யதே ||

'பிராயச்சித்தம் என்பது, தான் செய்த குற்றத்துக்கோ, பாபச்செயலுக்கோ தன்னை கஷ்டங்களுக்கு உள்ளாக்கிக் கொண்டு தன்னைத் தூய்மையாக்கி கொள்வதற்கான திடமான தீர்மானமாகும். தன்னை தூய்மையாக்கிக்கொள்ளுதலாகும். சட்ட விதிகளும், ஒழுக்க விதிமுறைகளும் தன்னைத் தூய்மை செய்துகொள்வதற்கு பலவிதமான விதிகளை நியமித்துள்ளன. அவ்விதிகளோ செய்யும் தவறுகளின் ஆழத்திற்கேற்ப பல கடினமான விதிகளை வற்புறுத்திக்கூறுகின்றன.

இதில் மிகக் கடினமான பிராயச்சித்த தண்டனையோ சாந்திராயண விரதமாகும். அவ்விரதத்தில் சந்திரனது பிறைகளுக்கேற்ப வளர்வதும் தேய்வதுமாக உணவு உண்ணுதலை குறிக்கிறது. இவ்விரதப்படி பௌர்ணமியன்று எல்லா பிறைகளும் பூரணமாக நிறைந்திருப்பதால் சாப்பிடும் உணவும் பதினைந்து கபளங்களாகும். அதிலிருந்து ஒவ்வொன்றாக பிறைகள் குறைந்துகொண்டே வருவது போல் பிராயச்சித்தம் செய்பவரின் உணவு உண்ணும் அளவும் ஒவ்வொரு கைப்பிடியாக கபளமாக குறைந்துகொண்டே வந்து பூஜ்யத்துக்கு வந்துவிடும்.

அமாவாசையன்றோ முழு பட்டினி இருக்கவேண்டி இருக்கும். அது போலவே வளர்பிறையில் ஒவ்வொரு கபளமாக உண்ணும் உணவு அதிகமாகிக்கொண்டே வரும்.

இப்படிப்பட்ட பிராயச்சித்தங்களின் மூலம் பாபங்கள் கழுவப்படு கின்றன - 'ப்ராயஸ்சித்தம் ச குர்வந்தி தேன தச்சம்யதே ராஜ:'*1

ஒரு சில குற்றங்களுக்கு பிராயச்சித்தம் இல்லை. நன்றி உணர்வில்லா திருத்தலுக்கு பிராயச்சித்தமே கிடையாது. ராமாயணமோ 'க்ருதஞுதா'- நன்றியுணர்வற்று இருத்தலுக்கு இணையான வேறு பாபமே கிடையாது. அது அவ்வளவு கொடிய பாபமென கூறுகிறது. அதற்கு பிராயச்சித்தமே கிடையாது என்று கூறுகிறது - 'க்ருதக்னே நாஸ்தி நிஷ்க்ருதி:'*2

ஸ்கந்த புராணம் இதையே சிறிது மாற்றியமைத்துக் கூறுகிறது. தன் உடன்பிறந்தவர்களின் மனைவியிடம் அன்பு கொண்டவனுக்கு எந்தவிதமான பிராயச்சித்தமும் கிடையாது என்று கூறுகிறது.

விஸ்வாஸகாதுகானாம் ச க்ருதக்னானாம் ச நிஷ்க்ருதி: |
பர்த்ருபார்யாரதானாம் ச ப்ராயஸ்சித்தம் ன வித்யதே ||*3

'நம்பிக்கை துரோகம் செய்தவனுக்கும் செய்நன்றி அற்றவனுக்கும்கூட பிராயச்சித்தம் உண்டு. ஆனால் தன் சகோதரன் மனைவியிடம் அன்பு கொண்டவனுக்கு அதிலிருந்து மீள எந்தவிதமான பிராயச்சித்தமும் கிடையாது'.

இவையெல்லாமே எவை மிகவும் வெறுக்கத்தக்கதாகவும், மிகக்கொடியதாகவும், பரிகாரம் செய்ய இயலாததாகவும் இருக்கிறதோ. அதற்கேற்றார்போல் தண்டனையும் அமைகிறது.

இந்தப் பிரிவில் அறிந்தே செய்யும் பாபங்களும் அடங்கும். ஸ்கந்த புராணத்தின் கருத்துப்படி ஒருவன் அறியாமல் செய்த பாபங்களுக்கு பிராயச்சித்தமுண்டு. ஆனால் அறிந்து தெரிந்து செய்யும் பாபங்களுக்கு பரிகாரமே கிடையாது.

அஞானதோ ஹி யஜ்ஜாதம் பாபம் தஸ்ய ப்ரதிக்ரியா |
கதிதா தர்மஸாஸ்த்ரஜ்ஞை: ஸகாமஸ்ய ந வித்யதே ||*4

ஒரு சில நேரங்களில் ஒருவன் ஒன்றில் சிலவற்றை குறைத்தும் சிலவற்றை மிகைப்படுத்தியும் செய்திடலாம். அதற்கும் பிராயச்சித்தம் செய்ய வேண்டியது அவசியமாகும். தீயில் வேள்வி காத்திடும் நேரம் கூறும் மந்திரங்களின் உச்சரிப்புடன் அதை கூறி முடித்த பின்னரே பலியை இடுதல் வேண்டும். இவ்வேள்வியை நிறைவு செய்யும் முன் தான் செய்த பணியில் குறைவு நிறைவுகளுக்காக ஒரு படையலை, பலியை இட வேண்டும். 'யதஸ்ய கர்மணோதி அரீரசம் யத்வா ந்யூனம் இஹாகரவம்' இந்த சடங்கில் எதை அதிகமாக செய்தேனோ - 'அதி அரீரசன்' எதை செய்ய வேண்டிய அளவு செய்யவில்லையோ 'ந்யூனம்' - இந்த் பலி கொடுக்கும் ஆஹுதிக்கு பிராயச்சித்த ஆஹுதி 'ப்ராயஸ்சித்தாய ஆஹுதி:' என்று பெயர். மன்னிப்பு கேட்பதுபோல் மனிதன் தான் செய்த தவறுகளுக்காக செய்யும் ஆஹுதியாகும்.

ஒருவன் தான் செய்த குற்றம் குறைகளுக்காக பாபங்களுக்காக பிராயச்சித்தம் செய்ய வேண்டும் என்பதல்ல. பிறரது பாபங்களைப் போக்கிடவும் பிராயச்சித்தம் செய்திடலாம். காளிதாசன் தான் எழுதிய ரகுவம்சத்தில் ஒரு ருசிகரமான நிகழ்ச்சியை வர்ணிக்கிறார். பரதன் ராமரது பாதுகைகளை பெற்றுக்கொண்டு தன் மூத்த சகோதரனிடம் உள்ள கௌரவத்தாலும், பாதுகைகள் எல்லாம் செய்திடும் வல்லமை பெற்றவை என்பதாலும் அயோத்திக்கு அருகாமையிலுள்ள நந்திக்கிராமத்தில் தங்கிக்கொண்டு ராஜ்ஜியம் ஆளுகையில், தன் தாயார் செய்த பாபத்துக்கு பிராயச்சித்தம் செய்வதுபோல் இருந்தான் என்று கூறுகிறார்.

த்ருடாபக்திரிதி ஜ்யெஷ்டே ராஜ்யத்ருஷ்ணாபராங்முக: |
மாது: பாபஸ்ய பரத: ப்ராயஸ்சித்தம் இவாகரோத்||*5

அண்மை காலத்தில் மகாத்மா காந்திஜி தான் எதிர்பார்த்த வழியில் மக்கள் செல்லாமல் வேறு திசையில் செல்வதை பொறுக்காமல் பலமுறை உண்ணாவிரதங்களை மேற்கொண்டார். அதை அவர்

தனது குற்றமாகவே ஏற்றுக்கொண்டார். அவர்களுக்கு வழிகாட்ட தனக்குத் தெரியவில்லை என நினைத்து, அதுவும் தன்தவறென நினைத்து அதற்கு பரிகாரமாக பிராயச்சித்தமாக உண்ணாவிரதம் மேற்கொண்டார். இது அவர் தனக்குத்தானே அளித்துக்கொண்ட தண்டனையாகும்.

இத்தண்டனை மூலம் தான் செய்த தவறுக்கு காரணம் என்ன என்பதை அமைதியாக அலசிப்பார்க்க இயலும் என்று நம்பப்படுகிறது. பிராயச்சித்தமாக தனக்குத்தானே அளித்துக்கொண்ட மிகவும் தீவிரமான தண்டனை, நாம் முன்பே குருபக்தியில் குறிப்பட்டுள்ளது போல் மீமாம்சா சாஸ்திரத்தில் திறன் பெற்றதன் ஆசானான பிரபாகரமிச்ராவின் கருத்துகளை எதிர்த்து வாதாடிக் கூறியதால் குமாரிலபட்டர் தன்னை உமியில் தீ பற்ற வைத்து அதில் தன்னுடலை தியாகம் செய்ததேயாகும்.

கிறிஸ்துவர்களின் தேவாலயங்களிலும் தான் செய்த குற்றத்தை ஒப்புக்கொண்டு மன்னித்தருள வேண்டுவதற்காக தனிமையான அறைகள் உள்ளன. இதனால் அவர்களது மனதெல்லாம் தூய்மையாகி பரிசுத்தமடைகின்றன. ஜைனர்களின் மதப்படி வருடத்தில் ஒருநாள் 'க்ஷமாவாணீ பர்வ' என்னும் சிறப்பான நாள் ஒன்றுள்ளது. அன்று தான் அறிந்தோ அறியாமலோ செய்த குற்றத்திற்கெல்லாம் மன்னிப்பு கோருகின்றனர்.

### மேற்கோள்கள்


1. *Ramayana, Kishkindaakaanda* 18.35
2. *ibid* 4.34.12
3. *Vai Kh Ve Ma* 25.38
4. 15.44
5. 12.19

# 31

# புண்யோபார்ஜன

## நல்வினைப்பயன் சேகரித்தல்

இந்திய மறைநூல்கள் எப்பொழுதும் புண்ணியத்தை செய்தல் வேண்டும் என்று கூறுவதுடன் புண்ணியத்தை சேகரித்து (புண்ய ஸஞ்சய) வைக்க வேண்டும் என்றும் வற்புறுத்தி கூறுகின்றன. அது அவனுக்கு மாத்திரமின்றி சமுதாய வளர்ச்சிக்கும் மிகவும் இன்றியமையாததாகும்.

இங்கு எழும் கேள்வியோ புண்ணியம் நல்வினைப்பயன் என்றால் என்ன என்பதேயாகும். பரந்து கிடக்கும் சமஸ்கிருத நூல்களில் எல்லாம் நன்கு சிரத்தையுடன் தேடியப் பிறகு கிடைக்கும் விவரம், அச்சொல்லின் வேர்ச்சொல்லிலிருந்து பிறந்த விவரமும் அநேகமாக ஒன்றுக்கொன்று முரண்பாடின்றி இணைந்தே வருவதாக அமைந்துள்ளது.

'புனாதி ஆத்மானம் பூயதே அனேனேதி வா புண்யம்'*[1] – 'நல்வினைப்பயன் என்பது ஒருவனை தூய்மையாக்குகிறது அல்லது தூய்மையடையச் செய்வது'. சுருங்கக்கூறின் அது தன்னையே தூய்மையாக்கிக்கொள்வ தாகும். அதன் முதன்மையான செயல் பிறருக்கு நன்மை செய்த லாகும். அதே அதனுடைய எதிர்வினை பாபமாகும். 'பரோபகார: புண்யாய பாபாய பரபீடனம்'. அதே பொருளை அளிக்கும் மற்றொரு சொல் ஸுக்ருதம் என்பதாகும். இதன் பொருள் நல்ல செயல் 'சு' என்றால் நல்ல என்றும் 'க்ருத' என்றால் செயல் என்பதும் பொருளாகும்.

இவ்வாறு ஒருவன் செய்த நல்வினைப் பயன்கள் இப்பிறவியில் மாத்திரமன்று மறுபிறவியிலும், ஒருவன் மறுபிறவியில் நம்பிக்கை கொண்டிருந்தால் அவனைத் தொடர்ந்து வருகின்றன. அக்காரணம்

கொண்டே ஒருவித காரணமுமின்றி காரணம் ஒன்றும் காணக் கிடைக்காமலே ஒரு நற்பயன் கிடைத்தால் அது முன்பிறவியில் செய்த செயல்களின் பலன் என்று கூறுகிறோம். இது இந்தியர்களுடைய ஒரு பிரத்யேகமான கருத்தாகும்.

நற்செயல்கள் என்று எப்பொழுதும் புன்மையிலேயே 'புண்யானி' என்று பயன்படுத்தப்படுகிறது. அது ஒருவனுக்கு பாதுகாப்பாக அவன் எந்நிலையில் இருந்தாலும் எவ்விடத்தில் இருந்தாலும் அபாயத்திலிருந்தும் விபத்திலிருந்தும் அவனை காப்பாற்றுகின்றன. ப்ர்த்ருஹரி கூறுகிறார் -

வனே ரணே ஸத்ருஜலாக்னிமத்யே
மஹார்ணவே பர்வதமஸ்தகே ச
ஸுப்தம் ப்ரமத்தம் விஷமஸ்திதம் வா
ரக்ஷந்தி புண்யானி புரா க்ருதானி ||*2

மனிதன் ஒருவன் ஆபத்திலோ விபத்திலோ சிக்கியிருந்தாலோ, காட்டிலோ, போர்முனையிலோ, பகைவர்களின் கூட்டத்திலேயோ, ஆழ்கடலிலோ, கொழுந்துவிட்டு எறியும் தீயிலோ, மலையுச்சியின் மேலேயோ, ஆழ்ந்து உறங்கிக்கொண்டிருந்தாலோ, குடி போதை மயக்கத்தில் இருந்தாலோ, மிகவும் கொடிய பயங்கரமான சூழ்நிலையில் சிக்கியிருந்தாலோ அவனது முன்பிறவிகளில் செய்த நற்பயன்கள் அவனை பாதுகாக்கின்றன.

இப்படிப்பட்ட முன்பிறவிப் பயன்களாலேயே, சேகரித்த நற்பயன்களாலேயே பல அரிய கடினமான செயல்கள் ஒருவனது வாழ்க்கையில் எளிதாக நடக்கின்றன. மலைகளை பிளக்கும் வல்லமைகொண்ட வஜ்ராயுதம் மென்மையான மலராக மாறுகிறது. தீயும்கூட மதியின் கிரணங்களினால் மிகவும் குளிர்ந்த தாமரை மலர்மஞ்சமாகிறது. கூர்மையான கத்தியின் நுனி தேவதையின் மென்மையான கைகளாக மாறிவிடுகின்றன.

ஸம்பவதீஹ பூதரரிபு: பவிரபி குஸுமம்
வஹ்னி: அபீந்துபாதஸிஸிரம் ம்ருது கமலவனம்
கட்கலதாபி சாருவனிதா ம்ருதுபுஜலதா
ப்ராணிஷு பூர்வஜன்மஜனிதாத் ஸுக்ருதபலாத: ||*3

வாழ்க்கையில் கிடைப்பது யாவையுமே அறிவோ, அழகோ, சந்ததிகளோ, பலமோ, செல்வமோ, நற்பண்புகளோ அவர்கள் சேகரித்த நல்வினைப் பயன்களினாலேயேயாகும்.

புத்திம் ரூபம் பலம் புத்ரான் வித்தம் தீரத்வம் ஏவ ச |
ப்ராப்னுவந்தி நரா லோகே நிர்ஜிதம் புண்யகர்மபி: ||*4

பத்ம புராணமும் இதே கருத்தை வெளிப்படுத்துகிறது.

ஸர்வேஷாமேவ ஜீவானாம் தனம் இஷ்டஸமாகம: |
ஜாயதே புண்யயோகேன யத் சாத்மஸுககாரணம்||*5

'செல்வம், அன்புடையவர்களின் சேர்க்கை, மகிழ்ச்சியைக் கொடுக்கும் யாவையுமே நற்செயல்களின் பலனாலேயேயாகும்.

செல்வமும், நண்பர்களும் நல்வினைப்பயன்களின் வெகுமதிகளே ஆகின்றன.

மேலே நல்வினைப்பயன் புண்ணியம் என்பது தன்னை தூய்மை செய்வதற்கென அமைந்தது என்றாலும் இது பிறருக்கு உதவியோ நன்மையோ செய்வதினால் மாத்திரமே அடையப்படுவதில்லை. பிற பல செயல்களும் இதை அடைவதற்குள்ளன. விரதங்களை தவங்களை அனுசரித்தல் ஒரு முறையாகும். புண்ணிய தலங்களுக்குச் செல்லுதல், தெய்வீகதலங்களை தரிசித்தல், பிறிதொரு வழியாகும்.

சான்றோர்களையும் துறவிகளையும், மகான்களையும் தரிசித்தல் மற்றொரு வழியாகும். அவர்களது சொற்பொழிவுகளை கேட்டல், அவர்களது ஆசிகளைப் பெறுதல் ஒரு முறையாகும். பெற்றோர்களுக்கு சேவை செய்தல், ஆசிரியர்களுக்கு சேவை செய்தல், மொத்தத்தில் பெரியவர்களுக்கு சேவை செய்தலும் ஒரு வழியாகும். மறை நூல்களைப் படித்தல், கடவுளின் புகழ்நிறைப் பாடல்களைப் பாடுதல் பிறிதொரு வழியாகும். இப்படி இதன் பட்டியல் நீண்டு சென்றுகொண்டே இருக்கும்.

சுருங்கக்கூறின் எந்த ஒரு நல்ல செயலும், பக்தியில் ஈடுபட்ட செயலும் சிறந்ததாகும். இச்செயல்கள் நாட்கள் செல்லச்செல்ல தானே போற்றத்தக்க வழியைக்காட்டி மனிதனது வாழ்க்கையையே மாற்றி அமைத்துவிடும். இச்செயல்களை இடைவிடாமல் செய்துகொண்டே போனால் இவை யாவற்றினுடையவும் கூட்டுப் பலன் பெருகி உலகியல், ஆன்மீகம் என எல்லாத் துறைகளிலும் பயன்படுவதாகி இப்பிறவியில் மாத்திரமின்றி இன்னும் அடுத்த பல பிறவிகளிலும் அவை நல்ல பலன்களைக் கொடுக்கக்கூடியதாக அமைகின்றன.

இந்நல்வினைப் பலனின்றி, புண்ணியமின்றி ஒருவன் தனது இச்சைகளை பூர்த்தி செய்துகொள்ள இயலாது - 'புண்யைர்வினா நஹீ பவந்தி க்ருதார்தா:'.*6 புகழும் இதைக்குறித்தே உள்ளது. இக்கருத்தை சாணக்கிய நீதியில் ஒரு செய்யுளில் கூறப்பட்டுள்ளதை இங்கு எடுத்துரைக்கலாம். கிருஷ்ணனின் வளர்ப்புத் தாய்யசோதா தன் நிலைமையைக் குறித்து புலம்புகிறாள். இந்த சிறிய கோவர்தன மலைக்குக் கிடைத்த புகழ்கூட எனக்குக் கிடைக்கவில்லையே. கிருஷ்ணன் கோவர்தன மலையை ஒரு விரலால் உயரத் தூக்கினான். அம்மலையை அதனால் யாவரும் அறிவர். அது புகழ்பெற்றதாயிற்று. ஆனால் நானோ அவனை குழந்தையாக எடுத்து என் மார்பில் அணைத்து தூக்கிக்கொண்டிருந்தேனே, ஆனால் என்னை எவருமே அறிவாரில்லையே. இக்கட்டத்தில் அவள் நல்வினைப் பயனாலேயே புகழ் கிடைக்கும் 'புண்யைர்யஸோ லப்யதே' என்று தன் புலம்பலை நிறைவு செய்கிறாள்.

ஊர்த்வம் கோபி மஹீதரோ லகுதரோ அங்குல்யா த்ருதோ லீலயா
தேன த்வம் திவிபூதலே ச ஸததம் கோவர்தனோ கீயதே |
த்வாம் த்ரைலோக்யதரம் வஹாமி குசயோரக்ரே ந தத் கண்யதே
கிம் வா கேசவ பாஷணேன பஹுதா புண்யைர்யஸோ லப்யதே ||*7

இவ்வுலகில் உள்ள எதுவும் நிரந்தரமாயிருப்பதல்ல. மாறிக்கொண்டிருப்பவையே. வயோதிக நிலையில் நோய் அழகிய உருவத்தை அழித்துவிடுகிறது. சேர்க்கையிருந்தால் பிரிவும் உண்டு. வாழ்க்கை நீண்டதாயிருந்திடினும் ஒருநாளின்றி ஒருநாள் முடிவிற்கு வருவதே. ஆனால் என்றும் நிரந்தரமாய் இருப்பது புண்ணியமே நல்வினைப்பயனே. அதன் வழி செய்வோம்*8. இதுவே செல்வத்துக்கும் மகிழ்ச்சிக்கும் தோற்றுவாயாகும்.*9 புண்ணியம் செய்தோர்களின் விருப்பங்கள் உடனே நிறைவேறி[illegible]ன்றன.

நல்வினைப் பலன்களிடம் கல்பதருவின் உடனே பலனளிக்கும் குணங்கள் உள்ளன. 'ஸத்ய ஏவ கல்பவ்ருக்ஷபலதர்மி காங்க்ஷிதம்'*10 புண்ணியம் செய்தவர்கள் கீழ்க்கொடுக்கப்பட்டவைகளை அடைகின்றனர். தன் நற்குணங்களினால் தந்தையின் மனதை மகிழ்விக்கும் மகன் - 'ய: ஸுசரிதை: பிதரம் ப்ரீணயதி', தன் கணவனது நலத்திலேயே குறிகொண்டிருக்கும் மனைவி - 'யத் பர்துரேவ ஹிதம் இச்சதி தத்கலத்ரம், ஆபத்திலும் நல்லநேரத்திலும் கைவிடாமல் உதவிசெய்யும் நண்பன் - 'ஆபதி ஸுகே ச ஸமக்ரியம் மித்ரம்'*11

யஸ்ய மித்ரேண ஸம்பாஷா யஸ்ய மித்ரேண ஸம்ஸ்திதி:
யஸ்ய மித்ரேண ஸம்லாப: ததோ நாஸ்தீஹ புண்யவான் ||*12

சதுர்வர்கசங்கிரஹம் தனது விவரிக்கும் முறைப்படி நல்வினைப் பயன்கள் கொண்டோரின் புண்ணியவான்களின் குணங்களைப் பற்றி எடுத்துக் கூறுகிறது.

பரத்ரவிணனிஷ்ப்ருஹ: பரகலத்ரனிஷ்கௌதுக:
பரப்ரணயவத்ஸல: பரனிகாரபத்தக்ஷம: |
பரஸ்துதிவிஸாரத: பரகுணாபவாதோஜ்ஜிஹித:
பரார்திஹரணோத்யதோ பவதி பூரி புண்யைர்னர: ||*13

'அதிகமான புண்ணியகர்மாக்களை, நற்செயல்களை செய்தவர்கள் பிறரது செல்வத்துக்கு ஆசைப்படுவதில்லை. பிறன் மனையாளை ஏறெடுத்தும் நோக்குவதில்லை. எல்லோரையும் நேசிக்கிறான். தன்னிடம் குறை கூறுபவர்களிடமும் அவர்களை மன்னிப்பதில் ஈடுபட்டவன். பிறரைப் புகழ்ந்து பேசிடுவான். பிறரைப் பற்றி அவதூறு எதுவும் எக்காரணம் கொண்டும் பேசமாட்டான். பிறரது அல்லல்களை நீக்கிட தயாராக இருப்பான்.' இதே புண்ணியத்தின் பயனாகவே அவர்களுக்கு அவர்களைப் போன்ற புண்ணிவான்களின் சேர்க்கை ஏற்படுகிறது - 'ஸதாம் ஸங்க: ஸத்பி: கதமபி ஹி புண்யேன பவதி'

நல்வினைப்பயன் என்ற இத்தலைப்பைப் பற்றி பேசி நிறைவு செய்யும் முன்னர் மனிதனின் இயற்கையான குணம் பற்றி கூறிடுவோம். அது என்னவென்றால், எப்பொழுதும் நல்லவை கெட்டவை புண்ணியம் பாபம் இயற்கையிலேயே மகிழ்ச்சியையும் துன்பத்தையும் அளிக்கக்கூடிய இவைகளைப் பற்றி மனதில் ஒரு போராட்டம் இருந்துகொண்டே இருக்கிறது என்பதாகும். அவை குளிருக்கும் சூட்டிற்குமுள்ள [illegible]றுபாட்டைக் கொண்டதே ஆகும். ஆனால் இவ்விரண்டிலும் [illegible] அதிக பலமுள்ளதாய் இருக்கிறதோ அதுவே வெற்றிகொள்கிறது.

ஸீதோஷ்ணவத் பரஸ்பர விருத்தயோரிஹ ஹி ஸுக்ருததுஷ்க்ருதயோ:|
ஸுக துக்க பலோத்பவயோர் துர்பலம் அபிபூயதே பலின:||*14

அதனால் ஒருவன் புண்ணியத்தை அனுசரித்திட வழியிலிருக்கும் எல்லாத் தடங்கல்களையும் எதிர்த்து நின்று களைந்துவிட்டு புண்ணியமார்க்கம், அதாவது நல்வினைகளைச் செய்வதிலேயே ஈடுபட்டுச் செல்ல வேண்டும். பாப வழியில் செல்லுதலை தவிர்த்தல் வேண்டும். இம்முறையைக் கடைப்பிடிப்பதால் அளவு கடந்த நன்மைகளைப் பெறலாம்.

## மேற்கோள்கள்


1. *sarvarthasiddhi* 6.2
2. *Nitisataka verse* 97
3. *Padma purana* 17.405
4. *Ramayana* 7.15.27
5. 36.78
6. *srngarasataka, verse* 17
7. 15.19
8. *janakiharana* 15.21
9. *maha purana* 37.200
10. *taghuvamsa* 11.50
11. *Nitisataka verse* 68
12. *Hitopadesa* 1.39
13. 1.17
14. *dharmamruta* 1.61

# 32

## சத்சங்கதி

## நல்லோர் சேர்க்கை

'ஒருவனைப் பற்றி அறிந்துகொள்ள வேண்டுமானால் அவனுடன் பழகுபவர்களைக் கண்டு அறிந்துகொள்ளாலாம்' என்றொரு ஆங்கில பழமொழி உள்ளது. அவனுடன் பழகுபவர்கள் நற்குணங்களைக் கொண்டிருந்தால், தானே அந்த நற்குணங்கள் அவனை அணுகி யிருக்கும். இல்லை அவனுடன் பழகுபவர்கள் நற்குணங்கள் படைத்தவர்களாக இல்லையென்றால் அவனும் கெட்ட குணம் கொண்டவனாகவே இருந்திடுவான்.

இதே கருத்தை சமஸ்கிருத பழமொழி ஒன்றுவெளிப்படுத்துகிறது - 'ஸம்ஸர்கஜா தோஷகுணா பவந்தி.' கெட்ட குணங்களோ அல்லது நல்ல குணங்களோ அவைகளுக்கு மூலமாய் அமைவது சேர்க்கையேயாகும். மேற்கூறப்பட்ட கூற்றில் கெட்டது என்பது முதலிலும் நல்ல குணங்கள் என்பது பின்னரும் குறிப்பிடப்பட்டுள்ளது. இது மிகவும் சுவை மிகுந்ததாக உள்ளது. இதற்கு ஒரு குறிப்பிட்ட காரணம் உள்ளதாகவே தோன்றுகிறது.

பொதுவாக 'குண' என்னும் சொல் 'தோஷ' என்னும் சொல்லுக்கு முன் வர வேண்டும் ஏனெனில் அதன் எதிர்மறைச்சொல் அதைவிட சிறந்ததாக உள்ளது. இந்தக் கருத்தை உரையே எடுத்துரைக்கிறது. 'அல்பாச்தரம்' (பா.2.2.34) என்ற பாணினீயின் சூத்திர உரைப்படி 'அப்யர்ஹிதம் ச' என்று 'குண' என்ற சொல் முன்னுரைக்கப்பட வேண்டும். ஆனால் அதை விடுத்து 'தோஷ' என்ற சொல் முன்வைக்கப்பட்டுள்ளது. ஒருவன் தோஷங்களாலேயே முதலில் பாதிக்கப்படுகிறான் என்பதைக் குறிப்பது போல் அமைந்துள்ளது. இது மனிதர்களின் இயற்கை சுபாவமன்றோ.

கெட்ட குணங்களே நற்குணங்களை விடமனிதனை எளிதில் வந்தடைகின்றன. நற்குணங்கள் நல்லோரை சேர்ந்திருப்பதால் அடையமுடியும் என்பதால் தான் மீண்டும் மீண்டும் நல்லோரின் சேர்க்கை எல்லா இடங்களிலும் வற்புறுத்திக் கூறப்படுகிறது.

'மலர்களின் மணத்தைப்போலும், துணிகளில் நீரும். எள்ளில் எண்ணெய்யைப்போல் சேர்க்கையே குணத்தை பாதிக்கின்றன. சேர்க்கையே குணங்களை ஏற்படுத்துகின்றன.

அபோ வஸ்த்ரம் திலஸ்தைலம் கந்தோ வஸோ யதா ததா |
புஷ்பாணாம் அதிவாஸேன ததா ஸம்ஸர்கஜா குண: ||*1

நல்லோர்களின் சேர்க்கை மனிதனின் இயற்கை குணத்திலேயே மாறுதலை ஏற்படுத்தக்கூடியது. கிளிகள் காட்டிலிருக்கும் மரங்களின் உயரே இருக்கும் கிளைகளின் மேல் உட்கார்ந்து ஆடிக்கொண்டிருக்கும். அச்சமயம் அங்கு வருபவர்கள் ராமநாமத்தைச் சொல்லிக்கொண்டு வருகிறார்கள். கிளிகளோ காட்டில் அவர்களைக் கண்டு பயந்து அவ்விடத்தை விட்டு பறந்து சென்றிட முயற்சி செய்யும். ஆனால் அவர்கள் கடந்து செல்லுகையில் ராமநாமத்தை கூறுவதால் அக்கிளிகளும் கீழுள்ளவர்கள் சொல்லும் ராம நாமத்தைக் கேட்டு ராம ராம என்று கூவிக்கொண்டே செல்லுமாம்.

கான்தாரபூமிஸஹமௌலினிவாஸஸீலா:
ப்ராய: பலாயனபரா ஜனவீக்ஷணேன
கூஜந்தி தேபி ஹி ஸுகா: கலு ராமநாம
ஸங்க: ஸ்வபாவபரிவர்தவிதௌ நிதானம் ||*2

இக்கதையைக் கேட்டதுமே ஆதி சங்கரரின் வாழ்க்கையில் நடந்ததொரு நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது. சங்கரர் வழியில் போய்க்கொண்டிருக்கையில் பெண்கள் சிலர் கிணற்றிலிருந்து நீர் இரைத்துக்கொண்டிருந்தார்கள். அவர்களிடம் மண்டனமிச்ரரின் வீட்டு விலாசத்தை கேட்டார். எந்த வீட்டு வாயிலில் கூண்டில் அடைக்கப்பட்டிருக்கும் பெண் கிளிகள் 'உலகம் அழியாமல் இருக்கக்கூடியதா அல்லது அழியக்கூடியதா? அது தானே தோன்றியதா அல்லது வேறு ஒருவரால் உண்டாக்கப்பட்டதா?' போன்ற சொற்களை உரைத்துக்கொண்டிருக்குமோ அது பண்டிதர் மண்டனமிச்ரரின் வீடு என்பதை அறிந்துகொள்ளுங்கள் என்று கூறினார்களாம் - 'ஜானீஹி தம் மண்டனபண்டிதௌக:'

ஒருவன் யாருடன் இணைந்திருக்கிறானோ, யாருக்கு சேவை செய்கிறானோ அவனைப்போலவே இருந்திட விரும்புகிறான்.

யாத்ருஸை: ஸம்னிவிஸதே யாத்ருஸாஸ்ச சோபஸேவதே |
யாத்ருக் இச்சேச்ச பவிதும் தாத்ருக் பவதி பூருஷ: ||*3

ஒருவன் கீழ்த்தரமானவர்களுடைய சேர்க்கையை அடைந்தால் அவனது அறிவும் அவர்களது மட்டத்துக்கு இறங்கிவிடுகிறது; நடுத்தரமானவர்களிடம் சேர்ந்தால் நடுத்தரமான அறிவைப்பெறு கிறான். நல்லோர்களின் சேர்க்கை அடைந்தால் அவனது அறிவும் மேலே உயர்ந்துவிடுகிறது.

புத்திஸ்ச ஹீயதெ பும்ஸாம் நீசை: ஸஹ ஸமாகமாத் |
மத்யமைர்மத்யதாம் யாதி ஸ்ரேஷ்டதாம் யாதி சோத்தமை: ||*4

இதே கருத்தை பர்த்ருஹரி கவிநயத்துடன் அழகான மொழியில் விவரிக்கிறார்.

ஸந்தாபயஸி ஸம்ஸ்திதஸ்ய பயஸோ நாமாபி ன ஸ்ரூயதே
முக்தாகாரதயா ததேவ நலினீபத்ரஸ்திதம் ராஜதே |
ஸ்வாத்யாம் ஸாகரஸுக்திமத்யாபதிதம் தன்மௌக்திகம் ஜாயதே
ப்ராயேணாதமமத்யமோத்தமஜுஷாம் ஏவம்விதா வ்ருத்தய: ||*5

பழுக்கக் காய்ச்சிய இரும்பின் மேல் விழும் நீர் இருக்குமிடம் தெரியாமல் மறைந்துபோகும். அதே நீர்த்துளி தாமரை இலையின் மேல் விழுந்தால் முத்தைப் போன்றே காட்சியளிக்கும். அதே நீர்த்துளி கடல் சிப்பியினுள் சுவாதி நட்சத்திர நேரத்தில் (சுவாதி நட்சத்திரம் மிகவும் சிறப்புவாய்ந்த நல்ல நட்சத்திரமாகும்) விழுந்தால் உண்மையான முத்தாகவே மாறிவிடும். இதிலிருந்து அறியப்படுவது என்னவென்றால் பொதுவாக கீழ்த்தரமான, மத்தியிலான, உயர்ந்த குணங்களுடையவைகளின் சேர்க்கை ஒருவனை அவன் அணுகியிருப்பவைகளைப் போலவே மாற்றிவிடும்.

ஆகையினால் பிறரது சேர்க்கையை அறவே நீக்குதல் சிறந்ததாகும். அது எல்லா நோய்களையும் ஆற்றிடும் சர்வரோக நிவாரணியாகும். அது இயலவில்லையாகில் நல்லோருடன் சேர்க்கையை அடைதல் நன்றாகும். அதுவே அரிய மருந்தாகும். (உலகியலில் பற்றென்னும் நோய்க்கு).

ஸங்க: ஸர்வாத்மனா த்யாஜ்ய: ஸ சேத் த்யக்தும் ந அஸக்யதே|
ஸ ஸத்பி: ஸஹ கர்தவ்ய: ஸதாம் ஸங்கோ ஹி பேஷஜம் ||*6

நல்லோர்களின் சேர்க்கையானது சாதாரண மனிதனையும் உயர்ந்தவனாகச் செய்திடும். ஒரு சிறிய புழுவும் நல்ல மலர்களின் சேர்க்கையினால் நல்லோர்களின் தலையில் ஏறி அமர்கிறது. ஒரு சாதாரணக் கல் நல்லோர்களினால் புனிதமாக்கப்பட்டதாக தெய்வத்தின் தன்மையை அடைகிறது.

கீடோபி ஸுமனஸ்ஸங்காத் ஆரோஹதி ஸதாம் ஸிர: |
அஸ்மாபி யாதி தேவத்வம் மஹத்பி: ஸுப்ரதிஷ்டித: ||*7

உலக வாழ்க்கை என்பது ஒரு விஷ மரமாகும். ஆனால் அதில் இரு இனிப்பான அமிர்தம் போன்ற பழங்கள் பழுக்கின்றன. ஒன்று அமிர்தம் போன்ற சுவைமிகுந்த கவிதைகள், மற்றொன்றோ நல்லோர்களின் சேர்க்கையாகும்.

ஸம்ஸாரவிஷவ்ருக்ஷஸ்ய த்வே ஏவ ரஸவத் பலே |
காவ்யாம்ருதரஸாஸ்வாத: ஸங்கம: ஸுஜனை: ஸஹ ||*8

பர்த்த்ருஹரி நல்லோர்களின் சேர்க்கையினால் ஏற்படும் அதிசயமான பலன்களையும் விளைவுகளையும் வெகு அழகாக ஒரு கவிதையில் கூறுகிறார்.

ஜாட்யம் தியோ ஹரதி ஸிஞ்சதி வாசி ஸத்யம்
மானோன்னதிம் திஸதி பாபம் அபாகரோதி
சேத: ப்ரஸாதயதி திக்ஷு தனோதி கீர்திம்
ஸத்ஸங்கதி: கதய கிம் ந கரோதி பும்ஸாம் ||*9

'நல்லோர்களின் சேர்க்கை புத்தியிலுள்ள ஜடத்தன்மையை மந்தத்தை அறவே நீக்குகிறது. வாக்கினில் வாய்மையை தெளிக்கிறது. நமது தன்மானத்தை பெருக்கிறது. பாபத்தை வேறுடன் பிடுங்கி விடுகிறது. மனதை தெளிவடையச் செய்கிறது. புகழை நாலாபக்கமும் பரவச் செய்கிறது. சொல், நல்லோர்களின் சேர்க்கை எதைத்தான் செய்வதில்லை.'

அங்கதேவன் என்னும் மன்னன் இருந்தான்.அவனது மகன் பிரவீண் சிங் என்பவன் கெட்டவர்களின் சகவாசத்தில் சிக்கிக்கொண்டான். அவனைப் பற்றி அவதூறுகள் வந்தவண்ணம் இருந்தன. இதனால் மன்னன் மிகவும் மனவருத்தம் அடைந்தான். அவன் சிறுவயதினனாய் இருந்ததால் மன்னனும் அவனது பழக்கவழக்கங்களை மாற்றி நல்லவனாக மாற்றிட முயற்சித்தான். அவனுக்கு பின்னர் அவனை அரியணையில் அமர்த்த வேண்டுமே! அதனால் தனது ஆசானான

சோமதேவரிடம் அழைத்துச்சென்றான். அவரோ அவனை அவரது குடிலில் ஆறு மாதங்கள் தங்க வேண்டும் என்று கூறினார். மன்னனும் அதற்கு இணங்கிவிட்டான்.

அச்சிறுவனும் ஆசிரியரின் குடிலில் தங்கி அவர் இட்ட பணிகளை செம்மையாகச் செய்தான். ஆசானும் அவனை இடைவிடாமல் ஏதாகிலும் பணியில் ஈடுபடுத்திக்கொண்டிருந்தார். மூன்று மாதங்கள் கழிந்தன. ஆசிரியரும் எப்பொழுதும் அவனுக்கு நல்ல அறிவுரைகள் அளித்துவந்தார். மெதுமெதுவாக அவனிடம் நல்ல மாறுதல்கள் தெரியத் தொடங்கின. ஒருநாள் அவர் அவனிடம் கடவுள் எங்கும் உள்ளார். அதனால் நீ எந்த செயலைச் செய்தாலும் அதை அவர் அறிந்திடுவார் என்பதை எப்பொழுதும் கருத்தில் வைத்துக்கொள் என்றார்.

நீ ஏதாகிலும் தவறு செய்தாயாகில் அவர் திண்ணமாக அதை அறிந்திடுவார். பிறகு அதன் விளைவுகளை நீ அனுபவித்தே ஆக வேண்டும். எந்த தூண்டுதல் இருந்திடினும் கடவுள் உன்னருகில் உள்ளார் என்பதை நினைவில் கொள் என்று கூறினார். ஒருநாள் ஆசிரியர் அவனிடம் முயல் ஒன்றை கொல்லும்படி ஆணையிட்டார். ஆசிரியரின் ஆணையைக் காத்திட விரும்பி அவன் எவ்வளவோ முயன்றும் அவனால் அதை அடித்துக் கொல்ல முடியவில்லை.

அதன் கழுத்தை குறிவைத்துப் பார்த்திடின் அங்கு அவன் கடவுளையே கண்டான். அதை கொல்ல முடியாமல் தன் ஆசிரியரிடம் திரும்பி வந்து தன் கஷ்டத்தை எடுத்துரைத்தான். ஆசிரியரோ அவனைத் தன் தோளில் தாங்கி நன்னடத்தையிலும், பிராணிகளிடம் கருணை காட்டுவதிலும் நீ தேர்வடைந்துவிட்டாய் என்று கூறினார். அவனும் தன் மன்னனை அணுகி தான் அடுத்து அரியணையில் ஏறிட தகுந்தவனே என்பதை நிரூபித்துக் காட்டினான்.

நல்லோர்களின் சேர்க்கை ஒருவனுடைய குணங்களை மாற்றி மேலோனாகச் செய்கிறது என்பதற்கு மற்றுமொரு அழகான கதை உள்ளது.

துறவிகளின் குழு ஒன்று சுற்றிக்கொண்டே வந்தபொழுது ஒரு கிராமத்தை அடைந்தனர். அப்பொழுது இரவுநேரம் நெருங்கி இருளும் சூழ்ந்துவிட்டது. குளிரும் அதிகமாக இருந்தது. அத்துறவிகளோ அன்று இரவுப்பொழுதை கழித்திட் ஓர் இடம்

வேண்டுமென்று தேடிக்கொண்டிருந்தனர். அக்கிராமத்திலுள்ள மிக்க செல்வம் படைத்த ஒருவரை அணுகினர். அவரோ தன்னிடம் இரண்டு கடைகள் இருக்கிறதென்றும் ஒன்றில் சாமான்கள் நிறைந்திருக்கிறதென்றும் மற்றது காலியாக இருக்கிறதென்றும் கூறினார். அன்றைய இரவு அக்காலியான கடையில் அவர்கள் தங்கலாம் என்றும் அனுமதியளித்தார்.

துறவிகளோ மூவர் இருந்தனர். அவர்களில் இருவர் சிறுவர்களாகவும் ஒருவர் வயது முதிர்ந்தவராகவும் இருந்தார். அவ்வயோதிகருக்கு ஆழ்ந்த உறக்கம் ஏற்படவில்லை. ஆனால் மற்ற இருவரும் நன்கு உறங்கிவிட்டனர். அவர் சரியான உறக்கம் வராததால் மீண்டும் படுத்து உறங்க முயல்வதைவிட அமர்ந்து சிறிது தியானத்தில் ஈடுபட்டு பின்னர் நாமஜபம் செய்வதென்றும் தீர்மானித்தார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் பக்கத்து கடையினின்றும் கூச்சலும் குரலும் கேட்டது. அவரும் அவர்கள் யார் என்று தெரிந்துகொள்ள அழைத்தார். கடைக்குள் இருந்தவர்கள் தங்களை அழைத்தவர் ஒரு துறவியென்றும் இறைவனை பாடுவதில் ஈடுபட்டுள்ளார் என்றும் அறிந்து அச்சமின்றி அவரை அணுகினர். அவரிடம் 'நாங்கள் திருடர்கள். இந்தக் கடையிலுள்ள எல்லாவற்றையும் அப்படியே திருடி அள்ளிச்செல்லவே வந்துள்ளோம்' என்று கூறினர்.

துறவியோ அவர்களைப் பார்த்து இப்படிப்பட்ட கொடிய செயல்கள் செய்வதை விட்டுவிடுங்கள் என்று கூறி நன்னடத்தை பற்றி விலாவரியாக ஒரு உரையாற்றினார். இது அவர்களிடம் மின்சாரம் பாய்ந்ததுபோல் ஒரு திகைப்பை ஏற்படுத்தியது. இப்படிப்பட்ட பாபச் செயல்களின் விளைவுகளைப் பற்றியும் எடுத்துரைத்தார். இதிலேயே நேரம் கடந்துவிட்டது. அச்செல்வந்தரோ கடையில் தங்கியிருக்கும் அத்துறவிகளுக்கு ஏதேனும் தேவை இருக்குமோ என்றெண்ணியவராய் கடைக்கு வந்தார்.

அங்கு இரு கடைகளிலும் துறவி ஒருவரை சுற்றிலும் முன்பின் அறியா சிலர் சூழ்ந்துகொண்டிருப்பதைக் கண்டார். அவர்களை விசாரித்ததில் அவர்கள் திருடர்கள் என்றும், ஆனால் அங்குள்ள துறவியின் உபதேசத்தைக் கேட்டு நன்மக்களாக மாறி இனி இதுபோன்ற கொடிய செயல்களில் ஈடுபடுவதில்லை என விரதம் பூண்டார்கள் என்றும் அறிந்துகொண்டார்.

அச்செல்வந்தர் துறவியின் கால்களில் வீழ்ந்து வணங்கினார். அவரது அச்சிற்'ய ெ·யல் எவ்வாறு கொடிய செயலில் ஈடுபட்டிருந்தவர்களை

அடியோடு மாற்றிவிட்டது. அதற்கான பலனில், தான் அத்துறவிகளுக்கு இடம் கொடுத்தல் என்ற சிறிய செயலால் இப்பண்புமிகு செயலும் நடந்தது அத்துடன் அவனது கடை சாமான்களும் சிறிதும் நஷ்டமின்றி இருந்ததையும் நினைத்து மனம் மகிழ்ந்தான். நல்லோர்களின் சேர்க்கை வியப்பளிக்கும் செயல்களை செய்ய வல்லது.

இப்படிப்பட்ட ஏராளமான நன்மைகளை அடைவதென்பது மக்கள் நல்லோர்களின் சேர்க்கையினாலேயே என்பதை அறிந்துகொண்டு எல்லோரும் அதை பின்பற்றுதல் வேண்டும். அக்காரணம் கொண்டே நம் புராதன நூல்கள் இக்குணத்தை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்துகின்றன.

## மேற்கோள்கள்


1. *Akandapurana Ma Kau 45.25*
2. *Subhasitaratnabhandagara p.91*
3. *Mahabharata Udyogaparvan 36.13*
4. *ibid Vanaparvan 1.29*
5. *Nitisataka verse 67*
6. *Hitopadesa 4.96*
7. *ibid kathhamukha 44*
8. *ibid 1.146*
9. *verse 23*


---



நூலாசிரியர் சத்ய விரத சாஸ்திரி, 1930-ம் ஆண்டு பிறந்தவர். ஆரம்பக் கல்வியை தன் தகப்பனாரான சாருதேவ சாஸ்திரியிடம் இருந்து கற்றார். இவர், முதுகலை படிப்பு வரை அனைத்து வகுப்பிலும் முதல் இடத்தைப் பெற்று பல பதக்கங்களைப் பெற்றவர். முனைவர் பட்டம் பெற்று, தில்லிப் பல்கலைக் கழகத்தில் 40 ஆண்டுகள் பணியாற்றினார். இடையிடையே பல இதர பல்கலைக்கழகங்களில் தலைவராகவும், பூரியில் உள்ள ஜகந்நாத் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராகவும் பணியாற்றினார். 2009-ம் ஆண்டு ஞானபீட விருதைப் பெற்றவர். சமஸ்கிருதத்தில் ஞானபீட விருதைப் பெற்ற முதல் நபர் இவரே. 2010-ம் ஆண்டில் பத்மபூஷண் விருதைப் பெற்றார். காளிதாசர் விருது, குடியரசுத் தலைவர் விருதுகளையும் பெற்றவர்.

உலகில் உள்ள பல பல்கலைக் கழகங்களில் வருகைதரு பேராசிரியராகப் பணியாற்றியுள்ளார். இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் பல பேரவைகளிலும் கருத்தரங்குகளிலும் பங்கேற்று ஆய்வுகளை நடத்தியுள்ள இவர், சிறந்த விமரிசகரும், பெரும் காவியப் படைப்பாளியும் ஆவார். பல மகா காவியங்களையும், பிரபந்த காவியங்களையும், சதக காவியங்களையும் இயற்றியுள்ள இவர், ராமாயணத்தை மொழியியலில் ஆய்வு செய்துள்ளார். 'ராமகீயன்' என்னும் தாய்லாந்து ராமாயணத்தை 'ராமகீர்த்தி மகாகாவியம்' என்று சமஸ்கிருதத்தில் எழுதியுள்ளார்.



இந்தப் புத்தகத்தை, ஆங்கிலத்தில் இருந்து தமிழுக்கு மொழிபெயர்த்த திருமதி ராஜலட்சுமி சீனிவாசன், ஓய்வு பெற்ற சமஸ்கிருத பேராசிரியர். மொழியியலில் முனைவர் பட்டம் பெற்றவர். தமிழ், சமஸ்கிருதம் என்னும் இரு மொழிகளிலும் வல்லுநரான அவர், பல காவியங்களை மொழிபெயர்ப்பு செய்துள்ளார். பெங்களூரில் உள்ள 'பூர்ண பிரக்ஞா சம்சோதன மந்திரம்' என்னும் ஆய்வுக்கூடத்தின் தலைவராகப் பணியாற்றியுள்ள இவர், கல்கியின் 'பொன்னியின் செல்வன்' காவியத்தை சமஸ்கிருதத்தில் மொழிபெயர்த்துள்ளார். இந்திய கலாசார மையத்தின் மூத்த உறுப்பினராக விளங்கிய இவர், சிறந்த மொழிபெயர்ப்பாளர் விருதைப் பெற்றவர். சமஸ்கிருத மொழி வல்லுநருக்கான 'சப்தருஷி' விருதையும் பெற்றுள்ளார்.

Human Values - Definitions and Interpretations - Vol 1
என்ற புத்தகத்தின் தமிழாக்கம் இந்தப் புத்தகம்.

₹ 450



பாரதிய வித்யா மந்திர்
கொல்கத்தா - 700087

